உ

சிவமயம்

# அவிநாசித் தல புராணம்

(பொழிப்புரையுடன்)

அவிநாசி அடுத்த கருக்கம்பாளையம்

**உயர்திரு S. K. இராமலிங்கம் செட்டியார்**

(நூல் & பாத்திர வியாபாரம்,
ஸ்ரீ கும்பேசுவரர் தெற்குவீதி கும்பகோணம்.)

அவர்கள் விருப்பத்தின்படி


திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனவித்துவான்

**திருவாளர் த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களாலும்**

கும்பகோணம் தமிழ்ப்புலவர்

**திருவாளர் குழந்தைவேற் பிள்ளையவர்களாலும்**


நூதனமாக எழுதிய
பொழிப்புரை முதலியவற்றுடன் பதிப்பிக்கப்பெற்றது


**1955.**

சாதா பயிண்டு விலை ரூ. 3—4—0
காலிக்கோ பயிண்டு விலை ரூ. 3-12—0

உ

# முகவுரை.

தேவாரம்

திருச்சிற்றம்பலம்.

பேணு தொழிந்தேன் உன்னையலால் பிறதேவரைக்
காணு தொழிந்தேன் காட்டுதியேல் இன்னங்காண்பன்நான்
பூணுண் அரவா! புக்கொளியூர் அவிநாசியே!
காணுத கண்கள் காட்டவல்ல கறைக்கண்டனே.

திருச்சிற்றம்பலம்

—ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள்.

'திருப்புக்கொளியூர் அவிநாசி' என்பது கொங்கு நாட்டில் தேவாரத்திருப்பதிகம் பெற்ற ஏழ்தலங்களுள் ஒன்று. மற்றைச் சிவதலங்கள் ஆறும்வருமாறு: திருமுருகன்பூண்டி திருநணு ஆகிய பவானிகூடல், கொடிமாடச் செங்குன்றூர் ஆகிய திருச்செங்கோடு, வெஞ்சமாக்கூடல், திருப்பாண்டிக் கொடுமுடி, கருவூர் ஆனிலை என்பன. திருப்புக்கொளியூர் என்பது தலப்பெயர்: அவிநாசி என்பது இறைவர் பெயர் அவிநாசியப்பர் அவிநாசிலிங்கம் என்பதும் காண்க. அவி நாசி-விநாசமில்லாதது எனப்பொருள்படும். அவிநாசி கோயிற்பெயரெனினுமாம்.

இத்தலம் ஈரோடிலிருந்து ரெயில்மார்க்கமாய் மேற்கே திருப்பூர்வரை (32மைல்) சென்றால் பின்பு வடக்கே 8மைல் தொலைவில் உள்ளது. திருப்பூருக்கு அடுத்த வஞ்சிபாளையம் நிலையத்திலிருந்து அவிநாசி-5மைல்தான் இருக்கும்; வடதிசை சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருப்பதிகம் பாடி முதலைவாய்ப்பிள்ளையை அழைத்தருளிய தலம் இது.

இத்தலத்துக்குரிய விநாயகர் கோபுரவாயில் செல்வ விநாயகர் சுவாமி திருநாமம்-அவிநாசியப்பர். அம்பிகை-கருணாலயச்செல்வி, பெருங்கருணாம்பிகை. தீர்த்தம்-காசி கங்காகூபம். தலவிருட்சம்-மாமரம் இத்தலத்து வழிபட்டுப் பேறுபெற்றோர்: பிரமன், அயிராவதம், தாடகை, நாக கன்னி, வியாதர்; சங்ககன்னன், தெய்வ அரம்பை, காகம், எக்ஞகுத்தன், தருமசேனன் முதலியோர் இதனை இத்தல புராணத்துள்ள சருக்கங்களில் விவரமாக அறிந்துகொள்ள லாம்.

இத்தலபுராணச் செய்யுட்கள் 1021. இதனை இயற்றிய ஆசிரியர் பெயர் இளையான் கவிராயர் என்பர்

வடமொழியில் உள்ள இத்தல மான்மியத்தைத் தந்து தமிழிற்பாடுக எனப்பணித்த பெரியார் திருஞானசம்பந்தர் என்பவர் அவர் ஒரு சைவதபோதனர், முனிவர் சீகாழிப் பதியினர், இதனை இந்நூல் 27-ஆம் செய்யுள் முதலியன உணர்த்தும் இத்தமிழ் மொழிபெயர்ப்புச் செய்யுள் நூல் ஆகிய புராணம் கந்தபுராணம் சிவமான்மியகாண்டத்து அறுபது அத்தியாயங்களுக்கு மேற்பட்ட செய்தியேயாம் என 52ஆம் செய்யுள் கூறும் ஆதலின், அப்பகுதியையே இவ்வாசிரியர் தமிழ்ச்செய்யுளாகப் பாடினர் என்பது காண்க மற்றும், பிரமாண்டம் பவுடியம் முதலிய புராணங் களிலும் இத்தலமான்மியம் கூறப்பட்டுளதென்பர்.

இனி, பிரமாண்டபுராணம் பவிடியோத்தரம் முதலிய புராணங்களிற் கூறப்பட்டுள்ள சில செய்திகள் இத்தல புராணத்திலே. காணப்படாதன. ஆதலின் அச்செய்திகள் மட்டும் இங்கே முற்பதிப்பிற்கண்டபடியே இதில் சேர்க்கப் பட்டுள்ளமை காண்க.

## பிரமாண்ட புராணம்

94-வது அத்தியாயத்தில் ஸ்ரீ நந்திதேவர் சனற்குமாரருக்கு அநுக்கிரகம் பண்ணுகின்றார். பூர்வத்தில் எல்லாத் தேவர்களும் முனிவர்களும் கைலாயத்தையடைந்து சிவ சந்நிதியில் அநேக ஸ்தோத்திர வாக்கியங்களாற்றுதித்து நிற்கப், பரமசிவன் இடபாரூடராய்ச் சபாமத்தியமடைந்து பிரகாசிக்க, பதஞ்சலிமுனிவர் அநேகவிதமாகப் பிரார்த்தித்துப் பூர்வத்தில் உமது ஆனந்ததாண்டவதனைத் தெரிசித்துத் திருப்தியடைந்தோமாயினும் இன்னும் அந்த நிருத்தத்தைதக்கண்டுகளிக்க விரும்புகின்றோம். என்று பிரார்த்தித்தனர் பரமசிவன் திருவுள்ளமகிழ்ந்து மகாப்பிரளய காலத்தில் சகல புவனங்களையுங் கவளீகரித்துச் செய்யும் நிர்த்தனத்தை ஆரம்பிக்கிறேனென்றுசொல்லி அவ்வாறுநடனஞ்செய்யத் தொடங்கி விஷ்ணு முதலிய தேவர்கள் முறைப்படி வாத்தியத்தொனிபுரியப் பதினாயிரந்தேவருடம் ஆனந்ததாண்டவஞ் செய்தருளினார். என்றும்

95-வது அத்தியாயத்தில் எல்லாவற்றையுங்கவளீகரித்து அங்ஙனம் நடனஞ்செய்யுங்காலத்தில் அவிநாசி க்ஷேத்திரமானது ஸ்வவாச ஸ்தானமானதினால் அப்பிரளயத்திலேயும் நாசமடையவில்லை ஆகவின் இது அதியுத்தமமான க்ஷேத்திரம் சாரதையென்னுந் தீர்த்தத்துடன் கூடியிருக்கிறது. இந்நதியின் தென்கரையில் கிருதமாலையென்னும் ஒருவனமானது பலவளப்பங்களாலுஞ் சிறந்துள்ளது. அவ்வனத்தில் வைதர்ப்பனென்னும் ஒரு அரசன் அரண்மனை கட்டிக்கொண்டு சந்திரிகை என்னும் மனைவியோடுகூடி வாழுநாளில் சந்ததியில்லாமையால் மனவருத்தமுற்று நாரதர் சொற்படி அவிநாசியையடைந்து கோபுரம்முதலிய கைங்கிரியங்களைச்செய்து நாடோறும் சிவ

தெரிசனம் பத்தியோடு செய்துவரவே சிவபெருமான் திருவுளங்கொண்டு தெரிசனங்கொடுத்து அவ்வரசனெண்ணிய படியே சந்தானவரமுந்தந்து ஒரு தடாகமுண்டுபண்ணி இதுவே கங்கையென்றும் இத்தலமே காசியென்றுந் திருவாக்கருளி அந்தர்த்தானமாயினார். பின் சின்னாட்கழிய ஒரு முனிவர் அவிநாசியை அடைந்து அத்தீர்த்தத்தில் மூழ்கிச் சிவலிங்கபெருமானைத் தெரிசித்துப் புறம்போந்து பதஞ்சலி முனிவரைக்கண்டு உசாவிக்கொண்டிருக்கும் பொழுது நான் காசிக்குப்போய்வந்தேனென்று சொல்ல அதுகேட்ட பதஞ்சலிமுனிவர் இத்தலமே காசி இத்தீர்த்தமே கங்கை என்று பலவாறு சொல்லியும் அம்முனிவர் நம்பாமையால் அவருக்கு நம்பிக்கை யுண்டாகும்படி பதஞ்சலியார் அம் முனிவரோடு அத்தீர்த்தத்தையடைந்து அதிலே ஒரு தண்டத்தையிட்டுப்பின்பு இருவருங்காசியையடைந்து கங்காஸ்நானஞ்செய்யும்போது அத்தண்ட மங்குவரப்பார்த்துப் பதஞ்சலியார் அம்முனிவரைநோக்கிப் பார்த்தீரா அவிநாசியின் மகிமையை யென்று விளம்ப அவர்மிகுந்த பிரமானந்த மடைந்தார் என்றும்.

96-வது அத்தியாயத்தில் பூர்வகாலத்திலே இந்திரன் விருத்திராசுரனைச் சங்கரித்த மதங்கொண்டு தேவகணங் களுடன் அமராவதியைச் சேர்ந்து பின்னர் இரகசியமாக வேலோத்தியானத்தையடைந்து இந்திராணியோடுகூடி விளையாடும்போது சிலீமுகனென்னும் ஓரசுரன் பொன்னுலகத்தையுற்றுப் புலோமசையுடன் விளையாடிக்கொண்டிருக்கும் வாசவனைக்கண்டு யுத்தத்திற்கு அழைக்க மகபதிமிக்ககோபங் கொண்டுதனது ஆயுதத்தையும் வாகனத்தையும் ஸ்மரிக்கஆயுதம் வந்து தன்கரஞ்சேர்ந்தது. வாகனம்வரவில்லை. இந்திரன் அவ்வாயுதத்தினால் அசுரனைச் சங்கரித்துப் பின்பு அயிரா

வதத்தைக் கண்ணுற்று நீபூலோகம் போய்க்காட்டானையாகக் கடவாயென்று சபிக்க, அயிராவதம் நடுநடுங்கிப்பிரார்த்திக்க இந்திரன் மனமிரங்கி நீகாட்டானையாகி நெடுங்காலந்திரிந்து பின் அவிநாசியையடைந்து சாதரியென்னுந் தீர்த்தத்தில் ஜலம்பருகுவாயாயின் அவ்வுருவம்மாறி உனது சுயவடிவம் பெற்று எனதிடஞ்சாருவாயென்று சொல்ல அயிராவதம் விடைபெற்றுப் பூமியில்வந்து காட்டானையாய்த் திரிந்து பின்பு அவிநாசியைக்கண்டு அத்தீர்த்தத்தால் தனது சாபம் நீங்கிப் பொன்னுலகத்தையடைந்து முன்போல்வே தேவராச னுக்கு வாகனமாயிருந்தது. என்றும் சொல்லுகின்றது.

## பவுஷியோத்தரம்

70-வது அத்தியாயத்தில் பூர்வகாலத்திலே கோள தேசத்தில் ஒரு பிராமணன் சகல வித்தைகளையும் அப்பியா சித்து அயாஜ்ஜியஜெனம்பண்ணிய தோஷத்தினலே விந்திய பர்வதத்தில் பிரமராக்ஷதனுகப்பிறந்து எங்குஞ் சஞ்சரித் துத்திரிய ஒருநாள் காசிவாசிகளாகிய பிராமணர்கள் அவி நாசிமான்மியத்தை வர்ணித்துக்கொண்டு வழிச்செல்லுகை யில் அவர்களைக்கண்டு சங்கரிக்கக்கருதிச் சமீபத்தில்வர அவர்கள் பிரஸ்தாபிக்கும் ஸ்தலமகத்துவத்தைக் கேட்டுக் குரூரகிருத்தியத்தையும் பயங்கரமான இராக்கதவடிவத்தை யும் நீங்கித் திவ்விய வடிவம்பெற்று அப்பிராமணர்களைப் பார்த்து நீங்கள் சொல்லிய ஸ்தல மகிமையினுல் நான் இவ் வடிவம் பெற்றேனென்று சொல்லிச் சிவபதமடைந்தான்: அப்பிராமணர்கள் அதிசயித்தவர்களாய் அவிநாசியை யடைந்து சிவதெரிசனஞ்செய்து இஷ்டலாபத்தை யடைந் தார்கள் என்றும்,

71-வது அத்தியாயத்தில் இந்திரனானவன் மல்லிகைக் கொடிகளாற் சூழப்பட்டுள்ள சிவலிங்கத்தை ஆராதித்துத் தீர்த்தமொன்றுண்டாக்கிச் சிவானுக்கிரகத்தால் தனது பதவியைப்பெற்றான் என்றும் தேவர்கள்யாவரும் அத்தீர்த் தத்திலே மூழ்கி இஷ்டகாமியங்களை அடைந்தார்கள். என்றும் பிருங்கி ரிஷி இத்தீர்த்தத்திலாடிச் சிவலிங்க தெரி சனஞ்செய்து முத்தியடைந்தார் என்றும்.

72-வது அத்தியாயத்தில் அங்கதேசத்தில் சோணபத் திரையென்னும் நதியின் தெக்ஷணதீரத்திலே சுமந்துவினு டைய ஆசிரமமுளது. அவர் வமிசத்தனான ஒரு பிரமசாரி வேதவேதாங்கங்களையறிந்து யோகமார்க்கத்தில் தவஞ் செய்து கொண்டு அங்கிருக்கையில் கந்தருவராசகன்னியர் கள் லீலார்த்தமாகப் பூலோகத்தில் சஞ்சரித்து வருங்கால் அப்பிரமசாரியைக்கண்டு மோகித்தவர்களாய் அவர் தவத் துக்கு விக்கினஞ்செய்துவர அப்பிரமசாரி கோபங்கொண்டு நீங்கள் பைசாச ரூபமடையக்கடவீர் என்று சபிக்க அப் பெண்கள் பயந்து நாங்கள் உமது வடிவத்தைக்கண்டு மோகிகளாய்உம்மைப்பதியாகப்பெற்றுச்சிசுருஷையெய்யக் கோரினதேயன்றி யுமது தவத்திற்கு விக்கினஞ்செய்ய வந்தவர்களல்லவே அபலர்களான எங்களை இங்ஙனஞ் சபிக் காமல் இரக்ஷிக்கவேண்டுமென்று பிரார்த்திக்கப் பிரமசாரி கருணித்து நீங்கள் எமது வாக்கின்படி பைசாரூபமடைந்து பூர்வஞானத்துடன் அவிநாசியையடைந்து சாதரியில் மூழ் கிச் சிவலிங்க தெரிசனஞ் செய்தால் பூர்வரூபமடைந்து என்னை யும்பதியாகப் பெறுவீர்களென்றுசொல்ல அவர்கள் அவ்விதமே பைசாச வடிவமாய்த் திரிந்து பின் அவிநாசியை யடைந்து கந்தருவரூபத்தை யடைந்தனர்கள் பின்பு பிரமசா ரியும் புக்கொளியூரையடைந்து தீர்த்தமாடிச் சிவலிங்க

ஆராதனைபுரிந்து அக்கன்னியரை மணந்து ஆச்சிரமம். மொன்று அமைத்துக்கொண்டு அங்குதானே வசித்தார் என்றும்.

73-வது அத்தியாயத்தில் தீர்த்தவர்ணனை லிங்கவர்ணனை தீர்த்தாபிஷேகவர்ணனை இத்தன்மையன என்றும்

74-வது அத்தியாயத்தில் பஞ்சாக்ஷரமகிமை விபூதி மகிமை உருத்திராக்கமகிமை யித்தன்மையன என்றும்

75-வது அத்தியாயத்தில் சாதரியென்னும்நதி கங்கைக்குச்சமானமாயும், அவிநாசி காசிக்குச் சமானமாயும், சிவலிங்கம் விசுவநாதலிங்கத்திற்குச் சமானமாயும் விளங்குவதனால் பிரதிமாசமும் இத்தீர்த்தத்திலே மூழ்கிச் சிவார்ச்சனைசெய்து மகாதானங்களைப் புரிந்தவர்கள் சகல பாவத்தினின்றும் விடுபட்டு இம்மை மறுமை வீட்டின்பங்களைப் பெறுவார்கள். என்றும்

76-வது அத்தியாயத்தில் மகதாதிபதியென்னும் அரசன் சுமதியென்னும் மனைவியோடு கூடிக்களித்துவரு நாளில் அவனுக்கு இராசதானியாகிய காம்பிலியமென்னும் பட்டணத்தைத் துருவாசமுனிவரடைந்து இராச கிரகத்திற் பிரவேசிக்க அரசன் காமாதுரனாய் அந்தப்புரத்திலே தானேயிருந்துவிட்டான். அதுகண்ட துருவாசர் கோபங்கொண்டு இவ்வரசன் மத்தனாய்ப் பிராமண அவமானஞ் செய்ததனால் அபஸ்மாரியாகக் கடவனென்று சபித்தார். அதையறிந்த மந்திரிகள் அரசன்பாலுரைக்க அரசன் வெருண்டு விரைந்து சென்று துருவாசரை வணங்கிப் பலவாறு வேண்டித்துதிக்க முனிவர் முனிவுமாறி அரசனை நோக்கிப் பிராமணசாபம் வீண்போகாது ஆகலின் நீ நமது சாபத்தை யேற்று அதியுத்தமபுண்ணிய க்ஷேத்திரமாகிய

திருப்புக்கொளியூரை யடைந்து தீர்த்தமாடிச் சிவலிங்க மூர்த்தியைச் சேவித்தால் சாபவிமோசனமாகுமென்று கட்டளையிட அரசன் அவ்வண்ணமே அவிநாசியையடைந்து சாபவிமோசனமாய்ப் பரிசுத்தனாயினன் என்றும்.

77-வது அத்தியாயத்தில் நளமகாராசன் சேனைகளோடு சென்று வனத்தில் வேட்டையாடி மிகுந்த சிரமத்தினால் ஓர்மரத்தினது நீழலைஅடைந்து நித்திரை செய்யுங்காலையில் துர்ச்சொப்பனங்கண்டு அலறியெழுந்து மந்திரிகளுடன் சொல்ல மந்திரிகள் ஆராய்ந்து அதற்குப் பரிகாரமாக இன்னதுசெய்ய வேண்டுமென்று பரிகாரஞ் சொல்லினர். அரசன் விதிவசத்தால் அப்பரிகாரஞ் செய்யாமையால் இராச்சியநாசாதி மகா கஷ்டங்களை யனுபவித்துப் பின்பு சொப்பனபலன் இதுவெனத்துணிந்து மந்திரிகள் அந்தணர்களோடு புறப்பட்டு அதியுத்தமமான அவிநாசி க்ஷேத்திரமடைந்து அசுவமேதயாகமொன்று செய்து பல தானதர்மங்களையுஞ்செய்து சிவலிங்கதெரிசனம் முதலிய சிவபுண்ணியங்களையுஞ்செய்து வந்தமையால் அத்தோஷம் நீங்கி முன்போலவே இராச்சிய பரிபாலனஞ்செய்து சகல வைபவத்தையுமடைந்து சுகித்திருந்தான் என்றும்.

78-வது அத்தியாயத்தில் புஷ்கரக்ஷேத்திரத்தில் சாதரி தீர்த்தத்திலும் சூரியகுண்ட தீர்த்தத்திலும் அநேக ரிஷிகள் ஸ்நானஞ்செய்து விபூதியுத்தூளனம் பண்ணி பஞ்சாக்ஷரஞ் செபித்து முத்தியடைந்தார்கள். ஆகையால் சவுனகாதிரிஷிகளே நீங்களும் அங்ஙனம் புரிவீர்களாயின் முத்தியடைவீர்களென்று சூதர் அருளிச்செய்தார். என்றும்

79-வது அத்தியாயத்தில் சவுனகாதி முனிவர்கள் அவிநாசியென்னும் புண்ணிய க்ஷேத்திரத்தையடைந்து

தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சிவலிங்கபெருமானை நேசித்துப் பூசித்துப் பலவாறு துதித்துப் பிரார்த்திக்கச் சிவ பெருமான் பார்வதிசமேதராய் இடபவாகனரூடராய்த் தெரிசனங்கொடுக்கச் சவுனகாதியர் அடியற்றமரம்போல் வீழ்ந்துவணங்கி நாத்தழும்பத்துதித்து ஆனந்த பரவசராய் நிற்கச் சிவபெருமான் கருணைகூர்ந்து உங்களுக்கு வேண்டிய வரம்யாதென சவுனகாதியர் மீண்டும் வணங்கி எழுந்து அஞ்சலியஸ்தராய் நின்று கருணைத்தடங்கடலே எங்களுக்கு ஞானோபதேசம் அனுக்கிரகஞ்செய்ய வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தனர். சிவபெருமான் அதற்கிசைந்து பிரமதீர்த்தக்கரையில் ஆலமரத்தடியில் எழுந்தருளிப் பஞ்சாக்ஷரத்தை யுபதேசித்தருளி நீங்கள் இப்பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜெபித்துச் சாதரி தீர்த்தத்திலே மூழ்கிச் சிவலிங்கத்தைத் தெரிசித்தால் உங்களுக்குச் சர்வஞ்ஞானமுண்டாகும் என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினார். சவுனகாதி முனிவர்கள் அவ்வண்ணமேபுரிந்து சிவஞானத்தைப்பெற்றார்கள். என்றும் சொல்லுகின்றது.

ஈண்டு சாதரிநதியென்று கூறியது தமிழில் "திருநள்ளாறு" என்று வழங்கப்படுகிறது இதுநிற்க சில நாளின்முன் ஒரு குருநாத பண்டாரம் என்னும் பத்தன் ஒருவனிருந்ததாயும் அவன் இலிங்கதாரியென்றும் அவ்விலிங்கத்தை அவன் தீர்த்தக்கரையில் பூசித்துக்கொண்டிருக்கும்போது குளம் உடைப்படுத்ததை அடைக்கும் பொருட்டு அதிகாரிகள் அவனை வேலைக்கிழுத்தார்களென்றும் அப்போது அவன்பூசித்த இலிங்கம் தடாகத்தில் பறித்தெறியப்பட்டதென்றும் வேலைமுடிந்தபின் அவன்தன் பூசாலிங்கம் கிடைத்தாலன்றி உயிர்வாழ்வதில்லையென்று

உயிர் துறக்கத்துணிந்தான் என்றும் அக்காலையில் தடாகத்தி லிருந்த ஒரு மீனானது அவ்விலிங்கத்தை வாயில் கவ்விக் கொண்டுவந்து அவனுக்குக் கொடுத்ததென்றும் சொல்லப் படுகிறது இதற்கத்தாக்ஷியாக மீன் சிவலிங்கத்தோடு வந்த திருவுருவத்தை தீபஸ்தம்பக்குறட்டிலும், ஷை பண்டாரம் சிவலிங்கம் பெற்றுப் பூசித்த திருவுருவத்தைக் கோபுர வாயிலின் வடது திசையில் ஓராலயத்திலும் வைக்கப் பட்டிருக்கின்றன.

அன்றியும் இத்தலத்தின் வைபவங்கள் பலவுள அவற்றை விரிவஞ்சி விடுத்தாம்.

இத்தலபுராணத்தின் அச்சிட்ட பிரதிகள் கிடைப்பது மிகமிக அரிதாயிருந்தமையின் திரு S. K. இராமலிங்கம் செட்டியாரவர்கள் மிகக்கிலமான ஓர் பிரதியைக் கொடுத்து பரிசோதித்து அச்சிட்டுபகரிக்க வேண்டினர். இதற்கொரு பொழிப்புரையும் புதிதாக எழுதிச் சேர்த்தல் பேருபகார மாம் எனவும் தெரிவித்தார்கள். அவர்கள் விருப்பத்தின் பெருக்குக்கு இசைய உடனே செய்து முடித்துத்தர இயலாமைக்குரிய காரணங்கள் பல அவற்றுள் இன்றியமை யாத காரணம் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து இருபத்தொன்றுவது குருமஹாசந்நிதானத்தின் கட்டளைப்படி ஏறக்குறைய நூறு நூல்கள்வரை பிரதி செய்து ஆராய்ந்து ஓய்வின்றி உரை முதலியன எழுதி அச்சிட்டு வந்தமையும், சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கை யும் திருவாவடுதுறை யாதீனத்து உரையுடன் பிரதிசெய்து பலபிரதிகளையும் வைத்து ஆராய்ந்து குருவருளும் திரு வருளுமே பெருந்துணையாக மற்றோர் துணையின்றித் தனியே அச்சிட்டு வந்தமையுமேயாம். இப்பணியும் சிவப்

பணியே ஆகலின், மறுத்தற்கு அஞ்சி ஏற்றுக்கொண்டேன் ஆயினும், முழுவதும் என்னுடைய பணியாகவே இருத்தற்குப் புண்ணியவாய்ப்பில்லை என்னுடைய அன்பர் தமிழ்ப் புலவரும், மருத்துவ அறிஞருமாகிய திருவாளர் குழந்தைவேற் பிள்ளையவர்கள் உடன் இருந்து இதனை முடித்தனர் ஆயினும், செட்டியாரவர்கள் விருப்பம் ஒருவாறு அவர்கள் தவத்தால் முற்றுப்பெற்றது என்றே சொல்லலாம். இவ்விஷயத்தில் உள்ள அவர்கள் பகீரதப் பிரயத்தனத்தால்தான் இப்புராணம் எளிதில் யாவருக்கும் கிடைப்பதாயிற்று. சைவ நன்மக்கள் செட்டியாரவர்கள் செய்த இந்த நன்றியை மறவாமல் போற்றுவாராக. இரண்டு ஆண்டுகளின் முன் வரவேண்டிய இப்புத்தகம் தாமதமாக வருதல் குறித்து அறிஞர் பொறுத்தருள்க.

இங்ஙனம்.
சித்தாந்தசைவமணி
**த. ச மீனாட்சிசுந்தரம் பிள்ளை,**
திருவாவடுதுறை ஆதீனவித்துவான்.

உ

# முன்னுரை.

திரு அவிநாசியென்னும் சிவத்தலம் கொங்கு நாட்டிலுள்ள தேவாரப் பாசுரம் பெற்ற தலங்களில் ஒன்றாகும் சைவசமயாசாரியர்களில் ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனாரால் திருவாய் மலர்ந்தருளப்பெற்ற தேவாரப் பதிகம் ஒன்றுள்ளது.

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகளால் திருவாசகத்தில் "அரியபொருளே அவிநாசி அப்பா பாண்டிவெள்ளமே என்று இத்தலத்தில் கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கும் சிவபெருமான் தோத்திரம் செய்யப் பெற்றிருக் கிறார். இத்தலத்தில் பிரமன் முதலாகப் பலர் சிவபெரு மானைப் பூசித்துப் பேறு பெற்றுள்ளார்கள் சுந்தர மூர்த்தி நாயனார் இத்தலத்தில் சிவபெருமானைத் தேவாரப் பாசுரத்தினால் தோத்திரம்செய்து முதலையுண்ட அந்தணச் சிறுவனைச் சில வருடங்கள் கழித்து, அம்முதலை வாயி லிருந்து வெளிவரச் செய்த திருவருட்செயலை, இவ் வவிநாசிப்புராணத்தில் சுந்தரச் சருக்கத்திலும், சிவானுக் கிரகம் பெற்ற குன்றத்தூர் ஸ்ரீ சேக்கிழார் நாயனாரால் திருவாய்மலர்ந்தருளப்பெற்ற திருத்தொண்டர் புராணத் தில் வெள்ளானைச் சருக்கத்திலும் நன்கு விளங்கக் காணலாம். இத்துணை அரும்பெருந் தகுதிகள் வாய்ந்த இவ்வவிநாசித் தலத்தின் வரலாறு ஒன்று பதினெண் புராணங்களுள் ஒன்றாகிய மகாஸ்காந்த புராணத்துள், சிவமகாத்மிய காண்டத்தில் சுமார் அறுபது அத்தியாயங் களுக்கு மேலாக விவரித்துக் கூறப்பெற்றிருக்கிறது. அவ்வரலாறு சனற்குமார முனிவர் முதலியோர்கட்கு ஸ்ரீ நந்தியெம்பெருமானால் விதந்துரைக்கப்பெற்றது. அவ் வடமொழிப் புராணத்தின் தமிழ்மொழி பெயர்ப்பைச் சுமார் நானூறு வருடங்களுக்கு முன் கொங்கு நாட்டில் வாழ்ந்த இளையான் கவிராயர் என்னும் கவிஞர் பெருமான் இயற்றியுள்ளார். அது கடவுள் வாழ்த்து முதலாகப் பதின் மூன்று சருக்கங்களையுடையது அம்மொழி பெயர்ப்பு நூலுக்குத் திரு அவிநாசிப்புராணம் என்று பெயர். இப்புராணம் 1021 செய்யுட்களையுடையது. இப்புராணத்

தின் முதற்பதிப்பொன்று 70-ஆண்டுகளுக்குமுன் அச்சிடப் பெற்றது. அதன் பிரதிகள் இப்பொழுது கிடைப்பது மிக அருமையாயிருக்கின்றது. பிரதிகள் கிடைப்பதன் அருமையை உணர்ந்து திரு அவிநாசித் தலத்துக்கு அணிமையிலுள்ள கருக்கம்பாளையத்தில் வாழ்பவர்களும், பாரம்பரியமான சைவ மரபிற்றோன்றியவர்களும், சிவ பக்தி, சிவனடியார் பக்தி, குரு பக்தி, திருமுறைகளைப் போற்றி ஓதுதல் முதலிய நற்குண நற்செய்கை உடைய வர்களும், இக் குடந்தைமாநகரில் பித்தளைப் பாத்திர வியாபாரம், நூல் வியாபாரம் செய்யும் வணிகர்குல திலகமு மாகிய சைவ அன்பர் உயர்திரு. சொ. கு. இராமலிங்கம் செட்டியாரவர்கள் இப்புராணத்தின் இரண்டாவது பதிப்பை அச்சிட்டு உலகிற்கு உதவும் சிவபுண்ணியத்தைக் கைக்கொண்டு இப்புராணத்தை அச்சியற்றிப் பூர்த்தி செய்துள்ளார்கள் இப்புராணத்தின் முதற் பதிப்பில் செய்யுட்கள் மாத்திரம் அச்சிடப்பெற்றிருந்தன. ஆனால் இவ்விரண்டாம் பதிப்பில் இப்புராணச் செய்யுட்கள் ஒவ் வொன்றிற்கும் பொழிப்புரை எழுதச்செய்து அச்சியற்றி யுள்ளார்கள் இப்புராணத்தின் முதலிலுள்ள சில சருக்கங் களின் செய்யுட்களுக்குத் திருவாவடுதுறை ஆதீனவித்து வான் சித்தாந்த சைவமணி உயர்திரு த. ச மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களாலும், எஞ்சிய பல சருக்கங்களின் செய்யுட் களுக்கு அடியேனாலும் என் சிற்றறிவுக் கெட்டியவரையில் பொழிப்புரை எழுதிக் கொடுக்கப் பெற்றுள்ளது. ஒன்றுக்கும் பற்றாத அடியேனையும் இச்சிவபுண்ணியத்தில் ஈடுபடத் திருவருள் பாலித்த ஸ்ரீ அவிநாசியப்பர் திருவடி களை என்றும் மனமொழிமெய்களால் வணங்குகின்றேன் இச்சிவபுண்ணியத்தில் என்னையும் ஈடுபடச்செய்த இக்

நூலின் இரண்டாம் பதிப்பாளர் உயர்திரு சொ. கு. இராமலிங்கம் செட்டியாரவர்கட்கும் என்றும் நன்றி அறிதலையுடையவனாயிருக்கின்றேன் குற்றங்களைந்து குணம் கொண்டு அடியேனை ஆசீர்வதிக்கச் செந்தமிழ்ப் பேரறிஞர்களை வேண்டிக்கொள்கிறேன்.



சைவமும் தமிழும் வாழ்க, சைவர்கள் இன்பநிலை
எய்தி வாழ்க என்றும் அரன் நாமம் ஓங்குக.



இங்ஙனம்,
தமிழ்ப்பண்டிதர்,
**சி. குழந்தைவேற் பிள்ளை,**
கும்பகோணம்.



திருப்புக்கொளியூர் அவிநாசியில் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் முதலையுண்ட பாலனை அழைத்துக் கொடுத்தது.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

அணவரியான் கண்டாய் அமலன் கண்டாய் அவிநாசி கண்டாய் அண்டத்தான் கண்டாய், பணமணிமா நாக முடையான் கண்டாய் பண்டரங்கன் கண்டாய் பகவன் கண்டாய், மணல்வருநீர்ப் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய் மாதவற்கும் நான்முகற்கும் வரதன் கண்டாய், குணமுடைநல் லடியார்வாழ் கொட்டை யூரிற் கோடீச் சரத்துறையுங் கோமான் தானே.

திருச்சிற்றம்பலம்

# சுந்திரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த

## திருப்புக்கொளியூர் அவிநாசி திருப்பதிகம்

திருச்சிற்றம்பலம்

எற்றான் மறக்கேன் எழுமைக்கும் எம்பெரு மானையே
உற்றாய்என் றுன்னையே உள்குகின் றேன்உணர்ந் துள்ளத்தால்
புற்றா டரவா புக்கொளி யூரவி நாசியே
பற்றாக வாழ்வேன் பசுபதி யேபர மேட்டியே.

வழிபோவார் தம்மோடும் வந்துடன் கூடிய மாமணி
ஒழிவ தழகோ சொல்லாய் அருளோங்கு சடையானே
பொழிலாருஞ் சோலை புக்கொளி யூரிற் குளத்திடை
இழியாக் குளித்த மாணி எனைக்கிறி செய்ததே.

எங்கேனும் போகினும் எம்பெரு மானை நினைந்தக்கால்
கொங்கே புகினுங் கூறைகொண் டாறலைப் பார்இலை
பொங்கா டரவா புக்கொளி யூரவி நாசியே
எங்கோனே உனை வேண்டிக்கொள் வேன்பிற வாமையே.

உரைப்பார் உரைஉகந் துள்கவல் லார்தங்கள் உச்சியாய்
அரைக்கா டரவா ஆதியும் அந்தமும் ஆயினாய்
புரைக்காடு சோலைப் புக்கொளி யூரவி நாசியே
கரைக்கால் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே.

அரங்காவ தெல்லா மாயிடு காடது அன்றியும் .
சரங்கோலை வாங்கி வரிசிலை நாணியிற் சந்தித்துப்
புரங்கோட எய்தாய் புக்கொளி யூரவி நாசியே
குரங்காடு சோலைக் கோயில்கொண் டகுழைக் காதனே.

நாத்தானும் உனைப்பாடல் அன்றிநவி லாதெனுச்
சோத்தென்று தேவர் தொழுநின்ற சுந்தரச் சோதியாய்
பூத்தாழ் சடையாய் புக்கொளி யூரவி நாசியே
கூத்தா உனக்குநான் ஆட்பட்ட குற்றமுங் குற்றமே.

மந்தி கடுவனுக் குண்பழம் நாடி மலைப்புறம்
சந்திகள் தோறுஞ் சலபுட்பம் இட்டு வழிபடப்
புந்தி உறைவாய் புக்கொளி யூரவி நாசியே
நந்தி உனை வேண்டிக் கொள்வேன் நரகம் புகாமையே.

பேணு தொழிந்தேன் உன்னை அல்லாற்பிற தேவரைக்
காணு தொழிந்தேன் காட்டுதி யேல்இன்னங் காண்பன்நான்
பூணுண் அரவா புக்கொளி யூரவி நாசியே
காணாத கண்கள் காட்டவல் லகறைக் கண்டனே.

நள்ளாறு தெள்ளா றரத்துறை வாய்எங்கள் நம்பனே
வெள்ளாடை வேண்டாய் வேங்கையின் தோலை விரும்பினும்
புள்ளேறு சோலைப் புக்கொளி யூரிற் குளத்திடை
உள்ளாடப் புக்க மாணியென் னைக்கிறி செய்ததே.

நீரேற ஏறும் நிமிர்புன் சடை நின்மல மூர்த்தியைப்
போரேற தேறியைப் புக்கொளி யூரவி நாசியைக்
காரேறு கண்டனைத் தொண்டன் ஆரூரன் கருதிய
சீரேறு பாடல்கள் செப்பவல் லார்க்கில்லை துன்பமே.

திருச்சிற்றம்பலம்

# திருவாசகம் ஆனந்தமாலை

நரியைக் குதிரைப் பரியாக்கி ஞாலமெல்லா நிகழ்வித்துப்
பெரியதென்னன் மதுரையெல்லாம் பிச்சதேற்றும் பெருந்துறையாய்
அரிய பொருளே யவிநாசி யப்பா பாண்டி வெள்ளமே
தெரிய வரிய பரஞ் சோதி செய்வ தொன்று மறியேனே.

திருச்சிற்றம்பலம்

# திருமூலர் திருமந்திரம்

தலைவி தடமுலை மேனின்ற தையல்
தொலைவிற் றவஞ்செய்யும் தூய்நெறித் தோகை
கலைபல வென்றிடுங் கன்னியென் னுள்ள
நிலைபெற விங்கே நிறைந்து நின்றாளே.

திருச்சிற்றம்பலம்

# பதினோராந்திருமுறை திருத்தொண்டர் திருவந்தாதி

கொடுத்தான் முதலைகொள் பிள்ளைக் குயிரன் றுபுக்கொளியூர்த்
தொடுத்தான் மதுர கவியவி நாசியை வேடர் சுற்றம்
படுத்தான் றிருமுருகன் பூண்டியினிற் பராபரத்தேன்
மடுத்தா னவனென்பர் வன்றொண்ட னாகின்ற மாதவனே'

திருச்சிற்றம்பலம்

# பெரியபுராணம் வெள்ளானைச் சருக்கம்

மைந்தன் றன்னை யிழந்த துயர் மறந்து நான்வந் தணைந்ததற்கே
சிந்தை மகிழ்ந்தார் மறையோனு மனைவி தானுஞ் சிறுவனையான்
அந்த முதலை வாய்நின்று மழைத்துக் கொடுத்தே யவிநாசி
யெந்தை பெருமான் கழல்பணிவே னென்றார் சென்றா ரிடர்களைவார்.

இவ்வா றருளிச் செய்தருளி யிவர்கள் புதல்வன் றனைக் கொடிய
வெவ்வாய் முதலை விழுங்கு மடு வெங்கே யென்று வினவிக்கேட்
டவ்வாழ் பொய்கைக் கரையிலெழுந் தருளியவனை யன்றுகவர்
வைவ்வா ளெயிற்று முதலை கொடு வருதற் கெடுத்தார் திருப்பதிகம்.

உரைப்பா ருரையென் றெடுத்ததிருப் பாட்டு முடியா முன்னுயர்ந்த
வரைப்பான் மையினீள் தடம்புயத்து மறலி மைந்தனுயிர் கொணர்ந்து
திரைப்பாய் புனலின் முதலை வயிற் றுடலிற் சென்ற வாண்டுகளுந்
தரைப்பால் வளர்ந்த தெனநிரம்ப முதலை வாயிற் றருவித்தான்.

பெருவாய் முதலை கரையின்கண் கொடுவந் துமிழ்ந்த பிள்ளைதனை
யுருகா நின்ற தாயோடி யெடுத்துக் கொடுவந் துயிரளித்த
திருவாளன் றன் சேவடிக்கீழ்ச் சில மறையோ னொடுவீழ்ந்தான்
மருவார் தருவின் மலர்மாரி பொழிந்தார் விசும்பில் வானோர்கள்.

திருச்சிற்றம்பலம்

# திருவிளையாடற் புராணம்

தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும்; முதலை
யுண்டபாலனை யழைத்ததும்; எலும்புபெண் ணுருவாக்
கண்டதும்; மறைக்கதவினைத் திறந்ததும்; கன்னித்
தண்டமிழ்ச் சொலோ; மறுபுலச்சொற்களோ! சாற்றீர்.

ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் திருவாய் மலர்ந்த

# நால்வர் நான்மணிமாலை

வாங்குசிலை புரையுமுட லெனுங்குளத்தின் மூலமலமெனுமோர்
வெங்கரவின் பகுவாயி னின்றுந்
தீங்கினுயி ரெனும்பனவக் குலமகனை யாதி திரோதாயி யென்னு
மொருவெந்திறற் கூற் றுவனு
லோங்குறுநா தாந்தமெனப் பெயரியவக் கரையி னுமிழ்வித்துச்
சிவமெனுமோர் தந்தையொடுங் கூட்டாய்
கோங்கமுகை கவற்றுமிள முலைப்பரவை மகிழக் குண்டையூர்
நென்மலைமுற் கொண்ட வருட்கடலே.

## அருணகிரிநாதர் அருளிச்செய்த

## அவிநாசி திருப்புகழ்

### 1

*இறவாமற் பிறவாமல் — எனையாள்சற் குருவாகிப்;*
*பிறவாகித் திரமான — பெருவாழ்வைத் தருவாயே;*
*குறமாதைப் புணர்வோனே — குகனேசொற் குமரேசா;*
*அறநூலைப் புகல்வோனே — அவிநாசிப் பெருமாளே.*

### 2

*பந்தப்பொற் பாரப யோதர*
*முந்திச்சிற் றுடைகை மேகலை*
*பண்புற்றுத் தாளொடு மேவிய — துகிலோடே—*

*பண்டெச்சிற் சேரியில் வீதியில்*
*கண்டிச்சிச் சாரொடு மேவியெ*
*பங்குக்கைக் காசுகொள் வேசியர் — பனிநீர்தோய்;*

*கொந்துச்சிப் பூவணி கோதையர்*
*சந்தச்சத் தாமரை வாயினர்*
*கும்பிட்டுப் பாணியர் வீணிய — ரநுராகங்—*

*கொண்டுற்றுப் பாயலின் மூழ்கினு*
*மண்டிச்செச் சேயென வானவர்*
*கொஞ்சுற்றுத் தாழ்பத தாமரை — மறவேனே;*

அந்தத் தொக்காதியு மாதியும்
வந்திக்கத் தானவர் வாழ்வுறும்.
அண்டத்துப் பாலுற மாமணி — யொளிவீசி—

அங்கத்தை பாவைசெய் தாமென
சங்கத்துற் றார்தமி ழோதவு
வந்துக்கிட் டார்கழு வேறிட — வொருகோடிச்;

சந்தச்செக் காளநி சாசரர்
வெந்துக்கத் தூளிப டாமெழ
சண்டைக்கெய்த் தாரம ராபதி — குடியேறத்—

தங்கச்செக் கோலசை சேவக
கொங்கிற்றொக் காரவி காசியில்
தண்டைச்சிக் காரயில் வேல்விடு — பெருமாளே.

3

மனத்தி ரைந்தெழு மீளையு மேலிட
கறுத்த குஞ்சியு மேநரை யாயிட
மலர்க்க ணண்டிரு ளாகியு மேநடை — தடுமாறி—

வருத்த முந்தர தாய்மனை யாள்மக
வெறுத்தி டங்கிளை யோருடன் யாவரும்
வசைக்கு றஞ்சொலி றைல்மிக வேதின — நகையாட;

எனைக்க டந்திடு பாசமு மேகொடு
சினத்து வந்தெதிர் சூலமு மேகையி
லெடுத்தெ றிந்தழல் வாய்விட வேபய — முறவேதான்—

இழுக்க வந்திடு தூதர்க ளானவர்
பிடிக்கு முன்புன தாள்மல ராகிய
இனைப்ப தந்தர வேமயில் மீதினில் — வரவேணும்;

கனத்த செந்தமி ழால்நினை யேதின
நினைக்க வுந்தரு வாயுன தாருள்
கருத்தி ருந்துறை வாயென தாருயிர் — துணையாகக்-

கடற்ச லந்தனி லேயொளி சூரனை
யுடற்ப குந்திரு கூறென வேயது
கதித்தெ ழுந்தொரு சேவலு மாமயில் — விடும்வேலா;

அனைத்த னுக்கம லாலய மீதுறை
திருக்க லந்திடு மாலடி தேடிய
அரற்க ரும்பொருள் தானுரை கூறிய குமரேசா—

அறத்தை யுந்தரு வேர்கன பூசுரர்
நினைத்தி னந்தொழு வாரம ராய்புரி
யருட்செ றிந்தவி காசியுள் மேவிய பெருமாளே.

## திருப்புக்கொளியூர்

### 4

பக்குவ வாசார லட்சண சாகாதி
பட்சண மாமோன சிவயோகர்—
பத்தியி லாறாறு தத்துவ மேல்வீடு
பற்றுநிரா தார நிலையாக;
அக்கண மேமாய துர்க்குணம் வேறாக
அற்புதமா ஞான வுபதேசம்—
அக்கர வாய்பேசு சற்குரு நாதாவு
னற்புத சீர்பாத மறவேனே;
உக்கிர வீராறு மெய்ப்புய னேநீல
வுற்பல வீராசி மணநாற—
ஒத்தநி லாவீசு நித்தில நீராவி
யுற்பல ராசீவ வயலூரா;
பொக்கமி ல்ாவீர விக்ரம மாமேனி
பொற்ப்ரபை யாகார அவிநாசிப்—
பொய்க்கலி போமாறு மெய்க்கருள் சீரான
புக்கொளி யூர்மேவு பெருமாளே;

### 5

மதப்பட்டவி சாலக போலமு
முகப்பிற்சண வாடையு மோடையு
மருக்கற்புர லேபன லாடமு மஞ்சைவாரி—
வயிற்றுக்கிடு சீகர பாணியு
மிதற்செக்கர்வி லோசன வேகமு
மணிச்சத்தக டோரபு ரோசமு மொன்றுகோல;

விதப்பட்டவெ ளானையி லேறிய
நிறைக்கற்பக நீழலு லாவியும்
மினுக்குப்பெறு சூளிகை மாளிகை யிந்த்ரலோகம்—

விளக்கச்சுரர் சூழ்தர வாழ்தரு
பிரப்புத்வகு மாரசொ ரூபக
வெளிப்பட்டெனை யாள்வய லூரிலி ருந்தவாழ்வே;

இதப்பட்டிட வேகம லாலய
வொருத்திக்கிசை வானபொ னுயிரா
யியற்றப்பதி தோறுமு லாவிய தொண்டர்தாள—

இசைக்கொக்கவி ராசத பாவனை
யுளப்பற்றொடு பாடிட வேடையி
லிளைப்புக்கிட வார்மறை யோனென வந்துகானிற்;

றிதப்பட்டெதி ரேபொதி சோறினை
யவிழ்த்திட்டவி சாசியி லேவரு
திசைக்குற்றச காயனு மாகிம றைந்துபோமுன்—

செறிப்பித்தக ராவதின் வாய்மக
வழைப்பித்தபு ராணக்ரு பாகர
திருப்புக்கொளி யூருடை யார்புகழ் தம்பிரானே.

## 6

வனப்புற்றெழு கேத மேவு கோகிலம்
அழைக்கப் பொருமார னேவ தாமலர்
மருத்துப்பயில் தேரி லேரி மாமதி தொங்கலாக—

மறுத்துக்கடல் பேரி மோத வேயிசை
பெருக்கப்படை கூடி மேல பூாவணி
வகுத்துக்கொடு சேமமாக மாலையில் வந்துகாதிக்

கனக்கப்பறை தாய ளாவ நீள்கன
கருப்புச்சிலை காம ரோவில் வாளிகள்
களித்துப்பொர வாசம்வீசு வார்குழல் மங்கைமார்கள்—

கலைக்குட்படு பேத மாகி மாயும
துனக்குப்ரிய மோக்ரு பாக ராஇது
கடக்கப்படு நாம மான ஞானம தென்றுசேர்வென்;

புனத்திற்றினை காவ லான காரிகை
தனப்பொற்குவ டேயு மோக சாதக
குனித்தப்பிறை சூடும் வேணி நாயகர் நன்குமாரா—

பொறைக்குப்புவி போலு நீதி மாதவர்
சிறக்கத்தொகு பாசி சோலை மாலைகள்
புயத்துற்றணி பாவ சூர னுருயிர் கொண்டவேலா;

சினத்துக்கடி வீசி மோது மாகட
லடைத்துப்பிசி தாசனுதி மாமுடி
தெறிக்கக்கணை யேவு வீர மாமனும் உந்திமீதே—

செனித்துச்சதுர் வேத மோது நாமனு
மதித்துப்புகழ் சேவ காவி மூாமலி
திருப்புக்கொளியூரில் மேவு தேவர்கள் தம்பிரானே;

உ

சிவமயம்

ஸ்ரீ சிவாக்கிரயோகிகள் துணை

திருக்கயிலாயத்து ஸ்கந்த பரம்பரை, சூரியனுர்கோயில்
வாமதேவசந்தானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ மீனுட்சிசுந்தர தேசிக சிவாக்கிரயோகிகள்
அருளிய ஆசியுரை.

அகண்டாகார சச்சிதானந்த சொரூபமாய் விளங்கும் பரசிவப்பிரமமே தமக்கு மீளா அடிமைகளாகிய ஆன்மாக்கள்மீது வைத்த பெருங்கருணையால் மூர்த்தி தலம் தீர்த்தம் ஆக உலகத்தில் விளங்குதலுடன் அமையாது குருவடிவாகவும் எழுந்தருளிக் காட்சி தந்து பக்குவ ஆன்மாக்களுக்கு அநுக்கிரகமும் செய்தருளுகின்றது. இதனுலன்றே தாயுமானவ சுவாமிகள் "மூர்த்தி தலம் தீர்த்தம முறையால் தொடங்கினர்க்கோர், வார்த்தை சொல்ல சற்குருவும் வாய்க்கும் பராபரமே" என்றருளினர்

வேதசிவாகமங்களில் கூறப்பட்ட சரியை கிரியா யோகங்களையும் ஞானத்தையும் முறையே அநுட்டித்தோர் சாலோக சாமீப சாரூப சாயுச்சியத்தையடைவர். நிலவுலகத்தில் உள்ள புண்ணியக்ஷேத்திரங்கள்பல. அவற்றுள், காசி, மாயாபுரி, அவந்தி, அயோத்தி, துவாரகை, மதுரை, காஞ்சி முதலிய ஏழும் முத்தி நகரங்கள் என்று பேசப்படும் பிரயாகை, கேதாரம், ஸ்ரீ சைலம் முதலிய தலங்களும் முத்தியளிப்பனவே. ஆரூர் பிறக்க முத்தி, தில்லை காண முத்தி, அருணை நினைக்க முத்தி, காசி இறக்க முத்தி தரும் தலங்களாம். மற்றொரு பிரகாரமாகவும் சிறந்த தலங்கள் பேசப்பட்டுள. அவை—திருவண்ணாமலை, ஸ்ரீ காசி, திருக்காளத்தி, திருக்கேதாரம், திருவாரூர், திருவலஞ்சுழி, திருவேரகம், சிதம்பரம், திருவெண்காடு, திருவிடைமருதூர், திருக்குடந்தை ஆகிய பதினொரு தலங்களாம். ஸ்ரீ காசியோடொத்து விளங்கும் சிறப்புவாய்ந்த தலம் **அவிநாசியே** என்பர். சைவசமயாசாரியர்களில் ஒருவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் திருவருளால் முதலை வாய்ப்பிள்ளையை அழைத்தருளிய திருத்தலம் இதுவே ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் "அவிநாசியப்பா பாண்டி வெள்ளமே" என்றருளியுள்ளனர். இதனால் தலப்பெயர் திருப்புக்கொளியூர் எனவும், சுவாமி திருநாமம் அவிநாசி எனவும் அறியக்கிடக்கின்றது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருப்பதிகம் பெற்றது. "புக்கொளியூர் அவிநாசியே, கரைக்கால் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே" என்ற நாலாம் திருப்பாட்டு நாயனார் செய்தருளிய அற்புதச் செயலை இனிது விளக்கும் அகச்சான்றும்.

இத்தல சம்பந்தமான புராணம் ஒன்று மூலபாடமாக ஏறக்குறைய அறுபது ஆண்டுகளின் முன்பு அச்சிடப்

பட்டிருந்தும் கிடைப்பது மிக மிக அருமையாயது. சிறிது கல்விபெற்றோரும் புராணத்தைப்படித்து அறிந்துகொள்ள வேண்டிய நிலையில் உரையுடன் வெளிவர வேண்டுமென முறுகிய எண்ணமுடையவராக இருந்தவர் செல்வச் சிரஞ்சீவி நமது அன்பர் S. K. இராமலிங்கம் செட்டியாரவர்கள் இவர் சைவப்பற்றும், சிவனை மறவாச் சிந்தையும், அன்பு அடக்கம் முதலிய நல்லியல்பும், ஆடம்பரமில்லாத வாழ்க்கையும், உபகாரமுள்ள உள்ளமும், தருமசிந்தனையும் உடையவர். தமது முன்னோரைப்போலவே சிவாலயசேவை. சிவதருமம் முதலியவற்றில் மிக ஈடுபாடுடையவர். இத் தகைய பேரன்பருடைய பெருமுயற்சியாலேயே இப் பொழுது இந்த அவிநாசிப் புராணம் தக்க பொழிப்புரை முதலியவற்றுடன் வெளிவந்துளது.

இதற்குப் பொழிப்புரை வரைந்தருளியவர்கள் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து வித்துவான் சித்தாந்த சைவமணி நமது செல்வச் சிரஞ்சீவி த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களும், கும்பகோணம் தமிழ்ப்பண்டிதரும் தமிழ் மருத்துவ அறிஞரும் சாகித்திய வல்லுநரும் ஆகிய அன்பர் திரு குழந்தைவேற் பிள்ளையவர் களும் ஆவார்கள்.

எல்லாம் வல்ல இறைவராகிய, ஸ்ரீ ஞானம்பிகாசமேத ஸ்ரீ காளத்தியப்பருடைய திருவருளால் நமது இராமலிங்கம் செட்டியாரவர்கள் தமது குடும்பத்தினருடன் எல்லா நலங் களும் பெற்றுவாழச் சிந்தித்திருக்கிறோம்.

இங்ஙனம்,
மீனாட்சிசுந்தர தேசிகர்
சூரியனார்கோவில்

உ
சிவமயம்

## அணிந்துரை.

திருப்புக்கொளியூர் அவிநாசி என்பது கொங்கு நாட்டில் உள்ள தேவாரப்பாடல் பெற்ற ஏழுபதிகளுள் ஒன்று ஸ்ரீ சுந்தரமூர்த்திநாயனார் செய்தருளிய முதலைவாய்ப் பிள்ளையை அழைத்த அற்புதம்நிகழ்ந்ததிருத்தலம். இத்தலத்திற்கு ஏறக்குறைய 350-ஆண்டுகளுக்குமுன் இந்நாட்டில் வாழ்ந்த சீர்கருணீகர் மரபில்வந்த இளையான் கவிராயர் என்ற பெரியார் இத்தலமான்யமாகிய புராணத்தை இயற்றியுள்ளார் அதனை பரிசோதித்து எனது தந்தையார் மகாவித்வான் ஸ்ரீ கந்தசாமி முதலியார் அவர்களும் நெகமம் வித்வான் ஸ்ரீ முத்துநாகப்ப முதலியாரும் முதற் பதிப்பு சுமார் 70-ஆண்டுகளின் முன் வெளியிட்டார்கள் இப்போது அதன் பிரதிகள் கிடைப்பது அரிதாயிற்று ஆதலின் அத்திருத்தலத்தின் பேரன்புடையவரும் அங்கு பல சிவ திருப்பணிகளையும் சிவதருமங்களையும் செய்பவரும் ஆகிய அன்பர் திரு S. K. இராமலிங்கம் செட்டியார் அவர்கள் அதன் இரண்டாம் பதிப்பாக இந்நூலை வெளியிடுகின்றார்கள் அதனோடு திருவாவடுதுறை ஆதீனம் வித்வான் திரு மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களைக் கொண்டும் கும்பகோணம் தமிழ்ப்பண்டிதர் திரு சி. குழந்தைவேற் பிள்ளை அவர்களைக்கொண்டும் இதற்கு சிறந்ததோர் உரையும் செய்வித்து உரையுடன் வெளியிட்டது மிகவும் போற்றத்தக்க செயலாகும். கவிகளைப் படிப்பார் அரியராயும் அதனிலும் தலபுராணங்களைப் படிப்பாரும் அரியராயும் உள்ள இந்நாளில் இதனை உரையுடன் வெளியிட்டது மிகவும் நல்ல செயலாகும் இப்

பெரியார் பல ஆண்டுகளாக நிலையாய் கும்பகோணத்தில் தங்கி வியாபாரத்துறையில் வாழ்ந்து வருகின்றார்.

அவரும் திருநந்தவனம் முதலிய சிவபுண்ணியங்கள் செய்து வருகின்றார் ஆயினும் தமது பூர்வீகமாகிய சொந்த தலமாகிய திரு அவிநாசிப்பதியில் பேரன்புபூண்டு ஆண்டு தோறும் திருவிழாவிற்கு வந்து சிவபுண்ணிய செயல்கள் பலவும் செய்து வருகின்ற சைவசீல ஒழுக்கமுடையவர் இப்புராணம் பதிப்புக்கு சென்ற ஐந்து ஆண்டுகளாகத் தீவிரமாக தொடர்ந்த முயற்சி செய்து இதனை முற்றுப் பெறச் செய்துள்ளார்கள் இவரும் இவரது மரபும் சிவ புண்யங்களும் நீடுவாழ்க இப்புராணம் நின்று நிலவி சைவ உலகிர்க்கு உபகரித்து வாழ்வதாக.

சேக்கிழார்நிலையம், கோயம்புத்தூர் } சிவக்கவிமணி, **C. K. சுப்பிரமணிய முதலியார், B. A**

உ

சிவமயம்

## கும்பகோணம் செட்டிப்புதுத்தெருவில் இருக்கும் சைவஅன்பர் திரு. ப. தி. சோ. குமரசாமி செட்டியார் எழுதிய பாராட்டுரை

சைவசித்தாந்தச் செந்நெறி நூல்களில் பேசப்படும் உண்மைப் பொருள்கள் பதி-பசு—பாசம் என மூன்றாகும். அவற்றுள் பதிப்பொருள், எல்லாவற்றையும் நினைத்த மாத்திரையில் முற்றும் உணர்ந்து ஆன்மாக்கள் உய்ய ஐந்தொழிலியற்றும் பேரருள் தன்மை வாய்ந்தது. பசுப் பொருள் இறைவன் அறிவிக்க உணர்ந்து முக்குணவயப் பட்டு இயலும் தன்மை உடையது. தானே எதையும் அறியும் தகுதியில்லாதது. பாசப்பொருள் அறிவித்தாலும்

அறியாது தானும் அறியாது. முப்பொருள்களில் இடைநின்ற பசுப்பொருள் இறைவனின் சார்பால் இன்பமும் பாசப்பொருளின் சார்பால் துன்பமும் நுகரும். உயிர்கள் அனைத்தும் இன்பப் பேற்றைத்தான் விரும்பும். பதிப் பொருளின் தொடர்பு இன்பப்பேற்றைக் கருதி உயிர்களுக்கு இன்றியமையாது வேண்டப்படுவதாகும். பரங்கருணைத்தடங்கடலாகிய சிவபெருமான் உயிர்கள் உய்யும் பொருட்டு ஆன்மாக்கள் மீது கொண்ட பெருங்கருணையினால், குருலிங்கசங்கம வடிவங்களில் எழுந்தருளிவந்து அருள்புரிவான். அம்மூன்று வடிவங்களில் சிவலிங்க முதலிய அர்ச்சாரூபமான திருவுருவங்கள் எழுந்தருளியிருக்குமிடங்கள் நம் நாட்டிலுள்ள திருக்கோயில்களாகும் அவற்றுள் சைவசமய ஆசாரியர்களால் தேவாரப் பாசுரம் பெற்ற தலங்கள் மிக உயர்வுடையன என்று ஆன்றோர்கள் பாராட்டுவர்.

அவற்றுள்ளும் தேவாரப்பாசுரம் திருவாய் மலர்ந்தருளிய சைவசமய ஆசாரியர் நால்வர்களின் திருவருளோடுகூடிய செயல்கள் பல நிகழ்ந்து சைவசமய மாண்பையும், சிவபரத்துவத்தையும் நிலைநாட்ட விளங்கும் சிவத்தலங்கள் மிக உயர்வுடையன. அவையாவன பிரமபுரம், திருக்கோலக்கா, திருஅரத்துறை, திருவீழிமிழலை, திருமறைக்காடு, திருவாலவாய், திருமயிலாப்பூர், பெருமணநல்லூர், திருவதிகை, திருப்பாதிரிப்புலியூர், திங்களூர், திருவையாறு, திருப்புகலூர், திருவெண்ணெய்நல்லூர், திருவாரூர், திருமுதுகுன்றம், திருஅவிநாசி, திருஅஞ்சைக்களம், திருக்கைலை முதலிய தலங்களாகும். அவற்றுள் திருஅவிநாசி என்னும் தலம் கொங்குநாட்டில் சுந்தரமூர்த்தி நாயனாரால் தேவாரப் பாசுரம்பெற்ற தலமாகும்.

அத்தலத்தில் சுந்தரமூர்த்தி நாயனார் எழுந்தருளிய காலத்தில் பல ஆண்டுகளுக்குமுன் முதலையுட்கொண்ட அந்தணச்சிறுவனை மூவாண்டு கழித்து அம்முதலை வாயி னின்று மீண்டும் வரும்படி செய்வித்த திருவருட் சிறப்பினை யுடைய தேவாரப் பாசுரம்பெற்ற தனிச்சிறப்புடையது. இத்திருஅவிநாசித்தலமாகும் இத்துணைச்சிறப்புவாய்ந்த அவிநாசித்தலத்தின் பழைய வரலாறு ஒன்று வடமொழியி லிருந்ததைத் தமிழ் மொழியில் மொழிபெயர்க்கப்பெற்று செய்யுள்வடிவில் திகழ்வது அவிநாசித்தல புராணம் ஆகும். இப்புராணம் விருத்தப்பாக்களால் ஆயது.

இந்நூலாசிரியர் சுப்பிரமணியன் என்ற இயற்பெய ரையும் இளையான் கவிராயர் முதலிய சிறப்புப் பெயர்களை யும் பெற்று உயரிய கவிஞராகவும் நல்லறங்கள் பல செய்த வராகவும், பல சிவபுண்ணியங்களைப் புரிந்தவராகவும் விளங்கியவரென்று அவர் வரலாற்றினால் தெரியவருகிறது. இந்நூலின் முதற் பதிப்பு ஒன்று சுமார் 70-ஆண்டுகளின் முன் அச்சியியற்றப்பெற்றது. இப்பொழுது அப்பிரதிகள் கிடைப்பது மிக அரிதாயிருக்கின்றது அதனை உணர்ந்து அவ்வவிநாசிக்கு அணிமையில் உள்ள கருக்கம்பாளையத்தில் வாழும் பரம்பரைச் சைவ மரபில் தோன்றியவரும் இக் குடந்தைமாநகரில் பித்தளைப்பாத்திர வியாபாரம் நடத்தும் வணிக சீலரும், சைவாநுஷ்டானமும், சிவாலய சேவையும் அடியார் பக்தியும், சைவத்திருமுறைகளை ஓதுதலும், பாராட்டுதலும் முதலிய நற்குண நற்செய்கைகள் வாய்ந்த உயர்சைவத்திருவினர் சொ. கு. இராமலிங்கம் செட்டியார் அவர்களால் இரண்டாம் பதிப்பாகத் தக்கவர்களைக்கொண்டு பொழிப்புரை எழுதச் செய்து அந்நூல் வெளிவந்துள்ளது அந்நூலின் முற்பகுதியில் சில சருக்கங்களுக்குப் பொழிப்

புரை எழுதி உதவியவர்கள் திருவாவடுதுறை ஆதீன வித்துவானும் சித்தாந்த சைவமணியுமான உயர்சைவத் திருவாளர் த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் ஆவார்கள், எஞ்சிய பல சருக்கங்களைப் பொழிப்புரையுடன் எழுதி உதவியவர்கள் சுவாமிமலையில் இருக்கும்தமிழாசிரியர் உயர் திருவினர் சி. குழந்தைவேற் பிள்ளையவர்கள் ஆவார்கள் இவ்விரு பேரறிஞர்களின் உதவி போற்றத்தக்கதாகும். இவ்விருவர்களுடைய பேருதவியைக்கொண்டு இந்நூலை இரண்டாம் பதிப்பாக அச்சியற்றிய பெருமை எனது பரிபூரணப்பாராட்டிற்குரிய அன்பர் சிவநேசச் செல்வர் உயர்திருவினர் சொ. கு இராமலிங்கம் செட்டியாரவர்களுக்கே உரியதாகும். அவர்கள் நீண்டநாள் வாழ்ந்து சைவ நற்பணியைப் புரிந்து செந்தமிழையும் சைவ நன்னெறியையும் பாதுகாத்தருள ஆலவாயண்ணல் திருவருள் துணை புரிவதாகுக. வாழ்க நற்றமிழ், வாழ்க சைவ நன்னெறி, வாழ்க சைவப்புரவலர்கள், வாழ்க சைவப் புலவர்கள் என வாழ்த்துகிறேன்.

இங்ஙனம்,
சைவபுரவலர் சிவசேனாபதி
**ப. தி. சோ. குமரசாமி செட்டியார்,**
தமிழ்பண்டிதர், கும்பகோணம்.

## அவிநாசி, ஸ்ரீ சிவராம குருக்கள் அவர்கள் அளித்தருளிய மதிப்புரை.

கொங்கேழ் தலங்களுள் நடுநாயகமாய் விளங்குவது திருப்புக்கொளியூர் அவிநாசி இத்தலத்தின் பெருமை அளவிடற்கரியது. இளையான் கவிராயர் இத்தல புராணத்தைச் செம்பாகமான செய்யுட்களால் நவரசம் பொருந்த இயற்றியுள்ளார். மூலத்தைப் பண்டிதர்கள் மாத்திரமே

படித்து இன்புற முடிந்தது. ஆனால் சாதாரண மக்கள், தெளிவான உரையின்மையால் பொருளுணர்ந்து படித்தல், சிந்தித்தல், முடியாத நிலையிலிருந்தனர்.

அவிநாசியையடுத்த கருக்கம்பாளையம், எம்மான் பூண்டி ஐந்நூற்றுச் சைவச் செட்டிமார் குலத்தினரான நிறைநாட்செல்வர் இராமலிங்கஞ் செட்டியார் ஆகிய இவர் தகுந்த பண்டிதர்களைக் கொண்டு தெளிவான உரையெழுதி அச்சுவாஹன மேற்றிப் பலருக்கும் பயன்படும் முறையில் செய்திருக்கின்றனர்.

ஒவ்வொரு செய்யுளுக்கும் பொருள் தெளிவாகவும், இரத்தினச் சுருக்கமாகவும் அமைந்துள்ளது.

பெருமுயற்சிகொண்டு, புத்தகத்தை வெளியிட்ட அன்பர் பெருங்கருணை நாயகி சமேத அவிநாசியப்பர் திருவருளால் எல்லா நலன்களும் பெற்று இன்புறுவாராக!

ஷை கோவில் ஸ்தானீகம்,
**சிவராமக் குருக்கள்.**

உ

சிவமயம்

## சிறப்புப்பாயிரம்

**திருவாவடுதுறை ஆதின வித்துவான் சித்தாந்த சைவமணி**
**த. ச. மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் இயற்றிய**
**நேரிசை ஆசிரியப்பா.**

திருவளர் தெய்வத் தலம்பல நிலத்தில்
மருவளர் இதய மாணிடர் வழிபட்
டுய்வகை கருதித் தெய்வதம் விளங்கத்
தேவரும் முனிவரும் பிறரும் கண்ட
தலங்களும் பலவால் மலவா தனையற்
றுயிர்கள் உய்யும் படியுமை பாவிய

சிவதலம் பலவுள் அவற்றுளும் தேவர்கள்
புக்கொளித் தமையின் புக்கொளி யூரெனத்
திருவவி நாசி யெனத்திருப் பெயருறு
தலமிகச் சிறந்த தெனப்பெரி யோர்சொல்
இத்தலம் முத்தர் உறைதரு காசி
விசுவ நாத லிங்கச் சுயம்பு
மூர்த்தியின் ஒருவேர் தென்திசை யோடிக்
கிளைத்து முளைத்துத் தோன்றி வாரண
வாசிக் கொழுந்தாய் மருவி விளங்கக்
கருணை லயநா யகியொரு பால்வளர்
அவிநா சிப்பொரு ளாகிய சிவன்தாள்
மறவாச் சிந்தை மன்னிய சீலன்
சிவபுண் ணியமே சென்னெறிக் காகும்
வைப்பென நினைந்து வைத்திடும் பெரியோன்
கல்வி யறிவின் பயனே கனவினும்
நனவினும் கடவுட் பூசனை யென்னச்
செய்யும் தவமுடைச் செல்வன் குடந்தைக்
கும்பே சருக்கொரு நந்தன வனமும்
பத்தி சிரத்தையில் வைத்தனு தினமும்
பூசனைக் கான பூப்பணிக் காக்குவோன்
கற்றோர் பான்மன மிளகிய வண்ணம்
ஆவன செய்யும் அன்புடைக் குரிசில்
மாசிலா வுள்ளமே படைத்திடு நல்லோன்
அன்பும் அடக்கமும் சாந்தமும் உள்ளோன்
ஆடம் பரமே அணுத்துணை யில்லான்
அவிநா சித்தலத் தினையடுத் துள்ள
கருக்கம் பாளைய மென்னுமூ ருடையான்
எம்மான் பூண்டி வகையினில் இலங்கும்

ஐந்நூற் றுவராம் சைவச் செட்டிகள்
குலத்தினில் தோன்றிய நலத்தின் மிக்கோன்
இப்புவி புகழும் குப்புச் சாமி
செய்தவத் துதித்த திப்பியப் புதல்வன்
இராம லிங்கப் பெயருறு கீர்த்தியோன்
அவிநா சித்தல புராணம் உரையுடன்
அச்சிட் டெவர்க்கும் அளித்தல் புண்ணியச்
செயலென எண்ணி எண்ணியாங் கியற்றிப்
புண்ணிய மும்புக ழும்மொருங் கெய்தினன்
வாழியிப் புண்ணிய சீலன்
மனைவி மக்க ளுடன்வா ழியவே.

இப்படிக்கு,
**த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை**
கும்பகோணம்.

---

உ
சிவமயம்.

## எழுசீர்க்கழிநெடியாசிரியவிருத்தம்.

---

உலகெலாம் ஈன்ற உமைஇடங் கொண்டு
உவந்தவன் உறையவி நாசி
தலமகாத் மியத்தை செந்தமிழ் யாப்பில்
தந்தனர் இளங்கவி ராயர்

பலகலை, வலமீ, ருட்சிசுந் தரமும்
பகர்திருக் குழந்தைவே லிவர்கள்
நிலவுமக் கவிக்குப் பொழிப்புரை செய்தார்
நிறைமதி யன்னவப் புலவர்
மற்றதை அச்சிற் பதித்தனன் கருக்கம்
பாளைய மருவினன் சைவப்
பற்றினன் இராமலிங்க நன் நாமன்
பட்டினத் தடிகட்டம் மரபோன்
கற்றவன் என்னும் பரம்பரைச் சைவன்
கண்ணுத லடிமலர்க் கன்பன்
உற்றசெல் வத்திற் கழகென உரவோர்க்
குதவிடு நற்குணக் குரிசில்
அவனியிற் றோன்றிற் புகழொடு தோன்றல்
அஃதிலார் தோன்றலிற் றோன்றாமை
தவமுடைச் திருவள் ளுவருரை தனக்குத்
தக்கநல் இசையுளா னிவனே
அவரவ ரெச்சத் தாலறி தக்கார்
தகவில ரென்பதென் றுன்றோர்
சிவமொழிக் கிவனே தம்பிரு குரவர்
திறந் தெரி விப்பவ னம்மா
ஊருணி நன்னீர் நிறைந்தென உதவும்
உலகலாம் பேரறி வாளன்
சீருடைச் செல்வ மென்றனர் தேவர்
செப்பிய மொழிக் கிலக்கியனே
பாருள வரையில் சுற்றமும் இவனும்
பரம்பரை கல்விசெல் வத்து

நீருள வேணி ஏகம்பர் அருளால்
நீடுநீ டூழிவா ழியவே (சுபம்)

இங்ஙனம்,

**பொன். குமாரசுவாமி அடிகள்**
மெய்கண்டார் கழக ஆசிரியர் காஞ்சிபுரம்.

---

## சிவப்பிரகாசர்

போதமுண்ட பிள்ளை யென்பு பொருகண் மாதுசெய்ததோ
காதல் கொண்டு சொல்லின் மைந்தர் கன்மிதப்பவுய்த்ததோ
வாய்திறந்து முதலைகக்க மகனைநீ அழைத்ததோ
யாதுநம்பி அரிதெனக்கு நன்கியம்ப வேண்டுமே

---

## இராமலிங்கசுவாமிகள் பாடல்

இலைக்குள நீரழைத்தனின் இடங்கருள
அழைத்ததன்வாய்
தலைக்குதலை மதலை யுயிர்தழைப்ப வழைத்
தருளியநின்
கலைக்கும் வடகலையின் முதற்கலைக் குமுறு
கணக்குயர்பொன்
மலைக்கும் அணுநிலைக்குமுறு
வன்றொண்டப் பெருந்தகையே

---

உ

சிவமயம்

## நூலாசிரியர் வரலாறு.

---

கொங்கு நாட்டிலே தாராபுரம் தாலுக்காவில் இலக்ஷ்மி நாயக்கன் பட்டி, மாம்பாடி, புளியம்பாடி முதலிய தலங்களில், சற்றேறக்குறைய முன்னூற்றைம்பது ஆண்டுகளுக்குமுன் கருணீகர் குலத்தில் வைத்திய நாதர் என்னும் பெயருடைய சைவ அன்பரொருவற்குக் குமாரராகத் திகழ்ந்து வாழ்ந்தவர் இந்நூலாசிரியர் ஆவார். இவருடைய இயற்பெயர் சுப்பிரமணியன் என்பதாகும் இவருக்குக் காரணப்பெயர்கள் பல உண்டு. அவற்றுள் சில வருமாறு.

இளையான், இளையநாயகம், இளைச்சிபிள்ளை, இளைச்சி அண்ணாவியார், இளையான் கவிராயர், இளையாநாவலர் என்பன. இவர்க்குப் பெரியநாயகம் என்ற தமையனும், அபிராமி அம்மாள் என்ற தங்கையுமிருந்தனர், அத் தங்கை கருவூர் நயினாப் பிள்ளை என்பவரை மணந்தனர். அந் நயினாப் பிள்ளை சிவபதம் அடைந்தனர். அப்போது அபிராமியம்மாள் உடன் கட்டை ஏறினர், இந்நூலாசிரியர் இளமைக் காலத்தில் தமிழ் மொழி, வடமொழி இவ்விரு மொழிகளையும் தக்காரிடம் பயின்று நல்லறிவுபெற்றுத் திகழ்ந்தனர். இவர் கணிதம், சோதிடம், மாந்திரீகம் முதலிய கலைகளில் வல்லவராய் விளங்கினர்.

சைவசித்தாந்த அத்வைத நூல்களிலும் நன்கு பயின்றவர் இவர் சுந்தராம்பாள் என்ற இல்லறக்கிழத்தியை மணந்து வைத்தியலிங்கம் என்ற குமாரனைப்பெற்று இல்லறம் நடத்திக்கொண்டு கிராமக் கணக்கர் அலுவலில் அமர்ந்திருந்தார். இவருடைய சந்ததியார்கள் இன்றும் மேலே குறிப்பிடப்பெற்ற இலக்ஷ்மிநாயக்கன்பட்டி முதலிய தலங்களில் வாழ்ந்துகொண்டிருக்கின்றார்கள் அப்பரம்பரையில் கருணாகரம்பிள்ளை மகன் சிவசைலம் பிள்ளை என்பவர் ஒருவரும் இப்பொழுது இருக்கிறார் இப்பொழுது இருக்கும் பரம்பரையினர்க்குப் பத்தொன்பது தலைமுறைக்கு 'முன் வாழ்ந்தவரென்று' தெரியவருகிறது.

இவர் சைவசமயாசாரியர் நால்வரில் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரிடம் மிகுந்த பேரன்பினராயிருந்தனரென்பதை பாராட்டிய பல பகுதிகள் இந்நூலாசிரியர் செய்த பல் நூல்களில் காணலாம். இவர் திருஅவிநாசிப்புராணம் தவிர திரு அப்பரமேசர் புராணம், வாகீசர் புராணம், திருப்பேரூர்ப் புராணம், திருப்பரங்கிரிப்புராணம், பழனிநகர்ப் புராணம், கருவூர்த்தலபுராணம் முதலியன பாடியுள்ளார்.

இவர் பாடிய பிரபந்தங்களும் பலவுள, சீட்டுக்கவி முதலிய தனிப்பாடல்களும் பலவுள கணக்கதிகாரம் என்ற நூலை இவர் தமிழில் பாடியுள்ளார் அந்நூலின் சிதைந்த ஓலைச்சுவடியொன்று இவர் பரம்பரையினரிடம் இன்றும் இருக்கிறது இவர் பல உயரிய நற்குணங்களையுடையவர் அவைகள் அந்தணர்க்காத்தல், ஆவுரிஞ்சுகல்நடல், நந்தவனம் அமைத்தல், செந்தமிழ் வளர்த்தல், இல்லையென்பார்க்கீதல், ஆலயத் திருப்பணி செய்தல், பரமனைப் பாடுதல்,

அந்தியும் பகலும் அரனடி தொழுதல் முதலிய நல்லறங்களும், சிவபுண்ணியங்களும் ஆகும். இந்நூலாசிரியரின் கல்வித்திறம், கவிபாடுந்திறம், சிவபுண்ணியச் செயல் இவைகளைப்பாராட்டி உடனிருந்த புலவர்களும் இவரிடம் கல்வி பயின்ற மாணவர்களும், பின் வாழ்ந்த புலவர்களும் பாடிய பிரபந்தங்களும் தனிச் செய்யுட்களும் பலவுள என்பர்.

இவர்காலத்தில் வாழ்ந்த புலவர்கள் பெயர் முதலியன ஒன்றுந்தெரியவில்லை. இவ்வளவு நற்குண நற்செயல்களும், நல்லறிவும், சிவபக்தியும் சிவபெருமானுடைய திருவடியைப் பேணுதலும் முதலிய பெருந்தகுதிகள் வாய்ந்து திகழ்ந்த இளையான் கவிராயரென்னும் சிறப்புப் பெயரும் பெற்ற இக்கவிஞர் பெருமானின் திருவுருவம் ஒன்று தாராபுரம் நகருக்கு வடகிழக்கில் ஏழு மைல் தூரத்திலுள்ள நரவபாளையம் என்னும் தலத்தில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ அப்பரமேசர் சந்நிதியில் அமைந்துள்ள பதினாறுகால் மண்டபத்தில் பிரதிஷ்டை செய்யப் பெற்று போற்றிவருவதை இன்றும் காணலாம்

இதனால் இப்புலவர்பெருமானின் கீர்த்திகள் நன்கு விளங்குகின்றன. இப்புலவர் பெருமானின் வரலாற்றுப் பகுதிகள் இலக்ஷ்மி நாயக்கன்பட்டி கர்ணம், உயர்சைவத் திரு L. K. அண்ணாத்துரை அவர்கள் அனுப்பிய குறிப்பின் உதவியால் எழுதப்பெற்றன அன்னார்க்கு இந்நூற் பதிப்பாளர் முதலியோரின் என்றும் மறவா நன்றி உரித்தாகுக.

உயர்திரு L. K. அண்ணாத்துரை அவர்களின் தொடர்பு திருப்பேரூர் பண்டித, அ. கந்தசாமிப் பிள்ளை அவர்களின் உதவியால் கிடைத்தது அப்பிள்ளை அவர்கட்கும் என்றும் மறவா நன்றி உரித்தாகுக.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அவிநாசிப் புராணம்.

## காப்பு.

வாழிய புக்கொளி மேவிய தற்பர மணியேயென்
றூழின் மறைப்பொரு ளோது தமிழ்க்கட லுரையேற
வழிசை யிற்செவி நீள்கா டக்கவு ளிருநால்வாய்ச்
சூழி யருட்களி யானை கழற்புணை துணையாமால்.

இதன் பொருள்

திருப்புக்கொளியூரிலே வீற்றிருந்தருளுகின்ற மேலான மாணிக்கம் போன்றவரே! என்று முறையே வேதங்களின் பொருளாகவுள்ள சிவபெருமானைக் கூறியருளும் தமிழ் வேதமாகிய கடலிலே எளியேனுடைய புன் சொல்லாகிய (நீரும்) ஏற ஏழிசைகளையும் கேட்டருளும் பெரிய செவி களையும், நீண்ட மதச்சுவட்டையுடைய கன்னங்களையும், பெரிய தொங்குகின்ற வாயையும், முகபடாத்தையும் உடைய அருட்களிப்புடனே கூடி விளங்கும் விநாயகப்பெருமானாகிய யானைமுகக் கடவுளின் வீரக்கழலையணிந்த இரண்டு திருவடி களாகிய புணைகளும் துணையாவன ஆம் (எ-று)

காடம்-மதச்சுவடு. கவுள்-கன்னம். நால்வாய்-தொங்கு கின்றவாய். சூழி-முகபடாம். கழல்-திருவடி. புணை-தெப்பம்.

# கடவுள் வாழ்த்து

## 1

### சபாநாயகர்.

*பூமேவு மணிமாட மகலாத கலைவாணி புணர்பூ மானும்*
*மாமேவு மிருண்மானு மழைமானு மழகுருவம் வளர்கோ மானுங்*
*காமேவு மியமானு மணுகாத வெளிமன்றிற் கருணை ஞானத்*
*தேமேவு மொழிமாணி னுடனாடும் பேரொளியைச் சிந்தை செய்வாம்.*

இதன்பொருள்

அழகுபொருந்திய இரத்தினங்கள் பதிக்கப்பட்ட மாளிகைகளை விட்டு எந்நாளும் நீங்காத கல்வித் தெய்வமாகிய சரசுவதிதேவியைத் தமது சத்தியாகவுடைய பிரமதேவரும், பெருமை பொருந்திய இருள்போலும் கரிய நிறத்தையுடைய மேகத்தைப்போன்ற அழகிய திருமேனியையுடைய விஷ்ணு மூர்த்தியும், கற்பகப்பூஞ்சோலையையுடைய இந்திரனும் நெருங்கிக் காணமுடியாத பரவெளியாகிய சபையிலே அருள்வடிவும் ஞானவடிவுமாகிய சிவகாமசுந்தரியம்மையாரோடு ஐந்தொழில் நடனம் செய்தருளுகின்ற பேரொளியாகிய ஸ்ரீ நடராசமூர்த்தியை மனத்திலே வைத்துத் தியானிப்பாம். (எ-று)

இனி, வெண்டாமரைமலரைப் பொருந்திய இரத்தின மாளிகையாகக் கொண்டு அதனைவிட்டு நீங்காத என்று உரைப்பினும் ஆம். பூ-அழகு, மலர். மணி-இரத்தினம். கலை-சாஸ்திரங்கள். வாணி-சரசுவதி. மா-இலக்குமி. மாமேவும்-இலக்குமி பொருந்திய எனினும் ஆம். மா-பெருமை. மானும்-ஒத்த. கா-சோலை. இயமான்-யசமான்-தேவேந்திரன். 1

## 2
## திருவருள்.

*அஞ்செழுத்தா யாரணமா யாகமமா யாசினியா யகில மாகித்*
*தஞ்சமுற்ற தாவரமாய்ச் சங்கமமா யெவ்வுயிர்க்குந் தனுவு மாகி*
*வஞ்சமிகு தீவினையாய் நல்வினையா யவைதணிக்கு மருந்து மாகிச்*
*செஞ்சுடர்க்க ணூலியற்றுந் திருவருளா மொருபொருளைத் தெரிதல்*
*செய்வாம்.*

இதன்பொருள்

பஞ்சாக்கரவடிவாயும், வேதவடிவாயும், இருபத்தெட்டு ஆகமங்களின்வடிவாயும். ஆகாயவடிவாயும், மற்றெல்லாப்பூதங்களின்வடிவாயும், பற்றுக்கோடாகவுள்ள அசையாப்பொருள் அசையும்பொருள்களாயும், எல்லா உயிர்களுக்கும் உடம்பாகியும், வஞ்சகத்தன்மை பொருந்திய தீவினைகளும் நல்வினைகளும் அவைகளைப் போக்கியருளும் மருந்தாகியும் இருந்து சிவந்த பிரகாசம் பொருந்திய கண்களிலிருந்து வெளிப்பட்டு அருளும் திருவருட்பிரகாசமாயும் உள்ள ஒப்பற்றபொருளை ஆராய்ந்து சிந்திப்பாம். (எ-று)

ஆரணம்-வேதம். ஆசினி-ஆகாயம். அகிலம்-எல்லாம். தனு-உடம்பு. 2

## 3
## அவிநாசிநாதர்.

*பருவவிஞ சித்திரநேர் பாவகமார் பூவகமின் பயிலும்வீதி*
*உருவவிஞ சிக்குரியவொண்சிறுதே ரேனுமுலவை யுலவுமுன்றில்*
*மருவவிஞ சிப்பவன மாதவர்தா ரணைபிரியா மாடகூடத்*
*திருவவிஞ சிப்பரமர் செங்கமலப் பொற்பாதஞ்சென்னி சேர்ப்பாம்.*

இதன் பொருள்

பெரிய பின்னமில்லாத சித்திரப்பாவையை யொத்த பாக்களினிடத்துப் பொருந்திய சரசுவதி தேவியும், செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் இலக்குமி தேவியும் நிலவுகின்ற வீதியையும்; உருவமில்லாத மன்மதனுக்குரிய பிரகாசத்தையுடைய சிறிய தேர் எனச் சொல்லும் தென்றற் காற்று வீசுகின்ற முற்றத்தையும் பொருந்துகின்ற மூச்சை அடக்கிய சிறந்த தபோதனர்கள் யோகநிலையைவிட்டு நீங்காத மாடங்களையும் கூடங்களையும் உடைய அழகிய அவிநாசி என்னும் தலத்திலே வீற்றிருந்தருளும் சிவபெருமானுடைய சிவந்த தாமரைமலர்போலும் அழகிய திருவடிகளை எமது சிரசிலே சூடிக்கொள்ளுவாம். (எ-று) 3

4

## கருணாலயச் செல்வி.

மருங்கருணை லயவேணி வள்ளலா ரிடத்திருந்தும் வலப்பா கத்தில்
ஒருங்கருணை லயத் தடன றிரு கரும முயர்ந்தோங்க வுலகம் வாழ
நெருங்கருணை லயநேமி நிகழ்புகழ்சேர் புக்கொளியூர் நிலைசெய்
ஞானப், பெருங்கருணை லயச்செல்விப் பேருடையாள்சீறடியின்
பெருமை சார்வாம்.

இதன்பொருள்

பக்கங்களிலே தொங்காநின்ற அழகிய சடாபாரத்தையுடைய சிவபெருமானுடைய இடப்பாகத்தில் எழுந்தருளியிருந்தும் வலப்பாகத்திலே ஒரு சேர முப்பத்திரண்டு தருமங்களும் மிக ஓங்கித் தழைக்கவும் உலகம் வாழவும் நெருங்குகின்ற சூரியனுக்கு ஆலயமாகிய உ த ய கி ரி எனப் பொருந்திய கீர்த்திமிக்க திருப்புக்கொளியூர் என்னும் தலத்

திலே நிலையாகவுள்ள ஞானவடிவினையுடைய பெரிய கருணால யச் செல்வியென்னும் பெயரினையுடையவராகிய சிவசத்தி யின் சிறியதிருவடித் தாமரைகளின் பெருமைகளைச் சொல்லித் துதிப்பாம்.(எ-று) 4

5

## விநாயகர்.

நூப்புரச்சே வடியெடுத்து வலியமுய லகன்முறிய நோன்றா ளூன்றி மீபுராளா தமுதகதிர் வேணிவைத்தற் புதக்கூத்து வெளிநின் றாடி மாபுரநீ றெழநகைத்த புக்கொளியார் மிக்கொளியார் மணிசூழ் செம்பொற், கோபுரவா யிலிலமர்ந்த குஞ்சரத்தை நெஞ்சிருத்திக் குறைகள் தீர்வாம்.

இதன்பொருள்

சிலம்பைஅணிந்த சிவந்த இடதுதிருவடியை (ஆன் மாக்களுக்கு அநுக்கிரகம் செய்யுமாறு மேலே) குஞ்சிதமாக எடுத்தருளியும், வலிமையையுடைய மாயைவடிவாகிய முயல கன் வலி ஒடுங்கும்படி அவன் முதுகிலே வலது திருவடியை ஊன்றி யருளியும், மேலே புராளாதபடி அமுதத்தைச் சொரியும் இளம்பிறைச் சந்திரனைத் தமது கபர்த்தம் என்னும் திருச்சடையிலே வைத்தருளியும், ஞானத்திருக்கூத்தைப் பரவெளியாகிய ஞானாகாசம் என்னும் திருச்சிற்றம்பலத்திலே நின்று யாவருங்காணச் செய்தருளியும், பெரியவலியுடைய திரிபுரங்கள் பொடிபடும்படி புன்முறுவல் செய்தருளியும், திருப்புக்கொளியூரிலே வீற்றிருந்தருளும் சிவபெருமா னுடைய மிக்க ஒளி வீசுகின்ற இரத்தினங்கள் பதிக்கப்பட்டு விளங்கும் செம்பொன்மயமான [கோயிலின்] கோபுர வாயிலிலே விரும்பி எழுந்தருளியிருக்கும் யானை முகத்தை

யுடைய விநாயகக்கடவுளை மனத்திலே நிலைபெற வைத்துத் தியானம் செய்து எம்முடைய குற்றங்களை யெல்லாம் போக்கிக் கொள்ளுவாம். (எ-று) 5

6

## முருகக்கடவுள்.

*செருநடமா லயற்கரிய திறலசுரன் முடிசிதறச் சினந்த வீரம்*
*கருநடமா ரியமுருவக் கரமெனுமீ ரொன்பானிற் கவிஞர் போற்றப்*
*பெருநடமா டுங்கடவுள் புக்கொளியா லயநிலையம் பிறங்கச் சூழ்ந்த*
*திருநடமா ளிகையமர்வேற் செவ்வேள்பொற் சீறடிகள் சிரத்தில்,*
*வைப்பாம்.*

இதன்பொருள்

பெரிய திருக்கூத்தைச் செய்தருளும் சிவபெருமானுடைய திருப்புக்கொளியூர் ஆலயத்திலே விளங்கும்படியான திருச்சுற்று மாளிகையில் போரிலே (வெற்றியை) நாட்டுகின்ற அழகிய திருமால் பிரமன் முதலிய தேவர்களுக்கும் [வெல்வதற்கு] அருமையான வலிய சூரபதுமனாகிய அசுரனுடைய தலை சிதறும்படி கோபித்[து ஞானசத்தியாகிய வேலாயுதத்தைவிடுத்] தருளிய வீரத்தைக் கன்னடம் ஆரியம் முதலிய பதினெட்டு மொழிகளிலும் வல்ல வித்துவப் பெரியோர் தத்தம் மொழிகளிலே பலபடியாகத் துதித்துப் போற்றும்படி கோயில் கொண்டருளும் வேலாயுதத்தை ஏந்திய முருகக்கடவுளின் அழகிய சிறிய திருவடித்தாமரைகளை யாம் சிரசிலே சூட்டிக்கொள்ளுவாம் (எ-று) 6

7

## ஆதித்தமூர்த்தி.

*விண்ணார்ந்த மணிமறுகில் விரவுமொரு சகட்டிரத மிசைய ளுகிப்*
*பண்ணார்ந்த மறைமுனிவர் பாணிதரும் பாணிகொண்டு பதுமம் பாத்துத்,* *தண்ணார்ந்த மதிநிலவு தாழ்சடையெம் புக்கொளிவாழ் சயம்பு ஞானக்,* *கண்ணார்ந்த பேரொளியைக் கதிரவனை யெதிர் பணிந்து கருத்துள் வைப்பாம்.*

இதன்பொருள்

ஆகாயத்திலே பொருந்திய அழகிய வீதியிலே பொருந்தியுள்ள ஒற்றைச்சக்கரம் கோத்த இரதத்திலே ஏறிக் கொண்டு விளங்குபவராயும் இசையோடு விளங்கும் வேதங் களிலே வல்லுநர் ஆகிய பிராமணோத்தமர்கள் வேத இருக்கு களைச் சொல்லித்தங்கள் கையால் வாரி இறைக்கும் அருக்கிய நீரை ஏற்றுக்கொண்டு தாமரைமலர்களை விரியச்செய்பவராகி யும், குளிர்ந்த சந்திரனை அணிந்து தாழ்ந்து தொங்கும் சடை யினையுடைய திருப்புக்கொளியூரிலே விளங்கும் சிவ பிரானுடைய வலக்கண்ணாகியும் விளங்கும் பேரொளியை சிவசூரியனை வணங்கித் தியானம் செய்வாம். (எ-று) 7

8

## வயிரவமூர்த்தி.

அஞ்சுகனை யாதிலகு மாடரவ கங்கணனை யகலும் வானில்
விஞ்சுகனை மாரிநிகர் மேனியனை வாசியென விரைந்து தாவும்
பைஞ்சுகனை யேயெரித்த புக்கொளியூர் ரெயில்காவல் புரிக்கும் வீரக்
கஞ்சுகனை வேணிமலர்க் கிஞ்சுகனைப் பாசுகனைக் கழறல் செய்வாம்.

இதன் பொருள்

அழகிய சுகம் கெடாது விளங்கும் படத்தை விரித்து ஆடும் தொழிலையுடைய பாம்பைக் கங்கணமாகத்தரித்தவரும், அகலமான ஆகாயத்தில் மேலான முழக்கத்தையுடைய மேகத்தை யொத்த நீலநிறம் பொருந்திய திருமேனியை யுடையவரும், குதிரை யென்னும்படி விரைவாகச்செல்லும் பசியகிளியை வாகனமாகவுடைய மன்மதனைத்தமது நெற்றிக்

கண்ணால் எரித்துச் சாம்பலாக்கிய திருப்புக்கொளியூரில் எழுந்தருளும் சிவபெருமானுடைய மதிலைக் காவல் செய்யும் வீரத்தையே தமக்குப் போர்வையாகப் போர்த்தருளுபவரும், தமது சடையிலே பலாசம்பூவை யணிந்தவரும், மேலான இன்பவடிவாகவுள்ளவரும் ஆகிய வயிரவக் கடவுளைத் துதிப்பாம்.(எ-று) 8

9

## திருநந்திதேவர்.

*சந்திகண வாகுதிசேர் புக்கொளிநா யகர்சிவந்த சரணப் போதிற்*
*புந்திகண வாவிருத்திப் பொற்புயங்கள் நான்கிலகப் புடைசேர் கையால்,*
*தந்திகண வோதையின்மத் தளமதிர்த்து மறுகாவஞ் சலிகொண் டேத்தும்,*
*நந்திகண நாதனடி நாளுமற வாதபடி நயந்து சேர்வாம்.*

இதன் பொருள்

சந்தியாகாலங்களிலெல்லாம் கூட்டம் கூட்டமாக ஆகுதிசெய்யும திருப்புக்கொளியூரில் உள்ள சிவபெருமானுடைய சிவந்த திருவடித்தாமரைகளிலே மனம் அசையாமல் நிறுத்தி, அழகிய தோள்கள் நான்கும் விளங்க, பக்கங்களிலே பொருந்திய கைகளால் யானைக்கூட்டங்கள் பிளிறுவதைப்போன்று குடமுழா என்னும் வாத்தியத்தை முழங்கச் செய்து, மாறுபடாத கூப்பிய திருக்கரங்களுடன் துதிக்கின்ற சிவகணங்களுக்கெல்லாம் நாயகமாய் விளங்கும் திருநந்திதேவநாயனாருடைய திருவடிகளை எப்போதும் மறவாமல் விரும்பித் துதிப்பாம். (எ-று) 9

## 10

## இடபதேவர்

முற்சிலம்பு விடுமதனை முளரியங்க ணாலெரித்த முதல்வர் வேதச், சொற்சிலம்பு புக்கொளியார் தோகையா கத்துடனே தோற்றஞ் செய்யும், விற்சிலம்பு நிகர்மேனி விடையிடபத் தனித்தேவர்மிளிர்மா ணிக்கப், பொற்சிலம்பு கிண்கிணிசேர் புனைவுதரு கனைகழல்கள் போற்றல் செய்வாம்.

(இ-ள்) முன்னே சில புஷ்ப பாணங்களை விடுத்த மன்மதனை அக்கினிக் கண்ணாகிய நெற்றிக் கண்ணி னாலே பொடி படுத்திய முழுமுதற் கடவுளும், வேதங்களாகிய சிலம்புகளைத் தரித்த திருப்புக்கொளியில் வீற்றிருப்பவரும் ஆகிய சிவபெருமான் உமாதேவியாரோடு எழுந்தருளிக் காட்சிதந்தருளும் பிரகாசம் பொருந்திய மலை போன்ற திருமேனியையுடைய ஒப்பற்ற இடபதேவருடைய விளங்குகின்ற மாணிக்கமணிகள் பதித்த பசும் பொன்னால் ஆகிய சிலம்புகளையும் சப்திக்கின்ற சதங்கைகளையும் அணிந்த திருவடிகளை வணங்குவாம் (எ-று) 10

சிலம்பு-கயிலாயமலை. சில் அம்பு விடும் மதனை எனப் பிரித்துச் சிலவாகிய மலர் அம்புகளைச்செலுத்திய மன்மதனை எனவும் பொருள் கொள்ளலாம். முளரி-அக்கினி. தோகை-மயில்போலும் சாயலையுடைய உமாதேவியார். வில்-ஒளி. வில் சிலம்பு நிகர்-வில்லாக வளைக்கப்பட்ட மேரு மலையை ஒத்த. மேருமலையைக் கூறியது தோற்றத்திற்கே என்க; வெள் விடை யாகலின். கிண்கிணி-சிறுசதங்கை.

## 11
## துவார பாலகர்

*கான்றமணி வாயரவ கங்கணமங் கரமருவக் கழல்கட் பார்வை*
*மூன்றிலகச் சுடர்மவுலி முடியோங்கப் பிறையெயிறு முகநி லாவ*
*ஊன்றுகதைமீதோர்கைதாண்மாறவைத்தவிரண்டோங்கல்போன்று*
*தோன்றியிரு பாலுறையுந் துவாரகண பாலர்பதந் தொழுது நிற்பாம்.*

(இ-ள்) மாணிக்கமணிகளை உமிழும் வாய்களையுடைய பாம்புகள் கங்கணமாக அழகிய கையிலே பொருந்தவும், வெளியே பிதுங்கிய கண்களின் பார்வையானது மூன்றாக விளங்கவும், பிரகாசம் பொருந்திய கிரீடத்தின் அழகுதோன்றவும், பிறைச்சந்திரன் போன்று விளங்கும் கோரப்பற்கள் திருமுகத்திலேநிலாவவும், பூமியிலே ஊன்றிய கதை என்னும் ஆயுதத்தின் மேலே ஓர் கரத்தையும் மாறிவைத்துள்ள திருவடியையும் கொண்டு இரண்டு மலைகள் போலக் காட்சி தந்து வாயிலின் இருபக்கங்களிலும் பொருந்த எழுந்தருளும் கணநாதர்களாகிய துவாரபாலகர்களுடைய திருவடிகளை வணங்குவாம் (எ-று) 11

கான்ற-உமிழ்ந்த. கழல் கண்-பிதுங்கிய கண். மவுலி-கிரீடம். எயிறு-பல், ஓங்கல்-மலை.

## 12
## சண்டேசுர நாயனர்

*வண்டேசர் புக்கொளியார் வண்மைபெறு தமைப்புரிந்த மணற்*
*பாற்பூசை, கண்டேச ரோருகத்தா ளகந்தரித்து முந்துபரி கலப்பே*
*றீந்து, விண்டேசர் காண்பரிய மெய்ப்பதவி தந்தருள மிகுதியோங்குஞ்,*
*சண்டேசர் புண்டரிகத் தண்டையம்பொற் றாளிணைக டலைமேல்*
*வைப்பாம்.*

(இ-ள்) வளப்பம் பொருந்திய பிரகாசத்தையுடைய திருப்புக்கொளியூரில் எழுந்தருளும் சிவபெருமான், தமது திருவருட்குறியாகிய சிவலிங்கத்தை மணலாற் குவித்துப் பாலபிஷேகம் செய்து பூசித்த திறத்தைக்கண்டு தமது தாமரை போலும் திருவடிகளை அவருடைய மன்த்திலே ஊன்ற வைத்தும்,சிவப்பிரசாதமாகியபரிகலத்தை அவருக்கே தந்தும், விண்ணுலகத்திலேயுள்ள தேவர்களும் காண்பதற்கு அருமையான தமது சிவலோகத்திலே உள்ள சண்டேச பதவியையும் கொடுத்தருளியும் மேம்பாடுற்று விளங்குகின்ற சண்டேசுர நாயனாருடைய தாமரை மலர் போன்ற தண்டை என்னும் அழகிய ஆபரணத்தையணிந்துள்ள திருவடிகள் இரண்டையும் சிரசின் மேலே சூட்டிக்கொள்ளுவாம் (எ-று) 12

தேசர்-ஒளியையுடையவர்: தேசு-ஒளி. சரோருகம்-தாமரை. பரிகலம்-உச்சிட்டம். விண்தேசர்-ஆகாய உலகில் உள்ளார், புண்டரிகம்-தாமரை. தாளிணை-இரண்டுதிருவடிகள்.

## 13

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

*செம்புகலி வெழுதுபுகழ் வளவர்பிரான் றிருமகளார் திருநின் றோங்க*
*வெம்புகலி யமண்மாறத் தென்னர்புவி வெண்ணீறு விளங்கி வாழ*
*நம்புகலி யாளுடைய பிள்ளையெனுந் தெள்ளுதமிழ் ஞான தீபம்*
*பம்புகலி நீர்த்தரங்கப் பொய்கைமருங் கலர்கமலப் பதம்பெற் றுய்வாம்.*

(இ-ள்) செப்புப் பட்டயங்களிலும் கல்வெட்டுக்களிலும் எழுதிப் பாதுகாக்கப்படும் மெய்ப்பெருங் கீர்த்தியையுடைய சோழ அரசருடைய திருப்புதல்வியாராகிய மங்கையர்க்கரசியாருடைய மங்கலநாண் நிலை பெற்றோங்கவும், அடியார்கள் மனம் வெதும்புகின்ற துன்புருவாகிய அமணசமயம் தங்

கொடுமையினின்று மாறிப்புனிதமடையவும், பாண்டியநாடு திருநீற்றொளியினால் விளங்கி(ச்சமணஇருள் தொலைந்து) வாழவும், நமது புகலி என்னும் சீர்காழிப்பதியிலே அவதரித்தருளிய ஆளுடைய பிள்ளையாராகிய தெளிந்த தமிழ்ஞானசம்பந்த மூர்த்தி நாயனாருடைய ஒளிமிகுந்த ஒலிக்கின்ற அலைகளையுடைய திருப்பொய்கையின் கரையிலே மலர்ந்ததாமரை மலர்போன்ற திருவடிகளை அடைந்துஉய்வோமாக (எ-று)13

வளவர்—சோழர். கலி—துன்பம். தென்னர்—பாண்டியர். புகலி-சீர்காழி. கலிநீர்-ஒலிக்கின்றநீர். தரங்கம்-அலை. மருங்கு -பக்கம். கமலம்-தாமரை.

14

## திருநாவுக்கரசு நாயனார்

வலதவதி வாழ்வரிய மண்ணுலகின் மாந்தரெலா மகவான் றேற்றம்
நலதவதி காரமென நாடுதலைக் கடைப்படுபுன் ஞமலிக் காக்குங்
குலதவதி யானநெறி குன்றாத கோமளப்பொற் கொம்பு போன்ற
திலதவதி யார்துணைவர் திருநாவுக் கரையரடி சேர்ந்து வாழ்வாம்.

(இ-ள்) மண்ணுலகத்திலே வாழ்கின்ற மக்களெல்லாம் வல்லமை ஆயுள் செல்வவாழ்வு அதிகாரம் போகம்முதலியன (நமக்கு) அருமையுடையனவாம் இந்திரனாகப் பிறந்து மூவுலகும் ஆளும் அவ் அரச வாழ்வே நல்லதாம் என விரும்பிச் செய்யும் செயல்களை மிகவும் கடைப்பட்ட இழிந்த செயலையுடைய (கக்கித்தின்னுதலுடைய)நாய்களைப் போன்ற செயல் என இகழ்ந்து தள்ளிச் சிறந்த தவம் தியானம் முதலிய சிவச் செயல்கள் ஆகிய சைவதவவொழுக்கம் மாறாத அழகிய பூங் கொம்பு போன்ற திலதவதியம்மையாருடைய உடன் பிறந்தார் ஆகிய திருநாவுக்கரசு சுவாமிகளுடைய திருவடிகளைப் பற்றுக்கோடாகக் கொண்டு (பிறவிக்கடலைக்கடந்து முத்தியங்கரையைச் சேர்ந்து) வாழ்வோம் (எ-று) 14

மகவான்-இந்திரன். நாடுதல்-விரும்புதல், ஞமலி-நாய். குலம் தவ தியானம்-சிறந்த தவமும் தியானமும். சோமளம்-அழகு. துணைவர்-சகோதரர்.

15

## சுந்தரமூர்த்தி நாயனார்

மின்னுவ லானபெரு வேதனையைத் திருவருட்கண் விழித்து நோக்கி
உன்னுவல் வேலையிலே யும்பர்பிரான் றூதுசெல வோது பாடல்
நன்னுவ லோனுலகி னந்திருவா ரூர்விளங்க ஞான வேத
மன்னுவலூ ரனெனவந் தருள்சுந்தரனிருதாண் மனத்துள்வைப்பாம்.

(இ-ள்) மின்னற்கொடிபோன்ற அநிந்திதை கமலினியார் மீது ஆசைப்பட்ட பெரிய துன்பத்தைத் திருவருட்பார்வையால் நோக்கிச் சிந்தித்து நள்ளிருட்காலத்திலே தேவர் பிரானைத் தூதாகப் பரவையாரிடம் செல்லுமாறு தேவாரத்திருப் பதிகத்தையருளிச்செய்த நாவல்லமையையுடைய பிரானும், உலகத்திலே திருவாரூரானது மிக்க புகழைப் பொருந்தச் சிவஞானத்தை விளைவிக்கும் வேதங்களுக்குத் தலைவரும், திருநாவலூரின்கண் அவதாரஞ் செய்தருளியவரும் ஆகிய சுந்தரமூர்த்தி நாயனாருடைய இரண்டு திருவடிகளையும் மனத்தில் வைத்துத் தியானிப்பாம். (எ-று) 15

மின்-மின்னற்கொடிபோன்ற பெண்கள். அல்வேலை-இருட்காலம். வேதமன்-வேதங்களுக்குரிய அந்தணர்.

16

## மாணிக்கவாசக சுவாமிகள்

முன்னரியைப் பிரமாவைக் கொணருகினு மவர்பொருட்டான் முடியா வண்ணங், துன்னரியைப் பரியாக்கி வாதவூர் விரைந்துபெருந் துறையைப் போந்து, தென்னரியற் புவிவந்து திருவவிநா சிப்பொருளைச் செழுநா வாய்கொண், டுன்னரிய தமிழமுத மூமிழ்திருவா சகக்கடலை யுகந்துட் கொள்வாம்.

(இ-ள்) முற்படத் திருமாலையும் பிரமதேவரையும் கொண்டு வந்தாலும் அவராலும் செய்து முடிக்க இயலாத படி காட்டில் நிறைந்த நரிகளையெல்லாம் பரியாகச் செய்து (பாண்டியன் முன்பு காட்டிப் பின் அவனால் ஒறுக்கப்பட்டுச் சிவபெருமானுடைய மெய்த்தொண்டர் என அறிந்த அப் பாண்டியன் வேண்டிக் குறையிரக்கத் தாம் இச்சைப்படி செல்ல விடைகொண்டு) வாதவூரையடைந்து விரைவாகத் திருப்பெருந்துறைக்குச் சென்று சிவபோகநுகர்ச்சியாகத் திரு அவிநாசியில் உறைந்த சிவபரம்பொருளைச் செழுமையா கிய வாக்கினால் நினைப்பதற்கரிய செந்தமிழ்ச்செய்யுளாகிய அமுதத்தையுமிழ்ந்தருளிய திருவாசகக் கடலை விரும்பி மனத்திலே வைத்துத் தியானிப்பாம் (எ-று) 16

அரி-திருமால். ஊர், துறை, புவி, பொருள், நாவாய், அமுதம், கடல் என்பன உருவகம் செய்யப்பட்டுளநயம் பாராட்டுதற்குரியது. திருவாசகக்கடல் என்பது குறிப்பு : ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் என்றபடி.

17

## முதலையும் அதன்வாய்ப் பிள்ளையும்

ஒருமுதலை யவிநாசி யொண்பொருளை யிசைபாடு மூரன் காணப்
பொருமுதலையுறுகிளைஞர்புந்தியலர்ந்துடலமெங்கும்புளகமொய்ப்பப்
பெருமுதலை யுறுகுளநீர் பிறழ்கரையிற் புதல்வனையும்பேழ்வா யேந்தி
வருமுதலை யுகிரடியு மறைமதலை துகிரடியும்வணக்கஞ் செய்வாம்.

(இ-ள்) ஒப்பற்ற முழுமுதற் கடவுளை அவிநாசிஎன்னும் தலத்திலே வீற்றிருக்கும் ஒள்ளிய பொருளை இசைப்பாட்டா கிய தேவாரத்திருப்பதிகங்களால் போற்றும் திருநாவலூர

ராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் காணும்படி துன்பமிக்க சுற்றத்தார் மனமகிழ்ந்து மெய்புளகிப்ப பெரிய பழமையான அலைகளையுடைய குளத்து நீர் மோதும் கரையினிடத்தே முன் உண்ட பிராமணச் சிறுவனைப் பெரியவாயில் ஏந்திக் கொண்டு வருகின்ற முதலையினுடைய நகமுள்ள காலையும் பிராமணப் பிள்ளையின் பவளம் போன்ற பாதத்தையும் வணங்குவோம். (எ-று) 17

## 18

## அகத்தொண்டு செய்வோர்

*மணிவிடைய ரவிநாசி வாரணவா சிக்கொழுந்தர் மகிழும் பூசைப், பணிவிடையி லுயர்வாய மறையோர்க்கு முறையோர்க்கும் பரிசாரர்க் குந், தணிவிடைய நெறியோர்க்குஞ் சிறிதேனுஞ் சிவகருமந் தாழ்வு கண்டால், துணிவிடையுற் றுயிர்துறக்க வுரியோர்க்கும் பெரியோர்க் குந் தொழும்பு செய்வாம்.*

(இ-ள்) அழகிய இடபவாகனத்தையுடையவராயும், அவி நாசி என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள காசியின் தெற் கண்தோன்று கொழுந்துபோல்பவராயும் உள்ள சிவபிரான் திருமகிழ்ச்சிக்குரிய சிவபூசைப் பணிவிடையில் உயர்ந்து விளங்கும் பிராமணோத்தமர்களுக்கும்; சிவாகமபூசை விதி முறையில் தவறாத சிவப்பிராமணர்களுக்கும்,பூசைக்கு உதவி யாகிய பணிவிடைகளை [த்தவறாமல் பக்தி சிரத்தை விசுவா சத்துடன்] செய்யும் பரிசாரகர்களுக்கும், தாழ்வுடனே பணிவிடைகளைச் செய்யும் திருக்கோயிற்றொண்டர்களுக்கும், சிவப்பணிகளில் சிறிதளவேனும் குற்றங்காணில் அக்குற்றத் தைச் சகிக்காமல் தமது உயிரையும் துறப்பதற்கு வல்ல அடி யார்களுக்கும், மற்றுமுள்ள பெரியோர்களுக்கும் அடிமை செய்து வாழ்வோம் [எ-று] 18

## 19

## நதிவிசேடம் தலவிசேடங்கள்

எள்ளாது பகன்மூன்று மிலகியநீ றிட்ஞான மிதய மூன்றுந்
தெள்ளாரு மறைநாலுஞ் செவிமடுப்ப வாணவநோய் திசைபோய்
நாலும், விள்ளாம லெழுத்தஞ்சு மூணர்ந்தோத விறன்மறலி வினவ
வஞ்சும், புள்ளார்சீர் நள்ளாறும் புக்கொளியு நணுகவஞ்சப் புலன்க
ளாறும்.

[இ-ள்] காலை, மத்தியானம், மாலை ஆகிய மூன்று சந்தி களிலும் விளங்கும் திருநீற்றை [விதிப்படி உத்தூளனம் திரிபுண்டரம் ஆக] ப் பூசிக்கொள்ளச் சிவஞானம் மனத்தில் நிலைபெறும். தெளிந்த நான்கு வேதங்களையும் பக்தி சிரத்தை யுடன் கேட்க ஆணவமலம் வலி கெட்டு ஒளிமழுங்கும் நீங் காமல் திருவைந்தெழுத்தையும் [விதிப்படி குருமுகமாகக் கேட்டறிந்து] பொருளுணர்ந்து செபிக்க வலிய இயமன் அஞ்சுவான். வண்டுகள்மொய்க்கும் சிறந்ததிருநள்ளாற்றையும் திருப்புக்கொளியூரையும் அணுக வஞ்சனைசெய்யும் ஐம்புலன் களும் தமது சேட்டையொழிந்து ஆறுதலை அடையும். (எ-று) 19

## 20

குருமவுனர் மருங்காசி கூறுதல மருங்காசிக் கொழுந்தி மேவும்
அருமைபெறு கன்தான மதிலொருவர்க் கனதான மளிக்க மேலாந்
தருமகவா னுறவிலகுஞ் சஞ்சிதங்க ளுறவிலகுஞ் சைவ மூவர்
பெருமொழியும்புக்கொளியும்பேசவுடம்புக்கொளியும்பிணிகள்யாவும்.

[இ-ள்] சிறந்த மௌனஞானிகளிடத்து வாழ்த்துக் கூறுதல் பொருந்தும் காசிக்கொழுந்தானது விரும்பி எழுந் தருளிய அரியதலத்திலே ஒருவருக்கு அன்னதானம் செய்ய இந்திரபதவி பொருந்தும் சஞ்சித கர்மங்கள் மிகுதியும் விட்டு

நீங்கும். சைவசமயாச்சாரியர்கள் மூவர் அருளிச்செய்த தேவாரத் திருப்பதிகங்களையும் திருப்புக்கொளியையும் வாயாரத் தோத்திரம் செய்ய உடம்பின்கண் உள்ள பிணிகள் மறையும். [எ-று] 20

21

காசிமுதல் வேர்கிளைத்து வாரணவா சிக்கொழுந்து கருணைக் கொம்பில்,வீசியெழில்படர்ந்தலர்ந்துவெய்யவினைப்பிஞ்சுவிட்டுவிரகங் காய்த்து, தேசினருள் பெறப்பழுத்துப் பேரின்பம் வழங்குமந்தத் தெய்வ மூலி, பேசியபத் தியமருவ வுட்கொண்டா லிருவினையும் பிறப்புந் தீரும்.

(எ-று) காசி விசுவேசரிடத்தினின்று கிளைத்து தென் பால் வேராக ஓடிவந்த வாரணவாசிக் கொழுந்தானது பெருங்கருணை நாயகி என்னும் பெயரினையுடைய பூங்கொம்பு போன்ற உமையம்மையார்பால் தோன்றி அழகு நிறைந்து அரும்பிப் பூத்துக் கொடிய வினைகளாகிய பிஞ்சுகள் தோன்றும் காமத்தைக் கோபித்து ஒளிபொருந்திய அருளைப்பெற முதிர்ந்து பேரின்பமாகிய பயனைத்தரும் அந்தத் தெய்வ மூலிகையைச் சிவாகமங்களாகிய உயிர் மருத்துவநூலில் விதித்த படி விதியாகிய பத்தியம் பொருந்த உட்கொண்டால் மக்கள் இருவினைகளும் பிறப்பும் ஆகிய நோய்கள் நீங்கப் பெற்று வாழ்வார் (எ-று) 21

22

## அவையடக்கம்

அரகரா சலமுரித்த புக்கொளியாய் மிக்கதிரு வருளி னாலே
திரகரா வுண்டொழிந்த சேயைவரு வித்தாய்நின் செயலீ தேயென்
றுரகரா யிரநாவா லுள்ளமட்டு முரைத்தாலு முலவா மேன்மை
நரகரா சிக்குரம்பைச் சிறுகிருமி குறுநாவா னவிறற் பாற்றோ.

(இ-ள்) அரன் என்னும் திருநாமத்தையுடையவரே! யானையையுரித்துப் போர்த்தருளிய திருப்புக்கொளியூரை யுடையவரே! பெருங்கருணையால் முதலை வாய்ப்பிள்ளையை வருவித்தருளியவரே! தேவரீர் கருணையிருந்தவாறு என்? என்று ஆதிசேடன் ஆயிரநாவாலும் ஆயுட்கால முழுவதும் கூறிப்புகழ்ந்தாலும் சொல்லி முடியாத சிறப்புக்களை யெல்லாம் கூட்டமாக நரகத்தில் வாழும் புழுவிற்கடையான (எளியேன்) ஒரு சிறு நாவினாலே சொல்லிமுடியுமா? முடியாதே. (எ-று) 22

கராசலம்-யானை. கரா-முதலை. சேய்-பிராமணச்சிறுவன். உரகர்-ஆதிசேடன். உலவா-கெடாத.

23

சீராசு முதுமதுரஞ் சித்திரவித் தாரமெனுந் திறத்தை யில்லேன் சோராசை யுரைவழுவை விலக்குமிலக் கணமில்லேன் றூயோய் கொன்றைத், தாராசை வாகமனே யென்றுபுகழ் புக்கொளியைத் தமிழா லேத்தப், பேராசை மிகுதியெனும் பித்துடையே னுத்தர மென் பேசு கின்றேன்.

(இ-ள்) சிறந்த ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நான்கு வகைக் கவிகளினும் வல்லேனல்லேன். சொற்குற்றம் பொருட்குற்றங்களையறிந்து நீக்கும் இலக்கணப்புலமையுமில்லேன். பரிசுத்தமானவரே! கொன்றைமாலையை அணிந்தவரே! சிவாகமங்களால் உணர்த்தப்படும் உயிர்த்தலைவரே! என்று பெரியோரால் புகழப்படும் புக்கொளித்தலத்தைத் தமிழ்ச் சொற்களால் துதிக்கும் பேராசையுடையேன்; பித்துடையேன், ஆகலின், வேறென்ன விடை சொல்ல வல்லேன். (பெரியோர் பொறுத்தருளுவர் என்னும் குறிப்புடையேன்) (எ-று) 23

## 24

*பொன்மலிந்த மேருவுயர் பூங்கயிலா யத்தமர்ந்தும் புறங்கா டுற்ருர், மென்மைதரு சீதமதி யாரமிர்த மிகநுகர்ந்தும் விடமு முண் டார், நன்மலர்ந்த தொடை புனைந்து மென்பணிந்தார் முன்பணிந்த ஞான மூவர், சொன்மகிழ்ந்த புக்கொளியார் புன்மொழியுங் கொள்வ ரெனச் சொல்வர் நல்லோர்.*

(இ-ள்) பொன்மயமான மேருவின் உச்சியில் உள்ள அழ கிய கயிலாய மலையில் எழுந்தருளியிருந்தும் இழிந்த சுடு காட்டிலும் எழுந்தருளியிருக்கின்ருர். மேன்மையான மதி அமுதத்தை நுகர்ந்தவராயினும் ஆலகால விடத்தையும் அமுது செய்தருளினுர். நல்ல மணமிக்க மலர் மாலைகளை யணிந்தவராயினும் என்பு மாலையையும் அணிந்தருளினுர். ஆதலின், சமயகுரவர்களாகிய மூவர் முதலிகள் தேவாரத் திருப்பதிகத்தைப்பெற்று மகிழ்ந்தவராயினும் திருப்புக் கொளியுடையார் இழிந்தவனுகிய என் சொல்லையும் ஏற்றுக் கொள்ளுவர் என்பார் நல்லோர். (எ-று) 24

## 25

*தசைபதிய சுர்ந்தரிந்து புலைஞர்பெறு சுரபியுரோ சனையின் சேர்வை, இசையநறுஞ் சந்தகிலி னுடனேறிக் கடவுளர்க்கு மினிதா மாபோல், அசைதலைசீர் பயன்மருண்ட இந்நூல்முன் நூலுணர்ந்தோ ரவையிற் சார்ந்து, திசைபரவும் புக்கொளியைச் சென்றேறு மென்று ரவோர் தெரித்தார் வாக்கால்.*

(இ-ள்) பசுவினிடத்திலிருந்து தசையை அரிந்து அதன் உள்ளிடத்திலிருந்து புலையர் எடுக்கும் கோரோசனையானது சந்தனம் அகில் முதலியவற்றின் சாந்தோடு சேர்க்கப்பட்டுக் கடவுளுக்குச் சாத்துகின்ற சிறந்த கலவையாம்; அதுபோல்,

இலக்கணக்குற்றங்கள் நிரம்பிய இந்தப் புராணநூலும் கற்றுணர்ந்தோர் சபையிலேறி நாற்றிசையும் புகழ் பரவும் புக்கொளியுடையார் பால் சென்று சேரும் எனப் பெரியோர் கூறியருளினர். (எ-று) 25

26

உற்றவர்கள் செயலுதவி யொழிந்தாலும் பேருவகை யொழியா தாகும்
மற்றவர்கள் இயலுரைக்க வழக்கன்று குழக்கன்று மனனே போலும்
நற்றவர்க ளகலாத புக்கொளியார் தக்கதிரு நாம மென்று
கற்றவர்கள் குறைபகராததிசயமோ புலப்படுத்தல் கடனு மன்றே.

(இ-ள்) சுற்றத்தார்கள் செய்யவேண்டும் உதவிகளெல்லாம் செய்யாமல் நீங்கினும் அவர்பாலுள்ள பெருமகிழ்ச்சி நீங்காதாம். மற்றவர் இயல்பைச் சொல்ல வேண்டியதில்லை. இளங்கன்றினுடைய மனத்தைப்போலும் சிறந்த தவத்தினர் விட்டு நீங்காத திருப்புக்கொளியுடையார் புகழிதுவாம் என்று புலவர் பெருமக்கள் குறை சொல்லார்; எனினும், குற்றங்களை எடுத்துச் சொல்லித் திருத்துதல் அவர் கடப்பாடு அல்லவா? (எ-று) 26

நூலாசிரியர் இது முடியவுள்ள ஐந்து பாடல்களால் அவையடக்கம் கூறினார்.

27

இகலறு மழுவாளர் எந்தையவி நாசியுளா ரெயில்சூழ் முன்றில்
அகல்வுறு மணியரங்கில் ஆகமசா லையிற்செறிவித் தந்நா ளுய்த்த
சகலலோ கர்க்கரிய சூதர்முது வடமொழியைத் தமிழ்வே தாந்தப்
பகலிவாழ் திருஞான சம்பந்த சைவமுனி பொற்கை யேந்தி.

## நூல் செய்தற்குக்காரணம்:-

(இ-ள்) மழுவைக் கையிலேந்திய சிவபிரானுடைய அவிநாசியிலே மணிகள் பதிக்கப்பெற்ற சபையிலும், ஆசம சாலையிலும் நிறைவித்துச் சூதமுனிவர் சொல்லிய வடமொழிப் புராணத்தைத் தமிழ் வழங்கும் சீகாழிப்பதியில் வாழும் திருஞானசம்பந்தர் என்னும் பெயரையுடைய சைவ தவமுனிவர் தமது திருக்கரத்தில் ஏந்தி (எ-று) 27

இவர் ஒரு தம்பிரான் போலும். சீகாழியில் உள்ளவர், சைவசமயகுரவராகிய திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் அல்லர்.

28

காற்றிசையு மடியர்குழாம் அருகிருப்பப் புறத்திருந்த நாயி னேனைத், தேற்றமுற அருள்சுரந்து திருநோக்கால் வரவழைத்துத் தென்னற் கீந்த, நீற்றொளியை நுதலழுத்தி இத்தலமேன் மையைத் தமிழால் நிகழ்த்து கென்று, சாற்றிமுறை யேடளித்தான் அம்முறை யும் அவனருளும் தலைமேற் கொண்டு.

(இ-ள்) அடியார்கள் நாலாபக்கத்திலும் புடைசூழ்ந் திருக்கத் தூரத்தே இருந்த நாய்போன்ற என்னை தெளிவடையைக் கிருபைமிகுந்து திருவருட்கண்ணோக்கம் செய்து அழைத்துத், பாண்டியனுக்கு அளித்த திருநீறு நெற்றியில் பூசியருளி, இத்தலச்சிறப்பைத் தமிழ்ச்செய்யுளாற் பாடுக எனக் கட்டளையிட்டு, வடமொழி ஏட்டைத் தந்தருளினர். அத்திருவேட்டையும் அம்முனிவர் அருளையும்மேற்கொண்டு. (எ-று) 28

29

வேதபா ரகரமர்ந்த பேரவைசென் றேபரவி வினம்ப வன்னோர் பூதலரா லறிவருமப் பொருளைவிரித் தருளவது புந் திதேக்கி நாதவோ தையில்விளங்கும் வெண்கமலச் சகலகலா ஞான வாணி போதமே தரப்புகன்றேன் புக்கொளியூர்ச் சைவசிவ புராண மென்ன.

(இ-ள்) பிராமணோத்தமர்கள் கூடியுள்ள பெரிய சபை. யை அடைந்து வணங்கி நிகழ்ந்த செய்திகளை யெல்லாம் கூறினேனாக. அப் பெரியோர் அவ்வடமொழிப் புராணத்தை விரிவுரை செய்து உணர்த்த அப்பொருளை விடாமல் என் அறிவிலே கொண்டு வெண்டாமரையில் வீற்றிருக்கும் சகல கலாவல்லியாகிய ஞானவாணிதந்து விளக்கிய அறிவினாலே **புக்கொளியூர்த்தலபுராணம்** எனப்பாடினேன்.(எ-று) 29

30

தொல்வளமை பாராய்ந்த திருவவிநா சிப்பெருமை தொகு புரா ணம், நல்வினைதீ வினையகற்றி ஞானபரி பூரணத்தை நயக்கு மாற் றால், செல்வமலி பூதலத்திற் செந்தமிழால் இயலிசையாற் சிவஞா னத்தாற்,கல்வியுளார் பாராட்டக் கடவதடி யார்கேட்கக்கடவதா மால்.

(இ-ள்) பழமையான திரு அவிநாசித்தலத்தின்பெருமை களையெல்லாம் தொகுத்துச் செய்த இப்புராணமானது தமது நல்வினை தீவினைகளைப் போக்கிச் சிவஞானத்தை விளை விக்குமாகையால் நிலவுலகத்தில் புலவர் பெருமக்கள் பாராட்டக்கடவர். அடியார்கள் இப்புராணத்தைக் கேட்டு இன்புறக் கடவர் (எ-று) 30

31

## புராண வரலாறு.

சங்கரர்தம் பெருமையெலாம் சயிலமகட் குணர்த்தவவள் தனிவே லேந்தும், நங்கடவுட் கருளியதை ஞானவருள் நந்திகண நாதர் கேட்டுத், தங்குமவர் திருவருளால் தெளிந்தசனற் குமரர்வியா தற்கு நீட்ட, அங்கவரும் அருகிருந்த சூதரைப்பார்த் தாதியந்த மருளிச் செய்தார்.

(இ-ள்) சிவபெருமான் தமது பெருமைகளையெல்லாம் [உயிர்கள் உணர்ந்து உய்யத் திருவுளங்கொண்டு] உமாதேவியாருக்கு உபதேசித்தருள, அப்பெருமாட்டி தம் இளைய குமாரருக்கு அருளிச்செய்ய, அதனைத்திருநந்தி தேவர் கேட்டுத் தம் மாணவருட்சிறந்த சனற்குமாரமுனிவருக்கு அருள அவர் வியாச முனிவருக்கும், அவர் சூதமுனிவருக்குமாக முறையே உபதேசித்தருளுவாராயினர்.(எ-று) 31

32

அருள்பெருகுந் தன்மையினு லுயர்சூத பகவானென் றகிலம் போற்றப், பொருள்பெருகு மாகமத்திற் புகுதொகையா யிருபதினெண் புராணந் தன்னில், தெருள்பெருக வகுத்துரைத்தான் அளவில்பர சிவஞானந் தெளிவு றுத, இருள்பெருகும் அறிவினருக் குதயதின கரகிரண மெழுந்த தென்ன.

(இ-ள்) கருணையினாலே மிக்க 'சூத முனிவர்' என உலகமெல்லாம் துதிக்குமாறு [மெய்ப்பொருளாகிய சிவபரம் பொருளின் தன்மையைச் சத்தி நிபாதத்து உத்தமர் தேற அருளிய) ஆகமங்களில் கூறிய பொருளை யாவரும் உணர்ந்துய்யப் பதினெண்புராணங்களாக வகுத்து மந்த மதியினருக்கு அறியாமை என்னும் இருள் கெடத்தோன்றிய உதய ஞாயிறு போன்று வகுத்துச் செய்தருளினர். (எ-று) 32

சிவபிரானுக்குப் பத்து, விஷ்ணுவுக்கு நான்கு, பிரமதேவருக்கு இரண்டு, அக்கினிக்கு ஒன்று, சூரியனுக்கு ஒன்று ஆகப் பதினெண்புராணங்களும் வியாச முனிவர் அருளிச் செய்தவை.

33

அக்கதையில் வருமவுன பரமரா சியப்பொருளை யாராய்ந் தேத்தத்
தக்கபுவி யாதெனவே சதுமுகனைத் தவமுணர்ந்த தக்கோர் கேட்பப்
புக்கசிவ முனிவர்குழா மகலாத புண்ணியப்பொற் பூமி யாய
மிக்கவுய ரியகங்கா சாகரசங் கமதீர மேன்மை யென்றார்.

(இ-ள்) அப்புராணக் கதைகளில் வரும் அதிக ரகசிய மான பொருள்களை ஆராய்ந்து போற்றுவதற்குரிய தூய இடம் யாது எனப் பிரமதேவரை முனிவர்கள் வினவ, சிவ தவமிக்கோர் கூட்டம் என்றும் நீங்காத அழகிய புண்ணிய பூமியாகிய மிகஉயர்ந்த கங்கைநதி கடலொடு கலக்கும் தானமே சிறந்ததாம் என்றருளினார். (எ-று) 33

34

சானுவியா மிரமுகமும் தணவாது கடல்புகுதும் தான மாகி
ஏனுமொளி நேமியினென் நைமிசா ரணியமென இமையும் கானம்
வானுயர வளர்ந்தோங்கி மருவுநிறம் பசுமைகொண்டு மலர்க்கொம்
பேந்தித், தேனுதக மிசைக்கனிந்து சுரும்புதக விருந்துளது செங்கண்
மால்போல்.

(இ-ள்) கங்காநதியானது மிக்க பெருக்கு நீங்காமல் கடலிற் கலக்கும் பெருமையுடைய தானமாய் நேமியின் சம் பந்தத்தால் நைமிசம் எனப் பேர் பெற்ற கானகம் சிவந்த தாமரை போலும் கண்களையுடைய திருமால்போல ஓங்கி யுலகளந்ததாய், பசுமைநிறம் பெற்று, மலர்கள் பொருந்திய கொம்புகளை ஏந்தி, தேனுகியநீர் மிகக் கனிந்து, வண்டுகள் மொய்க்க இருப்பதாம். (எ-று) 34

திருமால் திரிவிக்கிரம அவதாரத்தில் வளர்ந்தமை. பசுமை நிறமுடைமை. செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் பூங் கொம்பு போன்ற திருமகளை ஸ்ரீ வத்ஸத்திலே பெற்றி ருத்தல். பசுக்கள் விரும்பக் கருணைசெய்தல். சுரும்புண்ண பிருந்தைமாலை யணிதல் முதலியன.

35

அந்தவனநீர்மையிலவங்கமகில்சாதிகுரவம்புனைக
நிந்திருணிமாவரசுசம்புபனைகூவிளைசெருந்திநீபஞ்
சந்திதழிபாடலமிலந்தைகழைதீபதருசண்பகாதி
அந்தரமெலாமறையநின்றபலபாதவமநந்தகோடி.

(இ-ள்) அந்தவனத்திலே இலவங்கம், அகில், சாதி, குரா, சுரபுன்னை, புளி, மா, அரசு, நாவல், பருத்தவில்வம், செருந்தி, கடம்பு, சந்தனம், கொன்றை, பாதிரி, இலந்தை, மூங்கில், சோதிமரம், சண்பகம் முதலியமரங்கள் எல்லாம் அடர்ந்து நெருங்கி ஆகாய வெளியை மறைத்துள்ளனவாய் எண்ணிலாதன உள. (எ-று) 35

36

போதகம்வராகமடமானிரலைமேதியரிபுண்டரீகம்
மேதகையவானினமுமோர்துறையினீர்பருகிமேன்மைசாரும்
பேதமணுகாதசுழுனவழியின்மாறியிடைபிங்கலாதி
சாதகவியோகரொடுகூடிவிளையாடுமிடைசந்திதோறும்.

(இ-ள்) யானை, பன்றி, இளமான், கலைமான், எருமை, சிங்கம், புலி, மேம்பட்ட பசுக்கள் முதலிய விலங்குகள் ஒரு துறையில் நீர் குடித்து இடைபிங்கலைகளை மாறுபடாத சுழி முனையில் செலுத்தி யோகஞ்செய்கின்றயோகிகளோடு கூடி விளையாடுவனவாம். (எ-று) 36

37

கந்தமலிபொற்பிலகுமந்தருவனத்தவர்கள்கங்கையாட
வந்தனர்நினைத்தபடி தங்கடன்முடித்தனர்மருங்கர்கேடி
முந்தவுரைபெற்றவனமொன்றினர்தவத்துறைமுயன்றருந்தர்
சிந்தைமலருற்றினிதிருந்தபரிசைத்தொழுதுசெஞ்சொல்கூர்வார்.

(இ-ள்) மணம்மிக்க அழகு பொருந்திய அந்தத்தாருக வனமுனிவர் கங்கைநீராடவந்தவர்களாய்த் தங்கள் கடமைகளை முடித்துக்கொண்டு பக்கத்திலே விரும்பி முன்னே சொன்ன வனத்திலே தங்கியிருந்தனர். பின் தவத்துறையிலேயிருந்த சூதமுனிவரானவர் மனமலர்ந்து இருக்கும் தன்மையைக்கண்டு வணங்கிச் சொல்லுவாராயினர். (எ-று) 37

38

வேறு.

போதமிகுபைங்கடலுட்புக்கசிவகங்கைநதிப்புடைசென்றூடிச்
சூதநெடுந்தவக்கடலைத்தொழுதாடியிசைபாடித்தொலையாவின்ப
வாதரவாகமக்கடலூடாடவனைந்தனமினியின்றளவேயன்றே[றூர்.
பாதகவெம்பவக்கடலிற்பாய்ந்தாடும்பழவினையைப்பறித்தேமென்

(இ-ள்) ஞானநிறைந்த சிவபெருமானுகிய கடலிற் புகுந்த சிவகங்காநதியிலே சென்று நீராடி, சூதராகிய பெரிய தவத்தினுல் கடல்போன்ற அவரை வணங்கி உரையாடி, நீங்காத பேரின்பம் தரக்கடவதாகிய சிவாகமக்கடலில் திளைக்க விரும்பி வந்தோம். மிகக்கொடிய பிறப்பாகிய கடலிலே முழுகுவதற்குக் காரணமாகிய பழையவினைகளையெல்லாம் அடியோடு கெடுத்தோம் என்று அம்முனிவர்கள் கூறினுர்கள். (எ-று) 38

39

இருந்தவவேதியர்வருகவைகுமினென்றுரைத்தருளவிடையின்
மேவித், திருந்தனலோன்கிரியைமுடித்ததுபார்த்துமதுரமுதிர்
செந்தேன்கந்தங், குருந்தனையசாகபலங்குண்டிகைநீருடனருந்தக்
கொடுத்துகம்பால், விருந்தனையதாபதர்காள்வேண்டுவதெனென்
றுரைத்தான்விதிநூல்வல்லான்.

(இ-ள்) பெரிய தவத்தையுடைய பிராமணோத்தமர்களே! நீங்கள் வருவீராக. எழுந்தருளுங்கள் என்று முகமன் கூற அங்கே எழுந்தருளி அக்கினிகாரியம் செய்வதையும் தரிசித்து இனிய சுவை முதிர்ந்த தேன், கிழங்குகள், இலைகள், பழவர்க்கங்கள் முதலியவைகளையும கமண்டலங்களில் நீரையும் உண்ண உதவி நம்மிடத்து விருந்தினராக வந்த தவசிரேட்டர்களே! தாங்கள் விரும்பிவந்தது யாது காரணம்பற்றி என நீதி நூல் வல்லவராகிய அம்முனிவர் கேட்கலாயினர். (எ-று) 39

40

வெங்காளகந்தரத்தாலந்தரம்வாழ்வித்தபிரான்வேணிதோய்ந்த
கங்காபவானியைகன்கலனகவணிசிறந்தகாசிமேன்மை
தங்காநின்றெஞ்ஞான்றுமோதியுணர்யோதுமுளந்தாகமாறு
இங்காதரந்தணிவித்திடுதியெனநெடியமுனிகடிநினெய்தி.

(இ-ள்) கொடிய ஆலகாலவிடம் பொருந்திய திருமிடற்றினாலே விண்ணோர் முதலிய யாவரையும் வாழச்செய்தருளிய சிவபிரானுடைய சடையிலே திவலையாகப் பொருந்தும் கங்கா நதியையே ஆபரணமாக அணிந்து விளங்கும் காசிநகரமேன்மையைக்கற்றுணர்ந்தாலும் அவா அடங்காதாகலின் இப்பொழுது எங்கள் போாவலைப் போக்கியருளுவீராக என முனிவர்கள் வேண்டச் சூதமுனிவர் விரைந்து வந்து. (எ-று) 40

41

வார்த்தனவாசிரமநிலைவலியபுலியுரிவிரியின்வைகிமேவி, ஆர்ந்தமுறைக்காப்பகற்றிமலர்தூஉய்வெங்கயவதனனடிகள்போற்றி,ஓர்ந்துணர்ந்துபுகல்கின்றனுயர்காசிமேன்மைமுடிவுளதோவங்ஙன்,
தேர்ந்தவருணந்திசனற்குமாரிவர்வினவுகதைதெரிந்துசொல்கேம்.

(இ-ள்) சிறந்த தமது ஆசிரமத்திலே வலியபுலித்தோலின்மேல் எழுந்தருளி யிருந்து காசிஸ்தல மான்மியச் சுவடியின் காப்பைநீக்கி மலரிட்டு அருச்சனைசெய்து யானைமுகத்தையுடைய விநாயகமூர்த்தியை வணங்கித் தியானித்து உணர்ந்து சொல்லத் தொடங்கினர். உயர்ந்த காசியின்பெருமை நம்மால் சொல்லும் தரத்ததோ! அதனைத் திருநந்திதேவர் சனற்குமார முனிவருக்குச் சொல்லியருள அவ்வழியேவந்த அவ்வரலாற்றை ஆராய்ந்து சொல்லுவோம். (எ-று) 41

42

பூசியேநீறுகந்தபுனிதர்பிரானினிதுறையும்புரங்கட்கெல்லாங்
காசியேமேன்மையென்றுகழறுமாகமங்களந்தக்காசியேசங்
கோசியாய்முதலாயதிருவவிநாசித்தலமேகொழுந்தாயோங்கி
வாசியாய்நிலைபெறுமத்தலமூர்த்திதீர்த்தமகிமையாதோ.

(இ-ள்) விபூதியைப்பூசி மகிழ்ந்த புனிதராகிய சிவபிரான் விரும்பி யெழுந்தருளும் தலங்களில் எல்லாம் ஸ்ரீ காசியே மேன்மையுடையதெனச் சிவாகமங்கள் கூறும். அந்தக் காசியே வேராகநின்று கொழுந்தாயெழுந்து நிலைபெற்ற அவிநாசியாகிய தலம் மூர்த்தி தீர்த்தம் முதலியவற்றின் பெருமைகள் யாவை? (எ-று) 42

43

என்றுரைக்குமெனப்பகர்ந்தருந்தமைநோக்கியெமதிறையே
ஞானக், குன்றனையதவமுனியேகுறுமதியேமறுமொழிவாய்குழறுந்
தீமை, இன்றுதிருவுளக்கிடையிலெண்ணற்கவெனத்தளர்வுற்றிரந்து
பேணித், தென்றலுலவுங்கதிர்போற்றீராதமதுரமொழிசெப்புகின்
றார்.

(இ-ள்) எனப்போற்றிச் சொல்லுவோம் எனக்கூறிய சூதமுனிவரைப்பார்த்து எமதுதெய்வமே! சிவஞானக்குன்று போன்ற தவசிரேட்டரே! சிறிய மதியையுடைய அடியேங்கள் பிதற்றும் சிறுமொழிகளைத் திருவுளத்து எண்ணற்க என இரந்து வேண்டி முனிவர்கள் தென்றற்காற்று வீசுவதுபோல இனியவார்த்தைகளைச் சொல்வாராயினர். (எ-று) 43

44

இன்னமுதின்மேற்சுவையுமிர்துவின்மேற்சீதளமுமிரவிகாலும்
பன்னகமேதருபதுமராகத்தின்மேன்மணியும்பணிலமாயன்
உன்னரியபாசிவசாயுச்சியத்தின்மேற்பதமுமுலகினுளுங் [கார்
தன்னிகரில்காசியின்மேற்றலமுமுளவோவென்றார்தவத்தின்மிக்

(இ-ள்) இனிய அமுதினும் மேம்பட்ட சுவையும், சந்திரனைவிடக் குளிர்ந்த பொருளும், ஒளியைவீசுகின்றதும் பாம்பினிடத்துண்டானதுமான பதுமராகத்தைவிட உயர்ந்த மணியும், பாஞ்சசன்னியத்தை யேந்திய திருமால் நினைத்தற்கும் அருமையான சிவசாயுச்சியத்தின் மேம்பட்ட பதமும், உலகிலே தனக்கிணையில்லாத காசியின் மேம்பட்டதலமும் உளதோ என முனிவர் வினவினர். (எ-று) 44

45

தூயகதைமுனிநகைத்துமுறைமுறைகோடீரமுடிதுளக்கஞ் செய்து, சேயமிகுமுளமிரங்கிநீவிர்விளம்பியநினைவுநீர்மையாமென், றுயபொருடனைவிரித்துப்புலன்வழிபோமறிவொருப்பட்டவிழுந் தன்மைத், தாயனையபரிவினுடன்றனயானையவர்கேட்பச்சாற்று கின்றான்.

(இ-ள்) அதனைக்கேட்ட மேலான கதையைச் சொல்லும்படியான சூதமுனிவர், நகைத்துத் தமது சடாமுடியை

அசைத்து அன்போடுகூடிய மனம்இரங்கி "நீங்கள் கேட்டது தக்கதே" என்று புலன்வழிச்செல்லும மனம் ஒரு வழிப்பட்டிருக்குமாறு தாய்போனற அன்புடன் புத்திரரைப் போன்ற அம்முனிவர்கள் கேட்க அதனை விரித்துச்சொல்வாராயினர். (எ-று) 45

46

தோன்றுமொருசிறுகுழவியழகுதகவளர்ந்துகலன்றுதைந்துமேவி
ஆன்றபலகலைபயின்றுமணமருவிமுடிசூடியறங்கள்பேணி
வான்றரணிபுகழவியைந்துளதாகிலம்மகிழ்ச்சிமைந்தற்கேயோ
ஈன்றகுரவர்கடமக்கோமறையுணர்வீருலகவழக்கியம்புமென்றான்.

(இ-ள்) பிறந்த ஓர் நன் மகவு அழகுற வளர்ந்து, அணிகலங்களையணிந்து, சிறந்த பல கலைகளைப் பயின்று, மணம் முடித்து, முடிசூடி. அறங்களையெல்லாம் செய்து, நன்மக்கள் புகழ வீற்றிருக்குமாயின் அதனால் ஆயமகிழ்ச்சி அம்மைந்தனுக்கோ அன்றிப் பெற்றோருக்கோ? உலகியலைச் சொல்லுவீர்களாக என அம்முனிவர்களைக் கேட்டார். (எ-று) 46

47

உற்றவுரைபெற்றவர்களோகையலதுளவோவென்றுெழுக்கமெய்தி
மற்றுளதுநிற்கவந்தவாரணவாசிக்கொழுந்தின்வண்மைகேட்ப
முற்றுபெரிதாசையுளேமென்றுரைத்தபன்னுமறைமுன்னூல்வேந்
பற்றுறுதிகொடுகேட்கப்பாயிநூல்வழிசூதபகவான்சொல்வான்[தர்

(இ-ள்) (அதனைக்கேட்ட முனிவர்கள்) பிள்ளைக்குப் பொருந்திய புகழால் பெற்றவர்களேயன்றிப் பிறர் மகிழ்ச்சியடைவார்களோ? அடையார். அதுநிற்க, அந்த வாரணவாசிக் கொழுந்தாகிய சிவபிரானுடைய கீர்த்திகளைக் கேட்கப் பெரிதும் ஆசையுடையோம் எனக் கூறியபின் மறையையுணர்ந்த முப்புரிநூலணிந்த அவர்கள் மிக்க விருப்புடன்

கேட்கும்படி வரலாற்று முறையில் வைத்துச் சூதமுனிவர் சொல்லத்தொடங்குகின்றார். (எ-று) 47

முதலாவது கடவுள் வாழ்த்து முதலிய
முகவுரைச் சருக்கம் முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம் 48.

---

## இரண்டாவது
## தலவுற்பத்திச் சருக்கம்

49

சேணுலகந் தாபரித்த செம்பொன் மேருச் சிகரிநிகர் இரசிதவெண் கயிலை மேவுந், தாணுவருள் பிரியாத பரமா னந்தத் தவமுனிவர் நிறைந்திருந்த சபையி னுப்பண், நீணுதி சேர் சுரிகைபிரம் பிருகை யேந்தி நெற்றிவிழி பெற்றதிற னந்தி சேவை, காணுமெதி ரருகிருந்த சனற்கு மாரர் கண்ண ருவி யநுபூதி கழிந்த காலை.

(இ-ள்) ஆகாயத்தையளாவி மேலுயர்ந்த சிவந்த பொன்மய மான மகாமேருமலையை யொத்த வெள்ளிய கயிலைமலையைப் பொருந்திய சிவபெருமானுடைய திருவருளைவிட்டு நீங்காத பரமா னந்தத்தை அநுபவிக்கும் தவத்தையுடைய முனிவர்கள் கூடியிருக் கும் சபைநடுவிலே நீண்ட நுனியையுடைய உடைவாளையும் வேத்தி ரப்படையையும் இருகாங்களிலும் ஏந்தியவரும் நெற்றிக்கண்ணை யுடையவரும் ஆகியதிருநந்திதேவரைத்தரிசித்து எதிரில்அருகிலே யிருந்த சனற்குமார முனிவர் ஆனந்தக்கண்ணீர் அருவியாகச் சோர அது நீங்கிய அளவிலே. (எ-று) 1

50

நந்தியே முந்துகண நாதர்க் கெல்லா நாயகமே தூயகதி நல்குந் தானந், தந்தியே துணைபுரிந்த முருகர் கூறத் தவமிகைந்த பெருந்தகைநீ கேட்ட தன்மை, புந்தியே சிறியேற்கும் புகன்று பின்னும் புக்கொளியெம் மவிநாசிப் பொருவிருனத், தந்தியே திகழுநிறத் தம்மான் கொண்ட வருச்சனையே முதலவிரித் தருள்செய் கென்றான்.

(இ-ள்) திருநந்திதேவரே! முற்பட்டுவிளங்கும் கணநாதர்களுக்கெல்லாம் தலைவரே! பரிசுத்தமான முத்தியைக்கொடுக்கும் தலம், விநாயகமூர்த்தியின் துணைவாகிய முருகவேள் அருளத் தவத்தையுடைய பெரியீராகிய தேவரீர் கேட்டபடி அத்தன்மையைச் சிற்றறிவுடைய எனக்கும் சொல்லியருளுக. மற்றும், திருப்புக்கொளியூர் அவிநாசியில் அந்திவண்ணாகிய சிவபெருமான் கொண்டருளிய அருச்சனை முதலிய வரலாறுகள் எல்லாவற்றையும் விரித்தருளுக என வேண்டுவாராயினர். (எ-று) 2

51

அன்னவுரை கேட்டருளி நந்திதேவ னமரர்தொழற் குரியசனற் குமர கேட்டி, முன்னமுயர் கதியாய பொருளை யார்க்கு மொழிபகர வரிதெனவச் சுருதி யாய்ந்த, நின்னருளா லுயர்ந்தவர்க்கு நியதி யுண்டோ நீர்மைபெறு போதகநீ நிகழ்த்து கேள்வி, என்னளவோ மன்னுயிர்க டுயர நீங்கி யிகலோக பரலோக மெய்தற் கென்றான்.

(இ-ள்) அவ்விண்ணப்பத்தைக் கேட்டருளியதிருநந்திதேவர் தேவர்கள் யாவரும் தொழுதற்குரிய சனற்குமாரனே! கேட்பீராக மிகவுயர்ந்த பொருளாகிய மோக்ஷமானது எவர்க்கும் சொல்லுவதற்கு முடியாததாகும் என்று கூறச் சனற்குமாரர் மீட்டும் (வணங்கி)வேதசிவாகமங்களையெல்லாம் விரோதமின்றி ஆராய்ந்து பொருளொருமைகண்ட தேவரீருடைய அருளைப்பெற்றோருக்கு நியதியுண்டோ? பெருந்தகைமையுடைய ஆசாரிய மூர்த்தியே! தேவரீர் அருளிச்செய்வது அடியேனுக்கு மட்டுமன்றி ஆன்மாக்களெல்லாம் பிறவித்துன்பத்தினின்று நீங்கி இம்மை மறுமைப்பயனை எய்தியுய்வதற்கு ஆம் என விண்ணப்பம் செய்தார். (எ-று) 3

52

மாதவர்கள் பரவுபுகழ் நந்திதேவன் மன்னுசனற் குமர முனி வதன நோக்கி, வேதவழி யிற்சகலா கமசீ லத்தின் மெய்த்தபுரா ணத்தொகையின் மிகுகாந்தத்தில், ஆதரவார் சிவமகான் மியகாண் டத்தி லறுபதின்மே லோதுமத்தி யாயந் தன்னில், நீதகலு மாநிலத்தி லுயர்வுற் றோங்குந் திருவவிநா சிப்பெருமை செப்பு மாதோ.

(இ-ள்) மிக்க சிவபுண்ணியமுடையவர்களால் துதிக்கப்படும் புகழையுடைய திருநந்திதேவர் சனற்குமார முனிவரைப்பார்த்து வேதசிவாகமங்களின் உண்மையான பதினெண் புராணங்களுள் மேம்பட்ட மகாஸ்காந்த புராணத்திலே சிறந்த அன்பு நிறைந்த சிவமகாத்மிய காண்டத்தில் உள்ள அறுபது அத்தியாயங் களுக்குமேலாகச் சொல்லப்படும் அத்தியாயங்களில் குற்றமற்ற நிலவுலகத்திலே மேம்பாடுற்று விளங்கும் திரு அவிநாசி என்னும் க்ஷேத்திரப் பெருமை சொல்லப்படும். (எ-று) 4

53

சீதநெடுங் கடலாடை யுடையாய் மல்கத் திண்சிகரி குயதடத்தின் சிறப்புற் றோங்கப், பேதமக ருருவன மளக மாகப் பேரியா றுத்தரியம் பிறங்கா நிற்கும், பூதலமின் மாத வனைப் புணர்ந்து பூத்த பூமகனை யுற்பவித்துப் பொருந்து போழ்தில், வேதமொழி யுபநிடத முதித்தல் போன்ற மிக்க திருப் புக்கொளியின் விளக்கஞ் சொல்வாம்.

(இ-ள்) குளிர்ச்சி பொருந்திய கடல் ஆடையாகவும் வலிய மலைகள் தனபாரங்களாகவும்- தருக்கள்பொருந்திய வனம் கூந்தலா கவும், பெரியயாறுகள் மேலாடையாகவும் உடைய பூமியாகிய பெண் மாதவனாகிய விஷ்ணுமூர்த்தியை அணைந்து பிரமதேவரைப் பெற்று உலகங்களைப் படைக்கும் காலத்திலே வேதஉபநிடதங்கள் தோன்றியது போன்று தோன்றிய மேலான திருப்புக்கொளியூரின் பெருமையைச் சொல்லுவோம். (எ-று) 5

54

அந்தரமு மாருதமு மனலு நீரு மம்புவியு மும்பர்முத லுயிர்கள் யாவுந், தந்திரமு மந்திரமும் பதமும் பேறுஞ் சகல முமா யொருமுதல்வ னளவில் காலம், ஐந்தொழிலு மளந்த ளிக்குமியக்க மாற வணுக்களுமோ பிறந்திறக்குமயர்வு தீரப் பந்தமுறு பிரளயசங்கார மென்னும் பாதகடத் தொரு பொழுது கருணை வைத்தான்.

(இ-ள்) ஆகாயமும் வாயுவும் தீயும், நீரும் நிலமும் தேவர்கள் முதலிய உயிர்கள்யாவும் கிரியைகளும் மந்திரங்களும் பதமுத்தியும் பரமுத்தியும் ஆகிய எல்லாப் பொருள்களுமாய் வேறறநிற்கும் ஒப் பற்ற முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் எல்லையில்லாதகாலங் கள் படைத்தல்,காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்என்னும் ஐந்தொழில்களையும் ஆன்மாக்களுடைய கன்மத்துக்கு ஈடாக உப காரமாகக் கொடுக்கும் தநுகரணபுவன போகங்களின் தன்மை மாறுதலடையும் பொருட்டும் ஆன்மாக்கள் பிறந்திறந்துழலும் அயர்ச்சி கெடவும் உயிர்களுக்கு மீட்டும் ஐந்தொழிலை நடத்தும் படிக்குப் பிரளய சங்கார மென்னும் திருவிளையாடலைச் செய்யத் திருவுளங்கொண்டருளினார். (எ-று) 6

55

மேற்றிசை யிலாற்றல்புரி வருணவேந்தை வேதாந்தச் சோதி கடைவிழி யாற் காட்டப், போற்று புயலேழு மொரு தன்மை சார்ந்து புணரியுண்டு சூலுளைந்து பொருமல் போர்த்து, கீற்றொளி சேர்மின்பரந்து பின்பொருது கேசாங் கள திரவிடித்திருண் மேற் கொண்டு, தூற்றுது ளிவேழ மெனத்தாரை கான்று தொலைவொழிந்து சிலகாலஞ் சொரிந் தவன்றே.

(இ-ள்) மேற்றிசைக்குத் தலைவனாகிய வலிய வருணராசனை வேதாந்தத்திலே தோன்றும் சோதி சொரூபராகிய சிவபிரான் கடைக்கணித்தருள யாவரும் துதிக்கின்ற சப்தமேகங்களும் ஒரு சேரச்சேர்ந்து கடல்நீரைக் குடித்துக் கருக்கொண்டு முற்றி கோடு போல் ஒளிவிடுகின்றமின்னலைவீசிச் சிங்கங்களும் நடுங்கப் பேரிடி முழக்கம் செய்துஇருண்டு, யானைத் துதிக்கையினை யொத்தமழைத் தாரைகளைச் சொரிந்து நீங்காமல்சிலகாலம் பொழிந்தன. (எ-று) 7

56

எழ்கடலு மேழ்புவியுமே ழுதீவு மெண்கிரியு மெண்டி
சையு மெண்ணில் யாவுஞ், சூழ்முதுநீர் பரவலுறு மந்நாளிற்
றோணிபுரம் புடைமிதப்ப விடையூர்மற்று, மூழ்கிவிடா நிலை
களையும் பாதுகாத்து முத்தனைய மூரலுமை முயன்று காணப்,
பேழ்ககன மூடுருவப் புன்னமேனின்று பிரளயதாண்டவ
நவின்றான் பெம்மானெம்மான்.

(இ-ள்) சப்தசாகரங்களும் ஈரேழ்பதினாலுலகங்களும் சப்த தீவுகளும் எட்டுத்திக்குகளும் ஆகிய அளவிறந்த எல்லாம் பிரளய வெள்ளத்தால் மூடியகாலத்தில் தோணிபுரம் என்னும் சீகாழிப்பதி மிதக்க நடுவிலே உள்ள ஊர்களையும் மூழ்கிவிடாதபடி அவைகளைப் பாதுகாக்கும் பொருட்டாக முத்துப்போன்ற பற்களையுடைய உமையம்மையார் காணப் பெரிய ஆகாயம் ஊடுருவும்படி அப் பிரளய வெள்ளத்திலே நின்று எம்பெருமான் பிரளயதாண்டவம் செய்தருளுவாராயினர். (எ-று) 8

57

தோடலர்ந்த கொன்றையந்தா ரசைவுறுது தொன்மை
தரு கதிபேணிச் சுபயோ கத்தி, லாடல்புரி யும்பொழுது
முதுபே ரண்ட மசைவுதர வெவ்வுயிர்க்கு மாதி நாதன்,
பாடலொடு தாளமுதற் கருவி சேர்ந்த பரிசனமு மாகிநின்று
பாதஞ் செய்தா, லேடலர்ந்த மலரோனு மவன்பிதாவு மெண்
ணரிய பதங்களுமற் றென்படாவால்.

(இ-ள்) இதழ்கள் விரிந்த கொன்றை மலர்மாலை அசையாமல் பழமையாகிய கதியை விரும்பி இறைவன் சுபயோகத்தில் ஆடல் புரியும் காலத்து பழையதாகிய பேரண்டங்கள் அசைய எல்லாவுயிர் களுக்கும் உயிர்க்குயிராக விளங்கும் உயிர்த்தலைவன்பாடல் இசைக் கருவிகள் சேர்ந்த பரிசனம் ஆக நின்று நடனம் செய்தால் பிரம தேவரும்,விஷ்ணுமூர்த்தியும் எல்லையில்லாத பதங்களில் உள்ளவர் களும் என்னபாடு படமாட்டார்கள். (எ-று) 9

58

அந்நட முற்றியபின் கருணைபூத்த வாடகபா டகவடி யாள் வதனம் பாரா, நந்தமது பாதவித்தை யறியநீயு நாமுமல திலையென்று நவின்று மேலுஞ், செந்தழனு டகமுளதொன் றியற்றல் வேண்டுஞ் சேயிழைநீ பொறுக் கரியை குடிலை யென்று, முந்துபிர ணவநிலைபோய் வருதியென்று மொய் குழற்கு விடைகொடுத்தான் முக்கண் மூர்த்தி.

(இ-ள்) அப்பிரளயகால தாண்டவமுடிந்தபின்னர் கருணையே வடிவாகவுள்ள பொன்னாலாகிய பாடகத்தையணிந்த அம்மையா ரைத் திருக்கண் சாத்தி நமது பாத வித்தையை யறிந்து மகிழ நீயும் நாமும் அல்லாது வேறொரு பொருளுமில்லை எனத்திருவாய் மலர்ந்து மேலும் இனிச் செந்தழல் நாடகம் இயற்ற வேண்டும். அந்த நாடகம் உன்னாலும் தாங்குதற்கரியது. ஆதலின் நீ பழமை யாகிய பிரணவத்துளடங்கித் தோன்றுவாயாக என நெருங்கிய கூந்தலை யுடைய அம்மைக்கு விடை கொடுத்தருளினார் முக்கண் களையுடைய சிவபெருமான் (எ-று) 10

59

மன்னுபிரா னழலோனை யருளாற் றாண்ட மறிகடலி னுட்கிடந்த வடவைச் செந்தீ, பன்னரிய சுடர்கொளுவு மெழுநா வோங்கிப் பாங்குபெறுந் திசைதொறுந் தேங்கி

நின்று, முன்னமுயர் பிரளயத்தைப் பருகிப் பின்னு மூவுலகு
மேவியொக்க முனிந்து தாவி, யுன்னதமார் ககனவெளியுள்ள
வெல்லா முராம்பயின்ற தழற்பிழம்பாய் நிரம்பிற் றன்றே.

(இ-ள்) நிலைபெற்ற சிவபிரான் அக்கினிதேவனை நோக்கித் திருவருள் செய்து ஆணையிட அலைகளையுடைய கடலினுள் அடங்கியுள்ள வடவாமுகாக்கினி சொல்லுதற்கரியசுடரைவீசும் எழுகாக்குகளையும் நீட்டி எல்லாத்திசைகளினும் தேங்கி நின்று மேம்பட்டு முன்னரே விளங்கும் ஜலப்பிரளய வெள்ளத்தைத் தன்னுள்ளே சுவறச்செய்து பின்பு மூன்று உலகங்களிலும் தாவிக் கோபங் கொண்டு மிக உயர்ந்த ஆகாய வெளி முழுவதும் பாவி வலிய அக்கினிப் பிழம்பாய் நிறைந்தது (எ-று) 11

அழலோன்-அக்கினி. முனிந்து-கோபித்து. ககனம்-ஆகாயம். உரம்-வலிமை.

60

அத்தழலே யெழில்கொடிரு வடிவமாகி யவணியங்கள் பலவகுத்துப் பகுத்தாராய்ந்து, சுத்தவித சங்கார நடனஞ் செய்தான் றேற்றமெலாந் தனதிடமா யொடுங்கியாவு, மொத் தபரி சேநிறைந்து கதிர்க டாமு முடுபதமு மிணையறுமூ வகையான் மாவு, மெத்தகைய வினைகளுமங் கசைவு றுமே யிலங்குபர சிவமயமா யிருந்த வன்றே.

(இ-ள்) அந்த ஊழிப் பெருந்தீயே அழகு பொருந்திய திருமேனியாக அங்கே பலவித வாத்திய கோஷங்களையும் உண்டு பண்ணி சுத்தசங்கார நடனத்தை இறைவர் செய்தருளினர். படைப்புப் பொருள்கள் எல்லாம் சங்காரகாலத்திலே தம்மிடமாக ஒடுங்கி, எல்லாம் ஒத்த தன்மையாக நிறைந்து, சூரிய சந்திரர்களும் நட்சத்திரங்களும், ஒப்பற்ற விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னும் மூவகை ஆன்மாக்களும், எப்படிப்பட்ட வினைகளும் அசைவில்லாமல் விளங்கும் சிவமயமாக இருந்தன. (எ-று) 12

இயங்கள்-வாத்தியங்கள். கதிர்கள்-சூரியசந்திரர். உடுபதம்-நட்சத்திரமண்டலம்.

61

இவ்வகைய செயல்பயின்ற யாமந்தன்னி லெல்லாமு
மிறந்தொழிந்த வீமக் கானி, லவ்வயன்மா லென்பெடுத்துத்
தொடுத்துக் கோவை யணிகொடிரு வாபரண மாகப்பூண்டு,
திவ்வியமார் வெண்பொடிசெம் பவளமேனி திகழவணிந் தற்
புதமாந் திருக்கூத் தாடிற், றவ்வலுறு தெதிர்போற்றவொருவ
ருண்டோ தன்னைத்தா னேமகிழ்ந்தான் றனையொப் பில்லான்.

(இ-ள்) இத்தகைய சங்காரத்தைச் செய்து [ஆன்மாக்களின் பிறப்பிறப்புத் தொழில்களால் உண்டாகிய இளைப்பை ஒழிக்கும்) நள்ளிரவிலே எல்லாம் இறந்தொழிந்த சுடுகாட்டிலே பிரமர் திருமால்களின் எலும்பைத் தொடுத்து மாலையாகச் செய்து அணிகலமாகத்தரித்துக்கொண்டு ஞானமயமாகியவிபூதியைச் சிவந்த பவளமேனியிலே விளங்கப் பூசிக்கொண்டு ஞானத்திருக்கூத்தைச் செய்தருளுங்காலத்திலே அத்திருக்கூத்து தரிசனத்தை நீங்காது எதிரேகாண எவர்தானுண்டு; எவருமில்லையாக, தனக்கொப்பாரு மிக்காரு மில்லாத சிவபெருமான் தாமே மகிழ்ந்து கொண்டு ஆடியருளினர். (எ-று) 13

62

அந்நாளி லந்திநிற நந்தி நாத ஞடலொழிந் தமைதியுற
வமர்ந்த காலை, முன்னுதி பிரணவத்தி னூடு போந்த மோன
பரா சத்திசிவ மோக மாகித், தன்னுவன் மிருதியுடனடைந்து
தேடித் தலைவனையே காணமை விழிநீர் மல்கி, யுன்னுது
தனிப்புலம்பிச் சுடலைதோறு முலாவினு ளோரெழுத்தி
னோசை யோங்க.

(இ-ள்) அக்காலத்திலே அந்திவண்ணராகிய சிவபெருமான் தமது ஆடலினின்று நீங்கி அமைதியுற இருந்தார். முன்பு பிரணவ

வடிவத்திலே கலந்தோன்றிய மோனவடிவாகிய பராசத்தியானவர் சிவமோகமாய் மிக்க ஆவலுடன் தலைவனைத் தேடியும் காணப் பெறுமல் கண்ணீர் பொழிந்து, தனியே புலம்பி அந்தச் சுடுகாடு முழுவதும் ஓங்கார சத்தம் மேம்பட்டு விளங்கத் தேடி உலாவு வாராயினர். (எ-று) 14

63

ஆங்கவணே டியகாலை யாதிநாத னாரணங்கே யஞ்ச லென வபய மீந்து, பூங்கமலக் கரதலத்தைச் சென்னி சேர்ப் பப் பொன்னடித்தா மரைபரவிப் புலம்பறீருந், தேங்கருணை யுமையவளை யமையா வின்பச் சிறுமுறுவல் புரிந்தெவையும் படைத்தல் வேண்டிப், பாங்குபெறு மிடப்பாகத் தணைக்க யோக பரநாத பரவிந்து பயின்ற பண்பால்.

(இ-ள்) பராசத்தி அங்கே ஆவலுடன் தேடுங்காலத்திலே பர சிவன் பராசத்தியை நோக்கி பெண்ணே அஞ்சாதே என அபயங் கொடுத்துத் தாமரைப்பூப்போன்ற திருக்கரத்தை அச்சத்தியின் சிரத்திலே வைத்தருளப் பொன்போன்ற திருவடித்தாமரையை வணங்கித் தமது புலம்பல் தீர்ந்த இனியகருணைவடிவாகிய உமா தேவியாரைப்பார்த்து நீங்காத புன்சிரிப்புச் செய்து உலகத்தைப் படைத்தருள விரும்பிச்சிவபிரான் அவரைத்தமது இடதுபாகத்து அணைத்தருளஅச் சிவயோகத்தால் பரநாத பரவிந்துகள் தோன் றின (எ-று) 15

64

உய்யவரு ளுதவுசதா சிவன்ம கேச னுருத்திரன்மா லய னடைவே யுதய மாக்கிச், செய்யும்வினை யைந்துமவ ரவரா லாற்றிச் சிருட்டியெலா முன்பயின்ற செய்கை செய்து, வைய மிசைச் சிவலிங்க மிடமா நின்று மன்பதையாற் பூசைகொளக் கருணை கூர்ந்து, மெய்யிலகு துய்யகங்கை புடைசூழ் காசி மேவியிடங் கொண்டமர்ந்தான் விசுவநாதன்.

(இ-ள்) பின்பு ஆன்மாக்கள் உய்யும் பொருட்டுத் திருவருள் செய்யும் சதாசிவரும், மகேசுரரும், உருத்திரரும், திருமாலும், பிரமதேவரும் ஆகிய இவர்களைத் தோற்றுவித்து முறையே அநுக்கிரகம், திரோபவம், சங்காரம், ஸ்திதி, சிருஷ்டி முதலிய ஐந்தொழில்களையும் அவரவரால் இயற்றுவித்து முன்போலவே சிருட்டியைச் செய்து நிலவுலகிலே சிவலிங்கத்தினிடமாக எழுந்தருளியிருந்து ஆன்மாக்கள் செய்யும் பூசையை ஏற்றுக்கொண்டு அவைகளுக்கு அநுக்கிரகம் பண்ணத் திருவுளங்கொண்டருளி மெய்ம்மையாகவே பரிசுத்தமாக விளங்கும் கங்காநதியால் சூழப்பட்ட திவ்விய க்ஷேத்திரமாகிய **ஸ்ரீ காசியம்பதி** யைப் பொருந்தி **'விசுவநாதர்'** என்னும் திருநாமத்துடன் சிவபிரான் விரும்பி அங்கே எழுந்தருளுவாராயினர் (எ-று) 16

65

மங்கலமா கியதலத்திற் கங்கை யூடு வாரணவா சியும் புகுந்து மருவு நீராற்,
பொங்குகடல் சூழகில புவன மீன்ற பொற்கொடிபூ சனைதெரிந்து புரிந்த பின்னர்,
திங்களணி வேணியனைப் பரவி நோக்கிச் சிறியேன்முன் னினைப்பிரிந்த வெளிமை தீரச்,
சங்கையின்மா தவஞ்சிலநாளியற்றல் வேண் டுந் தருமொரிடம் பூதலத்திற் சாற்று கென்றாள்.

(இ-ள்) (அதன்பின்னர்) சிவமாந்தன்மைப் பெருவாழ்வை யளித்தருளும் ஸ்ரீகாசியில் கங்காநதியுடன் வாரணவாசியும்சேர்ந்து விளங்கும் தன்மையால் அதிகரித்தகடலால் சூழப்பட்ட எல்லாவுலகங்களையும் பெற்றருளிய பொற்கொடிபோன்ற உலகமாதாவாகிய உமாதேவியார், சிவாகமங்களை ஆராய்ந்து தெளிந்து அவ்விதிப்படி விசுவநாதரைப் பூசனை செய்தருளி சந்திரனை யணிந்த சடையையுடைய சிவபிரானைத்துதித்து நோக்கி எளியேன் முன்பு தேவரீரைப் பிரிந்திருந்த சிறுமைதீரச் சில நாட்கள் குற்றமில்லாத மாதவம் செய்ய வேண்டும் ஆகலின் அதற்குத்தகுதியான ஓர் இடத்தைப் பூவுலகத்தில் தெரித்தருளுக என வேண்டுவாராயினர் (எ-று) சங்கை-குற்றம். 17

66

வேதமுடி வானபிரான் மூரல் காட்டி வெற்பணங்கே நின்பரிவு மேன்மை காணென், றுதரவா லணிகுலவு மளக நீவி யம்பவளத் திருவாயா லருளிச் செய்தா, னேதமிலா மாதவத்திற் கியைந்த தான மெல்லைபல வும்புதுமை யெவை யுங்கேட்டுக், காதலணங் கியர்மருவக் கணங்கள் சூழக் கனகவிமா னத்தில்வந்தாள் கருணைச்செல்வி.

(இ-ள்) வேதங்களின் சிரசாகிய உபநிடதங்களால் எடுத்துச் சொல்லப்படும் பரம்பொருளாகிய சிவபிரான் புன்முறுவல் செய்து உமாதேவியாரைப்பார்த்து, மலைமகளே! உன் அன்பின் பெருமை காண் என்று திருவருள் சுரந்து அழகுவிளங்குகின்றஅம்மையாரின் கூந்தலைத்தடவி அழகியபவளம்போன்ற திருவாய்மலர்ந்தருளி னார். பின்பு குற்றமில்லாத சிறந்ததவத்தைச் செய்தற்குரிய இடம் எல்லை முதலிய பலவற்றையும் கேட்டு விருப்பத்தையுடைய சேடி யர் புடைசூழக் கணங்களும் சூழ்ந்துவரக் கருணைவடிவாகிய அம் பிகை பொன் விமானத்திலே எழுந்தருளி வந்தார். (எ-று) 18

மூரல்—புன்சிரிப்பு. வெற்பணங்கே—மலைமகளே. அளகம்-கூந் தல். ஏதம்—குற்றம். கனகம்-பொன்.

67

மிருந்தபரா பரவனிதை தவங்கை கூட மென்சரணந் தோய்ந்ததவ மேன்மை கூறிற், றருந்தழலின் வடிவாகி யேக நாதன் சங்கார தாண்டவமா தரித்த ஞான்று, முகுந்த னயன் முதலான மூர்த்தி பேத முப்பான்மேன் முக்கோடி முற்றுந் தன்பாற், புகுந்தொளித்த தானமிதென் றருள்கை யாலே புக்கொளியென் றுயர்நாமம் பொலியு மன்றே.

(இ-ள்) மேம்பட்ட பாசிலை செய்த தவம்முற்றுப் பெறுதற் குத்திருவடி தோயப்பெற்ற அத்தலப் பெருமையைக்கூறின் சிறந்தழற் பிழம்புவடிவாகி ஒப்பற்ற பரம் பொருளாகிய சிவ

பெருமான் சங்காரதாண்டவத்தைச் செய்தருளிய காலத்திலே விஷ்ணு மூர்த்தி பிரமதேவர் முப்பத்துமுக்கோடி தேவர்கள் முதலிய யாவரும் தம்மிடத்துப் 'புக்கு ஒளித்த தானம்' இதுவாம் என்று இறைவர் கூறியருளியமையால் புக்கொளியூர் என்று இத் தலம் சிறந்தபெயரைப் பெற்றது. (எ-று) 19

ஞான்று-பொழுது.

68

சோதியயில் புக்கொளியாய் மன்னுந்தானந் துன்னு பெயர் பின்னுமொரு தன்மைத் தாகு, மாதிபர னற்புதக்கூத் தாடல் கூர்ந்த வானந்த வதிசயமிங் ககலா வாகி, மீதிலொரு காலமொரு வேலை யேனும் வெய்யவிநா சம்பொருந்தா மேன்மைத் தாலே, நீதிலநு பூதிசிவ நீதிசாருந் திருவவிநா சித்தலமாய்த் திகழு மாதோ.

(இ-ள்) பிரகாசம்பொருந்திய 'புக்கொளி'யூர் என்னும் பெயருடன் விளங்கும் இத்தலம் வேறொருபெயரையும் பொருந்தும். அது முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் அற்புதக் கூத்தாகிய ஞானமாநடனத்தைச் செய்து பரமானந்தத்தை விளைவிப்பதாகிய அவ்வதிசயம் நீங்காத தன்மையுடனே விளங்கி எக்காலத்தும் எக்காரணத்தும்வெய்ய அழிவுநேராமையாலே குற்றமில்லாத சிவாநுபூதியும் சிவநீதியும் பொருந்தும் திருஅவிநாசி யென்னும் பெயராய் இத்தலம் விளங்கும். (எ-று) 20

69

அங்கிலை சூழ்ந் துளதாரங் கன்னி காரமாரிதழி பாடலந்தண் வகுளஞ் சூதம், பன்னிய நீண் மாதுளஞ் சண்பக மந்தாரம் பஞ்சவில்வ தாருவடர் பைம்பூங் காவின், மன்னு தளிர் மாதவிசூழ் கொம்பர் தோறு மருவியவா றிருதுவினு மலர்க ணோங்க, வின்னிசைகள் பயில்கால விடர்க டீர விரங்கு மல கரியைமது கரங்கள் பாடும்.

(இ—ள்) அத்தலத்திலே சந்தனம். கோங்கு, ஆத்தி, கொன்றை, பாதிரி, குளிர்ந்த மகிழ், மா, சொல்லப்படும் நீண்டமாதுளை, சண்பகம், மந்தாரம், பஞ்சவில்வம் முதலிய மரங்கள் அடர்ந்துள்ள பூங்காவிலே நிலைபெற்ற தளிர்களுடன் கூடிய குருக்கத்தியினால் சூழப்பட்டுள்ள கிளைகளிலெல்லாம் ஆறு இருதுக்களிலும் மலர்கள் மலர இனியஇசைகளைப்பயிலும் வண்டுகள் காலத்தாலுண்டாகுந் துன்பம்நீங்க மலகரிராகத்தைப்பாடித் திரிவனவாம். (எ-று) 21

கன்னிகாரம்-கோங்கு. பஞ்சவில்வமாவன: வில்வம் கொச்சி, விளா, கிளுவை, மாதவி என்பன. மாதவி—குருக்கத்தி.

70

நத்திலகு நித்திலநீ ரோடை சார்ந்த நலஞ்செறியு மிலஞ்சியிடை நளினக் காடு, மொத்தவன வாரணமு மயிற்கு ழாமு மோதிமசா திப்பெடையு முழையின் கன்றுஞ், சுத்த மொழிச் சாரிகையுங் குயிலுந் தூய சுந்தரசந் தனக்கிளியுந் துதைந்து சூழ, மித்தகைய திறனனைவையுந் திருக்கண் சாத்தி யினிதுபெறக் கருணைசெயு மெம்பிராட்டி.

(இ—ள்) சங்குகளில் விளங்கும் முத்துக்களையுடைய நீரோடைகள் பொருந்திய நன்மை மிகுந்த குளங்களிலெல்லாம் தாமரைக் காடுகளும், கானங்கோழியும், மயில்களின் கூட்டமும், அன்னப் பேடுகளும், மான்கன்றுகளும், தூயமொழிகளையுடைய நாகணவாய்ப்புட்களும், குயில்களும், அழகிய கிளிகளும் நெருங்கியிருக்கும் இத்தன்மைகளையெல்லாம் பார்த்தருளிஉமாதேவியார் அந்தச் சோலையில் அன்புவைத்தார். (எ—று) 22

நித்திலம்—முத்து; இலஞ்சி-குளம்; நளினம்-தாமரை; சாரிகை —[நாகணவாய்ப்புள் எனப்பொருள்செய்யப்பட்டது]

71

தவமுனிவர் சடிலமெனத் தளிர்க ளொன்று தவளநீ
றெனமலர்ந்து மறைவண் டார்த்துப், புவனமுறை பதமென
வேர் படர்ந்து நீடிப் புண்ணியமே பணைத்தறங்க டழைத்
துப் போந்து, பவமகலும் பரபோகம் பழுத்து மேலாம் பத
வியெனும் பேரின்பம் பயின்று ஞானத், திவலைபெறு மாநந்
தக் கண்ணீர் மல்கிச் சிவமணமாய் நின்றுளது தேமர்
வொன்று.

(இ—ள்) தவத்தையுடைய முனிவர்களுடைய சடையைப்
போன்று விளங்கும் சிவந்த தளிர்களைத் தோற்றி, வெண்ணீறு
போல மலர்கள் மலர்ந்து. வேதம்போல வண்டுகள் ஒலித்து, புவ
னங்களில் தங்கும் பதவிகள்போல வேர்கள் படர்ந்து நீண்டு புண்
ணியமே கிளைத்தாற்போலக் கிளைத்து, தருமம் தழைத்தாற்
போலத் தழைத்துப்போய், பிறவிநீங்குவதற்கு ஏதுவான பரபோக
மானது பழுத்தாற்போலப் பழங்களையுடையதாய், மேம்பட்ட முத்
தியைப் போலப் பேரின்பத்தைத்தந்து, ஞானத்துளிபோல ஆனந்
தத்தைத்தரும் கள்ளாகிய நீர் நிறைந்து, சிவமணம்போல மணம்
வீசி விளங்கும் தேமாமரம் ஒன்று அப்பூங்காவிலே நிலைபெற்றுள்
ளது. (எ-று) 23

72

போதலர்ந்த பஞ்சவில்வத் தருகு சார்ந்த புடைபெறு
பச் சிமதிசைக்கே நிற்றல் கண்டங், கோதலருங் காஞ்சி
வனத் தரைக்கால் போற்றி யொருமாவே காணிபெற்ற
வுவகை யல்லான், மேதகைய விவ்வனத்துங் கிடைத்த
வென்றன் மிகுதவப்பே றெனவுருகிக் களிமேற் கொண்டு,
நாதமணிச் சிலம்பலம்ப மலர்த்தா ளொல்க நடந்தருளி
யருகி னின்ருண் ஞானச் செல்வி.

(இ—ள்) அரும்புகள் மலர்ந்த பஞ்சவில்வமரங்களின் சமீபத்
தில் பொருந்திய மேற்குத்திசையிலே நிற்றலைக்கண்டு சொல்லுதற்
கரிய காஞ்சிபுரத்தலத்திலே வீற்றிருக்கும் சிவபிரானுடைய திரு

வடிகளை வணங்கி ஒருமாமரத்தின் அடியையே காணியாகக் கொண்ட மகிழ்ச்சியே யல்லாமல் மேம்பட்ட இவ்வனத்திலும் அது கிடைத்தது என்னுடைய மிக்கதவத்தின் பயனேயாம் என்று மனம் உருகி மனக்களிப்படைந்து நாதமாகிய மணிகளையுடைய சிலம்புகள் ஒலிக்க மலர்போன்ற திருவடிகள் அசைய நடந்து ஞானவடிவாகிய உமாதேவியார் அதனருகில் நின்றருளினள்.

(எ—று) 24

73

தடமார நின்றுளவச் சூத நீழற் றுதுகுத்த வேதிகையின் றவிசின் மேவி, யிடமாரு மம்புயவா தனத்தின் வைகி யிலங்குதவக் கங்கணங்கை யிலகச் சாத்திப், புடமாருங் கற்பவிதித் தவளநீறு புண்டரமா நுதலணிந்து பொன்னூற் கோவை, வடமாருந் தரளமணி புரளத்தாங்கிவாய்ந்தமலர்க் காந்தளங்கை விரலான்மாறி.

(இ—ள்) மிகவிசாலமாகவுள்ள அந்தமாமர நிழலிலே மகரந்தப் பொடிகள் சிந்திய மேடையில் ஆசனத்தில் அமர்ந்து, பத்மாசனத்திலேயிருந்து, விளங்கும் கங்கணத்தைக் கையில்கட்டி, கற்பவிதிதவறாத வெண்மையான விபூதியைத்திரிபுண்டரமாக நெற்றியிலணிந்து, பொன் நூலிலே கோத்த முத்து வடத்தைத் தொங்கத்தாங்கி, பொருந்திய காந்தள் மலர் போன்ற கைவிரல்களால் மாறி [எ—று] 25

விபூதி-கற்பம், அநுகற்பம், உபகற்பம், அகற்பம் எனநான்கு வகைப்படும்.

74

உருவேறு செபமாலை யசைவ தல்லா லொண்பவளக் கனிவாயு மொளிரு நாவுந், திருவேறு மணிமிடறு மசைத லின்றித் தேங்கருணைத் திருவுள்ளக் கமலப் போதிற், கருவேறு புரியுமெழுத் தைந்து மூன்றுங் கதிபயின்ற விதிமுறையே கவின வேற்றி, யருவேறு தனியொளியாய் வெளியாய் ஞான வாநந்த பரவசமா யமர்ந்த தாகி.

(இ—ள்) மந்திரசெபம் பண்ணும்போது உருவேற்றும் செபமாலையானது அசைவதையல்லாமல் ஒளிபொருந்திய பவளம் போன்ற கனிவாயும், விளங்கும் நாக்கும் அழகுமிக்க கழுத்தும் அசையாமல் உட்கார்ந்து இனிய அருளோடுகூடிய மனத்தாமரையிலே பிறவியை வேருக்கும் பஞ்சாக்கரத்தையும் வாசிகம், மானசிக முறையிலே நன்ருக உருவேற்றி விதிப்படியே அருவாய் ஒப்பற்ற ஒளிப்பிழம்பாய், ஞானகாசமாய், ஞானனந்த பரவசத்துடன் வீற்றிருப்பதாய். (எ—று) 26

75

சிவயோக நிட்டைதனி லொழுகு மெல்லை தெய்வமடமாதரெலாந் திசைக டோறுங், கவர்வாச மிகுமகிலின் றூபமேந்தக் காமருதண் கருப்பூர விளக்கந் தாங்க, நவநீர்மையாநிலவு கவரி சாய்ப்ப நாகமுறை தேவர்கள்பூ மாரிதூவத், தவமாக வுலகமெலாந் தழைவ தாகச் சகசிரவாண் டினிதமர்ந்தாள் சயிலமாது.

(இ—ள்) சிவயோகநிட்டையைச் செய்து வருங்காலத்து தெய்வப்பெண்கள் யாவரும் திசைகளிலெல்லாம் மனதைக்கவருகின்ற மணமிகுந்த அகிற்புகையைக்காட்டி ஏந்திநிற்க. அழகிய குளிர்ந்த கர்ப்பூர விளக்கை ஏந்த. புதிய வெண்சாமரைகளை மாறி மாறியசைத்து நிற்க, விண்ணுலகத்திலே வசிக்கும் தேவர்கள் மலர் மழை சொரிய, உலகமெல்லாம் ஒருங்கே தவநிலையில் பொருந்தித் தழைக்குமாறு இமயமலையரையன் புத்திரியாகிய பார்வதியார் ஆயிரம் ஆண்டுகள் சிவதவத்திலேயே இருந்துவிட்டாள்.(எ-று) 27

76

சீலத்தான் மிக்கபெருங் கருணைப் பாவை சிலகாலந் தவமுயன்ற செல்வங் காணத், தாலத்தா ருயிர்க்குயிராங் காசி மூலத் தனிவிசுவ சிவலிங்க சயம்பு மேரு, மூலத்தானத்தொருவேர் தென்பா லோடி முடிவினுனி தனிற்கிளைத்து முளைத்துத் தோன்றிக், கோலத்தா லழகியவா ரணவா சிப்பூங் கொழுந்தெனவந் தெழுந்துநிலை கொண்ட தன்றே.

(இ—ள்) மேன்மையான்மிக்க அடியார்கட்கு எளியவாயுள்ள கருணையே வடிவாகிய பார்வதிதேவி சிலகாலம் செய்துவரும் அத் தவச்செல்வத்தைக் காணும் பொருட்டு உலகத்து உயிர்களுக்கு உயிராகவிளங்கும் ஸ்ரீ காசிவிசுவநாதலிங்கமாகிய சுயம்புவினது ஒரு வேரானது தென்திசையைநோக்கி ஓடி முடிவிலே நுனியிலே கிளைத்து முளைத்துத் தோன்றி அழகினாலே வாரணவாசிக்கொழுந் தென உயர்ந்து யாவரும் போற்ற நிலைபெற்றது. (எ—று) 28

77

முத்தருறை காசியுமக் காசிமேவு முழுமுதலு மெழுபு வன மீன்ற மாது, முத்தமமார் தெக்கணபூ மியிலே தோன் று முண்மையெலாம் வண்மைபெற வுணர்ந்து நோக்கித், தத்துதிரை கொண்டுகரை கண்டஞானச் சானுவிமற் றென் செய்வாள் சயம்பு தானத், துத்தரகீழ் பாலேழு தனுர்ப்பா கத்தி லூறுபுனற் கூவமென வுதயஞ் செய்தாள்.

(இ—ள்) சீவன்முத்தர்கள் வசிக்கும் காசியம்பதியும் அக்காசி யில் எழுந்தருளும் பரமசிவமும் பதினாலு உலகமும் பெற்ற பரா சத்தியும் உத்தமோத்தமமாகிய தக்ஷிணபூமியிலே தோன்றும் உண்மைகள் எல்லாம் வளம்பெற ஆராய்ந்து கண்டு அலையினாலே கரையை மோதுகின்ற ஞானமயமாகிய கங்காதேவியும் மூலத் தானத்துக்கு வடகிழக்குத்திசையிலே ஏழுவிற்கிடைதூரத்திலே வந்து, ஊற்றுப்பெருகிவரும் சிறந்த கிணறு வடிவமாகத் தான் அமைந்தாள். (எ—று) 29

78

தேடியுற வந்துதித்த தெய்வக் கங்கைத் தீர்த்தமிட மூர்த்தியெனச் செயல்வே றின்றி, நாடிலது நீடுமவி நாசி மேவு நம்பனருட் கழகாகி யம்பொன் வேணி, சூடியக லாவணியு மாகிமோகர் தொழுமுனிவ ரனுதினமுந் தொலையா தாட்ட, வாடியமஞ் சனமாகி யமுதமாகி யம்புவியிலதிசயமா வமர்ந்த தன்றே.

(இ-ள்) தேடி மிகுதியும் வந்து தோன்றிய தெய்வத்தன்மை யுள்ள கங்கைத்தீர்த்தம், தலம், மூர்த்தி என்னும் மூன்றும் செயல் வேறில்லாமல் ஆராய்ந்தால் அது பெருமை பொருந்திய அவிநாசி யிலே எழுந்தருளும் சிவபிரானுக்குள்ள கருணைக்கு அழகாகி, அழ கிய பொன்மயமான சடையிற் சூடுதலால் அகலாதஆபரணமுமாகி, தேவர்களால் தொழப்படும் முனிவர்கள் நாடோறும் அபிஷேகம பண்ண அபிஷேகசலமும் ஆகி, அமுதமும் ஆகி நிலத்திலே ஆச்ச ரியமாகப் பொருந்தியது. (எ-று) 30

79

தாயான கருணையபி ராமி வாமி தவமுடிந்து நிட்டை பெறு சமாதி நீங்கி, மாயாத பஞ்சவிதழ் வில்வ மாதி வன மலர்கள் பலவெடுத்து வடித்து மேன்மை, யோயாத சிவ கங்கைப் புனலு மேந்தி யுபசார சோடசமு மொழியா தாற்றி, யாயாத முதுமறையா கமநூல் சொல்லு மவ்வழிபூ சனைமுடித்தா ளகிலம் வாழ.

(இ-ள்) எல்லா உயிர்களுக்கும் தாயாக விளங்கும் பெருங் கருணையையுடைய அபிராமி சிவயோகத்தைச் செய்து முடித்துச் சமாதியினின்று நீங்கி அழியாத ஐந்திதழ்களையுடைய வில்வம் முத லாகிய வனத்தில் உள்ள பூக்களைக்கொய்து, வடிகட்டிய மேன் மையான சிவகங்கைநீரையும் ஏந்தி, சோடசோபசாரமும் செய்து ஆராயமுடியாத பழைய வேதசிவாகமநூல் சொல்லும் விதியிலே வழுவாமல் உலகமுழுதும் வாழத் தாமே சிவபூசையைச் செய்து முடித்தாள் [எ-று] 31

80

புக்கொளியா யவிநாசி யாய்மெய்ஞ் ஞான பூரணவா ரணவாசிப் பொருளா யோங்கு, மிக்கசிவ லிங்கத்தே தோற் றஞ் செய்தான் வேணிமிசை யிளம்பிறையுந் துளும்பு நீருங், கொக்கிறகுஞ் சிறுகட் டறுகட் பாம்புங் கோலமுது கூன்மருப்புங் கொன்றைத் தாருஞ், செக்கருறு மிளமாலை நிறமும் வாய்ந்த தேவர்கடஞ் சிரமாலை யழகு தேங்க.

[இ—ள்] புக்கொளியாகியும் அவிநாசியாகியும் மெய்ம்மையான சிவஞானபூரணமாகியும் வாரணவாசிப் பொருளாகியும் உயர்ந்து மிக்க சிவலிங்கத்திலே தோற்றபசெய்தார். தமது சடாபாரத்திலே இளம்பிறைச்சந்திரனும், அசையும் கங்காசலமும் கொக்கிறகும், சிறிய கண்ணையுடைய அஞ்சாத பாம்புகளும் திருமாலாகிய பன்றியின் பழைய வளைந்த கொம்பும் கொன்றை மலர்மாலையும், செவ்வானம்போல் சிவந்த அந்திவண்ணமும், தேவர்களுடைய சிரமாலையின் அழகும் நிறைந்து தோன்ற [எ—று] 32

## 81

நெற்றிவிழிநீலமதனேரேதாவநின்றவிருசுடர்விழியுநிசியைநீக்க, வுற்றசெவிகாந்தருவரோசைசையோங்கவொண்குழைகள் சங்கமுடனுலவித்தோன்ற, வெற்றிவிடமுண்டகளமேகங்காட்டவிரைசெறிபூங்கரமுழையுமழுவுமேந்த, மற்று பயகரமபயவரதமாகமார்புமறைசேர்புரிநூல்வயங்கிவாழ.

[இ—ள்] நெற்றிக்கண் நெருப்பானது கரிய மன்மதனுடைய நேரில்தாவவும், ஏனைய சந்திரசூரியர்களாகிய கண்கள் இரவில் உள்ள இருளை நீக்கவும், பொருந்தியகாதுகள் கம்பளன் அசுவதரன் ஆகிய இருகந்திருவர்களுடைய இசைமிகும்படி ஒளிபொருந்திய குழை என்னும் ஆபரணம் சங்கக் குண்டலங்களுடன் அசைந்து தோன்றவும், செயபொருந்திய ஆலகால விஷம் தங்கிய கண்டம் மேகவண்ணத்தைக்காட்டவும். மணப்பொருந்திய தாமரைபோன்ற திருக்கரங்களில் மான்மழுக்களை ஏந்தவும், மற்றும் இருகரங்களும் அபயமும் வரதமுமாகவும், மார்பிலே வேதமாகப் பொருந்திய பூணூல் விளங்கித்தோன்றவும். [எ—று] 33

## 82

போதவணியுதரபந்தம்பொலம்பூண்மேவப்புண்டரிகவுரியரையைப்பொதிந்துபோர்ப்பப், பாதமலர்வேதவொலிச்சிலம்புமல்கப்பானிறவெண்ணீறமலபடிவமேய்ப்ப, வாதரவுபெருகவெழுந்தருளிநின்றவற்புதக்கூத்தனவரதமாடுந்தேவைப், பேதமறத்தெரிசித்தாள்பரசிநின்றுள்பெருங்கருணையச்செல்வப்பெடைமயூரம்.

[இ—ள்] மிக்க அழகிய [பாம்பாகிய] உதரபந்தமானது பொன்ஞற் செய்யப்பட்ட ஆபரணம்போல் விளங்க. தாருகவன முனிவர்கள் ஏவிய புலியை உரித்து எடுத்த தோலாடை அரையிற்சுற்றிப் போர்த்துக் கொள்ள, பாததாமரைகள் வேதங்களாகிய சிலம்புகள் கிடந்து ஒலிக்க, பால்போன்ற வெள்ளியவிபூதியானது குற்றமில்லாத திருமேனியிற்பொருந்த, விருப்பம்மிக எழுந்தருளிய அற்புதக் கூத்தராகிய அனவரததாண்டவமூர்த்தியைப் பெருங்கருணைப் பிராட்டியாராகிய செல்வமுடைய பெண்மயில்போல்வாள் பேதமின்றித் தரிசித்து வணங்கித் துதித்து நின்ருள். [எ—று] 34

## 83

நின்றதொருமாதவப்பூங்கோதைமாதினீண்டழகுபூண்டசுருளளகக்காடு, மன்றல்கமழ்முகையவிழவலர்ந்தசெந்தாமரைமுகமுந்துணைவிழியுங்களமும்யாவும், பொன்றுகடைநாளையினுமஞ்சடோய்ந்தபுதுமைகுலைந்தறியா மங்கலநன்ஞணுந், துன்றுதரளப்பவளமூரல்வாயுந்தோள்சுமந்தமணிமகரத்தோடுங்காதும்.

[இ-ள்] இவ்வாறு துதிசெய்து வணங்கி நின்ற சிறந்த தவத்தையுடைய உமாதேவியாரின் நீண்டு அழகு பொருந்திய சுருண்ட கூந்தலாகிய காட்டையும், மணம் கமழ்கின்ற அரும்புகள் கட்டவிழமலர்ந்த செந்தாமரைப் பூப்போன்ற முகத்தையும், இரண்டு கண்களையும், கண்டத்தையும். எல்லாவுலகங்களும் அழிந்துபடும் சர்வசங்காரகாலத்தினும் மஞ்சள் தோய்ந்து புதுமை மாருத நல்ல மங்கல நாணையும், நெருங்கிய முத்துப்போன்ற பற்கள் பொருந்தி விளங்கும் பவளவாயையும், தோளளவும் நீண்டுதொங்கும் மணிகள் பதித்த தோடுகளையும் காதுகளையும் [எ—று] 35

## 84

திறன்முருகக்குழவியுண்டுதெவிட்டாஞானத்திருவமுதப்பால்சுரந்தநகிலமார்பு, நிறமருவுமரகதத்தேபத்திபாய்ந்தநித்திலமாலையினெழுக்குநிறைதண்சாந்தும், புறமலையவொளிபெருகு மணிப்பொற்பூனும் பூனவாகு புரியு முத்தரிகமாந்தூசை, யறம்வளர்த்தசூடகப்பொற்கரத்தானீக்கியஞ்சலிபேணியநெறியுமணிந்தகாப்பும்.

[இ—ள்] வலிய என்றும் மாறாத இளமையையுடைய முருகவேளாகிய இளையபிள்ளையார் உண்டுதெவிட்டாத ஞானமிர்தமாகிய பால் சுரந்ததனபாரங்கள் விளங்கும் மார்பையும், மார்பிலே பொருந்தும் மரகதரத்தினத்துடன்பத்தியாகவுள்ளமுத்த மாலையின்வரிசையையும் நிறைந்த குளிர்ந்த சந்தனமும் புறத்திலே அசைய ஒளிமிகும் இரத்தினங்கள் பதிக்கப்பட்டபொன்னாபரணங்களும் அணிந்த தோளிலுள்ள மேலாடையாகிய வஸ்திரத்தை முப்பத்திரண்டு தர்மங்களையும் உலகில் வளரச்செய்த வளையல்களையணிந்த திருக்கரங்களால் நீக்கிவணங்க நெறிந்த காப்பையும் [எ—று] 36

## 85

உலகமெலாமீன்றளித்துந்தெருளாவண்ணமொல்குவட பாசடைநேருதரவாழ்வும், விலகரியமணிமருங்குனெருங்கச் சேர்த்தமேகலையுமுடையொதுக்கிநின்றபாங்கும், பலகுனித பாடகமுஞ்சிலம்புஞ்சேர்த்தபதயுகளசீதளசெம்பதுமப்போது, மலகின்மலராலமைத்தவலங்கலாங்குமசைவனகுஞ்சித நிலையுமழகின்வாய்ப்பும்.

[இ—ள்] எல்லாவுலகங்களையும் பெற்று வளர்த்தும் தெளியாதபடி அசைகின்ற ஆலின் இளந்தளிர் போன்ற திருவயிற்றையும், நீங்குதலில்லாத இரத்தினங்கள் பதித்து இடையிலே நெருங்கும்படியாக அணியப்பட்ட மணிமேகலை என்னும் அணிகலத்தையும், ஆடையை ஒதுக்கி நிற்கும் பாங்கையும், பலவகைப்பட்ட பாடகம் சிலம்பு என்னும் ஆபரணங்கள் அணிந்த இரண்டு திருவடிகளாகிய குளிர்ந்த செந்தாமரைமலரையும், மிகுந்த பூக்களால் அழகாக அமைக்கப்பட்ட மலர்மாலைகள் தொங்கி அசைதலுடன் கூடி வளைந்த நிலையையும், பேரழகையும். [எ—று] 37

## 86

கண்டருளியளவிகந்தமகிழ்ச்சிகூர்ந்துகாதலுமையே ஞானக்கருணைத்தேனே, வண்டுலவுகுழலிமயவனிதாய்வாராய்வாமுனக்கெஞ்ஞான்றும்வழக்காமன்றோ, கொண்டநெறிகுன்றாநின்றவத்தினாலேகோமளமாமுனதிட நாங்கொண்டேமென்று, தெண்டிரைசூழுலகமெலாம்பரவிப்பேத்தத் தெக்கணபாகங்கொடுத்தான்றேவதேவன்.

[இ—ள்] பார்த்தருளி அளவிலா மகிழ்ச்சியடைந்த அன்புடைய உமாதேவியே! ஞானமயமாகிய கருணைத்தேனே! வண்டுகள் மொய்க்கின்ற மலர்மாலையணிந்தகூந்தலையுடைய இமயப்பெண்ணே! வருவாய் உனக்கு இடதுபாகத்திலிருத்தல் எப்பொழுதும் வழக்கமல்லவா? கொண்டவிரதத்தன்மை குன்றாத தவநெறியினால் அழகு விளங்கும் உமதிடப்பாகத்தை நாம் கொண்டு விட்டோம் என்றுகூறி தெளிந்த அலைகளையுடைய கடல் சூழ்ந்த உலகத்தில் உயிர்கள் எல்லாம் துதித்து வணங்கத் தமது வலப்பாகத்தை உமாதேவியாருக்குத் தேவதேவனாகிய சிவபிரான் கொடுத்தருளினார். [எ-று] 38

87

ஏகவுரு வாகிநின்ற வெம்பிரானு மென்னையா ளுடை
யாளு மினிது வாழ, நாகவத னக்கடவுள் நெடுவேற் காளை
நந்திவிடை முந்துகண நாதர் பூதர், வாகைபெறு முயர்
தண்டி காரி சூழ மாகர்தொழ வாணருயர் பானு கம்பர்,
மேகமென வேமுழவு சங்கமார்ப்ப வேதவொலி யாதரிப்ப
விளங்கிற் றன்றே.

[இ—ள்] தனித்தபொருளாக விளங்கும் சிவபெருமானும் எமது பரமமாதாவாகிய உமாதேவியாரும் இனிமையாகப்பொருந்த யானை முகத்தையுடைய விநாயகக்கடவுளும், நீண்டவேலையுடைய முருகவேளும், திருநந்திதேவரும், விடையினை முற்படுத்தி விளங்கும் கணநாதர்களும், பூதர்களும், வெற்றிபெற்ற உயர்ந்த தண்டிகேசுரரும், வைரவக்கடவுளும் சூழ்ந்துவர விண்ணோர்கள் வணங்க வாணாசுரனும் உயர்ந்த பானுகம்பனும் மேகத்தின் ஒலிபோலும் குடமுழாவாத்தியத்தையும், சங்கவாத்தியத்தையும் முழக்க வேத கோஷங்கள் கோஷிக்க விளங்கியது. [எ—று] 39

88

தொழுகம்பை மாநதியே கம்பவாணர் தோற்றமுதல்
நீழல் செயும் சூதக் கொம்பு, முழுதும்பே ரின்பமத கரி
பூசித்து முத்திபெற வாழ்மு தல்வெண் ணாவற் கொம்பு,
கழுகென்பு கதியடைந்த கங்கைசூழும் காசிபடர் சிவக்
கொழுந்து கரந்து தாவும், கொழுகொம்பு பெருங்கருணை
லயப்பூங் கொம்பு கூர்ந்ததவப் பெருமையெவர் கூறவல்
லார்.

[இ—ள்] யாவராலும் தொழப்படுகின்ற கம்பாநதியால் சூழப்பட்டுள்ள திருவேகம்பத்திலே வீற்றிருக்கும்திருவேகம்பநாதர் எழுந்தருள முன்னரே நீழலைச்செய்து விளங்கும் (வேதவடிவாகிய) மாமரத்தின் (அடியில்) உள்ள பூங்கொம்பு போன்றவராகிய ஸ்ரீ காமாட்சியம்மையாரும், தோய்ந்தபேரின்பவடிவாகியவரும் முன்னொருகாலத்திலே யானையானது பூசித்து முத்தி பெறுவதற்கு ஏதுவாக வாழ்கின்ற முழுமுதலாகிய (வேதவடிவாகிய) வெண்ணாவல் மரத்தின்கீழ் எழுந்தருளும் சம்புநாதர் பங்கில்வாழும் ஸ்ரீ அகிலாண்டநாயகியும், கழுகினது வாயில்உள்ள எலும்பு கங்கையில் தவறிவிழ அதனால் ஒரு பிராமணன் கதியடைந்த ஸ்ரீ காசியில் உறையும் விசுவேசராகிய சிவக்கொழுந்து மறைந்து தாவுதற்குரிய ஸ்ரீ விசாலாட்சியும்ஆகிய பெருங்கருணையநாயகி என்னும் திருநாமத்தையுடைய (இத்தலத்து) உமாதேவியார் செய்தமிக்க தவத்தின் பெருமையை எவர்தாம் கூறவல்லவராவார். (எ-று) 40

89

யாவரா லறிவரிய தலமுண் டேனும் இந்திரனே முதலாய இமய நாட்டில், தேவரா லறிவுறுதற் குரியவாகும் தேவருக்கு மரிதென்றால் திகழ்வா ரீசப், பூவரால் அறிவு செயப் பொருந்து மந்தப் பூமகற்கும் பெருஞ்சாபம் புலர்த்தும் தானம், மூவரா லரியதிரு அவிநாசிக்குள் முன்னவனே அறிவதலால் மொழிவே றுண்டோ.

[இ—ள்] எவராலும் அறிவதற்கரிய தலமுளதாயினும் இந்திரன் முதலாகிய தேவர்களால் அது அறியப்படும். தேவர்களுக்கும் காண அரியதாயின் அது பிரமதேவரால் அறியப்படும். அந்தப்பிரமதேவருக்கும் உண்டாகிய பெரிய சாபத்தைத் தொலைத்தருளிய (இடம்) அவிநாசியில் அப்பிரம விஷ்ணு உருத்திரன்ஆகிய மூவராலும் அளப்பதற்கு முடியாத முழுமுதற்கடவுளாகிய சிவபெருமானே அறியப்படுவதன்றி வேறு ஒருவரால் சொல்லப்படுவதுண்டோ? இல்லை [எ-று] 41

90

எனவுரைத்த நந்தியைவந் தனைசெய் தேத்தி யித்தலவுற்
பத்திவளம் இவ்வா றென்னில், வினவுதற்கு வருந்தொறு
மெப் பரிசோவென்று விருப்புவெறுப் புளதிலதாய மேன்
மை கூர்ந்து, கனவிடத்தும் ஒழியாத மகிழ்ச்சி பொங்கிக்
கடைகாறுங் கேள்விபெறக் கருத்திலுற்றான், சனவருக்க
மானதவ முனிவர்க் கெல்லாம் தலைமையென நிலைமைபெறு
சனற்கு மாரன்.

[இ-ள்] என்று கூறியருளிய திருநந்திதேவரை வணங்கித் துதித்து, இத்தல வரலாறு இப்படிப்பட்டதாயின், கேட்குந்தோறும் இதன்பெருமை எத்தகையதோ! என்று வெறுப்பின்றி, விருப்பம் மிகுதியாக வுண்டாக சொர்ப்பனத்திலும் நீங்காத மகிழ்ச்சி பொங்கி, முடிவுவரையில்உள்ள பெருமை யெல்லாம் மனிதக்கூட்டத்தில்உள்ள தவமுனிவர்க்கெல்லாந் தலைமையான சனற்குமார முனிவர் கேட்கு மாறு மனத்திலே எண்ணினார் [எ-று] 42

இரண்டாவது தலவுற்பத்திச்சருக்கம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் —90

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பிர்மார்ச்சனைச்சருக்கம்.

91

தந்துசேர்மணிமார்பனான சனற்குமார தபோதன
னந்திகேசசனுதிபன் றனைநண்புகொண்டுநயந்தபின்
முந்துசிர விநாசியாளுடைமுக்கணாதனைமுளரியான்
வந்துபூசனைசெய்துசாபமொழிந்தபான்மைவழுத்துவான்

(இ-ள்) பூணூல் அணிந்த அழகிய மார்பையுடையவராகிய சனற்குமாரமுனிவர் திருநந்திதேவரையடைந்து அவர்கிருபையைப் பெற்று, மகிழ்ந்தபின்பு சிவதலங்களுக்குள்ளே சிறந்து மூற்பட்டு விளங்கும் அவிநாசி என்னும் தலத்திலே எம்மை அடிமையாகக்கொண்டு எழுந்தருளியுள்ள சிவபெருமானைத் தாமரையிலுள்ள பிரமதேவர் வந்து பூசித்துத்தமது சாபத்தினின்று நீங்கிய தன்மையைச் சொல்லத்தொடங்குவாராயினர் (எ-று) 1

92

ஆதிநாளொருபோதுமேதினியண்டமுண்டுமிழ்விண்டுவும்
போதின்மீதகலாதிருந்தெவையும்படைத்தருள்புனிதனுந்
தீதில்வாகனசாரிபோய்மகமேருதென்றிசையொன்றியே
சாதிசந்திலவங்கமென்றளிர்தாவுநீழலைமேவினார்.

(இ-ள்) முன்னொருகாலத்திலே பிருதிவி அண்டத்தை [ப்பிரளயவெள்ளத்திலிருந்து காக்கவிரும்பி) தமது திருவயிற்றில் அடக்கிக்கொண்டு (யோகநித்திரைசெய்து) பின்பு பழைய நிலையிலே உமிழ்ந்தருளிய விஷ்ணு மூர்த்தியும், அவ்விஷ்ணுமூர்த்தியின் திருவுந்தித்தாமரையில் எழுந்தருளியிருந்துகொண்டு அண்டபிண்டசராசரங்களை யெல்லாம் படைத்தருளும் பிரமதேவரும் குற்றமில்லாத தங்கள் தங்கள் வாகனங்களாகிய கருடப்புள் அன்னப்புள் ஆகிய இவைகளில் முறையேஏறி மகாமேருமலையின் தென்திசையை அடைந்து சாதி சந்தனம் இலவங்கம் முதலிய மிருதுவான தளிர் வாய்ந்த மரங்களின் நீழலில் சென்று தங்கினார்கள். (எ—று) 2

93

வாணிகேள்வனனந்தணந்துமலர்க்கையஞ்சலிகூர்தலும்
பாணிநேமிபெறுங்கரும்புயல்பன்னகப்பகைவிட்டிழிந்
தாணிவெண்டரளத்திரளல்வயிரத்திரளலணிதெற்றிமே
னீணிலாவொளிவீசவேநிருமித்தபந்தரின்வைகினார்.

(இ—ள்) சரஸ்வதிதேவிக்கு நாயகராகியபிரமதேவர் அன்னத்தை விட்டிறங்கி மலர்போன்ற கையைக்கூப்பி வணங்கினார். கையில் சுதர்சனம் என்னும் சக்கரப்படையையுடைய கருமேகம்

போலும் திருமேனி நிறத்தையுடைய விஷ்ணு மூர்த்தி பாம்புக் குப்பகையாகிய கருடனை விட்டிறங்கி வெண்மை நிறத்தையுடைய ஆணிமுத்துக்களாலும் வைரக்கற்களாலும் அழகுற அமைக்கப் பட்ட மேடையின்மேல் வெண்ணிறமான ஒளிவீசும் பந்தரை அடைந்தனர். (எ-று) 3

பன்னகம்-பாம்பு. பகை-பகையாகியகருடன்.

## 94

ஒத்தவாய்மைகளாயுமெல்லையிலோலவண்டலராலய
னெத்திறங்களுமெவ்வியற்கையும்யாமலாதிலையாயினு
மத்தனின்றவருபநீர்மையறிந்திலேமஃதென்கொலோ
உத்தரம்பகர்கென்னமுன்னவனுண்மைமாயனுணர்த்துவான்

(இ-ள்) பொருந்திய உண்மைகளை ஆராயுங்காலத்தில் ரீங்காரம் செய்யும் வண்டுகள் மொய்க்கும் தாமரை மலரைத் தமக்குக் கோயிலாகக் கொண்டுள்ள பிரமதேவர் எல்லாப் பொருள்களும் அவைகளின் தன்மைகளும் எம்மையல்லாமல் இல்லை. ஆயினும், எப்பொருட்கும் தலைவராகிய சிவபெருமானுடைய அருவநிலையை யாம் அறிகிலோம். அதற்குக் காரணம் யாது? அடியேனுக்கு அருளவேண்டும் என வேண்ட விஷ்ணுமூர்த்தியானவர் முழுமுதற் பரம்பொருளாகிய சிவபிரானுடைய நிலையை அருளுவாராயினர். (எ-று) 4

## 95

பன்மறைப்பொருளாகுவானடுபாலின்பமுமெய்துவான்
சின்மயத்துளியங்குவானிகழ்சீவனுக்குயிராகுவா
னன்மையிற்பதினுலுலோகமுமப்புறத்துளுநல்குவான்
றன்மையெப்படிகாணலாமெனமற்றும்வேறுதருக்குவான்.

(இ-ள்) எல்லாவேதங்களுக்கும் பொருளாக வுள்ளவரும், காய்ச்சிய பாலின் சுவைபோல் இன்பமாக வுள்ளவரும், ஞானமயமாக வுள்ளவரும், உயிருக்குயிராக வுள்ளவரும், நன்மையாகப் பதினான்கு உலகங்களின் அகத்தும் புறத்தும் நின்றருள்ளவரும் ஆகிய அப்பரம்பொருளின் தன்மையை நாம் எப்படி உள்ளவாறு அறிய இயலும்? என்று கூறியருள மற்றும் செருக்குடையவனாய். (எ-று) 5

## 96

அண்டரிற்பெரி தாகுமூவர்க ளாகிநாளும மர்ந்துளேங்
கொண்டமுத்தொழின் முன்படைத்தல் தரித்தலாயின கொள்கையேங்
கண்டகத்தி லழித்திடும்பெரு மைத்தழற்க ணுதற்பிரான்
றொண்டருக்கெளி தானதாண்முடி கண்டிருப்பது தூய்மையே.

[இ-ள்] தேவர்களுக்குள் பெருந்தேவர்களாகிய அயன், அரி, அரன் என்னும்மும்மூர்த்திகளாக இருக்கிறோம்.நாம்கைக்கொண்ட முத்தொழில்களுள் முதன்மைபெற்ற படைத்தல் காத்தல் தொழில்களை யுடையோம். பெருமையையுடைய பார்த்தவுடன் அழித்திடும் நெற்றிக்கண்ணையுடைய சிவபிரானது அடியவர்களுக்கு எளிதான திருவடியையும் திருமுடியையும் கண்டிருப்பதன்றோ நமக்குத் தூய்மையானதாம். [எ-று] 6

## 97

என்னவேதி யனோதும்வாய்மை யியற்கையன்றென வெண்கொளா
பொன்னறுங்கம லத்துளோயிது புந்தியில்சிறு பான்மைகா
ணுன்னரும்பர னைத்தெரிந்தன மாகிலெம்முட னொப்பதார்
நின்னெடுந்து ணிபென்கொலோவென நேர்நிறுத்தி நிகழ்த்துவான்,

[இ-ள்] என்று பிரமதேவர் சொல்லும் சொல் தக்கதல்ல என எண்ணி, அழகிய நல்ல தாமரை மலரில்உள்ள பிரமதேவரைப் பார்த்து நீர் சொல்வது புத்தியில்லாததும் சிறுமையும் உடையதாம். எண்ணுவதற்கும் அரிய அப்பரம்பொருளைக்காணுவேமாயின் நம்மோடு உவமிப்பதற்கு யாவர் உளர்? உன்னுடைய முடிபு என்ன? எனக்கேட்டுச் சொல்வாராயினர் [எ-று] 7

## 98

என்றுமென்பணி சேவடிக்கென வேனமாயரி தேடுவா
னின்றநான்முக னோதிமப்பற வைப்புளாய் முடிநேடுவான்
சென்றுபூமியி டந்தும்வானினு யர்ந்துமேன்மை திறம்பெறார்
பொன்றுமாறல தென்செய்வார்தனி நின்றயர்ந்து புலம்புவார்.

[இ—ள்] (பின்பு எதிரிலே தோன்றிய ஒரு அக்கினிப்பிழம்பைக்கண்டு) எப்பொழுதும் என்னுடைய பணி திருவடிக்கே ஆகட்டும் எனப்பன்றிவடிவங்கொண்டு திருவடியைக்காண திருமால் பூமியைக்கிண்டிக்கொண்டு கீழே சென்றும், அங்கே நின்ற பிரமதேவர் முடியை அன்னப்பறவை வடிவங்கொண்டு ஆகாயத்தில் மேன்மேல் பறந்துச் சென்று காணாது இறந்துபடாதவராய்த் தனித்தனியே மனமும் உடலும் களைத்தப் புலம்புவாராயினர். [எ—று] 8

99

மாலெனுன்முடி யாதெனப்பணி மாறிமீளவ ணைந்துதன்
கோலமானவ ராகமேனிகு லைந்துநின்றெழில் குன்றினன்
மேலதானபி தாமகன்வறி தேவருந்திறம் வெள்கிநீள்
காலுலாவிய வானகந்தனினின்றிரங்கிய காலையில்.

[இ—ள்] பின்பு திருமால் இனிஎன்னால் இக்காரியம் முடியாது என்று தேடுந் தொழிலினின்று மீண்டும் பூமியை அடைந்து தமது அழகிய திருமேனியின் வளம் குறைந்தார். மேற்சென்ற பிரமதேவர் மீண்டு சும்மாதிரும்பிவர வெட்கமடைந்து மெதுவாக ஆகாயத்திலிருந்து வருந்திக்கொண்டிருக்கும் காலத்திலே (எ—று) 9

100

வையகத்தொரு சைவவேதியன் வாமமாமுனி யாமவன்
மெய்யெழுத்தை யுணர்ந்துமுக்குண வைம்புலப்பகை வென்றுதன்
கையகச்சிவ லிங்கமீதிலொர் கைதைமாமலர் சூடினு
னையமற்றது தற்பராபரனந்தமீதில மர்ந்ததால்.

(இ—ள்) நிலவுலகத்திலே வாமமுனிவர் என்னும் பெயருடைய சிவப்பிராமணர் ஒருவர் மெய்ம்மையாகிய பஞ்சாக்ஷரத்தை விதிப்படி அறிந்து காம வெகுளி மயக்கத்தைத்தரும் இந்திரியங்கள் ஆகிய பகையை வென்று தமது பூசா மூர்த்தியாகிய கையின்கண் உள்ள சிவலிங்க மூர்த்தியின்மீது ஒரு தாழம்பூவைச் சூட்டினார். அத்தாழம்பூ அப்பராபரவஸ்துவாகிய சிவபிரான் முடியில் விளங்கியது. (எ—று) 10

## 101

நந்தல்சேர்தரு கந்தமாமலர் நாதனீண் முடி யார்தலு
மந்தராதிக மாறிமாலிய மாகிவீழ்வது கண்டபுள்
சிந்தையூடொரு வஞ்சமுற்றல கிற்செறிந்து கொணர்ந்துபின்
னந்தகாரசி றத்திருனை யணைந்துநான்முக ஞகியே.

(இ-ள்) *விளங்குகின்ற வாசனைவீசும் அத்தாழம்பூ நிர்மாலிய மாய் இறைவனது நீண்ட திருமுடியினின்று வீழ்ந்து வருவதைக் கண்ட அன்னப்பறவை வடிவாயிருந்த பிரமதேவர் தமது மனத் திலே ஒரு வஞ்சகச்செயலை எண்ணி மூக்கிலே (அலகிலே) ஏந்திக் கொண்டு இருள்வடிவாகிய திருமாலை அடைந்து நான்குமுகங்களு டன் கூடிய தமது வடிவத்தை முன்போலக் கொண்டு. (எ-று)* 11

## 102

என்னதன்மையெ னத்தெரிந்திரு வோர்விஞவுறு மேல்வையின்
மன்னுதாளிணை கண்டிலேனென வண்டுழாயன் வழுத்திரு
னன்னவூர்தி யரன்சடாமுடி கண்டதன்கரி யாகவே
பொன்னினேர்பெறு கைதைமாமல ரீதெனுஞ்சொல் புகன்றனன்.

(இ—ள்) இருவரும் *தங்களுக்குள் அடிமுடிகாணச் சென்ற வரலாற்றை விசாரித்திருக்கும் காலத்தில் நிலைபெற்ற பெருமா னுடைய திருவடிகளை யான் கண்டிலேன் என வளமான துளசி மாலையணிந்த திருமால் கூறித் துதிக்க, அன்னவாகனத்தை யுடைய பொன்னையொத்த பிரமதேவர் சிவபெருமானுடைய சடா முடியைக் கண்டதற்கு சாட்சியாக வந்த அழகிய தாழம்பூ இது எனச் சொன்னுர். (எ—று)* 12

## 103

### (வேறு)

அந்த வாய்மைகேட் டம்மலர் கண்டகார் வண்ணன்
சுந்தரானனம் புலர்ந்தனன் கலந்தனன் சோப
மிந்த வேழைமை யென்றுகொ லொழிவதென் றிரங்கா
சிந்தை யாகுலக்கடல்விழுந் தழுந்தினன் றேருன்.

(இ—ள்) பிரமதேவர் கூறிய அச்சொல்லைக்கேட்டு அத் தாழம் பூவையும் நேரிற்கண்ட கரியதிருமால் அழகிய தமது திருமுகம் வாட்டமடைந்து சோர்வுற்றார்; இந்த அறியாமை விட்டு நீங்குவது என்று கொலோ? என்று இரங்கி மனக்கவலையாகிய கடலில் விழுந்து தெளியாதவராய் அழுந்தினார். (எ—று) 13

## 104

கண்ணி டந்தநாட் களியுடன் காண்டகு கழற்கான்
மண்ணி டந்துமெய் வருந்தியுங்கிடைத்திலா வகையென்
பண்ணி டந்தருவிரிஞ்சனைப் பரித்தருள் பெருமா
னெண்ணி டங்கொளவென்மனத் தியற்றுமா றெவனோ.

(இ—ள்) கண்ணைப்பறித்து (த்தாமரைமலர் ஒன்று குறைய அதற்குப்பதிலாக இட்டு அருச்சித்துச் சக்கரப்படையைப் பெற்ற) அந்நாளிலே மிகமகிழ்ச்சியுடன் தரிசித்த திருவடிகள் பூமியைக் கிண்டி மெய்வருந்தித் தேடியும் கிடையாத காரணம் யாது? உலகைப்படைத்த பிரமதேவனைக் காப்பாற்றியருளிய பெருமான் என் எண்ணங்களெல்லாம் வெவ்வேறாக அடியேன்மனத்திலேஇயற்றும் திருவிளையாடல்தான் யாதோ? (எ—று) 14

## 105

பொருவரும்புரமீதடர் சரமெனப் புகுந்துந்
தருவ னந்தனின் முனிவர்மா தவங்கெடச் சமைந்து
மிருவி சும்பிடைவிடையென வியைந்து மெம்மிறையோன்
றிருவுளந்தெரி யாவகை யாதெனத் திகைத்தான்.

(இ—ள்) ஒப்பற்ற திரிபுரத்தை எரித்தொழித்த காலத்திலே அம்பாகச் சென்றும், தாருகவனத்திலே முனிவர் தவங்கெட அப் பெருமான் ஆணையின்படி பெண்ணுருக்கொண்டு சென்றும், இறைவனை இடபமாகத்தாங்கிச்சென்றும் அவர் திருவுளக்கருத்தறியாமைக்கு யாதுகாரணம் எனத்திகைத்தார். (எ—று) 15

106

பண்டு சேகர மிழந்தவன் பனிமுடி காணக்
கொண்ட நேமியான் கண்டிலன் குரைகழ லென்று
லண்ட ரேசுவர தனினுமழகிரு வோருங்
கண்டி லாரெனும்வாசக முலகியல் கடுக்கும்.

(இ—ள்) முன்னொரு காலத்திலே வயிரவ மூர்த்தியால் சிரமொன்று இழந்தவனாகிய பிரமதேவன் குளிர்ந்த திருமுடியைத்தரிசிக்க, சக்கரப்படையையுடையவனாகிய திருமாலாகியநான் திருவடியைக் காண்கிலேன் என்றால் தேவர் யாவரும் என்னை இகழ்வர். இருவரும் இறைவருடைய அடிமுடியைக் காண்கிலர் என உலகம் சொல்லும் பழமொழி அதனினும் அழகுடையதாம். (எ—று) 16

107

என்ற நேகமு மிரங்கல்கண் டெங்குமாய் நிறைந்து
மன்று ளாடிய வான்பொருள் வடிவுகொண் டருளி
யொன்று கோடியா யொளிவிடுங் கதிரென வெதிரே
நின்று நேர்பெற நெடியவன் கலந்துள மலர்ந்து.

[இ—ள்] என்று இவ்வாறு பலப்பல சொல்லி திருமால் இரங்கி நின்ற அளவில் எள்ளினுள் எண்ணை போலவும் பாலினுள் நெய் போலவும் எங்கும் நிறைந்து நின்று பொன்னம்பலத்திலே ஆனந்த நடனம் செய்தருளும் சிவபெருமான் [பேரொளிப்பிழம்பாய்] எதிரே தோன்றிக்காட்சியளித்தருள விஷ்ணுமூர்த்தியானவர் மனமகிழ்ந்து ஒளிவிடும் கோடி சூரியனைப்போல (எ—று) 17

108

பரவு வோருளம் பரவிய பகவனே போற்றி
கரவு காணவங் ககலுமெங் கடவுளே போற்றி
யரவு வேணியாய் போற்றியென் னுருயிர்க் குயிராங்
குரவனே பகவிரவனே குழகனே போற்றி.

(இ-ள்) துதிக்கின்ற அன்பர்களுடைய உள்ளத்திலேநிறைந்து தோன்றும் ஆறுகுணங்களையுடையவரே எம்மைப்பாதுகாத்தருள்க.

வஞ்சகம் பொருந்திய நெஞ்சினரை அகலும் எமது கடவுளே பாது காத்தருள்க. பாம்பையணிந்தசடையை உடையவரே எம்மைப் பாதுகாத்தருள்க. என்னுடைய அரிய உயிருக்குயிராக விளங்கும் ஆசாரிய மூர்த்தியே பாதுகாத்தருள்க. பகலும் இரவும் ஆனவரே! அழகையுடையவரே! பாதுகாத்தருள்வீராக. [எ-று] 18

## 109

பரையி டங்கொளப் பசுமைசேர் பாகனே போற்றி
தரையி டந்தியான் காண்பருஞ் சரணனே போற்றி
யுரையி டங்கொள்வாய் போற்றியென் றுயர்கரங் குவித்துக்
கரையி டங்கொளாப் பேரின்பக் கடலினுட் டிளைத்தான்.

(இ-ள்) அருள்வடிவாகிய பராசத்தி இடதுபாகங்கலந்தமை யால் பசுமை நிறம் பொருந்திய பாதித்திருமேனியையுடையவரே! வணங்குகின்றேன். பூமியைக்கிண்டி அகழ்ந்து சென்றும் என்னால் காண்பதற்கு அருமையான திருவடியையுடையவரே! வணங்கு கின்றேன்: சொல்லும் சொல்லினிடமாகத் தோன்றும்பொருளே! உம்மை வணங்குகின்றேன் என்று திருமால் உச்சிமேற்கைகுவித் துக் கரைகாணாப் பேரின்பக்கடலில் மூழ்கினார் (எ-று) 19

## 110

பாங்கு நின்றிதழ்ப் பங்கயம் பரவுபண் ணவனும்
பூங்கரந்தனிற் கைதையம் புதுமலர் பொதுளித்
தேங்கு சிந்தையிற் கரவிருள் செம்முகஞ் செறிய
மூங்கை யின்கன வென்னநின் றிருகர முகிழ்த்தான்.

[இ-ள்] பக்கத்திலே நின்ற பிரமதேவரும் அழகிய தமது கையில் புதிய தாழம்பூ விளங்க மனத்திலே உள்ள வஞ்சகமாகிய இருள் செவ்விய முகத்திலே நிறைந்து தோன்ற 'ஊமை கண்ட கனுப்போல' இரண்டு தாமரை மலர்போன்ற கைகளையும் குவித்து வணங்கினார். (எ-று) 20

111

மாய வன்குண போதமும் வழிந்தபே ரன்பு
நேய முங்கம லாசன னிகழ்ந்தபுன் மதியு
மேய பண்புட னுணர்ந்து முன்வெஞ்சிறைப் படுத்த
சேய கன்றவெங் கண்ணுத றிருவுளங் கனன்று.

[இ-ள்] விஷ்ணுமூர்த்தியின் அறிவின் திறத்தையும், பெருக்கெடுத்தோடும் பேரன்பையும் தாமரையிலமரும் பிரமதேவரது அற்பபுத்தியையும் தெரிந்து முன்பு பிரமனைக்குட்டிச் சிறையிடை அகப்படுத்திய முருகவேளை விட்டுவந்த நெற்றிக்கண்ணையுடையவராகிய சிவபெருமான் திருவுள்ளத்திற் கோபமிகுந்து. [எ-று] 21

112

மட்டு லாவுசெந் தாமரைவஞ்சகின் சிரம்போய்ப்
பட்ட பாடயர்த் தனைகொலோ பொய்மொழி பகர்ந்தா
யிட்ட சாபமே நீயுநின் கைதையு மெம்பாற்
கிட்டொ ணாதுபோ கென்றனன் கைலையங் கிரியான்.

(இ-ள்) கயிலைமலையையுடைய சிவபெருமான் பிரமதேவனை நோக்கி வாசனையுள்ள தாமரைமலர்மேல் உறையும் வஞ்சகனே! உன்னுடைய சிரம் முன்னொருகாலத்தில் கொய்யப்பட்டுப் பட்ட பாட்டை மறந்தனையோ? பொய்ம்மொழி சொன்னாய். நீயும் உன் பொய்க்கு உடன்பட்ட தாழம்பூவும் இனி எம்மிடத்து அணுகலாகாது எனச் சாபமிட்டருளினார். [எ-று] 22

113

அத்தினந் தொடர்ந்தாரணக் குரவனின் றளவு
மொத்த வாலயமுருவமர்ச்ச னையிவை யொழிந்தான்
சுத்த கேதகை முடங்கலென்றொருபெயர் சுமந்தங்
கத்த னாலய மளவிலேவெவர்க்கு மங்காகா,

[இ-ள்] அந்நாள் தொட்டு இன்றளவும் வேதகுருவான பிரமதேவர் கோயில், பூசனை முதலியன இன்றி ஒழிந்தார். பரிசுத்தமான தாழம்பூவும் முடங்கல் என்ற ஒரு பெயரையடைந்து இறைவருடைய அர்ச்சனைக்கு ஆகாதொழிந்தது. [எ-று] 23

## 114

கண்ட மாதவன் கரசிர முகிழ்ந்துகண் பனித்துத்
தொண்டு கூர்ந்துமெய்த் துதிசொலி மதியிலி துவக்கால்
விண்ட சாபமும் வேண்டுமோ வேண்டினும் பொறுமை
கொண்டு தீர்ப்பதெக் காலமெத் தலமெனக் குழைந்தான்.

*[இ-ள்] சிவபெருமான் பிரமனைச்சபித்ததைக்கண்ட பெருந் தவத்தையுடையவராகிய விஷ்ணு மூர்த்தியானவர் சிரமேற்கரங் குவித்துக்கண்கள் ஆனந்த அருவிசொரியப் பணிவிடைமிக்குத் தோத்திரங்கள் சொல்லி அறிவில்லாத பிரமதேவன் அடைந்த சாபத்தையறிந்து அஃது அவனுக்கு வேண்டுவதாயினும் பொறுமை கொண்டு இவன் அடைந்த சாபம் நீங்குவது எக்காலத்து? எத்தலத்து? என உருகினர். (எ-று)* 24

## 115

தேவர் சாபமு முனிவர்பன் மினிகண்மெய் தெளிந்த
யாவர் சாபமு மெம்பொருட் டகலுமிங் கெமையே
மேவலா வுனை வேண்டியாம விளம்பிய சாபம்
போவ தார்பொருட் டென்றனன் புண்ணியப் பொருளான்.

*(இ-ள்) தேவர்கள் இட்ட சாபமும், முனிவரிட்டசாபமும், பத்தினிப்பெண்டிர் உண்மையறிவுமிக்க எவராயினும் அவரிட்ட சாபமும் எம்மால் நீங்கத்தக்கதாம். இப்பொழுது எம்மையே தஞ்ச மென அடையாத உன்னையும் (பாதுகாக்க) வேண்டி யாம்அருளிய இச்சாபமொழி யாவரால் நீக்கத்தக்கது? என்று சிவபுண்ணியவடி வாகவுள்ள சிவபெருமான் அருளிச்செய்தார் (எ-று)* 25

## 116

தொடைப்ப சுந்துள வணிந்தவன் றுணிந்துபின் சொல்வான்
படைப்ப துன்செயல் பரிப்பது முன்செயல் பலகாற்
றுடைப்ப துன்செயு ரேற்றமு மொடுக்கமு முனதேற்
கடைப்பெ ருந்தொழிற் சாபமோ சனமெவர்காண்பார்.

(இ—ள்) பசிய திருத்துழாய்மாலையையணிந்த விஷ்ணுமூர்த்தி யானவர் பின்னும் துணிந்து சிவபெருமானிடத்துக் கீழ்வருமாறு விண்ணப்பம்செய்யலானர். படைப்புத்தொழிலும் உம்முடையதே, காத்தற்றொழிலும் உம்முடையதே, பலகாலும் அழித்தற்றொழிலும் உம்முடையதேயாம். தோற்றம் ஒடுக்கம் ஆகிய இவை உமக்கே உரியன. ஆனால் இறுதியாகவுள்ள பெரியசாபவிமோசனத்தைச் செய்ய வல்லவர் யாவர்? எவருமிலர். (எ—று) 26

117

என்ன வித்திறமிரந்தகார் முகுந்தனை மகிழ்ந்து
பின்னருத்தரந் தெக்கணம் பிறங்கு காசியதாய்
மன்னு முத்தம பூமியொன்று ளததுமருவிப்
பொன்செய் மெய்த்தவம் புணர்ந்துநம் பூசனை புரிந்தால்.

(இ—ள்) என்று இவ்வாறு சொல்லிக்குறையிரந்த கரியமுகுந்தனை மகிழ்ந்துநோக்கி பிறகு. வடக்குத் தெற்கு ஆகிய இவைகளுள்ளே விளங்கும் காசிக்ஷேத்திரமாய் நிலைபெற்ற உத்தமமான ஸ்தலம் ஒன்று உள்ளது. அதனை அடைந்து பொன்போலும் அரிய உண்மையானதவத்தை மேற்கொண்டு நம்மைப் பூசித்து வந்தால். (எ—று) 27

118

ஈண்டு பொய்கொலை முதலிய பாவமு மிவைபோன்
மூண்ட சாபமு மோசன மாமென மொழிந்தே
யாண்ட நாயக னிருவர்க்கு மகல்விடை யளித்து
நீண்ட பேரொளிமேனியை நிட்களத் தொளித்தான்.

[இ—ள்] இவ்வுலகத்திலே நிறைந்த பொய் கொலை முதலிய பாவங்களும் இவைகளைப்போன்ற ஏனைய பாவங்களும் அதிகரித்த சாபங்களும் விடுதலையாம் எனக்கூறியருளி எல்லா உயிர்களையும் தமக்கு மீளா அடிமையாகக் கொண்டருளும் சிவபெருமான் அப்பிரம விஷ்ணுக்களுக்குச் செல்ல விடைகொடுத்து அடிமுடிகாணப்பெறாது நீண்டு உயர்ந்த பேரொளியாகவுள்ள திருமேனியை மறைத்தருளினர். [எ—று] 28

## 119

போந்த தேவர்க ளிருவரும் புகலிடம் புகுந்தார்
சேந்ததாமரைத் திசைமுகன் சிறிதுநாட் பின்னர்ப்
பாந்தளாயிரம் பணுடவிப் பஃறலைச் சுமைகொண்
டேந்து பூமியிற் றவநிலத்தெல்லைதேர்ந் திசைப்பான்.

[இ—ள்] இறைவரிடம் சாபவிடைபெற்ற பிரம விஷ்ணுக்கள் இருவரும் தங்கள் தங்கள் இருப்பிடத்தை அடைந்தனர். சிவந்த தாமரையிலுள்ள நான்முகன் சிலகாலங்கழித்து ஆயிரம் படமுள்ள தலைகளாலும் ஆதிசேடன் சுமக்கும் நிலவுலகத்தில் தவம் செய்தற்குரிய இடத்தை ஆராய்ந்து சொல்லுவாராயினர். [எ—று] 29

## 120

அந்தமின்றி யவகந்தை யுற்றழிழந்த தேயலான்மா
லுந்திதோன்றி ஞேனறிகலா வுலகமற் றுளதோ
முந்துதேவர்க்கு முன்னவன் கடைவிழி முனிவாற்
சிந்தைஞான முற்றருந்தவப் பெருந்தலந் தெரிந்தான்.

[இ—ள்] எல்லையில்லாத அகந்தையை அடைந்து அழிந்ததேயல்லாமல் விஷ்ணு மூர்த்தியின் திருவுந்தித்தாமரையில் தோன்றிய பிரமதேவர் அறியாத உலகமும் வேறுளதோ? முற்பட்ட தேவர் மூவர்க்கும் முற்பட்டவராய், தேவதேவராய், மகாதேவராய் உள்ள பரம்பொருளாகிய சிவபெருமானுடைய திருக்கடைக்கண் நோக்கோடு கூடிய கோபத்தால் மனத்திலே ஞானம்வரப்பெற்று செய்தற்கரிய தவத்துக்கு உரிய சிறந்த தலத்தைத் தமது ஞானதிருஷ்டியால் ஆராய்ந்து தெளிந்தார். [எ—று] 30

## 121

ஞானதிட்டி யினறிந்து கண்டதன் பினர்நளினன்
மோனவித்தக முனிவரரரு மறை முழக்க
வானகத் தெகினப்பரி யுகைத்து வான்கயிலை
யானபுக்கொளித் திருவவி நாசிவந் தடைந்தான்.

[இ—ள்] தமது ஞானதிருஷ்டியினுல் ஆராய்ந்தறிந்தபின்பு பிரம •தேவர் சிறந்த முனிவர்கள் யாவரும் வேதகீதம் செய்ய ஆகாயத்தில் தமது வாகனமாகிய அன்னப்பறவையைச்செலுத்தி சிறந்த கயிலாயம் என்னும் திருப்புக்கொளியூரில்உள்ள திருஅவிநாசித்தலத்தை அடைந்தார். [எ—று] 31

## 122

உற்றதான மிப்பெயருடைத் தியாதென வுணர்வான்
முற்றுமாதி சங்கார வெல்லையினில் யாமுதலோர்
வெற்றெனப் புகுந்தொளிந்த தும்விநாச மின்றியதும்
பெற்றபூமி யென்றுகந்தனன் புகுந்தனன் பிரமன்.

(இ—ள்) இத்தலம் இப்பெயர் பெறுவதற்குக் காரணம்யாதெனக் கருதினுர் : பின்பு சர்வ சங்காரகாலத்திலே யாமெல்லாம் புகுந்து ஒளித்துக்கொண்டதும், எப்போதும் அழிவென்பதில்லாததும் ஆகிய தலம் இது எனக்கண்டு மகிழ்ச்சிகொண்டு அங்குதங்கினுர். (எ-று) 32

## 123

அன்ன வாம்பரியிழிந்து விட்டகல வங்கதுபோய்
முன்னு தூவியஞ்சிறை யினைவிதிர் விதிர்த்தலம்பிப்
பொன்னி ஞண்மலர்ப் பொய்கையம்புனற் கரைபுகுந்து
பின்னு மோதிமப்பெடை யொடுங்கண் களிபெருகும்.

(இ—ள்) பிரமதேவர் தமது அன்னவாகனத்தை விட்டிறங்க, அவ்வன்னமானது மின்னுகின்ற அழகிய சிறகுகளை உதறிக்கழுவிப் பொற்றுமரைமலர்கள் பொருந்திய பொய்கைக்கரையை அடைந்து அங்குள்ள பெண் அன்னங்களைக் கண்டு கண்கள் களிகூரப் பெற்றது. (எ—று) 33

## 124

தாமரைச் செழும் போதிுற்றவள நூற்செறிவா
ுமதித்த சேரடி யிஞை மேந்துகையாற்
காமரைத் துணைபுரிதலாற் கண்களெட்டு றலான்
மாமறைப் பிரான்றனை நிகர்வாவி கண்டலர்ந்தான்.

(இ—ள்) தாமரைமலர் பொருந்துதலால், வெண்மையான நூல் நிறைதலால், ... நீரை ஏந்துகையால், காமனைத் துணையாகக்கொள்ளுதலால். கண்கள் எட்டு உறலால் பிரமதேவரை யொத்துத்தோன்றும் அப்பொய்கையைக் கண்டு மனமகிழ்ந்தார். [எ—று] 34

பிரமதேவர் தாமரைமலரைப் பொருந்தியிருக்கிறார். பொய்கையும் தாமரை மலரைப் பொருந்தியுள்ளது. பிரமதேவர் வெள்ளிய பூணூலைச் செறிந்திருக்கிறார். வாவியில் தாமரை நூல்களும் வெண்மையுடையனவாய்ச் செறிந்துளது. பிரமதேவர் தமது கரத்தில் நீர்க்கரகத்தைக் கொண்டுளார். வாவியும் நீரை நிறையக் கொண்டுளது. மன்மதனைத் தனக்குத் துணைவனாகப் பிரமதேவர் கொண்டுள்ளார்: வாவி விரும்பியாடுகிறவர்களைத் தனக்குத் துணையாகவுடையது. பிரமதேவர் எட்டுக்கண்களையுடையவர்: இடந்தோறும் இடந்தோறும் தேன்பெருக்கெடுப்பது வாவி. ஆகலின், வாவி பிரமதேவரை ஒத்தது. இது சிலேடை அணி.

125

நீண்ட கார்முகம் பெறுதலானே மிசார்ந்ததனாற்
காண்ட குந்நிறம் பசுமையுங் கருமையுந்தரலாற்
பூண்ட மாதவர் பொருந்தலாற் புள்ளுயர்த்தனவா
லீண்டு மவ்வன முகுந்தனொத்திருப் பதுங்கண்டான்.

[இ—ள்] இப்பாடல், வாவியையும் விஷ்ணு மூர்த்தியையும் ஒப்பிடுகிறது. வாவி-மேகங்கள் தன்னிடம் வந்து பொருந்த உளது: சக்கரவாகப்புள் பொருந்தியது: நிறம் பசுமையும் கருமையும் கலந்து தோன்றுவது: பொருந்திய பெண்கள் தங்கியிருத்தல்: பறவைகள் மேலே பறந்துவந்து தங்குதல் முதலியன. விஷ்ணுமூர்த்தி—வில்லையுடைமையால், சக்கராயுதத்தைப் பொருந்துதலால், நீலமேக சாமள நிறத்துடன் விளங்குவதால், தவசிகள் பொருந்துதலால், கருடக் கொடியை உயர்த்தலால் என்க. [எ—று] 35

கார்முகம்பெறுதல், கார்-மேகம் : கார்முகம்-வில். நேமி-சக்கர வாகப்புள் : சக்கராயுதம். மாது அவர்-பெண்கள் : மாதவர்-தவசிகள். புள்-பறவைகள் : கருடக்கொடி. முகுந்தன்-விஷ்ணு. இதுவும் சிலேடை.

126

ஏயபின்னுள வியல்பெலா மெண்கணால் விழித்துத்
தூயசெம் பொனிற்சுடரு நான்முடிகளுந் துளக்கி
நேயமொன் றியசிந்தை யிலுவகையே நிறைய
நாயகன் றிருமுன் றிலை நணுகியா தரித்தான்.

[இ-ள்] பொருந்திய மற்றைய இயற்கை அழகுகளை யெல்லாம் எட்டுக் கண்களாலும் பார்த்துத், தமது நான்கு திருமுடிகளையும் நன்றாக அசைத்து, அன்புநிறைந்த மனத்தில் ஆர்வமும் பொங்க, உயிர்களுக்கெல்லாம் நாயகராக விளங்கும் சிவபெருமானுடைய சந்நிதியைப் பிரமதேவர் அடைந்தார். [எ-று] 36

127

தீரமாகியகங் கைகூவத் திலோர் தெண்டா
லாரவூன் றியே கபிலை மாநதிவர வழைத்துச்
சேரவேபரப் பிரமமந்திர முறை செபித்து
வாரமஞ்சன மாடினான் றேடினான் மறையோன்.

[இ-ள்] கங்காகூபம் மென்னும் தீரத்திலே ஒரு தண்டாயுதத்தால் நன்றாக நான்கு வேதங்களையுமுணர்ந்த பிரமதேவர் ஊன்றி, கபிலை நதியை வரவழைத்து, அதில் பரப்பிரம மந்திரத்தைச் செபித்துக்கொண்டு அன்புடன் மூழ்கினார். [எ-று] 37

128

நையலற்ற பூங்காவன நறுநிழற் செறிவிற்
பையிருட் கொடுங்கூவி ளப்பாதவப் படப்பிற்
செய்யபொற் றளிரீன் றுவிண் சேணுறப் பணைத்தாங்
கையிதழ்ப் பெருவில்வ மொன் றமருதல் கண்டான்.

[இ-ள்] பின்பு பிரமதேவர் நிறைந்த நந்தவனத்திலே உள்ள வில்வமரங்களின் நடுவிலே சிவந்த பொன்போலும் தளிர்விட்டுக் கொண்டு ஆகாயத்தை அளாவியுயர்ந்து விளங்கும் ஐந்து இதழ்களை யுடைய பெரிய வில்வமரமொன்று இருத்தலைக் கண்டார் [எ-று] 38

129

அப்பெருந் தருவாதி யிலணைந்து நின்மலமா
யொப்பரும் புனற்சுதை மணல்வேதி கையுய்த்து
வைப்பெனும் பதமொன் பதிற்றெரு பதுவரைந்து
பைப்புறந் தருபன்ன கப்பருமணி பரப்பி.

[இ-ள்] அப்பெரிய வில்வமரத்தின் அடியிற்சேர்ந்து நிர்மல மான ஒப்பற்ற மணலும் நீரும் கொண்டு மேடை செய்து எண்பத் தொருபதமந்திரங்களை அதில் வரைந்து சிறந்த நாகரத்தினங்களைப் பரப்பி [எ-று] 39

130

சீதளங் கிளரிமசல பாளிதந் தெளித்து
மீதகன்ற வற்கலையின் மேல்வெண்படாம் விரித்துக்
கேதமின்றி யகுசைநுனி திசைதொறுங் கிடத்தி
யாதல்கண்ட பின்மேல் விரிவிதானமும மைத்து.

[இ-ள்] மிகக்குளிர்ந்த இமயத்தினின்று கொண்டுவந்த பச்சைக் கருப்பூரப் பொடியைச் சிந்தித் தெளித்து, அதன்மேல் அகலமான மரவுரியை விரித்து, அதன்மேல் தூய வெள்ளை ஆடையை விரித் துக், குற்றமில்லாத தருப்பைப் புல் நுனியை நான்கு திசையிலும் பரப்பி, அதன் பின்பு மேற்கட்டியும் கட்டி [எ-று] 40

131

குங்குலாதி யசந்தகின றும்புகை கொளுவிப்
பைங்குசோத கதாபன மெங்கணும் பணியா
சங்கமாமுனி வோர்கள் வேதத்தொனி தழங்கப்
பங்கயாதனப் பதவியான் யோகினிற் பதிந்தான்.

(இ—ள்) குங்கிலியம் சந்தனம் அகில் முதலிய கலந்து நல்ல புகை யூட்டி, பசிய தருப்பை சலத்தால் எங்கெங்கும் தெளித்து, கூட்டமாகிய முனிவர்கள் வேதமந்திரங்களைச்சொல்லி முழக்கத்தைச் செய்ய திருமால் திருவுந்தித் தாமரையைத் தமக்குரிய இடமாகக் கொண்டுறையும் பிரமதேவர் யோகஞ் செய்பவரானார். (எ—று 41

## 132

திசையெலா முகமாயினுந் திருத்தகு முகத்தை
விசயமேரு வினேர் பெறவிழித்து மெய்யுணர்ந்தங்
கிசையவாயு வைவிகழ் சுழுனைவழி யியக்கி
யசைவிலா தமர்ந்தனனதன் பெருமையெம் மளவோ.

(இ—ள்) நான்கு திசைகளையும் நோக்கிய நான்கு திருமுகங்களை யுடையவராயினும் பிரமதேவர் தமது அழகிய நேர்முகத்தை வெற்றி யுள்ள மகாமேருகிரியை நோக்கி நேராக வைத்து விழித்தகண்களை யுடையவராய் உண்மைப்பொருளை நன்றாக ஆராய்ந்து தகுதியாகப் பிராணவாயுவைச் சுழுமுனைநாடியிற் செலுத்தி அசைவில்லாமல் யோகத்தமர்ந்தார் : அந்தயோகத்தின் பெருமை எம்மால் அளவிட்டுச் சொல்ல இயலுமோ ? இயலாது. (எ—று) 42

## 133

தாரகா தெரிசன மெனுஞ்சமாதி கூடியபின்
றேரவேழு பதேச மந்திரசெப மியற்றி
யாரவேநிறை திருப்புனற் றருப்பண மளித்துப்
பேரவாவுடன் பூசனை பேணுவான் பெறுவான்.

(இ—ள்) தாரகாதரிசனம் என்னும் சமாதியாகிய சிவநிஷ்டை கூடிப் பின்பு, உபதேசமாகக்கிடைத்த சப்தகோடி மகாமந்திரங்களை யும் விதிப்படி செபித்து, அந்தச் செபங்களுக்கிசைய மேன்மையான நீரினால் தருப்பணங்களையும் கொடுத்து, (ஓமங்களையும் பண்ணி) மிக்க அன்புடன் சிவபூசையை விரும்பிச்செய்யத்தொடங்கினான்.(எ-று) 43

134

பூதநாயக னமர்ந்ததற் புருடவான னமுன்
மூதராமணி யழுத்திய முகவலம் புரியுள்
வேதவாய் மையிலருக்கிய யவிசேட மங்கமைத்துத்
தீதிலாவெதிர் பரப்பிய திரவியச் சிறப்பில்.

*(இ—ள்) பின்பு உயிர்களுக்குத் தலைவனாகிய சிவபெருமானுடைய ஈசானம் தற்புருடம் அகோரம் வாமதேவம் சத்தியோசாதம் என்னும் ஐந்து திருமுகங்களில் கிழக்குநோக்கிய தற்புருடமுகத்தின் முன்னே சிறந்த நாகரத்தினக்கற்கள் பதித்த முகத்தையுடைய வலம்புரிச்சங்கங் களில் வேதருக்குகளால் அருக்கியம் விசேஷமாய் அமைத்துக் குற்ற மில்லாத முன்பு கொணர்ந்து வைத்த பூசாதிரவியங்களைச் சுத்தம் செய்து (எ—று)* **44**

135

திலவருந் தெளிவாதி சுத்திகளெலாஞ் செலுத்தி
யலகிலஞ் சனவான் பயனைந்துமா குவித்துப்
பலசெழுங் கனிசருக்கரை பாறயிர் நெய்தே
னிலகிளம்புன லோதன மெழின் முடிக்கேற்றி.

*(இ—ள்) எண்ணெய், பஞ்சகவ்வியம், பழவர்க்கம், பழச்சாறு, சர்க்கரை, பால், தயிர், நெய், தேன். இளநீர் அன்னம் முதலிய வைகளைக்கொண்டு இறைவர் திருமுடியின்மேல் விதிப்பிரகாரம் அபிஷேகம் செய்தும், [எ—று]* **55**

136

சேர்ந்த சந்தனச் சேதகந்தெளிந்ததண் பனிநீர்
கூர்ந்தபஞ்ச வில்வத்தளிர்க் குழம்புபைங் குசைநீர்
நேர்ந்தசங்க நீர்பிரணவப் பொருளினு னிரப்பி
யார்ந்த கங்கைநீர் வாமமந்திரத் தினாலாட்டி.

*[இ—ள்] சந்தனக் கலவை பசிய குழம்பு, பன்னீர், பஞ்ச வில்வத்தளிர்களால் ஆகிய குழம்பு, தருப்பை ஜலம், சங்க ஜலம் முதலியவைகளையும் பிரணவத்துடன் கூடிய மந்திரங்களால் நிறைத்து நிறைந்த கங்கா ஜலத்தை வாம மந்திரங்கொண்டு திரு மஞ்சனம் செய்தும். (எ—று)* **46**

137

விஞ்சுமான் மதம்வருடி மென்மலர்த் தொடையிலேந்து
செஞ்சுடர்க் கலன்றேவ தாருத்துகில் செறித்துப்
பஞ்சவார முதினிய தோபூப தாம்பூல
நெஞ்சவாதர வுடனிவே தித்துநேர் நின்று.

(இ-ள்) சிறந்த கஸ்தூரியணிந்தும், மென்மையான மணமலர் மாலைகளையணிபெறச் சூட்டியும், பிரகாசம் வீசும் பொன் இரத்தினம் முதலிய மாலைகளைக்கொண்டு அலங்கரித்தும், மெல்லிய தூசும் துகிலும் பட்டும் அணிந்தும் பஞ்சபக்ஷிய பரமான்னத்துடன் இனிய அபூர்வ வர்க்கங்களும் நிவேதனம் செய்து தாம்பூலமும் நிவேதித்து மனமகிழ்வுடன் சந்நிதியில் நின்று. (எ—று) 47

138

நீடிதாநறுந் தூபமுந் தீபமு நிறைத்தே
யாடிவெண் குடைநிழற்றி வெண்கவரிக் காலசைத்து
நாடிவெண் டிருநீறணிந் தருமறை நவின்று
பாடியும் புகழ்ந்தாடி னன்பரவினன் பதுமன்.

(இ—ள்) நிறைந்த சுகந்த தூப தீபங்காட்டி, கண்ணாடி, குடை வெண்கவரி முதலிய உபசாரங்களையும் செய்து வெள்ளிய திரு நீறு சாத்தி, அரிய வேத மந்திரங்களை உச்சரித்துக் கீதம் பாடியும் ஆனந்தக்கூத்தாடியும் புகழ்ந்து துதித்துப் பிரமதேவர் வணங்கினார். (எ—று) 48

139

வேறு.

நீண்டவிந்நெறி குன்றுமனித் தமிப்பரி சேயென்ன
யாண்டுநூறடையுங்காறு மிகுந்தவன்திருந் தலுற்றான்
பூண்டநாளிறு தன்னிற் பொற்பமர் கயிலைநாத
ஞண்டினித மர்ந்துதானே யருட்டிருக் கடைக்கண் சாத்தி.

(இ-ள்) மேலான இந்த விதிவழுவாமல் நாடோறும் செபம்பூசை தியானம் முதலியவற்றை நூறு வருஷம் வரையில் பிரமதேவர் செய்துவந்தார். நூறு வருஷம் முடியும் வரையில் மேன்மையான தவஞ்செய்து வந்தார். அந்தநாள் முடிவில் அழகியதான திருக்கயிலாயநாதர் அவ்விடத்து இனிமையாக வீற்றிருந்து திருவருள் நோக்கம் செய்து. (எ—று) 49

## 140

திருவுளமகிழ்ந்து பூசைச்சிவ லிங்கமிட மாஞானப்
பெருவரைப் பவளமேனி பெய்தவெண் ணீறுமாகிப்
பொருவரும் புயங்களுன் கும்புனிதவான னமுந்தோன்ற
வெருவரு மிருவர்தேடற் கரியவன் வெளியேநின்றான்.

(இ–ள்) திருவுளம் மகிழ்ந்து பிரமதேவர் பூசை செய்துவந்த அருட்குறி வடிவினின்று ஞானமே திருமேனியாகப் பவளம் போன்ற தமது வடிவத்தில் திருவெண்ணீற்றைப் பூசியவராய் சமானமில்லாத நான்கு திருத்தோள்களும் பரிசுத்தமான ஐந்து திருமுகங்களும் தோன்ற அஞ்சுகின்ற பிரமவிஷ்ணுக்களால் காண்பதற்கு அரியவராகிய சிவபெருமான் வெளிப்பட்டுக் காட்சிதந்தருளினர். (எ–று) 50

## 141

கண்டவேதி யனேர்நின்று கங்கையஞ்சடை யாய்போற்றி
வண்டறு விதழிமாலை வனைதருமணியே போற்றி
விண்டரா தலங்களஞ்சும் விடமயின்றிருண்டகாள
கண்டவேதியனே காமற்காய்ந்த கண்ணுதலே போற்றி

(இ–ள்) அக்காட்சியைக்கண்டு தரிசித்த பிரமதேவர்எதிரிலே நின்று கங்கையைத்தரித்த சடையினையுடையவரே உம்மை வணங்குகின்றேன். வண்டுகள் இடையறாமல் மொய்க்கப்பெற்ற கொன்றைமலர்மாலையைத் தரித்த மாணிக்கமணிபோன்றவரே! விண்ணும் மண்ணும் அஞ்சுவதற்கு ஏதுவான ஆலகாலவிடத்தையுண்டருளியதால் கறுத்தகண்டத்தையுடையவரே! மன்மதனைக் கோபித்து எரித்தருளிய நெற்றிக்கண்ணையுடையவரே! வணங்குகின்றேன், வணங்குகின்றேன். (எ–று) 51

## 142

அண்ணலே போற்றியாடலற்புதானந்த போற்றி
பெண்ணொரு பாகபோற்றி பிறங்கல்சேர் பிஞகபோற்றி
யெண்ணுமஞ் செழுத்தாய்போற்றி யிடபவாருட போற்றி
கண்ணினுக் கரியஞானக் கருணையங்கடலே போற்றி.

(இ–ள்) பெருமையையுடையவரே! வணங்குகின்றேன், திருநடனத்தைச் செய்கின்ற ஞானனந்த சொரூபரே! வணங்குகின்

றேன். உமாதேவியாரை ஒரு கூருக வுடையவரே! வணங்குகின்றேன் கயிலைமலையில் எழுந்தருளியுள்ள பிநாகம் என்னும் வில்லை யுடையவரே! போற்றி. தியானிக்கப்படுகின்ற பஞ்சாக்கரசொரூப முடையவரே! போற்றி. இடபவாகனத்தையுடையவரே! போற்றி. ஊனக்கண்ணுல் காண்பதற்கு அருமையான ஞானவடிவாகிய கிருபாநிதியே போற்றி (எ—று) 52

## 143

என்பிழைபொறுத் தாய்போற்றி யிரங்குவோர்க் கெளியாய்போற்றி
யன்பினுள முதேபோற்றி யாரணப்பொருளேபோற்றி
மின்படர்மழு வாய்போற்றி வெள்ளிவெற் புகந்தாய் போற்றி
தென்புலத் தெழுந்தகாசிச் செழுமுதற் கொழுந்தேபோற்றி.

(இ-ள்) எளியேனுகிய யான் செய்த பிழைகளையெல்லாம் பொறுத்தருளியவரே. அன்பால் உருகுகின்றவர்கட்கு எளிமையானவரே! அன்பினிடமாகத்தோன்றும் அமுதம் போன்றவரே! வேதப்பொருளாயுள்ளவரே! ஒளியை வீசும் மழுப்படையை யுடையவரே! வெள்ளிமலையை விருப்பமாக உடையவரே! தென்திசையில் உள்ள காசியில் எழுந்தருளிய முழுமுதற் கொழுந்தாக உள்ளவரே! போற்றி (எ—று) 53

## 144

ஒருவனு மிறையேபோற்றி யுலகுயிர்க்கு யிரேபோற்றி
பருவரலொழி விலாதபாவ மோசனனே போற்றி
பொருவரு புராரிபோற்றி புராணபுக்கொளி யாய்போற்றி
திருவவிநாசிநாத சிவசிவ போற்றி போற்றி.

(இ—ள்) ஒப்பற்ற தலைவரே போற்றி. உலகத்திலுள்ள உயிர்க்குயிரானவரே! போற்றி. துன்பம் நீங்காத பாவங்களைப் போக்கியருளுபவரே! போற்றி. ஒப்பில்லாத திரிபுரங்களை அழித்தவரே; போற்றி. பழமையான திருப்புக்கொளியூரில் எழுந்தருளியுள்ளவரே! போற்றி, திருஅவிநாசித்தலத்தில் உள்ளவரே! சிவ சிவ போற்றி போற்றி. (எ—று) 54

145

இவ்வகைத் துதிகளோ ராயிரமெடுத் தேத்திநேமி
வவ்வியபிதக் கணங்களாயிரம் வலனிற் சூழ்ந்து
செவ்விய கிரியையாரப் பணிதலாயிர முஞ்செய்து
வெவ்விய குறைபாடெண்ணி மெலிவுற நிற்கும்வேலை.

(இ—ள்) இப்படிப்பட்ட ஸ்தோத்திரங்களை ஆயிரமாகச் சொல்லித்துதித்து, ஆயிரம் பிரதட்சிணம் வலமாக வந்து, நமஸ்காரம் ஆயிரம் செய்து, தனக்குள்ள கொடிய குறைபாட்டை எண்ணி மெலிந்து நிற்கும் காலத்திலே. (எ—று) 55

146

வேதியவிருப் பினேற்றவித மெனென்றெந்தை சாற்றப்
போதினையுகந்துளோ னும்புகலு வான்புகுந்தான் முன்னந்
நீதினைவிளைத் தயானுன் றிருமுடிகண்டே னென்ற
சோதனைபலித்த சாபந்தொலைத் தருளெனத் துதித்தான்.

(இ—ள்) சிவபெருமான் பிரமதேவரை நோக்கிப் பிரமனே! நீ தவஞ்செய்து விரும்பியவரம் யாது? எனக்கேட்டருள, தாமரையில் விரும்பி எழுந்தருளியுள்ள பிரமனும் சொல்லத் தொடங்கினன்: முன்பு தேவரீருடைய திருமுடியைக் கண்டதாகச் சொல்லிய பொய்ம்மொழிக்குக் கிடைத்த பெருகிய சாபத்தைப் போக்கியருளுக என வேண்டித் துதித்து நின்றான். (எ—று) 56

147

நின்பெருந்த வார்ச்சனைக்கா நீக்கின நிகழ்ந்தசாப
முன்புபோலினி யெஞ்ஞான்று மும்முதற் பதவியீந்தோ
மின்புறவினி துவாழி யென்றலுமெளியற் சார்ந்த
துன்புகேதகைக் குமின்றுதொலைத் தருள்செய்தி யென்றான்.

(இ—ள்) பிரமனே! நீசெய்த பெருந்தவத்துக்கும் சிவார்ச்சனை சிவபூசையாதியவைகட்கும் மகிழ்ந்து முன்பு உனக்குண்டான சாபத்தைப் போக்கியருளினோம். முன்பு போலவே இனி எப்பொழுதும் முத்தொழில்களுள் முற்பட்டு விளங்கும் சிருட்டித்தொழிலையும் உனக்குத் தந்தோம்: இன்புற வாழக்கடவாய் என்று சிவபெருமான் அருளுதலும் எளியேனாகிய என்னைச் சார்ந்து துன்புற்ற தாழம்பூவுக்குள்ள சாபத்தையும் நீக்கியருளுவீராக என வணங்கி நின்றான். (எ—று) 57

148

வண்டுளர் மலரோய்கேணீ மாதவ மொன்றினாலே
கொண்ட தாமிரண்டு சாபக்குறைதவிர் கொள்கைத்தாமோ
பண்டுநாமிகழ்ந் தகைதை பார்ப்பதி முதலாமற்றை
யண்டரும் புனைவாரந்தவற் புதநமதே யென்றார்.

(இ-ள்) வண்டுகள் மொய்க்கும் தாமரையிலுள்ள பிரமனே! சிறந்த ஒரு தவத்தைக் கொண்டே இரண்டு சாபங்களையும் போக்கிக்கொள்ள முயற்சி செய்தல் தக்கதோ? முன்பு நமக்கு ஆகாதென விலக்கிய தாழம்பூவைப் பார்வதி தேவியார் முதலாகவுள்ள எல்லோரும் சூடிக்கொள்ளுவர். அது நமக்கு மகிழ்வைத் தருவதேயாம் என வரந்தருளினார். (எ-று) 53

149

ஆங்கதுகேட்ட வேதாவண்ணலே திருவுள் ளத்தின்
பாங்கிது போதுமென்று பரவசத்தழுந்தி நின்றோர்
பூங்கமழ்கைதை யென்னும் புதுமலர்வகுத்துத் தென்பாற்
பாங்குடைய வட்குச்சாத்தி யேத்தினன்பதுமத் தண்ணல்.

(இ-ள்) அதைக்கேட்ட பிரமதேவர் சிவபெருமானைத் துதித்து நின்று சுவாமி! தேவரீர் திருவுளத்துக் கொண்டருளிய தகுதியாகிய இது போதும், என்று பரவசப்பட்டு நின்று புதிதாகத் தாழம்பூவைப் படைத்துப் பார்வதிதேவியாருக்குச் சாத்தித்துதித்தான். (எ-று) 59

150

வரன்முறை முகம்பதாகை வாரணமென வுள்ளோரு
முரனுடல் கிழித்தநேமி முகுந்தனுமிருந் ததானுங்
கரனில்வச் சிரனும்வானக் கடவுள ரெவருமாதி
பரனருள் கைதசூடியிருப் பதைப்பதுமன்கண்டான்.

(இ-ள்) முறையாக யானைமுகத்தையுடைய விநாயக மூர்த்தியும், சேவற்கொடியுடைய முருகவேளும், முரன் என்னும் அசுரனை அழித்த சக்கரத்தையுடைய விஷ்ணு மூர்த்தியும், வச்சிராயுதத்தையுடைய இந்திரனும், மற்றும் தேவர்கள் யாவரும் ஆதிபகவனாகிய சிவபிரான் அருளால் சாபம்நீங்கின தாழம்பூவைச் சூடிவிளங்குவனதப் பிரமதேவர் கண்டார் (எ-று) 60

*பதாகை-கொடி. வாரணம்-யானை, கோழி. நேமி-சக்கரம். முகுந்தன்-விஷ்ணு. வச்சிரன்-இந்திரன். கைதை-தாழை. பதுமன்-பிரமதேவர்.*

## 151

அய்யநின் னருள்பெற்றுய்ந் தேனதற்கியானணு மட்டேனுஞ்
செய்யுமோர் கைம்மாறுண்டோ தெண்டிரைச் செழுநீர்வாரி
மையுற நிமிர்ந்து விம்மிவானகம வியநின்று
பெய்யுமா முகிற்குவையஞ் செய்யுமாபிறி துண்டேயோ.

(இ-ள்) *ஐயனே! தேவரீருடைய திருவருளைப்பெற்றுப் பிழைத்தேன். அதனுக்கு அடியேன்செய்யும் பிரதியுபகாரம் அணு அளவேனும் உள்ளதா? கடல்நீரை முகந்து ஆகாயத்திலே சென்று நிறைந்து மழைபொழியும் மேகத்துக்கு உலகம் ஏதேனும் செய்யும் உபகாரம் உண்டா? இல்லை என்றபடி.* (எ-று) 61

*மட்டு-அளவு. கைம்மாறு-பிரதியுபகாரம். வாரி-கடல். மை-கருமை. முகில்-மேகம். வையம்-உலகம். இதனை "கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு-என்னாற்றும் கொல்லோ உலகு" என்னும் திருக்குறள் நோக்கியறிக.*

## 152

என்றுபுண்டரிகன் போற்றி யெல்லையிலார் வங்கூர்ந்த
தன்றியுமமை யாவாகியரிய புக்கொளித் தானத்தை
யொன்றினன் பின்னராகு முயரியவளங் கள்யாவு
மன்றுதன் சிந்தையார வணியலங்காரங் காண்பான்.

(இ-ள்) *என்று இவ்வாறு பிரமதேவர் போற்றி எல்லையில்லாத ஆர்வம்மிக அமையாதவராய் அருமையான திருப்புக்கொளி ஆலயத்தைஅடைந்து அன்போடுகூடி பின்னர் உண்டாகும்வளப்பங்கள் யாவற்றையும் மனமாரக் காண்பவனாய்.* (எ-று) 62

## 153

ஆதிகாபாத மந்தமடர்ந்த கால்குடங் தழீஇய
போதிகாதாரந் தூலங்கபோத கம்புறஞ் சேர்யாழம்
வேதிகாகிரீ வம்பண்டி விண்டலம் பரவுசாலை
சோதிகால் சிகரஞ்செம்பொன் செருகுமணிக் கலசந்தூவி.

154

மண்ட பவருக்கம்புக் கவாயில்குத்தி ரங்கபாடங்
கண்ட சோபானந் தூணங்காவணங் கவின்பதாகை
கொண்ட மாதம்பஞ் சூழல்கோபுரம் விபுலகூல
மண்ட லமணித்தேர்வீதி வாசிதோரணங் கண்மற்றும்.

63—64. இரண்டு பாடல்களும் ஒரு தொடர்.

(இ-ள்) அடிமுதல் கலசம் ஈருகஉள்ள போதிகை, தூலம், கபோதகம். யாழம், வேதிகை கிரீவம் பண்டி, சோதியையுடைய சிகரம், பசும்பொற்கலசம், ஸ்தூபி, மண்டபவகைகள், புகும்வாயில் கள், கதவு, சோபானம் தூண், பந்தர், அழகியகொடி, பெரியஸ்தம் பங்கள், கோபுரம், அழகியதேர், வீதிகள், தோரணங்கள் முதலிய எல்லாவற்றையும். (எ-று) 63–64

இப்பாடல்களில் கோயில் உறுப்புக்கள்யாவும் சிற்பநூல் விதிப் படி கூறப்பட்டமை காண்க. தூலம்-உத்திரம், தாவாரந்தாங்கி, கபோதகம்—சித்திரக்கம்பி யாழம்-யாளிவரிசை,வேதிகை-மேடை, கிரீவம்-உத்திரத்தைத்தாங்கும் உறுப்பு, பண்டி, சிகரம்—கொடுமுடி, ஸ்தூபி—கலசம், சோபானம்—படி.

155

தன்னொளி மணியாற்பொன்னுற் றகும்படிநினைந்து கண்டான்
தொன்னெறி முறையேதேவ துந்துமிமுழங் கச்செய்தான்
மன்னுசீர் மேடத்திங்கண் மகசிரநட்சத்திரத்தில்
தென்னமர் ககனலோக தேவரைவர வழைத்தான்

(இ-ள்) தனக்குத்தானே ஒப்பாகஉள்ள ஒளிவீசும் இரத்தினங் களாலும், பொன்னினாலும் தக்கவாறு ஆலோசித்து மேலேகண்ட வாறு செய்து முடித்தான். பழமையான முறைப்படி தேவதுந்துபி முதலிய வாத்தியங்களையும் முழங்கும்படி செய்தான். நிலைபெற்ற சிறப்பினை உடைய சித்திரைமாதத்து மிருகசீரிட நட்சத்திரத் திலே அழகிய தேவலோகத்திலிருந்து தேவர்களையும் வருவித் தான். (எ-று) 65

156

அன்னவன்றனேசைவாகமமறையாசாறுகிப்
பன்னுகங்கணங்கைசாத்திப்பாலிகாங்குரமும்பெய்து
முன்னுளவேதஞ்சொற்றமுறையினிறைவழாமே
மின்னவிரலங்கற்றூசின்விடைக்கொடிப்படாமுயர்த்தான்

[இ—ள்] பின்பு, அப்பிரமதேவரே சிவாகமம்வல்ல ஆசிரியனும் சொல்லப்படும் (ரக்ஷையை) காப்பணிந்து முளைப்பாலி கைகளையும் வைத்து பழமையான வேதவிதிப்படி ஒளியினை வீசும் மாலைகளை அணிந்த இடபக்கொடியை உயர்த்தினன். [எ—று] 66

157

உடல்விழி யிறைவன் முன்னோரொளி வடமுதைந்துபற்றத்
தடநெடுவயிர நேமிச்சகடு ருண்டிரத மூரச்
சுடர்மணிக்கவி கைதுன்றத் துவசங்கள் விசும்புதூர்ப்பக்
கடலொலி யென்னவே தங்கறங்கொலி யிறங்கியார்ப்ப.

[இ—ள்] உடம்புமுழுவதும் கண்களாகப்பெற்ற இந்திரன் முதலாகிய தேவர்கள் வடங்களை உதைந்து பிடிக்க, மிகப்பெரியவயிரங்களால் செய்யப்பட்ட உருளைகள் உருண்டு இரதம் செல்ல, பிரகாசம் வீசும் மணிக்குடைகள் நெருங்கிவர, கொடிகள் ஆகாயத்தை மறைக்க, சமுத்திரத்தில் எழுந்த அலையொலிபோன்று வேதபாராயணம் செய்வதால் உண்டான ஒலிவிளங்கித் தோன்றும்படியாக. [எ—று] 67

முன்னோர்-முதலியோர். நேமிச்சகடு-சக்கரம் [தேருருள்] கவிகை-குடை. துவசம்-கொடி. விசும்பு-ஆகாயம்.

158

திருவுலாவரவு போற்றி விழாவணி திருந்தக்கண்டு
வருவதாமொரு பதாநாட் சித்திரை மதியின்காலை
நிருதிவாழ் திசையிற்செய்த நிசியரிதீர்த்த மாட்டித்
தருமவேற்றுயர் பதாகைதல முறத்தணித் தபின்னர்.

[இ-ள்] இறைவர் தேரூர்ந்துவரும் காட்சியைக்கண்டு வணங்கிப் போற்றித், திருவிழாவின் அலங்காரத்தையும் செவ்வையாகச் செய்து, பத்துநாட்கள் விழாநடத்திப் பின்புசித்திரை நட்சத்திரத்திலே காலையில் நிருதித்திசையிலே உள்ள சிங்க தீர்த்தத்திலே தீர்த்தமுங்கொடுத்துத் தருமவடிவாக உயர்த்தப்பட்டுள்ள இடபக் கொடியை இறக்கிப் பின்னர் [எ—று] 68

159

மின்னமர் விண்ணுளோர்க்கு விடைகொடுத்த கற்றியப்பாற்
பொன்னக ரென்னவுய்த்த புரவலங் காரம்போக்கி
முன்னமர் வனவேயாக முடித்தனன் முடியாமுன்னர்
மென்னறு மலரோன் பின்னும்வேண்டுவ பகர்வதானுன்.

[இ-ள்] தேவர்கள் யாவரும் அவரவர் இருப்பிடம் செல்ல விடை கொடுத்து அனுப்பி, திருவிழாவுக்கெனச் செய்துள்ளபலவகைப்பட்ட அலங்காரங்களையும் கழித்துப் பிரமதேவர் சிவபிரான் முன்பு நின்று வேண்டிக்கொண்டு விண்ணப்பிப்பாராயினர். [எ—று] 69

160

பூதரிலுயர்ந்து ளோர்கட்பொய் யுரைபுகன்ற பொல்லார்
தீதகதெய்வ நிந்தைதேசிகர்ப் பழித்தல் செய்தார்
ஆதரவிகழ்ந்த கோளர சத்தி யரடாத துண்போர்
காதரமனத் தர்வஞ்சர்கபடர் சான்றுரைப் போர்கள்வர்.

[இ—ள்]உயர்ந்தோர்கள் முன்பு பொய்ம்மொழி சொல்லும்பொல்லாதவரும், தெய்வங்களை நிந்திப்பவர்களும், ஆசாரியனைப் பழித்துரை செய்வோர்களும், தமக்குப் பற்றுக்கோடாக உள்ளவர்களை இகழ்ந்தோரும், கோள்சொல்லுவோரும், அசத்தியம் சொல்வோரும், உண்ணத்தகாத உணவுகளைப் புசிப்போரும், பேராசையுடையோரும், வஞ்சகரும், பொய்ச்சாட்சி சொல்லுவோரும், திருடரும் [எ-று] 70

161

தானவர் தறுகட்டீய தகுவிய ராதியாக
வேனையர்தவஞ் செய்தாலு மென்குறை சீர்த்தல்போல
வூனமேதீர்க்கு மிந்தவுதியர் கோன் காசினிக்குள்
வானவர் முனிவர் சித்தர்தவ மொன்றுநூறுமல்க.

[இ-ள்] இராக்கதர்களும், அஞ்சாமையையும் தீமையையும் உடைய அரக்கிகளும் ஆகிய இத்தகையோரும் இத்தலத்திலே வந்து தேவரீரைப் பூசிப்பார்களாயின் என்னுடைய தீமைகளையெல்லாம் அகற்றி ஆட்கொண்டருளியபடியே, இந்தச் சேரர் நாட்டிலே தேவர், முனிவர், சித்தர் ஆகியோர்செய்யும் தவம் ஒன்று நூறாகப் பெருகவும் [எ-று] 71

162

வருகதிரிரவி தோன்றுமகர சத்தமி யின்மாசி
தருகதிமகத் தின்மீனச்சசி யினுத்திரத் தின்காலை
பெருகதிசிவ தீர்த்தங்கொண் டாலயம் பிறதானத்தி
னருகதிரொரு கான்மூழ்க கங்கையாட் டொருநூறாக.

[இ-ள்] கிரணங்களை வீசும் சூரியன்தோன்றும் தைமாதத்துச் சப்தமித் திதியிலும், மாசிமாதத்து மக நட்சத்திரத்திலும், பங்குனிமாதத்துப் பௌர்ணமியுடன் கூடிய உத்திர நட்சத்திரத்திலும் சிவ தீர்த்தத்தை எடுத்து ஆலயத்திலும், மற்ற இடங்களிலும், அருகிலே ஒரு முறை ஸ்நானம் செய்யக் கங்கை நதியில் மூழ்கிய பலன் ஒன்றுக்கு நூறு மடங்கு அதிகமாக உண்டாகவும் [எ-று] 72

## 163

மருமலரொன்று சாத்தவல மொன்றுவர மெய்ஞ்ஞானத்
திருவெழுத் தொருகாலுன்னத் தீபமொன்றி ரவிலேற்ற
வருமிவையா தியாகமன் னியதவங் கட்கெல்லா
முருவமாகி யபலன்க ளொன்று நூறுகிமல்க.

[இ—ள்] மணம் பொருந்திய மலர்களில் ஒன்றை எடுத்துச் சாத்தினும் ஒருகால்வலம்சூழ்ந்தாலும், சிவஞானத்தை விளைவிக்கும் திருவெழுத்து ஐந்தையும் ஒருதடவை செபித்தாலும் இரவிலே ஒருவிளக்கு இட்டாலும் இவைபோன்ற சிவநெறித் தொண்டுகளில் (ஒன்றையேனும் பலவற்றையேனும்) செய்தாலும் நிலைபெற்ற இச்சிவத்தொண்டுகள் ஒன்றுக்கு நூறாகப்பலன்கள் பெருகிடவும் [எ-று] 73

## 164

இந்தமாத லத்திலே யானியற்றிய திருவிழாவை
யைந்துபூ தங்கள்வைகுங் காலமுமயர்விலாது
முந்துமிப் புடவியாளு முழுமணி மகுடவேந்தர்
நந்துதல்கோட லென்னுநவை யுருவகை நடாத்த.

[இ—ள்] இந்த மேலாகிய திருத்தலத்திலே யான் செய்த இந்தத் திருவிழாவை பஞ்சபூதங்களும் நிலைபெறும்காலம் வரையில் சோர்வில்லாமல் பழமையான பூலோகத்தை ஆளும் இரத்தினகிரீடம்தரித்த அரசர்கள் சிவாகம விதிப்படி குறைவில்லாமல் நடத்தக் கடவர்கள் [எ—று] 74

## 165

இப்பெருவரங் கணல்கி யெல்லையில் கற்பங்தோறுஞ்
செப்புதற் கரியதொல்லைத் திருவவி நாசிதன்னில்
விப்பிரமுனி வர்வேத விதிமுறை பூசைகொண்டு
வைப்புறு பொருளாய் வாழவேண்டினன் வகுக்கவல்லான்.

[இ—ள்] மேலே வேண்டிக்கொண்டபடியே இந்தச் சிறந்த வரங்களை யெல்லாம் கொடுத்தருளி எல்லையில்லாத கற்பங்கள் தோறும் சொல்லுதற்கு அரிதாகிய பழமையான திரு அவிநாசித்தலத்திலே அந்தணர்களாகிய முனிவர்கள் வேதசிவாகம விதிவழாமல் பூசை செய்யுமாறு ஸ்திரமாக தேவரீர் எழுந்தருளி இருத்தல் வேண்டும் என படைத்தற் கடவுளாகிய பிரமதேவர் பிரார்த்தித்துநின்றார் [எ—று] 75

## 166

தேவதேவிந்த மாற்றந்திருச் செவிததும் பத்தேக்கி
யாவதேபுரிது மென்றங்க முதவாக்கருளிச் செய்தான்
பூவகமகிழ்வோ னிந்தப்புனித மேயமை யுமென்று
மேவரும்பத விக்கேகவிடை கொளுமவிருப் பினின்று.

[இ—ள்] தேவதேவராகிய சிவபெருமான் பிரமதேவர் வேண்டிக் கேட்டுக்கொண்ட விண்ணப்பங்களைத் திருச்செவி சாத்தியருளி அவ்வாறே செய்வோம் எனத்திருவாய்மலர்ந்தருளினார். பிரமதேவர் இந்தப் பெருங்கருணையே போதும் என மகிழ்ந்து தன்னுடைய இருப்பிடமாகிய சத்தியலோகத்துக்குச் செல்ல விருப்பி நின்று [எ—று] 76

## 167

வாசமேமலரே தேனேவான் கனித்தெளிவே வாழ்வே
நேசமேறினை வேயாவுநின் செயலலதின் றேயாற்
பேசலாவெளி யேனின்னும் பிழைப்பினும் பொறுத்தனின்றன்
மாசறுகடனென் றேத்திவிடை கொண்டுவனப்பாற் போந்தான்.

[இ—ள்] மலரே, மலரின் மணமே, தேனே, சிறந்த கனிரசமே, அடியார்களுடைய வாழ்வே, அன்பே, சிந்தனையே, எல்லாம் உம்முடைய திருவருளே அல்லது வேறு ஒன்றும் இல்லை. எளியேன்சொல்லுதற்கரிய இப்பிழையேஅன்றி மேலும் என் அறியாமையால் பிழை செய்திருந்தாலும் அதையும் பொறுத்தருளுவது தேவரீருடைய திருவருளாகும் எனப் பலவிதமாகக்கூறி விண்ணப்பித்து விடைபெற்றுச் சென்றான். [எ—று] 77

168

தாதினையளி யுண்டாடுந்தா மரையிலஞ்சி சார்ந்து
போதினை யகற்றியுய்த்த புள்ளினப் பவளச்செங்கா
லோதிமங்கடி தின்வந்தங் குவகையா லுடல்கம்பித்து
வேதியவயன் மேல்கொள்ள வெந்புறங் கொடுத்ததன்றே.

[இ—ள்] மகரந்தப்பொடிகளை வண்டுகள் கிளறியுண்ணும் தாமரை மலர்கள் பொருந்திய தடாகத்தினையடைந்து மலரிலிருந்து வெளிவந்த பவளம்போலும் சிவந்த கால்களை யுடைய அன்னம் விரைந்து வந்து மகிழ்ச்சியால் உடல் நடுங்கி நின்று அப்பிரமதேவர் தன்மீது ஏறிச்செலுத்தத் தன் முதுகை இடமாகத்தந்தது[எ—று] 78

169

முனிவரர் சூழநின்று முதுமறை முரசமார்ப்ப
வினியபாற் புனலைநீக்கு மெகினவாம் புரவியூர்ந்து
தனிநெடுவி சும்பின்றூரி சரிக்கவெண்ண ளினவாணி
நனிதிகழ்ந்தெதிர் கொண்டேத்த நணுகினன் பிரமலோகம்.

[இ—ள்] முனிவர் கூட்டங்கள் சூழ்ந்து நின்று கொண்டு வேதமந்திரங்களாகிய முரச வாத்தியத்தை ஒலிப்ப, இனிய பாலையும் நீரையும் வேறுபிரிக்குந்தன்மையுள்ள அன்னமாகிய வாகனத்திலூர்ந்து ஒப்பற்ற ஆகாயத்திற்செல்ல, வெண்டாமரையை இடமாகக்கொண்ட சரசுவதிதேவி எதிரே வந்து துதித்துநின்று உபசரிக்க, பிரமதேவர் தமது உலகத்தை யடைந்தார். [எ—று] 79

170

என்றுபேரரு ளானந்தியித் திறமியம் பக்கேட்டுப்
புன்றொழின் மறுதிவென்ற புலக்கடற் சனற்குமாரன்
றென்றிசை யுதயகாசித் திருவவிநாசி மேன்மை
யின்றுபெற்றது வல்லாமலின் னமுமுளவோ வென்றான்.

[இ—ள்]என்று இவ்வாறு பேரருளையுடைய திருநந்திதேவர் திருவாய்மலர்ந்தருளப் பஞ்சேந்திரிய நிக்கிரகம் செய்தவரான சனற்குமார முனிவர் தென்றிசையிலே தோன்றிய காசியாகிய திருஅவிநாசி என்னும் தலத்தின் மேன்மையை இன்று கேட்டுணர்ந்தேன். இம்மகிமைகளையல்லாமல் இன்னும் வேறு மகிமைகள் உண்டோ? உண்டாயின் எனக்கு அருளிச்செய்வீராக என வேண்டி நின்றார் [எ—று] 80

**171**

சாரதமறை நூல்வல்ல தவமுனி சனற்குமார
பேரறிவுடை யநீகேள் பேசுகே னென்றுநந்தி
சீரவிநாசி யென்னுந்தெய்வ பூமியில் வெண்மேனி
வீரபோதக முன்செய்த தபோபலம் விளம்பலுற்றான்.

[இ-ள்] *மெய்ம்மையாகிய வேதங்களையுணர்ந்த தவமுனியாகிய சனற்குமாரனே! பேறிவையுடைய நீ கேட்பாயாக, நாம் சொல்லுவோம் என்று திருநந்திதேவர் சிறந்த அவிநாசி என்னும் சிவதலத்திலே வெள்ளையானையாகிய ஐராவதம் வழிபட்ட வரலாற்றைச் சொல்லியருளுவாராயினர்* [எ-று] 81

*மூன்றாவது பிர்மார்ச்சனைச் சருக்கம் முற்றிற்று.*
*ஆகத்திருவிருத்தம்*—171

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்

# அயிராவதச்சருக்கம்.

**172**

முற்பங்கயவாதன வேதியனுண்முழுதுந் தெரிகின்ற தெனும்பதுமக்
கற்பம்பெறுகாலம திற்றவளக்கத மாரயிராவத மிந்திரனுர்
சொற்பந்தமிங்கியசாப மெனுஞ்சோபத் தினையுற்றது மற்றதுபின்
சர்ப்பம்மணிவாரவி நாசியெனுந்தலமீது தணிந்தமையும் புகல்வாம்.

[இ-ள்] *ஆதியில் தாமரைமலரில் உள்ள வேதியனாகிய பிரமனது ஆயுள்முடிவாகிய பிரமகற்பத்தில் வெண்மையானதும் கோபமுள்ளதும ஆகிய அயிராவதம் இந்திரனுடைய சொல்லாகிய சாபத்தினால் சோபமடைந்ததும், பின் பாம்பை ஆபரணமாக அணிந்தவராகிய சிவபெருமான் அமர்ந்திருக்கிற அவிநாசித்தலத்தையடைந்து சாபம் நீங்கியதுமாகிய வரலாற்றைச் சொல்லுவோம்.* [எ-று] 1

**173**

சிந்தாமணிசங்கமருங் கமலந்திகழ்தேனு வரும்புசெறிந் தொளியார்
மந்தாரமிலங்கிய பொன்னுலகம் வயிரப்படை வெண்கரிவண்களபஞ்
சந்தார்முலைமுந்துபுலோ மசைமின்சத வேள்விதரும் பதமிங்கெவையு
நந்தாதுபுரந்து பெருந்தகுசீர்நண் ணுந்திறல்விண்ணக நாடர்பிரான்.

[இ—ள்] நூறு அசுவமேதயாகம் செய்ததனாலுண்டாகிய இந்திர பதவியில், சிந்தாமணி, சங்கநிதி, பதுமநிதி,விளங்குகின்ற காமதேனு, அரும்புகள் நிறைந்து ஒளிபொருந்திய மந்தாரமாகிய கற்பகத்தரு இவைகள் நிறைந்த பொன்னுலகத்தையும், வச்சிராயுதம், வெள்ளை யானை, வளமானமணங்கலந்த சந்தனமணிந்த தனங்களையுடைய மின்னற்கொடிபோன்ற இந்திராணியையும், குறைவறப்பாதுகாத்து மிகுமேன்மையடைந்த தேவருலகிலுள்ளவர்க்குத் தலைவனாகிய வெற்றியுள்ள இந்திரன் [எ—று] 2

## 174

ஆகம்பெறுமாயிர மால்விழியால மராவதியார்பவை கண்டுமிகும்
போகங்களிலிந்திர போகமலாற் புறமில்லெனை நல்லயிராவதமென்
மேகம்படர்வாகன மாய்வரவேவெண் சாமரைமேனகை வீசிடவே
மாகம்படர்தாரி யில்வந்தடைவே மகமேருபதந்தனில் வைகினனால்.

(இ—ள்) தன் சரீரத்திலுள்ள அழகிய ஆயிரங்கண்களாலும் அமராவதியில் நிறைந்த வைபவங்களைக்கண்டு அதிகரித்த போகங்களில் இந்திரபோகத்தைவிடவேறொன்றுமில்லை யென்னும்படி நல்ல அயிராவதமும், விரைந்து செல்லும் மேகமும் வாகனமாய் வரவும், மேனகை வெண்சாமரையை வீசவும், ஆகாயவீதிவழியாக கிரமமாக வந்து மகாமேருமலையில் தங்கினான். (எ-று) 3

## 175

காலங்களறிந்து செறிந்தொளிருங் கயிலாயநெடுங்கிரி சென்றணுகிக்
கோலம்பலவா கியமர்ந்தருளுங்குழ கன்சபைகண்டு வணங்கியகன்
றேலம்பயில்கோ தையிலம்பக நேரிழையாரிசை பாடலுமாடலுநற்
சீலம்பெறுகின் றபுலன்களெனுஞ் செவிகண்வழி சிந்தைதெவிட்டியபின்.

(இ—ள்) மிகுந்த ஒளி வீசுகின்ற மகாகயிலாய மலையில் செல்ல வேண்டுங்காலங்களறிந்து சென்று, பலவித அழகோடு விளங்குகின்ற சிவபெருமானைச் சபையில் தரிசித்து வணங்கி நீங்கி மயிர்ச்சாந்தணிந்த கூந்தலையும் நெற்றிச்சுற்டியையும் நிறைந்த ஆபரணங்களையும் அணிந்த தேவமாதர்களது இசைப்பாடலையும் நடனத்தையும் நல்ல மேன்மையான ஐம்புலன்களில் உயர்ந்த காதின்வழியாகவும், கண்வழியாகவும், கேட்டும் கண்டும் மனமகிழ்ச்சியினால் ஆனந்தித்தபிறகு (எ—று)

176

சசிமாதொருகாலமு மாலொழியாத் தளராவிளமைப் பருவந்தனையே
கசிவாயமனத்தி லிருத்தியருங் காமக்கடலைக் கரைகண்டிலனு [நெடு
யொசிவாயிடை சோர்கனபொற்றன மீதொண்சீர்முகம் வைத்துமுயங்கி
நிசியோபகலோ விதுவென்றறியா நெறியாலமரேசனி கழ்ந்துளநாள.

(இ-ள்) ஒரு காலமும் மயக்கம் நீங்காததாகியும் சோர்வு இல்லாததுமாகிய இந்திராணியினது இளமைப்பருவத்தை இளகிய மனத்தில் இருத்தி, வெல்லுதற்கரிய காமசமுத்திரத்தினது கரையைக் காணுதவனுகி இடைதுவண்டு சோர்தற்குக் காரணமாகியகனமுள்ள பொன்மயமாகிய தனதின்மேல் ஒளியுள்ள சிறந்த முகத்தைவைத்துச் சோர்ந்து நீண்ட இரவோ பகலோஎன்பதொன்றும் தெரியாமல் தேவர்கள் தலைவனுகிய இநதிரன் இருக்கும் காலத்தில் (எ-று) 5

177

உயிரானவையஞ் சவடுஞ்சமரதொரு நாலுமருப்புட னுக்கவுடற்
செயிராதுவிளங் கியவெண்மைதரச் செறிமத்தகவோடை திகழ்ந்திடநே
ரயிராவதமென்னு மருங்கயமா வமுதக்கவளங் களருந்தியரும்
வயிராகமனக் களியாலளியான் மதமாரிபொழிந்து வழிந்ததுவே.

(இ-ள்) போரில் உயிர்கள் அஞ்சும்படி கொல்லும நான்கு தந்தங்களோடும், குற்றமில்லாது விளங்கிய வெண்மையான சரீரத்தோடும் மத்தகத்தில் முகபடாம் விளங்கத் தனக்குத்தானே நிகராகிய அயிராவதம் அமிர்தமாகிய உணவையுண்டு உறுதியாகிய மனமகிழ்ச்சியினுல் மதநீரை மாரிபோலச் சொரிந்தது (எ-று) 6

178

கடவேழமருண்டு வெருண்டுநெடுங் கற்குன்றையிடித்து விலாழியெறிந்
தடர்மேகமெனும் படிநின்றலறுற்று காயமெடுத் தகையாலளவிப்
படர்மேருபதத்தையகன்றுபெரும்பணைகொண்டதருக்களிடந்துகொடுந்
தடமாதிரிசார லிழிந்தொழுகித் தண்டாரணிமீதி னியங்கியதே.

(இ-ள்) மதத்தையுடைய வெள்ளையானை மயங்கி, பயந்து, உயர்ந்த மலைகளையிடித்து மதநீரைச் சிதறி நெருங்கிய மேகம்போல நின்று, சப்தித்து துதிக்கையால் ஆகாயத்தையளாவி, விசாலமான மேருவைவிட்டு நீங்கி, பெரியகிளைத்த மரங்களைத்தள்ளி, கொடிய விலங்குகள் திரிகின்ற மலைச்சாரலிலிறங்கிக் குளிர்ந்த பூமியில் நடக்கலுற்றது. (எ-று) 7

## 179

பெருமித்தலமாகிய தாழ்வரையிற் பெய்யும்புனலன்றி யினுந்தொலையா
வருவிப்புனலாடி யலந்துவிடாயகலும் படிவேழம நேகநெடுந்
தருவிற்செறிநீழலை மேவியிளந்தளிர் சாகமருட்புத ரும்பணைதாய்
மருவித்திரள்குன் றெனநின்றதெலா மதமாமலைகண்டு மகிழ்ந்ததுவே.

*(இ—ள்) மதம் பொருந்திய மலைபோன்ற வெள்ளையானை பெரிய இப்பூமியில் மலைச்சரிவில் உண்டாகியநீரிலும், அல்லாமல் எண்ணில்லாத பல அருவிகளிலும் நீராடி விடாய்தீரும்படி பல மரங்களின் நீழலை அடைந்து இளையதளிரையும் இலை அரும்போடுள்ள கிளைகளையும் தாவி பலதிரண்ட குன்றுகளை யெல்லாம் பார்த்து மகிழ்ச்சியடைந்தது (எ-று)* 8

## 180

பிடியொன்றை யடர்ந்துதொடர்ந்து பெரும்பெயரானுயர் சீரயிராவதமா
விடியொன்ற வதிர்த்துமுழக்கி யணைந்தேகோதயமாக வியைந்தணுகிப்
படியொன்ற மடித்தபதங்களுடன் பந்தம்பெறவுந்திய தாள்களுமாய்க்
கடியொன்ற வசைந்துபுணர்ந்து கொடுங்கரலீலை புரிந்துகலந்ததுவே.

*(இ-ள்) பெரிய உயர்ந்த சிறப்பினையுடைய அயிராவதமாகிய யானை ஒரு பெண் யானையைத் தொடர்ந்து இடிபோற் சப்தித்து ஒரு தன்மையாக இசைந்து நெருங்கி, பூமியில் பொருந்த மடித்தகால்களுடன் தள்ளுகின்ற கால்களுமாய் சுகபோக லீலைகளைச் செய்தது (எ-று)* 9

## 181

தன்னுமமறந்தது கற்பகமாந்தரு நீழன்மறந்ததுதா வொளிசேர்
பொன்னுமுலகத்தை மறந்தது தற்போகங்களனைத்து மறந்ததுவாய்
மின்னுருமெயிற்று மடப்பிடிகை மேவிப்புணரின்பமு மெந்நலமு
மெந்நாளுமறந்தறி யாமையுமாயிதுவே பெருவாழ்வென வெண்ணியதே.

*(இ—ள்) தன்னுடைய பெயரையும் மறந்தது. கற்பகத்தருவின் நீழலையும் மறந்தது. பாவுகின்ற ஒளியுள்ள பொன்னுலகத்தையும் மறந்தது. தனக்குரியமற்ற சுகங்களையும் மறந்து மின்னுகின்ற தந்தங்களையுடைய இளமையான பெண் யானையை யடைந்து புணரும் இன்பமாகிய நலத்தை எந்நாளும் மறவாமல் இதுவே பெருவாழ்வு என்று எண்ணியிருந்தது. (எ-று)* 10

182

தெய்வத்திற மானக யத்தவளத் திகழ்மேனி பொருந்த வணைந்து புழைக்
கைவைத்த ரையிற்பிடி யூடுருகிக் கலவுஞ்சில காலவி யற்கையினைப்
பொய்வைத்துல கோர்நிக ழாவகைதண் புதுமாமலர் வேதன்வி திப்படி
[யான்
மைவைத்தமெ யுத்தம வேழமெலாம் வதனப்புகர் மல்கிவி ளங்கினவால்.

(இ-ள்) தெய்வத்தன்மை பொருந்திய வெள்ளை யானையின் மேனியோடு பொருந்தச் சேர்ந்து துவாரமுள்ள துதிக்கையை இடுப்பில் வைத்து மனமுருகிக் கலந்த சிலகாலத்தினது தன்மையைப் பொய் என்று உலகினர் எண்ணுதபடி குளிர்ந்த புதிய தாமரை மலரிலிருக்கின்ற பிரமன் விதிப்படி கரிய சரீரத்தையுடைய உத்தமமான மேலான யானைகளுக்கு எல்லாம் முகத்தில் வெண்புள்ளி நிறைந்து விளங்கின என்பதாம். (எ-று) 11

183

உயருந்திற மற்றும யன்செயுமா றுரைசெய்குது மொண்புவி யாளுமியல்
வயமொன்றிய மன்னர்கு லந்தனிலே மவுலிக்கு ரியார்பல ராய்மருவிற்
கயமொன்றை யலங்கல்பு னைந்துகொடுங் கண்கட்டி விடக்கடு மவனைச்
சயமொன்றரி பீடமி ருத்துவதாந் தனிஞான வரம்புத யங்கியதால்.

(இ-ள்) இன்னும் பிரமன் யானைகளுக்கு மற்றொருயர்வையும் செய்த விதத்தைச் சொல்லுவோம் விளங்குகின்ற பூமியை ஆளும் இலக்கணங்களும் வெற்றியுமுள்ள அரசர் குலத்தில் கிரீடத்தையணிவதற்கு உரியவர்கள் பலராயிருந்தால் ஒரு யானை கையில் பூமாலை கொடுத்து வளைந்த கண்களைக் கட்டி விட்டுவிட்டால் அம்மகுடத்திற்குரியவனை வெற்றியுள்ள சிம்மாசனத்தில் இருக்கச்செய்வதாகிய ஒப்பற்ற ஞானத்தின் எல்லையும் அதற்கு விளங்கியுள்ளது என்பதாம் (எ-று) 12

184

வேறு

தம்ப மின்றிய வாழ்வுடைத் தானவர் குழுமி
உம்பர் வைகிய பதங்களி லொருபுடை யொறுத்தாங்
கம்பெருந் திசைத் தேவர்கண் டமரர்கோன் மருங்கு
பம்பு பேரொலி வாய்மையாற் பகர்முறை விடுத்தார்.

(இ—ள்) ஆதாரமில்லாத வாழ்வையுடைய அசுரர்கள் கூடித் தேவர்கள் உலகில் ஒரு பக்கத்திற்சென்று போர்செய்யத்தொடங்க அதைக்கண்ட தேவர்கள் இந்திரனிடத்திற்குப் போய்ப்பெருஞ்சத் தமாகக் கதறினார்கள் (எ—று) 13

185

காலமென் னுமக் கணந்தனிற் கடவுளா ளொருவன்
சால வுன்னத விமானமந் தரவழி தூண்டிக்
கோல மாமணி குயிற்றிய கோநகர் குறுகி
ஓல மோலமென் றுயர்மொழி யுரைத்தனை வுற்றான்.

(இ—ள்) அந்த நேரத்தில் வித்தியாதரன் ஒருவன் மிகஉயர்ந்த விமானத்தை ஆகாயவழியாகச் செலுத்தி அழகிய மணிகளால் இழைக்கப்பெற்ற இந்திரன் அரண்மனை வாயிலை அடைந்து ஓலம் ஓலம் என்று முறையிட்டு உள்ளே சென்றான் (எ—று) 14

186

போக மேவிய புலோமசை புணர்முலைக் குவட்டின்
மோக வாரிதி முயக்கிலம் முறைமொழி யோலம்
யாக சாதனன் செவிப்புகப் பள்ளிவிட் டகன்று
நாக மாமணி முகப்பில்வந் தவன்முறை நயந்தான்.

(இ—ள்) சுகம் பொருந்திய இந்திராணியின் இரண்டு குன்று போன்ற தனங்களின் மோக சமுத்திரத்தினால் சேர்ந்திருந்த காலத்தில் வித்தியாதரன் முறையிட்ட ஓசை இந்திரனது காதுகளில் விழப் பள்ளியறையை விட்டு நாகரத்தினங்களால் இழைக்கப்பெற்ற அரண்மனை வாயிலில் வந்து அவன் முறையிடுதலைக் கேட்டறிந்தான் (எ—று) 15

187

தண்ட கம்புரி தயித்தியர் தன்மைகேட் டயர்ந்து
துண்ட மங்குலி துணைத்துமற் புயங்கள்சோ பித்துப்
பண்டை யின்படி படைத்தொழில் பயின்றிடும் பொருட்டால்
எண்ட ராவயி ராவத மெங்கென விசைத்தான்.

(இ—ள்) போரைத்தொடங்கிய அசுரர்களது தன்மையைக் கேட்டுச் சோர்ந்து கைவிரலுக்கு உறையிட்டு வாகுவலயங்கள் அணி

ந்து வழக்கம்போல் சண்டைசெய்யும்பொருட்டு நினைத்து என் அயி
ராவதம் எங்கே என்று கேட்டான் (எ—று) 16

188

நின்ற தேவர்க ளிங்கது கண்டிலம் நெடுநாள்
என்று கூறலு மிமையவர்க் கிறைமுனிந் தெழுந்து
சென்று மஞ்சனச் சாலைபோய்த் தியானமண் டபத்தை
ஒன்றி யைம்புலச் சிந்தைஞா னத்தினு ணர்வான்.

(இ—ள்) அங்கே நின்ற தேவர்கள் நெடுநாளாக இங்கே அவ்
வயிராவதத்தைக் காணவில்லையென்று சொன்னவுடன், தேவேந்
திரன் கோபித்து, ஸ்நான அறைக்குச் சென்று ஸ்நானஞ்செய்து,
தியான மண்டபத்தையடைந்து ஐம்புலன்கள் ஒன்று சேர்ந்து தியா
னித்து ஞானதிருஷ்டியால் உணர்வானாயினன் (எ—று) 17

189

வீக்கு பந்தனப் பங்கயா தனவயின் மேவித்
தேக்கு வாயுவைப் பூரக கும்பகஞ் செலுத்தி
நோக்கு நாசியி னுனியில்வைத் தினியநுண் ணறிவைச்
சாக்கி ரம்பதித் தகம்புறஞ் சமன்பெறப் பார்த்தான்

(இ—ள்) கட்டப்பட்ட பத்மாஸனத்திலிருந்து நிறைந்த வாயு
வைப் பூரகமும் கும்பகமுமாகச் செலுத்தி மூக்கின் நுனியில் பார்
வையை வைத்து இனிய நுட்பமாகிய அறிவைச் சாக்கிரத்தில்
வைத்து உள்ளும் புறமும் ஒரு தன்மையாகப் பார்த்தான். சாக்கி
ரம்—கனவு, பூரகம்—மூச்சை உள்ளே வாங்கல், கும்பகம்—பிராண
வாயுவை உள்ளே நிறுத்தல். (எ—று) 18

190

பூத லங்கள்போற் கிரிசர மாவதோர் புலத்திற்
சாத கம்பெறு தந்தியின் குலத்தொடு தழீஇப்
பேத மின்றியோர் பிடியுடன் கலந்து மெய் மதமாங்
காதல் கொண்டயி ராவதந் திரிதரல் கண்டான்.

(இ—ள்) பூமியிலுள்ள யானைகளைப்போல் யானைகள் சஞ்சரிக்
கின்ற மலையிடத்தில் துணையாயிருக்கிற யானைக்குலத்தோடு கூடிப்
பேதமில்லாமல் ஒரு பெண் யானையுடன் கூடி, சரீரத்தில் மதம்

அதிகரித்ததால் காதலையடைந்து, அயிராவதமானது திரிவதைக் கண்டான் (எ—று) 19

191

அறிவெ னுங்கணிற் கண்டகோ வாயிர விழியும்
பொறிகொள் செந்தழற் புகையெழப் பொருசினம் பொங்கிக்
குறியின் வாயித ழதுக்கிநீள் குவலயம் புகுந்த
வெறியின் மாவினி யெமக்குவேண் டாவென வெறுத்து.

(இ—ள்) ஞானக்கண்ணால் அறிந்த இந்திரன் ஆயிரம் கண்களிலும் நெருப்புப் பொறி பறக்கும்படியும் புகையெழவும் கோபம் அதிகரித்து உதட்டைக்கடித்து நீண்ட பூமியிற்போய்ச் சேர்ந்த வெறிகொண்ட அந்த வெள்ளையானை எனக்கு வேண்டாம் என்று வெறுப்புற்று (எ—று) 20

192

அங்க தன்பணி யமையுமென் னளவிலென் றகற்றி
மங்க லப்புயற் பரியெமக் குளதென மதித்துப்
பங்க வேழமம் புவிவனப் பகட்டொடுஞ் சரித்துச்
சங்கை யேகெடக் கடவதென் றிந்திரன் சபித்தான்.

(இ—ள்) அந்த யானையின் பணி இனி எனக்கு வேண்டாம் என்று நீக்கி மங்களகரமாகிய மேகமாகிய வாகனம் எமக்கு உள்ளது போதம் என்று எண்ணிக் குற்றம் பொருந்திய அந்த யானை அழகிய பூமியில் உள்ள யானைகளோடும் சஞ்சரித்துத் தன் பெருமை கெடக் கடவது என்று சபித்தான். [எ—று] 21

193

சாப மொன்றிய நாண்முதற் றவளமால் யானை
கோப மும்மதக் களிகளுங் கொற்றமுங் குலைந்து
சோப மும்படர் துயர்முஞ் சுரர்பத மகன்ற
தாப முங்கொடு சஞ்சல மிலைந்தது தரைமேல்,

[இ—ள்] இந்திரனுடைய சாபம் தன்னை வந்தடைந்தநாள் முதல் பெரிய வெள்ளை யானை கோபமும் மதமும் மகிழ்ச்சியும் வெற்றியும் கெட்டு, சோபமும் மிகுந்த துன்பமும்தேவலோகத்தைத் துறந்த கவலையுங்கொண்டு, பூமியில் சஞ்சலத்தினால் திரிந்தது. [எ—று] 22

194

தன்மை யாகிய கயங்களைத் தணந்துபோந் தளிக்கும்
பன்மை யாகிய வுணவுவிட் டரந்தையே பயக்கு
நன்மை யேதரு பதமெலா நகுமெனக் கிதுவாங்
கன்ம பூமியோ கிடைப்பதென் றழிந்துளங் கவலும்.

[இ-ள்] தன்னோடு ஒரு தன்மையாகப் பழகிய யானைகளை நீங்கிவந்து இரட்சிக்கின்ற பலவித நல்ல உணவுகளை விட்டுத் துன்பத்தையே கொடுக்கும் இந்தக் கன்ம பூமியோ நன்மையைத்தருகின்ற பதவிகளையெல்லாம் நகைக்கின்ற எனக்குக் கிடைப்பது என்று மனம் வருந்தும் [எ-று] 23

195

வெய்ய கானக விலங்கெனத் திரிவது விதியோ
வைய கோதுய ராற்றுதற் கியார்கொலென் றயரு
மெய்யி லாயிர விலோசனம் விழித்தரு ளிழைக்கு
மைய னெம்பிரா னருள்பிழைத் தேனென வரற்றும்.

[இ-ள்] கொடிய காட்டு மிருகமென்று பிறர் சொல்லத்திரிவது என் தலைவிதியா ஐயோ! என்னுடைய துன்பத்தை நீக்குதற்கு யார் இருக்கிறார்களென்று சோர்வடைய சரீரத்தில ஆயிரம் கண்களினாலும் அருள்செய்யும் என் தலைவனாகிய இந்திரனுடைய கிருபைக்குத் தவறு செய்தேன் என்று சப்திக்கும் [எ-று] 24

196

இந்த வாறிழிந் திபவர சிரங்கிடு மேல்வை
முந்து வாசவ னுவந்ததோர் முதியகந் தருவ
னெந்த லோகமு மியங்குவ னிருநிலப் பரப்பு
மந்த ராசலச் சாரலுங் குலவினேர் வந்தான்.

[இ-ள்] இவ்விதமாக யானைகளுக்கு அரசாகிய அயிராவதம் வருந்தும் சமயத்தில், மேம்பட்ட இந்திரனுக்கு உவப்பான பழைய கந்தருவன் ஒருவன் எல்லாதவுலகங்களிலும் சஞ்சரிக்கின்றவன், விசாலமான பூமி முழுவதும் மந்தர மலைச்சாரலிலும் சஞ்சரித்து, யானைக்கு நேராக வந்தான். [எ-று] 25

197

கர்ண லாயகந் தருவனைக் ககனமா களிறு
சேண ளாவிநின் றிமைப்பினிற் செறிந்துவந் தணுகிப்
பூண வாவுட னிருவிழிப் புனலுகப் புலம்பிக்
கோண றுமனத் துயரெனுங் குறையுணர்த் தியதால்.

[இ-ள்] தேவலோகத்து யானையாகிய அவ்வயிராவதம் தன க்கு சோராக வந்த கந்தருவனைக்கண்டு தூரத்திலிருந்து மிக விரை வாக வந்து நெருங்கி மிகுந்த ஆசையோடு இரு கண்களிலும் நீர் சிந்தும்படி புலம்பி வாட்டம் நீங்காத தன் மனத்திலுள்ள குறை களையெல்லாம் சொல்லிற்று. [எ-று] 26

198

கேட்டு நின்றுசிந் தாகுலங் கிளர்ந்தகந் தருவன்
கோட்டின் வாரணக் குருசிலின் கொடுமுக நோக்கி
வாட்ட நின்னிடை வந்தவா றறிகிலா மதியோ
யீட்ட வானவர் நாட்டியல் கேட்டியென் றிசைக்கும்.

[இ-ள்] அதைக் கந்தருவன் கேட்டு மிகுந்த மனக்கவலையடை ந்து நான்கு தந்தங்களையுடைய யானைகளுக்கு அரசாகிய அயிரா வதத்தைப்பார்த்து, உன்னிடத்தில் துன்பம் வந்த காரணத்தை யறியாத நீ தேவர்களுடைய நாட்டின் தன்மையைக்கேட்பாயாக என்று, கந்தருவன் கூறுவான் ஆயினன் (எ-று) 27

199

நீதி வானவர் நிலைகெட நிசாசரர் செயலு
மாதி வாசவ னறிதலு மடன்மதித் தனவுஞ்
சோதி வேழமெங் கென்றலுந் தூதர்சொற் றனவும்
பேதி யாவனு பூதியி லுணர்ந்தவும் பிறவும்.

(இ-ள்) நீதியையுடைய தேவர்களது நிலைமை கெடும்படி அசு ரர்கள் போர் தொடங்கியதும் முதன்மையான இந்திரன் அதை யறிந்து சண்டை செய்ய நினைத்ததுவும் பிரகாசத்தையுடைய அயி ராவதம் எங்கேயென்று கேட்டதும் அதற்குத் தூதுவர்கள் சொன் னதும் வேறுபடாத ஞானதிருஷ்டியால் நீயிருக்கும் நிலைமையைத் தெரிந்ததும் [எ-று] 28

200

தாங்கு ரூவகை முனிந்தவுஞ் சாபமேற் றியவும்
பாங்கு கூறினன் கேட்டதோர் பானிறக் களிறு
வீங்கு பேருயிர்த் தகிலத்தில் வீழ்ந்துசோர்ந் தயர
வாங்கு நின்றகந் தருவனு மஞ்சிவிட் டகன்றான்.

[இ-ள்] உடனே உண்டான மிகுந்த கோபத்தினால் சாபமிட்டதும் முறையாகக் கூறினான். அதைக்கேட்ட வெள்ளையானை, பெருமூச்சுவிட்டு, பூமியில் விழுந்து சோர்ந்தது. அதைக்கண்ட கந்தருவன் அஞ்சி அவ்விடத்தைவிட்டு அகன்றான் [எ-று] 29

201

சிறிது போழ்தினிற் றிருவளர் கயிலைசே வித்துப்
பிறிதி லாதுயர் தரணியி லுயர்தலம பேணிச்
செறிது வாரமா மகதிய வீணைசே ரடிகள்
வறிது கானிடை நாரத மாமுனி வந்தான்.

(இ-ள்) பின் சிறிது நேரத்துக்குள் நாரதமகாமுனிவர் அழகு மிகுந்த ஸ்ரீ கயிலாயத்திற்குச் சென்று கடவுளை வணங்கி, உயர்ந்த பூமியிலுள்ள மேலாகிய பலதலங்களையும்தெரிசித்து, துவாரமுள்ள மகதியென்ற வீணையைக் கையில் ஏந்தி பாதசாரியாக அங்கேவந்தார் (எ-று) 30

202

வந்த வாறுகண் டயர்வுட னெழுந்தடி வணங்கி
நிந்தை வாரண மௌனநே யத்தொடு நிற்கக்
கந்த மாதன நிகரயி ராவதக் களிறே
யந்த வாரமு தாகமே யஞ்சலென் றருளி.

(இ-ள்) வந்ததைக்கண்டு சாபத்தையடைந்த அயிராவதம் சோர்வுடன் எழுந்து பாதத்தைவணங்கி மௌனமாய் அன்போடு நிற்க அழகான அமிர்தமயமான சரீரத்தையுடைய கந்தமாதன மலைக்கு நிகராகிய அயிராவதமே பயப்படாதே யென்று சொல்லி (எ-று) 31

203

அன்ன மேனமன் றறிகிலா ரருள்சுரந் தருளப்
பன்னு மின்னிசை பயிற்றிய நாரத பகவான்
உன்னு காலஞா னத்திறு லுளவெலா முணர்ந்து
மன்னு சாபமே தணிவுற வணிமொழி வகுப்பான்.

[இ—ள்] பிரமாவினாலும், விஷ்ணுவினாலும் முடியும் அடியும் அறியமுடியாத பரமன்கிருபைசெய்யும்படி இன்னிசையை அழகாகப் பாடிமகிழ்விக்கும் நாரத மகாமுனிவர் முன்னிகழ்ந்தன வெல்லாம் ஞானதிருஷ்டியால் உணர்ந்து இந்திரனிட்ட சாபம் தணியும்படி அழகிய சிலவார்த்தைகளைச் சொல்லுவான் ஆயினன்[எ-று]32

204

பொன்பி றங்குமா யிரமுடி பொறுத்தபூ தரத்தின்
தென்பு லந்தனின் மேன்மைசேர் சிவாலய மநேக
மென்ப வைக்குளே யிருவினை தொலைப்பதெண் ணூறு
மன்பு கூரவற் றுறுபத் தாறுண்மை யருளும்.

[இ—ள்] ஆயிரம் சிகரங்களையுடைய பொன் மயமாகிய மகாமேருமலையின் தெற்கேயுள்ள பூமியில் மேன்மைபொருந்திய சிவாலயங்கள் எண்ணில்லாதன உள. அவைகளுள் மிகுந்த தீவினையை நீக்குந்தலங்கள் எண்ணூறும். அவைகளுள் அறுபத்தாறு தலங்கள் அன்பர்களுக்கு நித்தியமாகிய முத்தியை அருளும் ஸ்தலங்களாம் [எ—று] 33

205

அங்க திற்பதி னுறுவேண் டியவர மளிக்கும்
பங்க மில்லெட்டிற் பஞ்சபா தகவிடர் பறிக்குஞ்
சங்கை யற்றவான் முத்தியைந் துயர்தலந் தருமென்
றிங்கி வைக்குறு பெருமையு மகிமையு மிசைப்பான்.

[இ—ள்] அவைகளுள் பதினான்கு தலங்கள் அன்பர்கள் வேண்டியவரங்களைக் கொடுக்கும். அவற்றில் குற்றமற்ற எட்டுத்தலங்கள் பஞ்சபாதகங்களினால் வருகின்ற துன்பங்களைப் போக்கும் ஸ்தலங்களாம் அவற்றுள் சந்தேகமில்லாது முத்தியை அளிக்குந்தலங்கள் ஐந்து என்று இத்தலங்களின் மகிமையைக் கூறுவாராயினர் [எ—று] 34

206

ஆசின் மேன்மையா ரூர்பிறப் படையவே முத்தி
தேசின் மேவிய தில்லையைத் தெரிசிக்க முத்தி
நேசி யார்களு மருணையை நினைக்கநீண் முத்தி
காசி வாய்மர ணம்பெறிற் கணிப்பிலா முத்தி.

(இ-ள்) குற்றமில்லாத மேன்மையையுடைய திருவாரூரில் பிறந்தால் முத்திஎன்றும், ஒளிமிகுந்தசிதம்பரத்தைத்தெரிசிக்க முத்தி என்றும், அன்பு இல்லாதவர்களும் அருணையை நினைக்க உயர்ந்த முத்தி என்றும், உயர்ந்த காசிப்பதியில் இறந்தால் அளவிடப்படாத முத்தி என்றும் வேதங்கள் கூறுகின்றன. (எ-று) 35

207

அன்ன தொன்னகர் மூலலிங் கம்பரை யருளாற்
றென்னர் சேண்படர் காசிமூ லாக்கிர சிவேச
மென்ன மேவிய திருவவி நாசியை யியல்வோர்
முன்னர் நாடொறும் பேசினுன் முத்திசத் தியமே.

(இ-ள்) அத்தன்மையான பழைய நகரமாகிய காசி க்ஷேத்திரத்தின் மூலலிங்கம் பராசக்தியின் அருளால் வெகுதூரம் தெற்காகப் பரவியுள்ள காசி மூலலிங்கத்துக்குக் கொழுந்தாய் எழுந்த சிவேசம் என்று சொல்லும் அவிநாசியை அடைவோருக்கும் முன்னிருந்து அதன் மகிமையைப் பேசுவோருக்கும் முத்திகிடைப்பது சத்தியம் (எ-று) 36

208

வேறு

இப்பரி சமர்ந்த தானத் தெல்லைகே ளிபங்கள் வேந்தே
செப்பரி தான நீதிச் சேரகே ரளதே யத்திற்
கைப்படு முனியால் வந்த காவிரி கடந்த தென்பா
லொப்பிலா வராக மேரு வுத்தர வடபா லொன்ற.

(இ-ள்) இத்தன்மையாகவுள்ள தலத்தினது எல்லையைக் கேட்பாய். அயிராவதமே, சொல்லுதற்கரிதான நீதியையுடைய சேரனுக்கு உரிய கேரள தேயத்தில் அகத்திய முனிவரால் உற்பத்தியான காவிரிக்குத் தென்பாலும் சமானமில்லாத வராககிரிக்கு வடபக்கத்திலும் (எ-று) 37

209

சாலவே கருவுண் டாக்கிச் சராசரம் படைத்து நின்றங்
காலபோ னகனுக் கின்பா லாட்டுமா னிலைக்கு மேல்பால்
ஓலமா வலறுங் கன்று முருகுதா யாவுங் காணத்
தாலமார்நடஞ்செய் பட்டித் தலைவர்வான் சபைக்குக்கீழ்பால்.

(இ-ள்) காமதேனு மிகுதியாகக் கருவையுற்பத்திசெய்து அசையும் பொருளையும் அசையாப் பொருளையும் படைத்து இரட்சித்து விஷத்தையுண்ட நீலகண்டனுக்கு இனிய பால்அபிஷேகம் செய்த தலமாகிய கருவூர் ஆனிலைக்கு மேல் பக்கத்திலும் ஒலமிட்டகன்றும் அதற்கு மனமுருகிய தாய்ப்பசுவும் காணப் பூமியில் திருநடனத்தைச் செய்தருளிய சபைத்தலைவர் வீற்றிருக்கும் மேலச்சிதம்பரமாகிய திருப்பேரூருக்கு கீழ்பக்கத்திலும் உள்ளதாம் (எ-று) 38

## 210

நாற்றிசை யளவுந் தெய்வ நாகமே நயந்து கேண்மோ
வாற்றலார் திசைகண் மூன்று மாறியோ சனைக ளாகி
மேற்றிசைச் சாமீ பத்தி லிரண்டியோ சனைவி ளங்கும்
போற்றிய நாப்ப ணோடை பொய்கைபூம் பொழில்கள் சூழும்.

(இ-ள்) வெள்ளையானையே! அந்த அவிநாசித்தலத்தினது நான்கு எல்லைகளையும் சொல்லுவோம் விரும்பிக் கேட்பாய் மேலச்சிதம்பரம் என்கிற திருப்பேரூருக்கு இரண்டுயோசனை கிழக்கிலும், கருவூருக்கு இரண்டுயோசனை மேற்கிலும் வராககிரிக்கு இரண்டுயோசனை வடக்கிலும் காவிரியாற்றுக்கு இரண்டுயோசனை தெற்கிலும்ஆகிய இவற்றுக்கு நடுவில், ஓடை, தடாகம், அழகிய சோலைகளால் சூழப்பெற்றதாயும் (எ-று) 39

## 211

மௌவல்சேர் பஞ்ச வில்வ வனமுமங் குளதான் மற்று
மவ்வுழிக் கங்கை தோன்றி யாரணக் கயிலை யாகித்
திவ்விய பிரம மென்னச் சிவதீர்த்த மென்னும் பேராய்ப்
பவ்வநோய் தீர்ப்ப தாமோர் பரிசண கூவ மேவும்.

(இ-ள்) வனமல்லிகையும் பஞ்சவில்வவனம் உள்ளதும் கங்கை உற்பத்தியாகி வேதங்களால் புகழப்படும் கயிலை மலைக்கு நிகராய், மேன்மையான பிரமதீர்த்தமெனவும், சிவதீர்த்தமெனவும் பேர்பெற்றுப் பிறவிப்பிணியைத்தீர்ப்பதாகிய ஒருகிணறும் அத்தலத்தில் இருக்கிறது (எ-று) 40

212

அத்தலத் திமய வல்லி யரன்வலப் பாகம் பெற்றாள்
வித்தக விமலன் சாபம் விரிஞ்சனுந் தொலைத்து நின்றான்
மத்தகா சலமே நீயு மன்னுமந் நிலைபோய் வைகி
நித்தனர்ச் சனைசெய் வாய்நின் சாபமு நீங்கு மென்றான்.

(இ-ள்) *மேலும் அத்தலத்தில் இமய அரசன் புதல்வியாகிய பார்வதிதேவி சிவபெருமானுடைய வலப்பாகம்பெற்று விளங்குகிறாள். ஞானமயமாகிய சிவபெருமான் இட்டசாபம் நீங்கிப் பிரமனும் உயர்வு பெற்றான் ஆனதால் மதம் பொருந்திய வெள்ளையானையே நீயும் அத்தலத்திற்குச் சென்று தங்கி, நித்தனாகிய சிவபெருமானை அர்ச்சனை செய்தால் உன்னுடைய சாபமும் நீங்கும் என்று நாரதமுனிவர் கூறினார். (எ-று)* 41

213

நயந்துப தேசஞ் சொற்ற நற்றவ னளினப் பாதங்
கயந்தன தொருகை பற்றிக் கறையடி மடித்துத் தாழ்ந்து
வயந்தரு நுதலுங் கோடுந் தரைப்பட வணங்கி யேத்தி
வியந்தபே ரன்பு கூர்ந்து விடைகொடு போந்த தன்றே.

(இ-ள்) *விரும்பித்தனக்கு உபதேசம்செய்த நல்லதவத்தையுடைய நாரதமகாமுனிவரது தாமரைமலர்போன்ற பாதங்களில் வெள்ளையானை கால்களை மடித்தும் நெற்றியும் தந்தங்களும் பூமியிற் படும்படியாக வணங்கித் துதித்து ஆச்சரியமும் அன்பும் மிகுந்து விடைபெற்றுத் திரும்பிவந்தது. (எ-று)* 42

214

தெக்கணம் படர்ந்து செல்லுஞ் சிந்துரத் திலத ரூப
மிக்கசேண் கடந்து சாரல் வெங்கொடுஞ் சுரங்க ளேறித்
திக்கடர் நதிக ணீங்கித் திராவிட கொங்கு சேர்ந்து
புக்கொளி யென்னுந் தெய்வ பூமியிற் புகுந்த தன்றே.

(இ-ள்) *வெள்ளையானை தெற்குத்திசையை நோக்கி நடந்து மிகுந்த தூரமான மலைப்பக்கங்களையும் கொடியபாலைவனங்களையும் தாண்டி பலநதிகளையும் கடந்து, திராவிட தேசமாகிய கொங்குநாட்டைச் சேர்ந்து திருப்புக்கொளியூரென்னும் தெய்வத்தன்மை பொருந்திய தலத்தில் பிரவேசித்தது. (எ-று)* 43

215

வந்தமா மதவெண் குன்றம் வாரண வாசி யாய
செந்தளிர்க் கொழுந்து தோன்றுந் திகழ்வளக் கோயி லெய்திப்
புந்தியி லார்வம் பொங்கிப் புகருடல் புளகித் தங்க
னந்தமில் பூசை செய்ய வற்புத விருப்ப மாகி.

(இ-ள்) பின் அந்த வெள்ளையானை காசிக்குக் கொழுந்தாயுள்ள சிவலிங்கம் தோன்றிய வளப்பமான கோயிலையடைந்து புத்தியில் மிகுந்த ஆசைகொண்டு தன்புள்ளிகளையுடையசரீரத்தில் புளகாங்கிதம் தோன்ற, அங்கே இறைவனுக்கு முதன்மையான பூசைகளைச்செய்ய மிகுந்த விருப்பம் கொண்டது. (எ-று) 44

216

கோதறு மிடப ராசிக் குறிபெறுங் குணபா கத்தில்
ஓதரும் பொருளை யெதொட் டொருசர முதைந்து சேணிற்
பூதரக் கயிலை யன்ன போதகம் பொருநாற் கோட்டான்
மாதரை யகழ்ந்து கையா லாற்றுநீர் வரவு கோலி.

[இ-ள்] கயிலைமலைபோல் விளங்குகின்ற வெள்ளையானை குற்றமில்லாத இடபதேவருக்குக் கீழ் பாகத்தில் போர்செய்யக்கூடிய நான்கு தந்தங்களாலும் பெரிய பூமியைத் தோண்டி ஆற்றுநீர் வரும்படியாக வழிகோலி. [எ-று] 45

217

நாமமே தனதா யோங்க நலனுறு தீர்த்தங் கண்டு
பூமலி கயம் புகுந்து புனல்குடைந் தாடி யேறித்
தாமலர் குழைகள் கொய்து தடமணி மருப்பிற் றூங்கித்
தேமடர் கங்கா கூபத் திருப்புனல் புழைக்கை தேக்கி.

[இ-ள்] தன்னுடைய பெயர் விளங்கத் தன் பெயரமைந்த நன்மை பொருந்திய தீர்த்தத்தையுண்டாக்கி பூக்கள் நிறைந்த தடாகத்தில் நீராடி யேறி மலர்களையும் தழைகளையும் கொய்து விசாலமான அழகிய தந்தங்களிலே பத்திர புஷ்பங்களை வைத்து இனிமைமிகுந்த கங்காகூப தீர்த்தத்தை துவாரமுள்ள துதிக்கையில் நிறைத்து [எ-று] 46

218

முன்னவன் விமானஞ் சார்ந்து முக்கண்வா ரணத்தைத் தாழ்ந்து
மன்னுகா ரியைவ ணங்கிக் கணங்களை வழிபா டொன்றித்
தென்னரிற் கருணை பூத்துச் செழுமுதற் கொழுந்தாய் நின்ற
வென்னையா ளுடைய கோவை யிதயத்தா லிறைஞ்சி யேத்தி.

[இ-ள்] முற்பட்ட சிவபிரானது கர்ப்பக்கிரகத்தையடைந்து மூன்றுகண்களையுடைய விநாயகரை வழிபட்டு, நிலைபெற்ற ஐயனார், வயிரவர் மற்றுமுள்ள சிவகணங்களை வழிபட்டு தெற்குத்திசையில் கருணைமிகுத்து செழித்த சிவக்கொழுந்தாயுள்ள என்னை ஆளுடைய பிரானை மனதால் வணங்கித் துதித்து. 47

## 219

அஞ்செழுத் துடனீசான மாதியா வறிவி லோதி
மஞ்சனப் புதுநீ ராட்டி மதுமலர் பொதுளச் சூட்டிப்
பஞ்சபத் திரமாம் வில்வப் பல்லவம் பரிந்து சாத்திச்
செஞ்சுவைக் கனிக ணைவேத் தியவகை திருந்த வேற்றி.

[இ-ள்] ஐந்தெழுத்தோடு ஈசானமுதலாகவுள்ள மந்திரங்களை அறிவினால் ஓதி கங்காநீரை அபிடேகம் செய்து தேன் பொருந்திய மலர்களை நிறையச்சூட்டி, பஞ்சவில்வத் தளிர்களை அன்போடு சாத்தி மிகுந்த சுவையுடைய கனிவகைகளைத்திருத்திநிவேதித்து. [எ-று] 48

## 220

பூசனை விதியாற் பேணிப் புண்ணியக் கருணை மானின்
வாசமார் சரணம் போற்றி வலமுறை பலகால் வந்தங்
கூசலா டொருகை யோங்கித் தொழுதுநின் றுபயபாத
மாசற மடித்து வீழ்ந்து பணிந்துபேர்த் தரங்கம் வாழ்த்தி.

[இ-ள்] வேதாகம விதிப்படி பூசைசெய்து, புண்ணியவடிவாயுள்ள பெருங்கருணையச் செல்வியினது வாசமுள்ள பாததாமரை மலர்களை வணங்கிப் பலமுறை வலமாக வந்து ஊசல்போல் ஆடுகின்ற துதிக்கையை உயரத்தூக்கி வணங்கி குற்றம் இல்லாமல் கால்களைமடித்து விழுந்து வணங்கிப் பின் கனக சபைக்குச் சென்று துதித்தது. [எ-று] 49

## 221

இந்நெறி யொருநாட்போல விறையினுங் குறையாவாறு
பன்னிரண் டளவும்பூசை பயில்வுறு முயல்வு பார்த்து
முன்னெமு சயம்பிற் றேன்றி மும்மதக் களிறே வேண்டிற்
றென்னென வருளிச் செய்தா னிமையவர்க் கரியபெம்மான்

[இ-ள்] இவ்விதம் ஒரு நாளைப்போல் முயற்சியுடன் சிறிதும் குறைவின்றி பன்னிரண்டு வருடம் பூசை செய்துவந்தது. அது கண்டு தேவர்களுக்கு அரிய சிவபெருமான் சுயம்பு லிங்கத்திலிருந்து வெளிப்பட்டு மூன்று மதங்களையுடைய வெள்ளையானையே நீ வேண்டியவரம் யாது என்று கேட்கவும், [எ-று] 50

222

கண்டக வியற்கைமேரு கண்கணீ ரருவி சோர்வு
கொண்டுசே வடியின்மீது கொந்துமா தரவு கோவி
விண்டலா திபனென்மீது வெகுளியா லுதவுசாப
தண்டமே தவிர்சி வாய சயம்புவே சிவசி வாய.

[இ-ள்] அதற்கு மேருமலையைப்போன்ற வெள்ளை யானையானது தன் கண்களிலிருந்து அருவியைப்போல நீர் சிந்தும்படி மிகுந்த அன்போடு தேவலோகத்துக்குத்தலைவனான இந்திரன் என்மீது கோபங்கொண்டு கொடுத்த சாபத்தை நீக்கியருளவேண்டும் சுயம்புவேசிவாயஎன்று சொல்லித் துதித்தது [எ-று] 51

223

ஆரண சுரசி வாய வாகம தரசி வாய
காரண பரசி வாய காமத கனசி வாய
வாரண வுரிகொள் போர்வை வாசிய வனசி வாய
நாரண பிரம லோக நாயக சிவசி வாய.

[இ-ள்] வேதங்களுக்குத் தலைவனே ஆகமங்களுக்கு இடமானவனே, எவ்வுலகங்களுக்கும் காரணனே மன்மதனை யெரித்தவனே, யானையினது தோலை யுரித்துப் போர்த்தவனே நாரணன், பிரமன் இவ்விருவருலகிற்கும் நாயகனே சிவாய [எ-று] 52

224

முக்கண வாசி வாய முப்புர தகசி வாய
தக்கனை முனிசி வாய தற்பர மயசி வாய
வக்கர வணிசி வாய வற்புத நடசிவாய
புக்கொளி நிலய மேய பொற்பத சிவசிவாய.

மூன்று கண்ணையுடையவனே, முப்புரங்களையும் எரித்தவனே, தக்கனைக் கோபித்தவனே, தற்பரனாகவுள்ளவனே, உருத்திராட்சங்

களையும், பாம்பையும் அணிந்தவனே, ஆச்சரியமான திருநடனத்தைச் செய்கிறவனே, திருப்புக்கொளியூர்த் தலத்தில் அமர்ந்திருக்கின்ற பொன்போன்ற பாதத்தையுடையவனே சிவாய [எ-று] 53

225

என்னவே பகர்வே ழத்திற் கருள்செய விபமும் வேதம்
பன்னுதற் கரிய மேனி தீண்டநான் பற்றே னென்று
தன்னையே யஞ்சி மூலத் தானவீ சானந் தன்னில்
உன்னல்சேர் தன்னு மத்தா லொருசிவ லிங்க மூன்றி.

[இ-ள்] என்று இவ்வாறு சொல்லித்துதித்த வெள்ளையானைக்குப் பழைய உருவமும் மேன்மையும் உண்டாகும்படி பெருமான் அருள் செய்ய யானையும் வேதங்களினாலும் சொல்லுதற்கரியதிருமேனியைத் தீண்டுதற்கும் நான்தகாதவனென்று அஞ்சி மூலத்தானத்துக்கு ஈசானியதிக்கில் தன்னுடைய பெயரால் ஒரு சிவலிங்கத்தைத் தாபித்து. [எ-று] 54

226

ஆதி நாயகனையங் கத்தா னுவில் ஆவா கித்து
நீதி யாற்பரி சபூசை யிரந் தரம்புரிந் துபின்னும்
சோதி யைப்பஞ் சபூத சுத்தவந் தரியா கத்தால்
பேதி யாதருச் சித்தாங் குப் பெருந்தினக் கிரியை பேணி.

ஆதிநாயகனான பரசிவத்தை அந்த உருவத்தில் ஆவாகனம் செய்து நீதியால் தொட்டுப் பூசித்தலைத் தினந்தோறும் செய்து மறுபடியும் சோதியாகிய கடவுளைப் பஞ்சபூத சுத்தியோடு அந்தர்யாகபூசையினால் மாறுபடாமல் அருச்சித்து இவ்வாறு தினமுஞ் பூசைசெய்து வந்தது [எ-று] 55

227

சிறிதுநா ளியற்று முன்னந் திருவவி நாசிநாதன்
நெறிதரு மகவா னுள்ளத் ததிசய நிகழ்த்த வந்நாட்
பொறிதரு சுடர்மா ணிக்கப் பொற்றனி விமானமூர்ந்து
வறிதிலாப் பஞ்சவில்வ வனுடவி மருங்கு சார்ந்தான்.

[இ-ள்] சிலகாலம் ஆனவுடனே திருஅவிநாசிநாதன் இந்திரனுடைய உள்ளத்தில் ஒரு ஆச்சரியத்தை உண்டாக்க உடனே பிரகாசிக்கின்ற மாணிக்கத்தால் இழைக்கப்பட்ட பொன் விமானத்தில் ஏறி

வந்து பஞ்சவில்வவனமாகிய அவிநாசித்தலத்தின் பக்கத்தை யடைந்தான் [எ-று] 56

228

கிளைத்தசீர் வனத்தின் பாங்குங் கெழுமலர் வரிவண் டார்ப்பு
மிளைத்தமா மதிய வேணி யெம்பிரா னிருக்கை வாழ்வும்
வளைத்தபல் கணங்க ணின்று வான்பணி புரியு மாறுந்
துளைத்தடக் தளிர்க்கை வேழந் தொழுது நின்றதுவுங் கண்டான்.

கிளைகள் பொருந்திய மரங்கள் உள்ள வனத்தின் பக்கங்களில் எல்லாம் வரியையுடைய வண்டுகள் சப்தித்தலையும், மூன்றும் பிறையை அணிந்த சடையையுடைய எம்பிரான் எழுந்தருளி யிருத்தலையும், சூழ்ந்த பலதேவகணங்களும் நின்று பல பணிவிடைகளைப் புரிதலையும், துவாரம்பொருந்திய துதிக்கையையுடைய யானை தொழுது நின்ற தன்மையையும் கண்டான் [எ-று] 57

229

மைவரைச் சிறகு கொய்த வானவன் மகிழ்ந்து நோக்கித்
தெய்வவா ரணமே வாவென் றழைத்துமத் தகத்தைத் தீண்டித்
தைவரல் புரிந்து முன்னுட் சாபமுந் தவிரப் பார்த்து
மெய்வரம் பெறவும் பின்னுந் தந்தன மென்ற வேலை.

[இ-ள்] கரிய மலைகளின் இறகை வெட்டிய இந்திரன் மகிழ்ச்சியோடு பார்த்து வெள்ளை யானையே வா என்று அழைத்து அதனுடைய மத்தகத்தைத் தடவிக் கொடுத்து சாபம் நீங்கியிருக்கின்ற தன்மையைக் கண்டு இன்னும் உண்மையான வரங்களையும் பெற உத்தரவு கொடுத்தோமென்று (இந்திரன்) சொன்ன உடன் [எ-று] 58

230

கொற்றமாக் களிறு வானக் குருசிலை வணங்கி யேத்தி
நிற்றபோ துன்னு லிந்த நீடல மடைந்தே னிப்பாற்
கற்றைவார் சடையா ளுக கங்கணன் கருணை பாகன்
பொற்றிரு வடியான் போற்றல் புரிகுதி யெனப்பு கன்றான்.

[இ-ள்] வெற்றியையுடைய வெள்ளை யானை இந்திரனை வணங்கித் துதித்து நின்றபோது இந்திரன் உன்னால் நான் இந்த உயர்ந்த தலத்தை யடைந்தேன். இனி திரண்ட நீண்ட சடையையும், நாக கங்கணத்தையும் உடைய கருணாலயச் செல்வியை ஒரு பாகத்தில் உள்ள சிவபெருமானது அழகிய திருவடியை யான் வணங்கித் துதிக்கும்படி செய்வாய் என்று கூறினான் [எ-று] 59

231

மாதங்க மதுகேட் டாங்கு வாசவன் றனைக்கொண் டேகிப்
பூதங்கள் கணங்கள் காவற் றடைகளும் விலக்கிப் போந்து
வேதங்கண் முழங்கா நிற்குந் திருமுன்னர் விடுப்ப நாதன்
பாதங்கள் பணிந்து பாக சாதனன் பரவ லுற்றான்.

[இ-ள்] வெள்ளையானை அதைக்கேட்டு அவ்விடத்திற்கு இந்திரனை அழைத்துக்கொண்டு சென்று, பூதகணங்கள் தேவகணங்களுடைய காவலாகிய தடையை நீக்கிப் போய், வேதங்கள் சப்திக்கும் சந்நிதி முன்பேவிட இறைவனுடைய பாதங்களைப்பணிந்து இந்திரன் துதி செய்யத் தொடங்கினான். [எ-று] 60

232

போற்றிபங் கயனு மாலும் புகலுதற் கரியாய் போற்றி
போற்றிவாழ் காசி மூலம் புடைத்தெழு கொழுந்தே போற்றி
போற்றியெங் கருணை ஞானப் பூங்கொடி பாகா போற்றி
போற்றியற் புதக்கூத் தாடும் புராதன போற்றி போற்றி.

[இ-ள்] பிரமனும் திருமாலும் சொல்லுதற்கரிய பெருமையுடையவனே போற்றி காசியாகிய அடியிலிருந்து தோன்றி எழுந்த கொழுந்தே எம்முடைய கருணையைச் செல்வியை ஒரு பாகத்தில் உடையவனே ஆச்சரியமான திருநடனத்தைச் செய்தருளும் பழமையானவனே (எ-று) 61

233

போற்றிதத் துவமெய்ஞ் ஞான போதகப் பொருளே போற்றி
போற்றியைம் புலன்வென் றோர்கட் புணர்பரஞ் சுடரே போற்றி
போற்றிமூ வுலகோர் செய்யும் புண்ணிய முதலே போற்றி
போற்றியெவ் வுயிருமான புனிதனே போற்றி போற்றி.

[இ-ள்] உண்மையான சிவஞானபோதத்துக்குப் பொருளானவனே ஐம்புலன்களை வென்றவர்களுடன் சேர்ந்துள்ள பரஞ்சுடரே மூன்று உலகில் உள்ளவர்கள் செய்யும் புண்ணியத்துக்கு முதலாகவுள்ளவரே எவ்வுயிருமாய் நிறைந்த பரிசுத்தரே [எ-று] 62

234

போற்றியென் றுரைசெய் வோர்க்குப் பொன்னுல களிப்பாய் போற்றி
போற்றிவல் விலங்கா மிப்போ தகத்தையும் புரந்தாய் போற்றி
போற்றியிங் கெனையு மாட்கொண் டருளிய புகழோய் போற்றி
போற்றி புக் கொளியாய் போற்றி சயசய போற்றி.

[இ-ள்] போற்றி என்று சொல்பவர்களுக்குப் பொன்னுலகத்தை யளிப்பவரே இந்தக் கொடியவிலங்காகிய வெள்ளையானையையும் காப்பாற்றினவரே என்னையும் ஆட்கொண்டு அருள்செய்த புகழையுடையவரே திருப்புக்கொளியூரில் இருப்பவனே சய சய போற்றி [எ-று] 63

235

என்றுநின் றிரங்கி யஞ்சி யெழிலறி விழந்த வெல்லை
மன்றலம் பாரி சாத மருவுவா சவனே நீயு
முன்றன்வா கனமுஞ் செம்பொ னுலகடைந்திடுதி ரென்று
தென்றமிழ் மதுரவாக்குச் சிவலிங்கத் தெழுந்த தன்றே.

[இ-ள்] என்று பலவிதமாக துதித்து நின்று அஞ்சி அழகிய மெய்மறந்து இருந்தபொழுது, வாசனை பொருந்திய பாரிசாதமரத்தினது நிழலில் வாழ்கின்ற இந்திரனே நீயும் உன் வாகனமாகிய வெள்ளையானையும் பொன்னுலகத்தை யடைவீராக! என்று சிவலிங்கத்திலிருந்து மதுரமாகிய தமிழ் வாக்கு ஒன்று உண்டாயிற்று [எ-று] 64

236

விடைகொடுத் தருளும் வாக்கை மேல்கொடு புறம்போய் நின்று
படைநெடு வயிரக் கையான் பானிறப் பகட்டி லேறி
யடைமணி விமானத் தூடே யரம்பையர் கவரி வீசிப்
புடைவர முழவ மோங்கப் பொற்புலம் போந்து புக்கான்.

[இ-ள்] இவ்வாறு இறைவன் விடைகொடுத்தருளப் பெற்றுக் கொண்டு வச்சிராயுதத்தையுடைய இந்திரன் வெள்ளை யானையின் மேல் நவரத்தினங்கள் இழைத்த விமானத்தில் தேவரம்பையர்கள் கவரி வீசிக்கொண்டு பக்கத்தில் வரவும் பலவித வாத்தியங்கள் முழங்கவும் பொன்னுலகத்தையடைந்து தனது அரண்மனையில் புகுந்தான் [எ-று] 65

237

தேசமுந் திசையும் போற்றுந் திருவவி நாசி யின்கண்
வாசவன் களிற்றின் பேற்றை வழுத்தின மெழுத்தா லிப்பாற்
பூசலிற் கிளர்ந்த நீள்கைத் தாடகை புரிந்த நீதி
நாசமில் சனற்கு மாற கேளென நந்தி சொல்வான்.

[இ-ள்] உலகங்களிலும் அட்டதிக்குகளிலும் உள்ளவர்களும் துதிக்கும் திருஅவிநாசித்தலத்தில் இந்திரனுடைய வெள்ளையானை அடைந்த சாபவிமோசன மேன்மையைச் சொன்னோம். இனிச்

சண்டைசெய்யக்கூடிய நீண்ட கையையுடைய தாடகை பூசித்து அடைந்த பேற்றைச் சொல்லுவோம் கேட்பாயென்று சனற்குமார முனிவருக்கு நந்திகேசுவரர் சொல்லத் தொடங்கினர். [எ-று] 66

நான்காவது அயிராவதச் சருக்கம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—237.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

# தாடகைச் சருக்கம்

238

தானவர் தங்குல மேன்மை தரித்தாள்
வானக மண்ணக மார வசிப்பாள்
ஊனுண வுண்டவு தார குணத்தாள்
ஈனவ ரம்பல தியாது மியற்றாள்.

[இ-ள்] அசுரர்குலத்திலுதித்த தாடகை என்பவள் மேன்மையுடையவளும். ஆகாயத்திலும் பூமியிலும் சஞ்சரிக்கத்தக்கவளும், மாம்ச உணவை மிகவும் உண்கிற குணத்தை உடையவளும், இழிவான செய்கையை யன்றி வேறொன்றும் செய்யாதவளும்[எ-று] 1

239

நீலமி லங்கிய மேனி நிறத்தாள்
வாலவி ளம்பிறை மானு மெயிற்றாள்
காலனி லுங்கடி தாய கருத்தாள்
மேலட ருங்கனல் போல விழிப்பாள்.

[இ-ள்] நீலநிறம் பொருந்திய சரீரத்தை உடையவளும், இளம்பிறைபோன்ற வளைந்த பற்களையுடையவளும் எமனைப்பார்க்கிலும் கொடிய எண்ணம் உடையவளும், மேலே சொலிக்கிற கனல்போன்ற கண்களையுடையவளும் [எ-று] 2

240

ஆயிர வேழ மடர்ந்த பலத்தாள்
மாயிரு ஞால மடங்க மதிப்பாள்
சாயிர லூடு படர்ந்து சரிப்பாள்
காயிலை யான கரும்பனை யொப்பாள்.

[இ-ள்] ஆயிரம் யானைகள் சேர்ந்த பலத்தை யுடையவளும், பெரிய பூமியிலுள்ளவர்களை யெல்லாம் தனக்குக் கீழாகமதிப்பவளும், பொழுதுபோன இராக்காலத்திலும் சஞ்சரிப்பவளும், காயில்லாத கரிய பனை மரத்தை ஒத்தவளும். (எ-று) 3

241

கேடக லாத கொடுஞ்சொல் கிளப்பாள்
காடக மாக நெருங்கள கத்தாள்
மாடகல் வான மலட்டுத ரத்தாள்
ஏடக நாடக தாடகை யென்பாள்.

[இ-ள்] கேடு நீங்காத கொடுஞ்சொல்லைச் சொல்லுபவளும் காட்டைப்போல அடர்ந்த கரிய கூந்தலையுடையவளும், மிகப் பெரிதான மலட்டு வயிற்றையுடையவளும், ஆட்டைப்போல பல விடங்களிலும் அலைகின்ற தன்மையுடையவளுமாவாள் [எ-று] 4

242

எண்டிசை யெண்சொ லிலங்கையி னின்று
மண்டல பேதம திப்பந டந்து
கொண்டல ருதுத வுங்குட கின்கண்
வண்டுல வாவொர் வனத்துழி வந்தாள்.

[இ-ள்] எட்டுத்திக்குகளிலுள்ளவர்களும் மதித்துக்கூறும் பெருமையுள்ள இலங்கை மாநகரத்திலிருந்து பற்பல கண்டங்களையும் கடந்து, மேகம் நீங்காது மழையைப் பெய்கின்ற குடகுமலையின் கண் வண்டுகள் நீங்காது மொய்க்கின்ற ஓர் வனத்துக்கு வந்தாள் [எ-று] 5

243

கோலவ ரக்கிகொ டுங்கணெ டுங்கால்
தூலவு டற்படி வத்தொடர் வேகண்
டோலமு ழக்கியு லாவுழை யேனம்
பாலவிழ் கார்மயி டத்தொடு பன்மா.

[இ-ள்] வளர்ந்த கண்களையும் நீண்டகால்களையும் உடைய அத்தாடகையானவள் பெரிய உடலோடு செல்லுதலைக்கண்டு பயந்து சப்தித்துச் சஞ்சரிக்கின்ற மான், பன்றி பாலைச்சொரிகின்ற கரிய எருமை முதலிய பல மிருகங்களும் [எ-று] 6

244

மேவிய மற்றும் வெருண்டகல் போதுந்
தாவுமி ளங்குரு ளைக்களி தங்கி
ஆவியு நெஞ்சு மவிழ்ந்து குழைந்து
கூவிய ழைத்தெதிர் குலவுதல் கண்டாள்

[இ-ள்] ஓடுகின்ற காலத்திலும் தன் பேரில் தாவுகின்ற இளைய குட்டிகளிடத்தில் மகிழ்ந்து மனமிளகி உயிரும் மனமும் உருகக் கூவியழைத்து அவைகளோடு விளையாடுதலையுங்கண்டாள் [எ-று] 7

245

செங்கம லத்துறை தேவைய லாமை
யங்கவு றுப்பை யமைப்பவர் யாரே
யிங்கவ னைத்தவ மேயவி யற்றித்
துங்கம கப்பெற லென்று துணிந்து,

(இ-ள்) சிவந்த தாமரைமலரில் வீற்றிருக்கின்ற பிரமதேவர் அல்லாமல் சரீரத்தையும் உறுப்பையும் அமைக்கின்றவர்கள் யாரிருக்கின்றார்கள் ஆதலால் இவ்விடத்தில் அவரைக்குறித்துத்தவமியற்றி உயர்ந்த புத்திரனைப்பெறுவேனென்றுகருதி. (எ-று) 8

246

அந்தவ னத்தி னயற்குட பாலே
இந்திரை கேள்வ னியற்றிய தாகி
நந்துமிழ் வெண்டர ளந்திரை நல்குஞ்
சிந்துவெ னுந்தட மொன்றெதிர் சென்றாள்.

(இ-ள்) அந்தவனத்துக்கு மேல்பக்கத்தில் திருமாலால்உண்டு பண்ணப்பட்ட சங்கினால் உமிழப்பட்டவெண்மையான முத்துக்களை அலையானது கரையில் ஒதுக்குகின்ற சிந்து என்கிற தடாகத்துக்கு எதிர்சென்றாள். (எ-று) 9

247

வேதசு ராதிதி யான விருப்பாற்
சீதள நீருழிச் செங்கை குவித்து
மேதகு யோக சமாதியை மேவிச்
சாதக மான தவஞ்செய லானாள்.

(இ-ள்) வேதசுரத்துக்குத்தலைவனான பிர்மாவைத்தியானிக்க வேண்டுமென்ற விருப்பத்தினால் குளிர்ந்த அந்தசிந்து என்னுந் தடாகத்துக்குச்சென்று சிவந்தகையை சிரசின்மேல் குவித்து மேன்மையான யோகசமாதியை அடைந்து சாதகமான தவத்தைச்செய்யத் தொடங்கினாள். (எ-று) 10

248

எண்சில கால மியற்றிய வேலை
பண் சது மாமறை யாதி பரிந்தே
பெண்செயல் பேதைமை யாமெனல் பேணி
வெண்சிறை யோதிம மீவெளி நின்றான்.

(இ—ள்) இவ்விதமாக, சில ஆண்டுகள் தவஞ்செய்த காலத்தில் இசையோடுகூடிய நான்குவேதத்துக்கும் முதன்மையான பிரமதேவர் அன்புகொண்டு இப்பெண்ணாகிய தாடகையின் செயல் அறிவீனமென்று வெண்மையானசிறகுகளையுடைய அன்னவாகனத்திலமர்ந்து காட்சி கொடுத்தான். (எ—று) 11

249

யாது விரும்பிய தாங்கொ லெனுது
தாது பிறங்கிய தாடகை யேநீ
போது தவம்புனி தம்பெரி தாமா
றேதது மென்றிதொ ருண்மை யுரைப்பான்.

(இ—ள்) தாடகையே நீ 'எதைவிரும்பித்தவஞ்செய்கின்றாய்' நீ செய்கின்ற தவம்மிகுந்தமேன்மையை அடைதற்கு உபாயம் கூறுகின்றேன்! என்று உண்மையைக் கூறுவானாயினான் (எ-று) 12

250

திருவவி நாசி யெனுஞ்சிவ பூமி
வெருவரு மென்குறை விட்டிய தாகும்
பருவர லின்றிய பான்மையி னங்ஙன்,
மருவுத லேதகு மென்று மறைந்தான்.

(இ—ள்) திரு அவிநாசி என்ற சிவதலமானது பயப்படத்தக்க எனது குறையைப் போக்கிய தலமாகும். துன்பமில்லாத தன்மையினாலே அத்தலத்தை நீ அடைந்து தவஞ்செய்தலே தகுதியானது என்று உரைத்தான். (எ—று) 13

251

நீரம ருந்தவ நிட்டை குலைந்தே
தீரம கன்று நெடுங்குண தென்பால்
ஆரவ டர்ந்தமர் கேரள மாகுங்
கோரமறுங்குட கொங்க மடைந்தாள்.

(இ—ள்) அதைக் கேட்ட தாடகை மனமகிழ்ந்து அத்தடாகக் கரையில் தவஞ் செய்தலைவிட்டுநீங்கி அதன் தென் கிழக்காகநெடுந்தூரம் சென்று மரங்கள் அடர்ந்த கேரளம்என்கிறகொடுமையில்லாத கொங்குநாட்டை அடைந்தாள். (எ—று) 14

252

வல்லி செறிந்த வனப்பெரு வாழ்வும்
மெல்லிசை யிற்படு வேத முழக்கும்
நல்லியல் பொன்றிய ஞான வரம்பும்
புல்லிய புக்கொளி யெல்லை புகுந்தாள்.

(இ—ள்) கொடிகள் நிறைந்த மிகுந்தசிறப்பையும், இனியஇசையோடுபொருந்திய வேதத்தினது ஒலியையும் உடையநல்லதன்மையோடுகூடிய ஞானத்துக்கு எல்லையாகப்பொருந்தியதிருப்புக்கொளியூரின்எல்லையில்வந்து சேர்ந்தாள். (எ—று) 15

253

வேறு

பொய்கை யயிரா வதப்பெயர்கொள் பூவார் புனலுட் புகுந்தாடி
மெய்கை நுதன்மார் பகம்விளங்க வெண்ணீறணிந்து விறல்பயின்று
செய்கை வலிய வினைமறந்து வேறோர் சனனத்தினிற்போல
வுய்கை நினைந்து சிவசரியைச் சன்மார்க்கத்தி லொருப்பட்டாள்.

(இ—ள்) பூக்கள் நிறைந்த அயிராவததீர்த்தம் என்னும் பொய்கையில் ஸ்நானம்பண்ணி வெண்மையானவிபூதியை மெய்கைநெற்றி மார்பு முதலியவிடங்களில் விளங்க அணிந்து, இதுவரையிற் செய்த கொடியவினைகளையெல்லாம் முழுதும் மறந்து வேறொரு பிறப்பையடைந்தாற்போல நற்கதியடைய எண்ணிச் சிவசரியையாகிய நல்ல மார்க்கத்தில் தவறாதிருந்தாள். (எ—று) 16

254

சிறப்பா ருயர்ந்த வனக்கோயிற் றிருமுன் கணங்க ணெருங்குதலாற்
பிறப்பா சறுக்கும் பெருமானை யணுகா வச்சம் பெரிதாகிப்
புறப்பாற் சூழ வலமிட்டுப் புதுநீர் பொழிந்து முதிர்கோல
நிறப்பா லனைய வெண்பொடியா லெழுதி யழுத்தி நிலவியபின்.

(இ—ள்) அந்தச்சிறந்த வனத்திலுள்ள கோயிலின் சந்நிதியில் கூட்டங்கள் நெருங்குதலால் பிறவியாகிய குற்றத்தைப் போக்கும் பெருமானையணுகி மிகுந்த பயபக்தியோடு வெளியில் முழுவதும் திருவலமிட்டுப் புதிய நீரைத் தெளித்து வெண்மையான பொடியினால் அழகிய கோலத்தை நன்றாய் இட்டு, பிறகு. (எ—று) 17

255

பூங்கா வனத்தி லுயர்போதும் புதுமா தவியின் மதுமலரும்
பாங்கார் பரம சிவரூப பாகீ ரதியா மஞ்சனமு
நீங்கா தெடுத்தங் கெதிர்வைகி நேசத் தரனைப் பூசனை கூர்ந்
தேங்கா திடமாய் வலமாய்வந் தேத்தி யிறைஞ்சி யெழுந்தனளால்.

(இ-ள்) பூந்தோட்டத்திற்குச் சென்று உயர்ந்த புஷ்பங்களுடன் தேன் பொருந்திய குருக்கத்தி மலரும் கொண்டுவந்து பரமசிவத்தினது வடிவாக விளங்குகின்ற கங்கா கூபத்திலிருந்து திருமஞ்சன தீர்த்தம் கொண்டுவந்து சுவாமிக்கு அபிஷேகம் செய்துபூமாலைகளைப்புனைந்து சாத்தி சந்நிதி முன்பாக நின்று பலதோத்திரங்களைச் சொல்லித்துதித்து வணங்கியெழுந்தாள். (எ-று) 18

## 256

வென்றி விழிகள் புனல் சொரிய விரிந்து குழல்பின் சரிந்தவிழ
வொன்று கரங்கள் சிரங்குவிய வொருப்பட்டலையா நிலை நின்றாள்
மன்ற விருபா லருவியுக மருவி யொருபால் முகில் செறியத்
துன்று சிகரி நிமிர்ந்த வொரு கிரிநின் றனைய தோற்றம்போல்.

(இ-ள்) கண்களிலிருந்து ஆனந்தக்கண்ணீர் அருவி சொரிய குழல் விரிந்து பின்னே சரிய பொருந்திய கரங்கள் சிரசின்மேல் ஏறிக் குவிய ஒரே தன்மையாக நிலைத்து நின்று இருபக்கத்திலும் அருவி சொரிய உச்சியில் மேகம் தங்கியிருக்கின்ற பெரிய கரியமலையைப் போலநின்று. (எ-று) 19

## 257

பின்னர்த் தொழுது கரமெடுத்துப் பேழ்வாய் திறந்து பிறையெயிறு
மின்ன முழங்கு புகழ்பாடி விதம்பற் பலவாய்ப் பதம் பெயர்த்து
மன்னு பிரமானந்தமெனும் மகிழ்ச்சி கூர்ந்து மனமோர்ந்து
தன்னின் மிகுந்த தாட்கைநின் றுடல் புரிந்தாள் சரதமாய்.

(இ-ள்) பின்னர் கையைத் தூக்கித் தொழுது பெரிய வாயைத் திறந்து பிறைச் சந்திரனைப் போன்ற பற்கள் பிரகாசிக்க இறைவனைப் புகழ்ந்துபாடி, கையை நீட்டிப் பாட்டிற்குத் தக்கதாகப் பாதத்தைப் பெயர்த்து (நடனம் செய்து) பிரமானந்தமாகிய மகிழ்ச்சியையடைந்து உண்மையாக நடனத்தைச் செய்தாள். (எ-று) 20

## 258

விருப்புக் ககலா திவ்வாறு விரகி னோற்குந் தவ முயற்சி
மருப்புக் குயர்ந்த வனத்தமர்ந்து வருட மொருமூன் றியற்றிய பின்
திருப்புக் கொளியான் சிவபெருமான் சிந்தை மகிழ வினியமொழி
பொருப்புக் கிளிசொற் றிவட்குவர மீயென் றிரந்தா ளீதுமென.

(இ-ள்) வாசனை நீங்காது மிகுந்திருக்கின்றவனத்தில் தங்கி இவ்வாறு விருப்பம் நீங்காமல் திறமையாக மூன்று வருட காலம் தவம் செய்தபின், திருப்புக்கொளியூரிலுள்ள சிவபெருமான் மனமகிழும்

படி மலைமகளாகிய கருணாலயச் செல்வி இத்தாடகைக்கு வரங்கொடுத் 'தருள வேண்டுமென்று கிளியைப்போல இனிமையாகச் சொல்ல இறைவன் வரங்கொடுப்போம் என்று கூறினார். (எ-று) 21

## 259

இருந்தா ரணிமூ வுலகேழு மீன்றுந் தெருளா விளங்கோதை
கருந்தா ரளகப் புளகமுலைக் களபக் கருணாலயச் செல்வி
பெருந்தாடகையை யருகழைப்பப் பிழைத்தேனென்று வாய்பொதுளி
வருந்தா தேத்த நீ மதித்த கருத்தே தென்று வாய் மலர்ந்தாள்.

(இ—ள்) எல்லா உலகங்களையும் பெற்றும் தளராத, மாலையணிந்த கரிய கூந்தலையும் வாசனைச் சாந்து அணிந்த உயர்ந்த தனங்களையும் உடைய கருணாலயச் செல்வி பெரிய தாடகையைச் சமீபத்தில் அழைக்க நான் உய்ந்தேனென்று பலவிதமாகத் துதிக்க நீ கருதியவரம் யாது என்று திருவாய் மலர்ந்தாள். (எ—று) 22

## 260

கங்கா தரனைப் பிரியாத கருணை யமுதே கண்மணியே
மங்கா வொளியே துயர்தீர வந்த மருந்தே வான்பொருளே
பொங்காதரவு தமியளொரு புதல்வற் பேற்றின் பொருட்டருணீ
தங்கா வருள்கென் றெதிர்பணிந்து கிடந்தாள் சாரற் சயிலம்போல்.

(இ-ள்) கங்கையைத் தரித்த சிவபெருமானைப் பிரியாத கிருபை நிறைந்த அமிர்தமே! கண்மணியே குறையாதபிரகாசமே! என்னுடைய துன்பம் நீங்க வந்த மருந்தே! உயர்ந்த பொருளே! தனியாகவுள்ள நான் ஒரு புத்திரனைப் பெற மிகுந்த விருப்பமுற்றிருக்கின்றேன். இந்த வரத்தை எனக்குக் கொடுத்து அருளவேண்டுமென்று கூறி ஒரு மலை வீழ்வது போல் பணிந்து வீழ்ந்தாள். (எ-று)

## 261

புக்க வேலை மதிமுடியும் புண்ட ரீக வதளுடையும்
மிக்க பூதித் தூளிதமும் விரையா ரிதழி மாலிகையுஞ்
செக்கர் வேணித் தனியழகுந் திண்டோ ளழகு நனிவிளங்கத்
தக்க வொருதா டகையறிவிற் காட்சி கொடுத்தான் றனிநாதன்.

(இ-ள்) அப்பொழுது சந்திரனைத் தரித்த சடையும், புலித்தோலுடையும் மேன்மையான விபூதியை உத்தூளணமாயணிந்த அழகும் வாசனை பொருந்திய கொன்றை மாலையும், சிவந்த சடையழகும், தோள் அழகும் விளங்க, தாடகை ஞானக் கண்ணாற் காணும்படி ஒப்பற்ற தலைவனாகிய சிவபெருமான் காட்சி கொடுத்தார். (எ-று) 24

## 262

பின்னு மவளா தரமொழியப் பிசிதா சனரான் மிகுநரரால்
உன்ன வரிய திறன்மருவி யயுத மடங்கற் குவமையென
மன்னு சகல மாயைகளும் வஞ்சம் பலவும் வல்லனென
மன்ன பரிசே சந்ததியொன் றளித்தே மென்றா னருளாளன்.

(இ-ள்) அவள் விருப்பத்தின்படி, மாமிசத்தையுண்ணும் அரக்கர்களாலும் மேன்மை பொருந்திய மனிதர்களாலும் வெல்ல முடியாத வல்லமையையும் பதினாயிரம் சிங்கத்திற்கு ஒப்பான பலத்தையும் உடைய நிலைபெற்ற சகல மாயைகளிலும் வஞ்சனைகளிலும் வல்லவனென்றுசொல்லத்தக்க ஒரு புத்திரனையளித்தேனென்று கருணைக்கடலாகிய சிவபெருமான் கூறினார். [எ-று] 25

## 263

வன்றா டகைதன் செவிப்புகுந்த மதுர வாக்கு மலட்ட கட்டிற்
சென்றா ருயிரா யுற்பவித்துக் கருப்பைக் கோளின் சிறைப்பட்ட
தன்றா லிலையிற் றுயில்வோனை யயனைப் படைத்த வாண்டகைக்குப்
புன்றா னவர்க்கு ளோருடலைக் காட்டி மறைத்தல் புகழ்ப்பாலோ.

[இ-ள்] கொடிய தாடகையினுடைய காதிற் புகுந்த இனியவார்த்தை அவளுடைய மலட்டு வயிற்றிலேயுயிராய்த் தங்கிக் கருப்பமாக வளரத்தொடங்கியது. முற்காலத்தில் ஆல் இலையிற் பள்ளிகொள்ளும் திருமாலையும் பிரமனையும் உண்டாக்கிய பெருமையையுடைய சிவபெருமானுக்கு அற்பமாகிய அரக்கி வயிற்றில் ஓர் உடலை உண்டாக்கி மறைத்தல் புகழுக்குரியதாகுமோ. [எ-று] 26

## 264

கடியே கமழு மிதழிமுடிக் கருணை லயப்பொற் பூங்கொடியே
மிடியே னறிவுக் கருள்புரிந்த மேன்மை விளங்கக் குவலயத்துன்
அடியே நினைந்து திருமுன்பு மகவா சையின்வந் தடைந்தோர்க்கப்
படியே தொலையா வரமருள்கை தமியள் வேண்டும் பதமென்றாள்.

[இ-ள்] வாசனை கமழும் கொன்றை மாலையை யணிந்த சிவபிரான் ஒரு பாகத்தில் அமரும் கருணாலயச் செல்வியாகிய பூங்கொடியே' புத்திர விருப்பத்தால் உன்னுடைய திருவடியை நினைந்து உன் சந்நிதியில்வந்துசேர்ந்தோருக்கு நான் அடைந்ததைப் போலப்புத்திரப் பேற்றையருள வேண்டும் இது தான் நான்வேண்டும் வரம்என்றாள். [எ-று] 27

265

மீட்டு மொருசொற் புகல்கின்றாள் விண்ணோர் நாதன் றிருச்செவியிற்
கூட்டு மியல்போ கூடாவோ வறியே னென்று குழைந்தஞ்சி
மூட்டும் விபுலக் கலையொதுக்கி முடிந்த குழலோர் புறஞ்சரியக்
கோட்டு முலைகள் தலைதாழக் குடந்தம் பட்டுக் குவிகையால்.

*[இ—ள்] மறுபடியும் கூறுகின்றாள். தேவர்கள் தேவனாகிய சிவ பெருமானது திருச்செவியில் ஏறுமோ ஏறாதோ யான் அறியேன், என்று பயந்து, சேர்ந்த பெருமையான வஸ்திரத்தை ஒதுக்கி முடிந்த கூந்தல் ஒரு பக்கம் சரியக் குவிந்த தனங்கள் தாழ மார்பகத்தில் குவித்த கையினோடு நின்று. [எ-று]* 28

266

நின்றே யெனது சிற்றறிவி னிகழ்ந்து திகழ்ந்த காட்சிபோல்
இன்றே முதலா மதியிரவி யிலகுந் தோறு முலகியற்கை
சென்றே நிலவ வருளோங்கு சடையோ னென்னுந் திருநாமம்
வென்றே வாழ வேண்டுமெனப் பகர்ந்தாள் மற்றும் விண்ணப்பம்.

*[இ—ள்] என்னுடைய சிற்றறிவிற்கும் விளங்கிய காட்சிபோல் சூரிய சந்திரர்கள் சஞ்சரிக்கும் காலம் முடிய உலகில் அருள் மிகுந்த சடையான் என்னும் திருநாமம் வழங்கவேண்டுமென்று விண்ணப்பம் செய்தாள். [எ-று]* 29

267

தரங்க மேய புனல்வேணித் தனிநாயகனுந் தவம்புரியா
விரங்கல் புரியுந் தாடகைதே ரெண்ணத் தளவே யருள்வழங்கிப்
புரங்கட் கெல்லா மாதியெனுந் திருவா னிலையம் போந்தணுகி
உரங்கொள் தலவா சம்புரிகென் றரிய வொருவாக் குதவுதலும்.

*[இ—ள்] அலைகளோடு கூடிய கங்கையைச் சடையில் தரித்த சிவ பெருமான் தவத்தைச் செய்து வருந்திய தாடகையின் எண்ணப்படி யே வரங்கொடுத்து தலங்களுக்கெல்லாம் ஆதியாக விளங்கும் கருவூர் ஆனிலையிலும் போய் அங்கே சிலகாலம் வசித்திருப்பாய் என்று ஒரு வாக்கையும் அருளிச்செய்தார், (எ—று]* 30

268

வீழ்ந்து வணங்கி விடைகொண்டு விறற்று டகையும் புறக்கீழ்பாற்
சூழ்ந்த தளவ வனம்போந்து சுதவேட் பரவி யகன்றேகி
யாழ்ந்த நதியம் பராவதியு மடர்சீர் வஞ்சு ளாடவியும்
வாழ்ந்த பசவு நவநீத வரையுங் கண்டாள் வழிப்பட்டாள்.

[இ-ள்] கீழே விழுந்து வணங்கி விடைபெற்று வெற்றிபொருந்திய தாடகை அவிநாசிக்குக் கிழ்ப் பக்கத்தில் உள்ள முல்லை வனத்தையடைந்து அங்குள்ள கடவுளை வணங்கி அங்கு நின்றும் நீங்கி அமராவதி நதியையும் மிகுந்த கீர்த்தியுள்ள வஞ்சுளாடவி யென்ற கருவூரையும் அங்கிருந்த காமதேனுவையும் அதனால் உண்டாக்கப்பட்ட வெண்ணெய் மலையையுங் கண்டு வழிபட்டாள். [எ-று] 31

## 269

கருவூர் மறுகை வலம்வந்து கடவுள் சிகரா லயம் வணங்கி
மருவூர் மலர்மஞ் சனம்பூசை மனத்தா லியற்றுந் தினத்தொருநாள்
உருவூர் உதரம் புடையகல வுந்தி மெலிய வுடல் குழையச்
சருவூர் கலக மாரீசன் றன்னைப் பயந்தாள் சயம்பெற்றாள்.

(இ-ள்) கருவூர் வீதியை வலம் வந்து கடவுள் ஆலயத்தை வணங்கி வாசனை பொருந்திய மலர்களால் மாலை தொடுத்து சுவாமிக்குத் திருமஞ்சனம் ஆட்டி மாலையை அணிவித்து பூசைசெய்துகொண்டுவருகின்ற காலத்தில், துடையும் வயிறும் பெருக்க உந்தி தளர உடலும் மெலிய கலகத்தை மிகவும் செய்கிற மாரீசனை தாடகை பெற்றெடுத்து அக்குழந்தையைக் கண்டு மனமகிழ்ந்து, சிவபெருமான் திருவருளைப் பலவாறு துதித்து தாடகை தனதிருப்பிடம் போய் மகிழ்ந்திருந்தனள். (எ-று) 32

## 270

திருப்புக் கொளியா னவிநாசித் தெய்வப் பெருமா னருள்பேணி
விருப்புக் கொழியா வரம்பெற்ற விறற்று டகைசீர் விளம்பியபின்
இருப்புக் கொழியா வுரகேசன் மகண்மா தவப்பே றெழிற்கயிலைப்
பொருப்புக் கொழியாச் சனற்குமரன் கேட்க நந்தி புகலுவான்.

(இ-ள்) திருப்புக் கொளியூரில் தெய்வப் பெருமானாகிய அவிநாசியப்பர் திருவருளை விரும்பி வேண்டிய வரத்தைப்பெற்ற தாடகையின் கதையைச் சொன்னோம் இனி நாகராசன் புத்திரியாகிய நாக கன்னி தவத்தைச் செய்து வரம் பெற்ற கதையைச் சொல்வோம். அழகிய கயிலையை விட்டு நீங்காத சனற்குமார முனிவரே கேட்பீரென்று நந்தி தேவர் சொல்லத் தொடங்கினார். (எ-று) 33

ஐந்தாவது தாடகைச் சருக்கம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—270.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நாககன்னிச் சருக்கம்.

## 271

இடந்தர விட்ட பீட மிட்டமண் டிலமே யாகத்
தடந்தர வுயர்ந்த மேனித் தளர்வொரு காலு மின்றி
அடர்ந்தன சிரங்க ளோரா யிரங்களு மகிலந் தாங்கப்
படந்தரு பகுவாய் தோறும் பன்மணி விளக்கந் தோன்ற.

(இ—ள்) விசாலமான பீடம் என்னும் அடியிடம் வளைவாகவும், பெரிய உயர்ந்தசரீரம் ஒரு சமயத்திலும், சோர்வு அடையாமல், நெருங்கிய ஆயிரம் தலைகளும், உலகத்தைத் தாங்கவும், பிளவுபட்ட வாயையும் உடைய படங்களில் பல இரத்தினங்களின் ஒளி பிரகாசிக்கவும் (எ—று) 1

## 272

சகசிரத் திரட்டிக் கண்கள் தழற்பொறி யவிழ்ந்து சிந்தப்
பகலவ னிகா ரம்போல் வெயிலொளி பயிலா நிற்கத்
தகவுறு மால காலந் தமோமய மாகி யங்கண்
இகல்பொரு மெயிற்றின் பாங்க ரிடையிடை கங்குல் காட்ட.

(இ—ள்) இரண்டாயிரம் கண்களிலும் அக்கினிப் பொறி பறக்கவும், சூரியனது கிரணம் போன்ற சரீரஒளி எங்கும் பிரகாசிக்கவும், மேன்மை பொருந்திய ஆலகாலவிஷமானது இருள்மயமாகி ஒளி பொருந்திய பற்களுக்கு இடையில் இருளாகத்தோன்றவும் (எ—று) 2

## 273

அனந்தன்வா சுகியே தக்கன் அரியகார்க் கோடன் பன்மன்
சினந்தமா தனஞ்செ யன்பின் சீர்பெறு குளிகன் சங்கன்
இனந்தரு மட்ட நாக மெண்டிசை தொறுந்தற் சூழ
நனந்தலை யுரக ராச னமர்வது நாக லோகம்.

(இ—ள்) அனந்தன், வாசுகி, தக்ஷகன், அருமையான கார்க்கோடகன், பதுமன் கோபத்தையுடைய பெரியதனஞ்செயன், மேன்மையுள்ள குளிகன் சங்கன் என்று சொல்லப்பட்ட எட்டு நாகங்களும் தன்னைச்சூழ எட்டுத்திக்கிலும் இருக்கவும், நடுவில் பாம்புகளுக்கெல்லாம் அரசனாகிய ஆதிசேடன் தங்கியிருப்பது நாகலோகமாம். (எ—று) 3

274

முந்துமோர் துவாப ரத்தின் முடிவிலிந் திரகற் பத்தில்
அந்தலோ கம்பு ரந்தாங் கரசுவீற் றிருக்கு மண்ணல்
கொந்தக னென்பா னன்றேன் குலவிய புயத்தாற் புல்லுஞ்
சுந்தரக் களபக் கொங்கைக் கிளிமொழிச் சுவதி யென்பாள்.

(இ-ள்) பழமையான துவாபர யுகத்தின முடிவில் இந்திரகற்பத்தில், நாகலோகத்தைஇரக்ஷித்து அரசு வீற்றிருக்கும் பெருமையையுடைய கொந்தகன் என்கின்ற ஆதிசேடன், தன் இரண்ட தோள்களினால் அணைகின்ற அழகான சந்தனமணிந்த தனங்களையும், கிளி போன்ற இனிமையான மொழிகளைப் பேசுகின்ற அவன் மனைவி சுவதி என்கின்ற பெயரையுடையவள் (எ-று) 4

275

ஆங்கவள் கருப்ப மெய்தி யடைந்தபின் பிரச வத்திற்
றூங்கிய வுதர நீத்த சாதகப் புதல்வி தன்னைப்
பூங்கமழ் குழற்றாய் மாது பொற்கையம் புயத்தி லேந்திக்
கோங்கெனத் தகும்பா மென்னக் குவிமுலை யமுத மூட்டி.

(இ-ள்) கருப்பம் உற்று கஷ்டமில்லாமல் சாதகமாக ஒரு புதல்வியைப் பெற்றாள். பெற்றபின் வாசனையுள்ள மலர் மாலையையணிந்த கூந்தலையுடைய தாயானவள் அழகிய கையிலும், தோளிலும் ஏந்திக் கொண்டு, கோங்கரும்பைப்போலவும், பொற்கிண்ணத்தைப்போலவும் விளங்குகின்ற குவிந்த தனங்களிலிருந்து வரும் பாலை யுண்பித்து (எ-று) 5

276

திருந்திய தெய்வக் காப்புச் செங்கீரை தால்சப் பாணி
பொருந்துதீங் கனிவாய் முத்தம் பொலிவுறு வால்வெண் டிங்கள்
வருந்திமட் டொழிக்குஞ் சிற்றில் வண்டலம் பாவை மற்று
மருந்தொழின் மணிக் கழங்கம் மானைபந் தூச லாடல்.

(இ-ள்) திருத்தமான காப்பாற்றுதலைச் செய்துகொண்டு வரும் காலையில் தெய்வங்களைப் பிரார்த்திக்கும் காப்புப்பருவம் முதல் தாலாட்டும் தாலப்பருவமும், நன்மையான சொல்லைச் சொல்லுவாய் என்கின்ற செங்கீரைப்பருவமும், கையைக் கொட்டுவாய் என்கின்ற சப்பாணிப் பருவமும், இனிய கனிபோன்ற வாயினால் முத்தந்தருவாய் என்று சொல்லும் முத்தப்பருவமும், வெண்மையாக விளங்குகின்ற சந்திரனை யழைப்பதாகக் கூறுகின்ற அம்புலிப் பருவமும், வருந்தி மண்ணில் சிறு வீடு கட்டி இதை அழிக்காதே என்று கூறும் சிற்றிற்

பருவமும், பதுமை, மணிகளால் இழைத்த அம்மானையைவைத்து விளையாடுவாய் என்று கூறும் அம்மானைப் பருவமும், பந்து ஆடுதல், ஊசல் ஆடுதல் இவற்றைச் செய்வாய் என்று கூறும் ஊசற்பருவமும் (எ—று) 6

277

ஆம்பல பருவ நீங்கி யழகின்மீக் கிளர்ந்த வேலை
மேம்படு கலன்கள் பெய்து வெண்ணீறெண் ணுதலின் வேய்ந்து
தேம்படு குயின்மென் சொல்லாற் சிவத்துதி புகலா நின்றாள்
பாம்புல கரையன் பெற்ற பைந்தொடி நாக கன்னி.

(இ—ள்) ஆகிய பல பருவங்களும் கடந்து அழகின் மிகுந்த காலத்தில், மேன்மையான ஆபரணங்களை அணிந்து வெண்மையான விபூதியை நெற்றியிற் பூசி நாகலோகத்துக்கு அரசனாகிய ஆதிசேடன் புத்திரியாகியநாககன்னி இனிய குயில்போன்ற மொழியினால் சிவபெருமானைத் துதித்தாள் (எ—று) 7

278

இவ்வகை நிகழு நாளி லேலவார் குழலை நாடிச்
செவ்வயி லிறையா மற்றோர் திசையுளா னணைந்து சேர்ந்து
வெவ்வரிக் குருளை போன்ற தன்றிரு மகட்கு வேட்கை
வவ்விய வதுவை பேசற் கெய்தின னென்றான் மன்னோ.

(இ—ள்) இவ்வாறு இருக்கும் காலத்தில் மயிர்ச்சாந்து அணிந்த நீண்ட கூந்தலையுடைய நாககன்னியை விரும்பி, செவ்வையான வேலையுடைய வேறோர்தேசத்தரசன் கொடுமையான சிங்கக்குட்டியை ஒத்த தன்னுடைய குமாரனுக்கு ஆசையுள்ள திருமணத்தைப் பேசுவதற்குச் சிலரை அனுப்பினான். அவர்கள் வந்தது கண்டு (எ-று) 8

279

மூந்துள முவகை கூர்ந்து முறைவிருந் தமைக்குங் காலை
நந்துமிழ் தரளமூரல் நவ்வியம் பவளக் கொம்பு
தந்தையை முனிந்து வேறோர் சாளரம் புகுந்து செம்பொற்
பந்தர்வே திகையின் வைகிப் பதவிணை தெற்றி நீட்டி.

(இ—ள்) ஆதிசேஷன் மனம்மிகமகிழ்ந்து கிரமமாக வந்தவர்களுக்கு விருந்தமைக்கின்ற காலத்தில் சங்கிலிருந்துண்டான முத்துப்போன்ற பற்களையும், மான்போன்ற கண்களையும உடைய, பவளக்கொடி போன்ற நாககன்னிகை, தந்தையைக் கோபித்து வேறோரிடத்துக்குச் சென்று செம்பொன்னால் வேய்ந்த மேடையில் தங்கி இருபாதங்களையும் நீட்டிக்கொண்டு (எ—று) 9

280

ஆன்றபொற் கமலக் கையா லானன மதியை யேந்தி
மான்றரும் விழிநீர் மல்க வண்டிமி ரளகஞ் சோரத்
தோன்றுவெம் பரிதி முன்னர்ச் சுடரென விருந்தாள் கண்ட
தேன்றரு குதலைச் செவ்வாய்ச் சேடியர் கணத்திற் சென்று.

(இ-ள்) *அழகிய தாமரைமலர்போன்ற கையினால் முகமாகிய சந்திரனைத் தாங்கி மான்போன்ற கண்களிலிருந்து நீர் அதிகரித்து வடியவும், வண்டுகள் சப்திக்கும்படியான கூந்தல் அவிழவும், பிரகாசிக்கின்ற சூரியன் முன் விளக்கைப்போல்மங்கியிருந்தாள். இதைக் கண்ட தேனைப்போல் பேசுகின்ற தோழியர் சீக்கிரமாகச் சென்று (எ-று)* 10

281

பேறுடை யரம்பை யன்னாட் கிசைத்தலும் பெயர்ந்து கேட்டு
வீறுசா ளரத்து ளெய்தி விளித்தனள் சுழித்த தெண்ணீர்
ஊறுசெம் பவளக் கொம்பே உயிரென்கண் மணியே நின்பால்
ஏறுளங் கவலை யுற்ற தென்கொலென் றியம்புங் காலை.

(இ-ள்) *சகலபாக்கியங்களையும் உடைய அரம்பையையொத்த தாயினிடத்திற்சொல்ல, அதைக்கேட்டு தாயானவள் மகளிடம் சென்று, உபசரித்து செம்பவளக்கொடியே என் உயிரே என் கண் மணியே, உன் மனம் கவலையடைந்த காரணம் என்ன வென்று கேட்டகாலத்தில் (எ-று)* 11

282

நாவியந் துரையாள் காலை ஞாயிறு கண்ட தண்பூங்
காவியம் புதுவீ யென்னக் கண்ணிணை திறவாள் சிற்ப
ஓவியம் போல்வா ளுள்ளத் துயிர்ப்பினுற் பொருமிப் பொங்கி
ஆவியின் றுணைவே றுண்டிங் கன்னை நீ யறிகி லாய்காண்,

[இ-ள்] *நாவினால் ஒன்றும் சொல்லாதவளாகியும், சூரியனைக் கண்ட குளிர்ந்த நீலோற்பல மலர்கள்போல இரண்டுகண்களையும் திறவாதவளாகியும், சுவரில் எழுதின சித்திரம்போல் இருந்து, பெருமூச்சுவிட்டுக்கொண்டு தேம்பி அழுது, தாயே எனக்கு உயிரைப் போன்ற துணைவர் வேறொருவர் உண்டு அந்த உண்மையை நீ அறிய மாட்டாய் என்று சொல்லி (எ-று)* 12

283

எந்தையைக் கொணர்தி யென்ன இறைவனு மெய்தி யந்த
விந்தையிற் சிறந்த மின்னை யிருவரும் வினவ லானார்
நிந்தையைத் தகாது கேட்கி னிகழ்த்துகே னென்று நேரே
சிந்தையைத் தெளிந்து முன்னை வினைவலி செப்ப லுற்றாள்.

[இ—ள்] என் தந்தையை இங்கு அழைத்துவா என்று சொல்ல அவ்வாறே போய்த் தந்தையிடம் சொல்லி அழைத்துவர அவனும் வந்து வித்தையிற் சிறந்த மின்னற்கொடிபோன்ற பெண்ணை இருவரும் பார்த்து உன் மனக்கவலைக்குக் காரணம் என்னவென்று கேட்கத் தொடங்கினார்கள். என் வார்த்தையை இகழாது நீங்கள் கேட்டால் சொல்லுகிறேனென்று மனந்தெளிந்து பழைய வினையினுடைய வல்லமையைப்பற்றிக் கூறத்தொடங்கினாள்-[எ—று] 13

284

என்னை நீ ரிருவர் நொந்து பெறவென்று லியைவுண் டாமோ
பின்னையா னும்பால் வந்து பிறக்கவென் றுற்பே றுண்டோ
முன்னையா ரணமுங் காணு முதல்வன தருளொன் றல்லால்
அன்னையார் தந்தை யார்பின் மகவியார் யார்மற் றுவார்.

[இ—ள்] என்னை நீங்கள் இருவரும் வருந்திப் பெற வேண்டும் என்று எண்ணினால் அது அவ்வாறே முடியுமா. பின்னும் நான் உம்மிடம் வந்து பிறக்க எண்ணினால் அதுவும் முடியுமா. பழமையான வேதங்களாலும் அறிய முடியாத இறைவனுடைய கிருபையல்லாமல், தாய்யார் தந்தையார், பிள்ளைகள் யார், உறவினர்யார் [எ-று] 14

285

ஆயிரம் பவமொன் றுயோர் பெண்பிறப் படைவ தாகும்
ஆயிரம் துயரொன் றுயோர் அறிவிலான் பாரி யாகும்
ஆயிரம் கொடுமை யொன்று யாவிசா ரதையென் றுகும்
ஆயிரம் கொலைக ளொன்று யமங்கல மணையு மன்றே.

[இ—ள்] ஆயிரம் பாவங்கள் ஒன்றாய்ச்சேர்ந்து ஒரு பெண் பிறப்படைவாள். ஆயிரம் துன்பங்கள் சேர்ந்து ஒரு மூடனது மனைவியாக ஆவாள். ஆயிரம் கொடுமைகள் சேர்ந்து ஒரு வியபசாரியாகப் பிறப்பாள். ஆயிரம் கொலைகள் ஒன்று சேர்ந்து ஒரு அமங்கலையாவாள். [எ—று] 15

286

ஈதெலா மணுகா வண்ண மிவ்வுட லொழியுங் காறும்
போதெலாம் வறிதே போக்கா தருந்தவம் புரிந்து வேறுற்
றீதெலாந் தணந்து நங்கோத் திரகுலஞ் சிறந்து சித்தி
யேதெலா மியைந்து பின்னு மிகபர மெய்தற் கென்றாள்.

[இ—ள்] இந்த நிலைமைகள் எல்லாம் நம்மை நெருங்காதபடி இந்த உடம்பானது நீங்கும் வரையில் வீண் பொழுது போக்காமல் தீதெல்லாம் நீங்கி நம்முடைய கோத்திரமும் குலமும் சிறந்து விளங்

கவும் வேண்டிய சித்திகளை யெல்லாம் பெற்று இம்மை மறுமைப் பயன்களை யடையவும் நான் அரிய தவத்தைச் செய்வேன் என்றாள் [எ-று] 16

287

கேட்டதாய் தந்தை சிந்தை யந்தமில் கிலேசத் தொல்கிப்
பேட்டிளங் கிள்ளா யின்னும் பேதைமை தெளிந்தி லாய்காண்
நாட்டியல் பிருக்க நின்பா னவமொரு கிரியை யுண்டோ
வீட்டமாய் விளங்கு முப்பா லுண்மைகே ளெனவி சைப்பார்.

[இ-ள்] இவ்வாறு சொன்னதைக்கேட்ட தாய் தந்தையர் மனதில் மிகுந்த துன்பத்தை யடைந்து துவண்டு இளங்கிளிபோன்ற பெண்ணே! நீ இன்னும் அறியாமை நீங்கவில்லை. உலகத்தின் இயல்பு ஒருவாறு இருக்க, உன்னிடத்தில் புதிதாக ஒரு செயல் செய்தற்கிருக்கிறதா. கூட்டமாய் விளங்குகின்ற அறம், பொருள், இன்பம், என்னும் மூன்று பகுதிகளின் உண்மையைக் கேட்பாய் என்று சொல்லத் தொடங்கினார்கள் [எ-று] 17

288

அறம்பொரு ளின்ப மென்னு மாற்றலே யன்றி வேறு
திறம்புவிக் கிலவே யென்று திருவுளத் துணர்ந்து தேறி
நிறம்பசுங் கிளிகு மாரி நிகழிரு நாழி செந்நெல்
புறம்பக நிறைந்து நின்ற புனிதன தருளாற் பெற்று.

[இ-ள்] அறமும், பொருளும், இன்பமும் என்று சொல்லும் வல்லமையே யன்றி வேறு வல்லமை இவ்வுலகிற்கு இல்லை யென்று அறிந்து தெளிந்து, பசுமைநிறம் பொருந்திய பார்வதிதேவி வெளியிலும் உள்ளிலும் எங்கும் நிறைந்து நின்ற தூய்மையான இறைவனது அருளால் இரு நாழி நெல்லைப்பெற்று [எ-று] 18

289

இல்லறத் துலகே ழிற்கும் படியளந் தருளு மேற்றஞ்
சொல்லறத் தெளிந்து வாழி துயருற லொழிதி யின்னுஞ்
செல்லறற் குழலாய் கற்ற திறனெலாம் விரித்துக் கூறல்
நல்லறத் தியல்பு மன்று நடுவுமன் றெனமொ ழிந்தார்.

[இ-ள்] ஏழ் உலகத்திலும் உள்ள எல்லாருக்கும் படியளக்கும் உயர்வை நன்றாகத்தெளிந்து வாழக்கடவாய். துன்பப்படுதலை ஒழிவாய். மேகத்தையும் கருமணலையும் ஒத்த கூந்தலையுடைய பெண்ணே! கற்றசாமர்த்தியத்தை விரித்துக்கூறுதல் நல்லதர்மத்தினது

தன்மையும் அன்று நடுவுநிலைமையும் அன்று என்று கூறினார்கள் [எ-று] 19

290

நவமணி மாலை போல்வாள் மறுமொழி நவில லுற்றாள்
உவமையி லறமே நோற்ற பின்னரோ ருரவோன் கையாற்
றிவமுறு முகூர்த்த வேலைத் திருமணம் புணர்ந்து வாழ்வே
னவமதி நீவி ரெண்ணி லியானுமின் றறுதி யென்றாள்.

[இ-ள்] நவரத்தினமாலை போன்ற நாககன்னி சொல்லுகிறாள். நான் உவமையில்லாத தவத்தைச்செய்து முடித்தபின் ஒரு பலம் பொருந்திய மன்னனை நல்லமுகூர்த்தகாலத்தில் திருமணம் செய்து கொண்டு வாழ்வேன். நான்சொல்லும் வார்த்தையை நீங்கள் அவமதித்தால் நானும் இன்றோடு முடிவேன்என்றுகூறினாள். [எ-று] 20

291

அன்னவ ளுரைத்த மாற்றஞ் செவிப்புலத் தடையா வாறு
கன்னபந் தனங்கள் செய்து விதிவசக் கருத்தை யெண்ணி
நின்னது செயலே யன்றி வேறினி நிகழ்மோ மென்று
பொன்னணி திருத்தி நெஞ்சிற் சஞ்சலம் புலர்த்திப் போந்தார்,

[இ-ள்] அவள் சொன்ன வார்த்தையைக் கேட்பதற்கு முன்னமே காதைப்பொத்திக்கொண்டு விதிவசத்தைநினைத்து உன்னுடைய செய்கையேயன்றி, இனி வேறொன்றையும் நாங்கள் செய்யோம் என்று சொல்லி பொன்னாபரணங்களை யணிவித்து மனதிலுள்ள சஞ்சலத்தைப் போக்கிப்போனார்கள் [எ-று] 21

292

தோழியர் கமலக் கையால் விழிப்புனற் சுவடு மாற்றி
வாழிய வகிலுஞ் சாந்துங் கமழ் குழல் வகிர்ந்து கோதிச்
சூழியம் விசிந்து தென்றல் துளக்கிமென் சுருதி வீணை
யேழிசை பலபா ராட்டித் துயிற்றினார் தளிமத் தின்பால்.

[இ-ள்] அதன்பின், தோழிகள் தங்கள் கையால் கண்ணீரைத் துடைத்து, மயிர்ச்சாந்து அணிந்து மணக்கின்ற கூந்தலை வகிர்ந்து கோதி கொண்டை முடித்து விசிறியால்வீசி, இனிய சுருதியுடைய வீணையை வாசித்து, மெத்தையில் தூங்கும்படி செய்தார்கள் [எ-று] 22

293

பொற்றனி மாடக் கோயில் புகுந்தனன் புயங்க ராசன்
சுற்றமென் றணைந்து ளோர்க்குச் சுவையமு தருத்தி நேய
முற்றவாய் மையினால் வேண்டுந் திறங்களா லுவகை யேற்றி
மற்றொரு வேலை வம்மி னெனுஞ்சொலால் வழிச்செல் வித்தான்,

[இ-ள்] நாகராஜனான ஆதிசேடன் தன்னுடைய பொன்மயமான அரண்மனைக்குட் புகுந்து மணம்பேசவந்தவர்களுக்கு அறுசுவையுண்டியை உண்பித்து, அன்பான வார்த்தைகளினாலும் மற்றுமுள்ள உபசாரங்களாலும் அவர்களுக்கு மகிழ்ச்சியை உண்டுபண்ணி சிலநாள் கழிந்து இனி ஒரு முறை இங்கு வாருங்கள் என்று அவர்களை வழியனுப்பிவைத்தான். [எ-று] 23

## 294

துயிலுணர்ந் தெழுந்த கன்னி சோபங்கள் புலரா முன்னம்
வெயின்மணி யரங்கி லெய்தித் தாதைமுன் விளம்ப லுற்றாள்
கயிலையஞ் சயில நாதன் கனவி லென் கருத்துட் டோன்றிப்
பயிலுப தேசஞ் செய்த பான்மையென் பகர்வன் கேண்மோ.

[இ-ள்] தூக்கத்தினின்று எழுந்த நாககன்னி எழுந்த சோபம் தீருமுன்னே பிரகாசிக்கின்ற இரத்தினங்கள் இழைத்த சபையில் அடைந்து பிதாமுன் கூறுகின்றாள். கயிலைமலையிலிருக்கின்ற கடவுள் என் கனவில்தோன்றி பழகக்கூடிய உபதேசத்தைச் செய்த தன்மையை நான் என்னவென்று கூறுவேன் என்றாள். 24

## 295

மத்தக விழியுஞ் செக்கர் வார்சடைப் பரப்பும் வாய்ந்த
சுத்தநீற் றணியும் பாகத தோகையும் விளங்கப் போந்து
கைத்தல வபயங் காட்டிக் கன்னிகா யகிலந் தன்னின்
மெய்த்தவம் புரிய வாவென் றருளினன் வேத வாய்மை.

[இ-ள்] நெற்றிக்கண்ணும், சிவந்த நீண்டசடையின் காடும், தூயதன்மையுள்ள விபூதியினது பூச்சும், ஒரு பாகத்திலே மயில் போன்ற சாயலையுடைய உமாதேவியும், விளங்கும்படிவந்து, அபயகரத்தைக்காட்டி, கன்னியே! பூமியில் போய் உண்மையான தவத்தைச் செய்வாய் என்று வேத முரைத்த வாக்கால் கூறியருளினார் [எ-று] 25

## 296

இன்மொழி பகர்ந்தான் பின்ன ரேதுபோ யேதுற் றாலுஞ்
சொன்மறுத் துரைசெ யாத தோன்றனீ யன்றோ மற்றும்
பன்மொழி வழுத்த வேண்டா பார்மிசைத் தவத்திற் கேகப்
பின்மதி துணிந்த வென்னை விடுத்தருள் பெரியோ யென்றாள்.

[இ-ள்] என்று இனிய மொழிகளைச் சொல்லி, எதுபோயினும் எது வரினும் சொன்ன சொல்லை மறுத்துச்சொல்லாத அரசர்

நீரன்றே. பலவிதவார்த்தைகளைச் சொல்லவேண்டாம். பூமியின் கண் தவத்திற்குச் செல்லத்துணிந்த என்னை அங்கே செல்லும்படி யாக அனுப்பவேண்டும் என்று சொன்னாள். [எ—று] 26

297

அறந்தலை நின்றியாவு மறிந்துள வனந்த கோமான்
கறந்தபால் குயம்பு காத கதியென மதித்து முன்னர்
இறந்ததி லொன்றென் றெண்ணி யியைந்தன னதனு ளேயுஞ்
சிறந்துவந் துறினுந் தெய்வச் செயலெனத் தெளிந்து நின்று.

[இ-ள்] அதற்கு தருமத்தில் முதன்மையாக இருந்து எல்லாவற்றையும அறிந்த நாகராஜன், கறந்தபாலானது மறுபடி முலைக்காம்புக்குள் புகாத தன்மைபோல எண்ணி, இந்தப்பெண் இறந்துபோன பிள்ளையில் ஒன்று என்று எண்ணி அதற்குச் சம்மதித்தான். அதிலும் இப்பெண் தவத்தினுல் மேன்மையடைந்து இங்கே வந்தாலும் அதுவும் தெய்வச்செயல்தான் என்று தெளிவடைந்து [எ—று] 27

298

சேடியர் குழு வின்ஞானச் செவிலியர் சிலரைச் சேர்த்து
நீடிய தவத்திற் கேற்ற திறனெலா நிறைய நல்கிப்
பீடிய லகிலத் தேறும் பிலவழிக் கிரிசார் வித்துச்
சூடிய மௌலி வேந்தன் சுதைதனை விடுத்து மீண்டான்,

[இ—ள்] தோழிகள் கூட்டத்தில் அறிவுமிகுந்த செவிலித்தாய்மார்கள் சிலரைச் சேர்த்து, மேலான தவம் செய்தற்கேற்ற சாதனங்களை யெல்லாம் நிறையச்செய்து, பெரியபூமியில் ஏறுவதற்குப் பிலத்துவார வழியாகச் செல்லும்படிசெய்து, கிரீடத்தை அணிந்த ஆதிசேடன் தன் பெண்ணாகிய சுதையைப் பூமியில் விட்டுத்திரும்பினுன் [எ—று] 28

299

செங்கணே றுடைய பெம்மான் றிருவருட் டுணையை யொன்றித்
துங்கமால் வரைமேற் கொண்டு தொகுபில வழிசென் றேறித்
தங்குபூ தலத்தின் மேன்மை தரித்தபுக் கொளித்தா னத்திற்
கங்கையம் பிரம கூபத் தெழுந்தனள் நாக கன்னி.

[இ—ள்] சிவந்த கண்களையுடைய இடபவாகனத்தையுடைய சிவபெருமானது திருவருளை துணையாகக்கொண்டு, கீழேயுள்ளமலையோடு பொருந்திய பிலத்துவாரத்தின் வழியாகப் போய் ஏறிப் பூமியில் மேன்மையுள்ளதாகிய திருப்புக்கொளியூரில் கங்காகூபம் என்கிற பிரம கூபத்தின்வழியாக நாககன்னி மேலே எழுந்தாள் [எ—று] 29

300

கன்னிகை மருங்காச் சுற்றிக் கைவினைப் பணிக ளாற்றும்
பன்னியர் சிலரு மேறிக் கரைநின்ற பருவந் தன்னிற்
சென்னிவெண் மதியந் தோய்ந்த திருவவி நாசி யானைத்
துன்னிய கணங்க ணின்று துதிசெயு மார்வங் கேட்டாள்.

[இ-ள்] இவ்வாறு எழுந்த நாககன்னியும் அவளுடன் சுற்றிலும் பணிசெய்யும் பெண்களும் ஏரிக்கரையை அடைந்த காலத்தில், சிரசில் வெண்மையான சந்திரனை யணிந்த, அவிநாசியின்கண் அமர்ந்த சிவபெருமானை, நெருங்கிய அன்பர்கள் கூட்டம் நின்று கொண்டு துதி செய்கின்ற சப்தத்தைக் கேட்டாள் [எ-று] 30

301

தெக்கண காசிவாசன் செழுந்தவக் கருணை பாகன்
புக்கொளி யீசன் றேவர் புகழவி நாசி நாதன்
தக்கவற் புதவா னந்தத் தாண்டவ நடனென் றென்றே
ஒக்கவா யிரநா மங்க ளுரைத்தன வுளந் தரித்தாள்.

[இ-ள்] தெற்கிலுள்ள காசியாகிய அவிநாசிக்குநாதன், மேலான தவத்தையுடைய கருணையச்செல்வியை ஒரு பாகத்தில் வைத்தவன், புக்கொளியீசன் புகழையுடைய மேலான ஆனந்தத்தாண்டவன் என்பது முதலாகவுள்ள ஆயிரம் திருநாமங்களைச் சொல்லி அடியார்கள் துதித்தலை மனத்தில் மறவாமல் இருத்திக்கொண்டாள் [எ-று] 31

302

ஈட்டுசெங் கமலம் பூத்த விலஞ்சியு நலஞ்செய் காவுந்
தோட்டிதழ் மலருந் தாதுஞ் சுரும்பிசைத் துழனி யார்ப்பும்
வாட்டடங் கருங்கட் செவ்வாய் வளர்பெருங் கருணைக் காமக்
கோட்டமுங் கயிலை நாதன் கோயிலுங் கண்டாள் மன்னோ.

(இ-ள்) கூட்டமாகச் செந்தாமரை மலர்ந்த தடாகங்களையும், நன்மைமிகுந்த சோலைகளையும், பூவிதழ்களிலிருந்து சிந்தும் மகரந்தத்தையும், வண்டுகளின் சப்தத்தையும், வாள்போன்ற பெரிய கரியகண்களையும், சிவந்த வாயையும் உடைய மிகுந்த கருணையையுடைய கருணையச் செல்வியினது கோயிலையும், கயிலை நாதனாகிய அவிநாசியிறைவனுடைய கோயிலையும் கண்டாள். (எ-று) 32

303

ஒண்ணிலந் தனிலுந் தாழ்ந்த வுலகினிற் பிறந்து பாவப்
பெண்ணின துருவ மர்ந்தும் பேதமைப் பருவஞ் சார்ந்து
மெண்ணிய வாறே நோற்க வித்தலங் கிடைப்ப முன்னம்
புண்ணிய மென்செய் தேனோ வென்றனள் புயங்க மாது.

(இ—ள்) நாககன்னி, பூவுலகத்திற்குக் கீழுள்ள நாகலோகத்திற் பிறந்து பாவமாகிய பெண் உருவத்தை யடைந்தும், பேதமையாகிய கன்னிப்பருவத்தையடைந்தும், நான் எண்ணியபடியே தவஞ்செய்ய இத்தலம் கிடைத்ததற்கு முன் நான் செய்த புண்ணியம் யாதோ என்றாள் (எ-று) 33

304

அயலொரு புறமே சார வாச்சிரா மம்வ குத்துக்
கயல்பொரு கண்ணி ஞர்கள் கைவினைப் பணிக ளாற்ற
வியல்புற வினிது மேவி யெழில் கொள்புக் கொளியெம் மானைச்
செயல்பெறு நேச பூசை செய்வதே தவமென் றெண்ணு.

(இ—ள்) புக்கொளியூரில் ஒரு பக்கத்தில் ஒரு ஆச்சிரமம் அமைத்துக்கொண்டு கயல்மீனைப் போன்ற பெண்கள் பணிவிடைகளைச் செய்ய இனிதாகத் தங்கியிருந்து அத்தலத்திலுள்ள அழகிய பெருமானை அன்போடு பூசைசெய்தலே மேலானதவம் என்று எண்ணினாள் (எ—று) 34

305

வைகறை யெழுந்து ஞான வான்கங்கைப் புனலின் மூழ்கி
நைகவின் மருங்கு லார நணியபொற் படாமுஞ் சேர்த்து
மைகமழ் அளகம் வீக்கி மணிவடம் புனைந்து நீற்றைக்
கைகலந் தணிந்து தானக் கண்டிகை பலவும் பூண்டு.

(இ—ள்) விடியற்காலத்தில் எழுந்து ஞானமயமாகிய கங்காகூபத்தில் ஸ்நானஞ்செய்து, வருந்துகின்ற மெல்லிய இடையில் பொன்னுடையையணிந்து, கரியமணம் வீசுகின்ற கூந்தலை முடித்து இரத்தினாபரணங்களை யணிந்து, திருவெண்ணீற்றைத் தரித்து, மேன்மை பொருந்திய உருத்திராட்ச மாலைகளையும் பூண்டு. (எ—று) 35

306

மண்புகுந் தடாகம் பூங்கா வனம்புகுந் தலர்வா ரிசஞ்
சண்பகங் குருந்த முல்லை தாதகி சுரபுன் னாகம்
வெண்புது மலர்மந் தாரம் வில்வபஞ் சகமே மற்றும்
பண்பல பள்ளித் தாமம் பழுதறத் தொடுத்தங் கேந்தி.

(இ—ள்) தடாகத்திலும் பூஞ்சோலைகளிலும் சென்று, தாமரை, சண்பகம், குருந்து, முல்லை, ஆத்தி, சுரபுன்னை, புதியவெண்மையான மந்தாரம், பஞ்சவில்வம், மற்றும் மல்லிகை முதலாகவுள்ளமலர்களை எடுத்துக் குற்றமில்லாமல் மாலையாகத்தொடுத்து, அம்மாலைகளைக் கையில் ஏந்தி, (எ—று) 36

307

சாற்றருங் கங்கா தீர்த்தந் தமனியத் தசும்பிற் கோலி
வேற்றறி வொழிந்து ஞான வெள்ளமே யுள்ளந் தேக்கித்
தோற்றிய சிவவே டத்தைச் சூழ்கண நாதர் கண்டு
மாற்றற நீங்கி நின்று மனத்தினன் பனைத்துங் காண்பார்.

(இ—ள்) *சொல்லுதற்கரிய பெருமைவாய்ந்த கங்காகூபதீர்த்தத்தைப் பொற்குடத்தில் நிறைத்து, வேறு சிந்தனையில்லாமல், ஞான வெள்ளமாகிய கடவுளை மனத்தில் இருத்தி, வருகின்ற சிவவேடப் பொலிவைச் சுற்றிலும் உள்ள அடியார்குழாங்களெல்லாம் பார்த்து நாககன்னியின் அன்பை வெளியிலே தெரிந்துகொள்ளும்படி (எ—று)* 37

308

நாயகன் றிருமுன் னெய்தி நாகவேந் தளித்த பாவை
மாயவன் பிரமன் காணு வளரொளி யெனவஞ் சாது
தாயர்தந் தையர்க்கண் டன்ன தன்மையை மகிழ்ச்சி கூர்ந்து
நேயமா மன்பி னாலே பூசனை நிகழ்த்தா நின்றாள்.

(இ—ள்) *தலைவராகிய சிவபெருமான் முன் சென்று பதுமையை ஒத்த கன்னி பிரமனும், திருமாலும் காணாத மிகுந்த ஒளியையுடைய தழற்பிழம்பென்று, அஞ்சாமல் தாய்தந்தையர்களைக் கண்டால் எப்படியோ அப்படி மகிழ்ச்சியை அடைந்து, மிகுந்த அன்பினாலே பூசை செய்யத் தொடங்கினாள் (எ—று)* 38

309

தோமறக் கணங்கண் முன்னந் துதிசெயத் தரித்த நாமம்
நாமற வாதுபோற்றி நவையின்மஞ் சனநீ ராட்டிப்
பூமலர்த் தாமஞ் சாத்திப் பொலிமணி விளக்க மேற்றித்
தூமவா சங்கண் மாற்றி விதந்தரு சோட சாந்தம்.

(இ—ள்) *குற்றமில்லாமல் முன்னே அடியார்கள் கூறித்துதித்த மந்திரங்களை நாவினாலே மறவாது சொல்லித்துதித்து, குற்றமற்ற அபிஷேகங்களைச் செய்து மலர்மாலைகளை அழகு பெறச்சாத்தி, விளங்குகின்ற அழகிய விளக்குகளை யேற்றி தூபதீப ஆராதனைகளையும், நைவேத்தியமும் செய்து, சோடசோபசாரங்களையும் செய்தபின்பு (எ—று)* 39

310

மிக்கபூ சனையாஞ் சைவ வியன்பணி முடித்துப் பின்னும்
பக்கமார் கருணை ஞானத் தேனையும் பணிந்தர்ச் சித்து
முக்கணு லொருகை யானை முந்துகா ரியைவந் தித்துத்
திக்கெலா நிறைய நின்ற கணங்களை வணங்கல் செய்து.

(இ-ள்) மேம்பட்ட சிவபூசையாகிய பணியை முடித்தபிறகு, மறுபடி பக்கத்தில் பொருந்திய பெருங்கருணையச் செல்வியாகிய தேவியையும் வணங்கி, அர்ச்சித்து, மூன்று கண்களையும் ஐந்து கரங்களையும் உடைய விநாயகக்கடவுளையும்காரியையும் வணங்கி மற்ற எட்டுத் திக்குகளில் உள்ள தெய்வங்களையும் வணங்கி (எ-று) 40

311

பாததா மரைக ளொல்கப் பிதக்கணம் பலசூழ்ந் தந்தப்
பூதல முடலந் தோய வணங்கியன் புருகப் போற்றிச்
சீதளப் புணரி சார்ந்த குடதிசைச் செக்கர் வானில்
ஆதவ னடைந்த காலை யடைந்தன ளாச்சி ராமம்.

(இ-ள்) பாததாமரைகள் வருந்தப் பலதரம் வலம்வந்து, சரீரம் பூமியிற் படும்படி வணங்கி, அன்பினால் உருகித் துதித்து, மேற்குக்கடலில் சூரியன் விழும் காலமாகிய மாலைக்காலத்தில் தன்ஆச்சிரமத்தை யடைவாள் (எ-று) 41

312

வந்திருந் தணங்க னார்க ளிருபுடை வணங்கி நிற்ப
விந்நா ளொருநாள் போல மாதவ மிசைய நோற்றுச்
சிந்தைநொந் தொருமூ வேழு திங்களின் முடிப்பே னென்று
பந்தமார் செங்கைக் காப்புத் தரித்தனள் விரதப் பாவை.

(இ-ள்) அடைந்தவுடன் தெய்வப்பெண்களையொத்த தோழிகள் இரண்டுபக்கத்திலும் வணங்கிநிற்க, விரதஞ்செய்கின்ற பாவை போன்ற நாககன்னி இந்தவிதம் ஒருநாள் போல் பெரிய தவத்தைப் பொருந்தச் செய்து மனம்வருந்தி, இருபத்தொரு மாதத்தில் முடிப்பேன் என்று, சிவந்த கையில் காப்புநூலைத் தரித்தனள் (எ-று) 42

313

சகலமுந் தெரியத் தந்து தரணியை விளக்கா நின்ற
பகலவன் மறைந்த பான்மை யாதெனப் பகருங் காலை
புகலரு நாக கன்னி பொழுதவம் போக்கா ளென்று
தகவவுண் டுறங்கும் வண்ண மியற்றிய தன்மைத் தாமால்.

(இ-ள்) உலகத்திலுள்ள பொருள்களையெல்லாம்விளங்கக்காட்டி, பூமியை விளங்கச்செய்கின்ற சூரியன்மறைந்தகாரணம் யாதென்று சொல்லுமிடத்து சொல்லுதற்கரிய பெருமை பொருந்திய நாககன்னி காலத்தை வீண்போக்க மாட்டாளென்று தகுதியாக உண்டு உறங்கும் வண்ணம் ஒய்வு கொடுப்பதற்காகவேதான் (எ-று) 43

## 314

கொந்தவிழ் மலர்கள் பூசைக் கினிதென்று குழலிற் சூடாள்
வெந்துறு சுவையின் பாக மொருபொழு தன்றி மேவாள்
பைந்தளி ரனைய மேனி யருமையைச் சிறிதும் பாராள்
சந்தத மிந்த வாறு தவஞ்செய்வா ளாய நாளில்.

(இ—ள்) கொத்தாகமலர்ந்த மலர்கள் பூசைக்கு இனிமையான தென்று கூந்தலில் தரிக்கமாட்டாள். சுவையுள்ள வெந்த உணவை ஒருபொழுது அல்லாமல் உண்ணமாட்டாள். பசுமையான தளிர் போன்ற சரீரத்தின் அருமையைச் சிறிதும்கவனிக்கமாட்டாள். இந்த விதமாகத் தவஞ்செய்து கொண்டு இருக்கின்றகாலத்தில் (எ—று) 44

## 315

வேறு

தாபர மெனத்திகழு மாடக வரைக்குள்வரு சாறுவி யுடுத்ததிசைநேர்
மாபர தனுக்குரிய தாதையரு ளப்பெரிது வாழிய நிலத்தினிடையே
தீபக மெனப்பெறு திராவிட புவிக்குண்மனு சேகர னிடத்தருமைசேர்
பூபதி யரித்துவச ராசனெ லத்தையனு பூதியில் விளக்கவுள னால்.

(இ—ள்) உலகிற்கு ஆதாரமென விளங்குகின்ற மகாமேரு மலையில் கங்காநதியால் சூழப்பட்ட பெருமைபொருந்திய பரதனால் ஆளப்பட்ட பரதகண்டத்தில், தீபமாக விளங்குகின்ற திராவிட தேசத்தில், மனுசேகரன் என்கின்ற அரசனிடத்து அருமையாக அவதரித்த அரித்துவசன் என்னும் அரசன் இவ்வுலகத்தைப் பரம்பரை அனுபவமாக விளங்க அரசாண்டு வந்தான் (எ—று) 45

## 316

மற்றவனியற்கையை வழுத்திடிலெழுத்தியல் வருக்கமுமிருக்கின்வழியுங்
கற்றறி வுணர்த்தியொரு மித்தபுல னிற்சிவ கதிக்கெதிர் கணித்த மனமுஞ்
சுற்றமு மிரப்பவரு மொப்பரெனு மற்புத சுகக்கருணை பெற்ற குணமு
நற்றவ முயற்சியு மயர்ச்சியை யொழித்தபெரு நட்புரை நயப்புமுளனால்

(இ—ள்) அவனுடைய தன்மை வடமொழி, தென்மொழிகளை ஐயந்திரிபு அறக்கற்று ஐம்புலன்களும் ஒன்றி சிவகதியையே தியானிக்கின்ற மனமும், தன்னுடைய சுற்றத்தாரையும், தன்னிடம் இரக்க வருகின்றவர்களையும் ஒரு தன்மையாக நினைக்கின்ற குணமும், நல்ல தவத்திலே முயற்சியும், சோர்வு ஒருசிறிதுமில்லாமல் நீங்கின பெரிய நட்புத்தன்மையும், இனிய சொல்லைச்சொல்லும் குணமுமுடையவன் ஆவான் (எ—று) 46

317

மந்தர மெனும்படி தயங்கிய புயங்களில் வயங்கொள வியங்குதிறனு
மிந்திரனை யுந்தனுவ சந்தனையு நிந்தனையி யம்புமிகு சுந்தரனுமாய்
முந்துசென னந்தனில் வருந்திய பெருந்தவ முயன்றகுறை யின்பரிசினால்
எந்தைபர மன்கழ லிறைஞ்சுபரி வுந்தக விருந்தன னிளங்குமரனே.

*(இ—ள்) மந்தரமலை யென்று சொல்லும்படி விளங்கிய தோள்களில் வெற்றியோடு பொருந்திய வல்லமையும், இந்திரனையும், மன்மதனையும் பழிக்கும் அழகுமுடையவனாய் முந்தியபல சென்மங்களில் செய்ததவத்தினது பயனால், எமதுபிதாவாகிய கடவுளது, பாதங்களை வணங்குகின்ற தகுதியும் உடையவனாக விருந்தான் (எ—று)* 47

318

பாரின் மிசைவைப்பான நாடுநக ரத்தரணி பாரியின் முகப்பாரல்சேர்
தூரிய வனப்பான சாளர மணிச்சாலை தோகையர் நடித்தாடல்சூழ்
ஏரியல் படைச்சேனை மாநிதி முதற்றான யாவையும் வெறுத்தேமுனாள்
நேரியனை யொப்பான பேரியன் வினைப்பான்மை நீடுதுற விற்போயினான்.

(இ—ள்) இவ்வுலகில், *நாடு, நகரம், வீடு, அரண்மனை, மனைவி, அழகானமங்கையர்கள் நடனமாடும் சன்னல்களையுடைய நடனசாலைகள் இசையை முழக்குகின்ற வாத்தியங்களிருக்குமிடம் அழகிய ஆயுதசாலைகள், சேனைகள்மிகுந்த திரவியங்கள், முதலாகவுள்ள எல்லாவற்றையும் வெறுத்து, சோழனை யொப்பான அவ்வரசன் பெருமையையுடைய துறவுமார்க்கத்தில் பிரவேசித்தான்.* (எ—று) 48

319

உயர்குடக் காவேரி பொருனைமுத் தாதிர மொருமையிற் சேர்கூடன்மா
பயனுடைப் பாய்பாலி யமுனைநற் காவேனு பகிரதிப் பேர்யாறுநீள்
கயல்சுழித் தேயார்பொன் முகரிவற் றுநீடு கழிமுகப் பாமாழிநீர்
இயல்பெறப்போயாடி யணிகரைக் கேமேவியிறை யெழுத்தாலோ !

(இ—ள்) *உயர்ந்த மேற்கிலிருந்து வருகின்ற காவேரி, பொருனை, மணிமுத்தாநதி, தாமிரபர்ணி, வைகை, பாலி, யமுனை, கங்கை, பொன்முகரி, சமுத்திரம், முதலிய தீர்த்தங்களில் நீராடி, நதிதீரங்களில் மேவி சிவபெருமானுடைய திரு ஐந்தெழுத்தையும் உச்சரித்து.* (எ—று) 49

320

தோலால் விரித்தகலை நாகேச மற்றுமுள சோமேச மச்சுதவன
நாலா மறைச்சுருதி மாறு வசிட்டவன நாரா யணக்கிரிபுரங்
காலா லடர்த்துநமன் மேலா சுறைத்தகட வூர்காள கத்திகருவூர்
மாலான வற்குவிழி பேறு வளித்தபதி வாழ்வார் கொறுக்கைவனமே.

321

சீர்மேவு தந்திவன நீள்பே ரரங்க மூயர் தேமா வனங்கமுமலம்
வேர்மேவு தண்கமலை யாரூர் குடந்தைதிரு வேளூர் நறுஞ்சுதைவனம்
பார்மேவு பஞ்சநதி யாலே சுரம்பழைய பாதாள லிங்கமுதலாப்
போர்மேவுசிங்கமது நேரே பணிந்தொருவர் போகாவனஞ்செல்பொழுதே.

(இ—ள்) நாகேசம், சோமேசம், அச்சுதவனம், வசிட்டவனம், நாராயணவனம், திரிபுரவனம், சிவபெருமான் காலனைக்காலால்உதைத்த திருக்கடவூர், திருக்காளத்தி, கருவூர், திருவீழிமிழலை, திருமாற்பேறு, திருக்குறுக்கை, திருவானைக்கா, சீரங்கம், காஞ்சீபுரம், திருவெண்காடு, சீர்காழி, திருவாரூர், கும்பகோணம், வைத்தீஸ்வரன்கோவில், திருவையாறு, ஆலேசுரம், பாதாளலிங்கம், முதலாகவுள்ள தலங்களைப் பணிந்து ஒருவரும் போகமுடியாத ஒருவனத்தில் செல்லுகிறபொழுது (எ—று) 50–51

322

விதியா ரணக் குரவர் நிரைசூழ முப்புரியின் மிளிர் நூ லிறத்தொளிரவே
குதியாரவிட்டதுவர் நிறவாடைசுற்றுமொரு குறுமேனிசெக்கர்பொரவே
கதியா லுயர்த்தசுட ரொளியான் மிகுத்தசிவ கயிலாய வெற்பின்மிசை
மதியார் சடைப்பரம னடிபேணி யச்சரியில் வருவா னகத்யமுனியே. [போய்

(இ—ள்) அகத்திய மகாமுனிவர் வேதவிதியை உணர்ந்த முனிவர்கள் தன்னைச் சூழவும், மார்பில் முப்புரிநூல் பிரகாசிக்கவும், காவிவஸ்திரமானது கீழே தொங்கவும் குறுகிய திருமேனி செவ்வானத்தை ஒத்திருக்கவும் எல்லாவற்றிற்கும் மேலான ஒளியையுடைய சிவபெருமான் அமரும் கயிலாயமலைக்குச் சென்று, பிறைச் சந்திரனைத் தரித்த சடையையுடைய சிவபெருமானது திருவடிகளை வணங்கி வருகின்ற காலத்தில் (எ—று) 52

323

கண்டா னரித்துவச னின்று தியற்றதொர் கடுந்தாரு வொக்குமெனவே
மண்டா னதிர்ப்புற விழுந்தான் விழிப்புனல் வழிந்தா னிரங்குதன்மனங்
கொண்டே யகத்தியனு ரென்றே குறித்தெதிர் குலைந்தா னவற்றையரு
றண்டா வனுக்கிரக முண்டா யினிப்பெறு தவஞ்சேர மற்றுமறைவான். [ளாற்

(இ—ள்) அரித்துவசன்கண்டு அடியற்ற மரம்போல அவர்பாதத்தில் விழுந்து தன் சரீரத்தில் மண் பொருந்தவும், கண்களிலிருந்து நீர் ததும்பவும், அவரை அகத்திய மகாமுனிவரென்று அறிந்துகொண்டு மிகவும் பயபக்தியோடு நிற்பதை அம்முனிவர் அறிந்து, மேலே

அவன் தவஞ்செய்யும்படி சிலவார்த்தைகளைச் சொல்லத்தொடங்கினார் (எ—று) 53

324

வாரா யரித்துவச னேகே ளுனக்குரிய வாய்பா டுணர்த்தவுரியேம்
பாரார் தலப்பெருமை நீகாண மிக்கவொரு யானூ றுகத்துமுறுமோ
சோராத சித்தியுட னாயு முத்திநிலை தூநேமி யிற்கணுளதோன்
றோராத வர்க்கரிது ஞான கரப்பொருளை யூடா டினர்க்கெளிதரோ.

(இ—ள்) அத்தலத்தின் பெருமை அறியாதவர்களுக்குவிளங்காது அரித்துவசனே கேள் நான் உனக்கு ஒரு உண்மையை உணர்த்து கின்றேன். இவ்வுலகத்திலுள்ள தலங்களின் பெருமைகளைநீஉணர்ந்து கொள்ள நூறுயுகம் ஆனாலும் முடியுமோ! முடியாது. குறையாதசித்தி களையும் முத்தியையுந்தரத்தக்கதாகிய ஒரு தலம் இப்பூமியில் உள்ளது ஞானசமுத்திரமாகிய கடவுளை அறிந்தவர்களுக்கு மிகவும் சுலபமாக விளங்ககூடியது (எ—று) 54

325

உனக்காக வத்தல மூரைத்தே மதற்கதுவெ யொப்பாகு மப்பரிசுகேள்
புனக்கான கத்தவர் புறத்தூ றகற்றியொர் புறத்தேகு வித்தவொருநாட்
கனற்கால்கொளுத்தியக லப்போக மற்றது கணத்தேது கட்படுவபோன்
மனக்காதல் பற்றிய வினைப்பாத கக்கடல் வறப்பா லொழித்துவிடுமால்.

(இ—ள்) உன் பொருட்டு அத்தலத்தின் பெருமையைச் சொல்லு கிறேன். அத்தலத்திற்கு அதுவே ஒப்பானது, அதன் தன்மையைக் கேட்பாய். காட்டிலுள்ளவர் மரங்களை வெட்டிக்குவித்து அதில் சிறு தீயை இட அது அக்குவியலைச் சிறிது நேரத்தில் நீறாக்கிவிடுதல்போல, ஆசையோடு செய்த தீவினைகளாலுண்டாகிய பாவசமுத்திரத்தை அடியோடு ஒழித்துவிடும் (எ—று) 55

326

வேறு

அத்தகு தலத்தி னறுதியு மிலக்கு மங்கதிற் பெருமையு மறைவான்
முத்தமி ழரசர் மூவரின் முதலோன் முருகுசேர் தாலமா லிகையான்
வித்தக வரைமேல் விற்கொடி பொறித்த வீரகே ரளனெனுஞ் சேரன்
சுத்தநீணெறியாற்சோன்முறைதிருத்துந்துங்கமார்கொங்குபூமியின்கண்.

(இ—ள்) அந்த மேன்மையான தலத்தின் எல்லையையும் அதன் பெருமையையும் கூறுகிறேன் தமிழரசர் மூவரில் முதன்மையான வனும், தேனுள்ள பனம்பூமாலையை அணிந்தவனும், இமையமலை மேல் விற்கொடியைகாட்டிய வெற்றியுள்ளவனும் ஆகிய வீரகேரளன்

*என்கின்ற சேரன் நீதிவழுவாமல்மேன்மையுடைய கொங்குநாட்டை அரசாண்டுவந்தான் (எ-று)* 56

## 327

கதிரினூற் சிறந்த நவமணி கொழிக்குங் காவிரி பவானிசங் கமத்தின்
வெதிரிகாச் சிரம விசாலமத் தியத்தின் மிகுதிரி வேணித்தா னத்தின்
முதிருமா தவத்தி லுயர்துரு வாச முனிவனர்ச் சனைபெறுந் தலத்தின்
எதிர்பெரு நிருதி திசையினே ரிசைந்த காவத மூன்றெனு மிலக்கில்.

*(இ-ள்) அக்காலத்தில் மிகுந்த ஒளியை வீசுகின்ற நவரத்தினங்களையும் கரையில் ஒதுக்குகின்ற பொன்னி யென்னும் பெயரையுடைய காவிரியும், பவானியும் கூடுகிற இடத்திலும் விசாலமான வெதிரிகாச்சிரமம்என்னும் இலந்தைவனத்தின்மத்தியிலும் உள்ள மேன்மைமிகுந்த மூன்றுதீர்த்தங்கள் கூடும்இடமாகிய திரிவேணியென்னும் இடத்தில் தவத்திலுயர்ந்த துர்வாசமுனிவர் அர்ச்சனைசெய்த தலத்திற்கு நேர் எதிராகவுள்ள நிருதி திக்கில் மூன்றுகாத தூரத்தில் உள்ள (எ—று)* 57

## 328

மருவுசீர் தழைத்த காசிவேர் படர்ந்து வாரண வாசியாய்க் கிளைத்த
திருவவி நாசி யெனுமொரு முதலை யடைந்தொரு தினமருச் சித்தாற்
பெருவகை யநேக சித்திக ளுளவாய்ப் பின்னர்முத் தியுந்தரு மெனவே
வருபய னுணர்ந்த குறுமுனி வழுத்த மனத்துற வழுத்திமற் றுரைப்பான்.

*(இ-ள்) மேன்மைமிகுந்த காசியிலுள்ள வேர் பரந்து வாரண வாசி யென்னும் பேரோடு கிளைத்திருக்கிற, திரு அவிநாசியையடைந்து அங்குள்ள முதல்வனை ஒருநாள் அருச்சித்தால், மேன்மைகளையுடைய அனேக சித்திகளையடைந்து, பின் முத்தியையும் அடையலாம் என்று, மூன்று காலங்களையும் உணர்ந்த அகத்திய முனிவர் சொல்ல, அதை மனத்துள்வைத்து மற்றும் சொல்லத்தொடங்கினன் (எ—று)* 58

## 329

மன்றலங் கமலச் சேவடி சிவப்ப மதிமுகந் துளிவெயர் வரும்பத்
துன்றுசெஞ் சடிலங் குலைந்துபின் சரியச் சோபதா பத்தெழுந் தருளி
நின்றுநீ வருந்தத் தமியனேற் கடுத்த நெடுங்குறை யடங்கவென் [னெருழிவே
னன்றெழு கடலைக் குடங்கையி னமைத்தோ யருள்கெனப் புலம்புவ [னமையான்.

[இ—ள்] முற்காலத்தில் கடல்நீரை யெல்லாம் உள்ளங்கையில் அடக்கிய அகத்திய மகாமுனிவரே! வாசனையுள்ள தாமரைமலர் போன்ற சிவந்த பாதங்கள் வருந்தவும், சந்திரனை யொத்த முகத்திலிருந்து வியர்வைத்துளி சிதறவும் சிவந்த சடையானது அவிழ்ந்து தொங்கவும் சோபதாபத்தோடு இங்கு எழுந்தருளினீர் வருந்தலையும் என்னுடைய கெடுகாளாகவுள்ள குறையையும் என்று நீங்கப்பெறுவேன் என்று கூறினான் [எ—று] 59

330

அன்புகண் டிரங்கி யருந்தமிழ் முனிவ னரசரித் துவசனை நோக்கி
நின்பிழை பொறுத்தல் நங்கட னலாது நீயிரந் தென்செயக் கடவை
துன்பமே தவிர்தி யென்றடி முடியிற் சூட்டிநீ டிருவினை தொலைத்துப்
பின்பயில் கருணைத் திருவருள் வழங்கி விடைகொடுத் தருளிய வேலை,

[இ—ள்] அவ்வரசனுடைய அன்பைக் கண்டிரங்கி, அரியதமிழ் முனிவரான அகத்தியர் அரித்துவசனை நோக்கி. உன்னுடைய குற்றத்தைப் பொறுத்தல் என் கடமையேயல்லாமல், நீ என்னை இரந்து வேண்டி என் செய்வாய் இனித் துன்பம் நீங்குவாய் என்று தன்னுடைய திருவடியை அவனுடைய முடியின்மேற் சூட்டி இருவினைகளையும் நீக்கி, மிகுந்த கருணையோடு அவனுக்குத் திருவருள் செய்து விடைகொடுத்து அனுப்பினார் [எ—று] 60

331

போவதற்கியைந்து தாள்செலும்போழ்து புந்தியும் புலன்களும் பொருந்த
வாவதிற் பிரியா விடையெனி னிமையா நயனமும் வயனமு மகலா
வாவலின்பெருமை கண்டுதென்பொதியத் தருந்தவனரசர்கோ னறிவைத்
தேவருக் கரிய திருவவி நாசித் சிவன்மிசைச் சென்றிடத் திரித்தான்.

[இ—ள்] இவ்வாறு அகத்திய முனிவர் தான் போகும் போது ஐம்புலன்களும் அறிவும் அவரோடு பொருந்தக் கண் இமையாமல் அவர் போகிறவழியையே பார்த்து நிற்கின்ற அரசனுடைய ஆசையின் அளவைத் தெரிந்துகொண்டு தெற்கிலுள்ள பொதியமலையிலமர்ந்திருக்கிற அரிய தவத்தையுடைய அகத்திய முனிவர் தேவர்களுக்கும் அரிதாகிய திரு அவிநாசியிலுள்ளசிவபெருமானிடத்தில் அரசனது மனம் செல்லுமாறு கடாட்சித்தார் [எ—று] 61

332

நின்றமா முனியுந் தபோதனர் குழுவு நிலவுடன் குலவுதா ரகையுஞ்
சென்றடர் கதிபோ லிருநிலப் பரப்பிற் றீவினை யிருளொலா மிரிய
வொன்றிய குளிர்மை வழங்கிவான் சுமந்த வோங்கல்சென் றடையுமா [றென்றித்
தென்றலங் குழவி தவழ்ந்துசந் தலம்புஞ் சிமையமார் பொதியமே [செறிந்தான்.

[இ—ள்] பின் அகத்தியமுனிவரும் தவமுனிவர்களுடைய கூட்டமும் சந்திரனும் நட்சத்திரங்களும் போல இந்த உலகத்தில் தீவினையாகிய இருள் ஓடும்படி ஞானமாகிய ஒளியைப் பரப்பி யாவர்க்கும் குளிர்ந்த கிருபையைச் செய்து தென்றலாகிய குழந்தை தவழ்ந்து சந்தனமரத்தின்மீது மோதுகின்ற சிகரத்தையுடைய பொதியமலையை அடைந்தார்கள் [எ-று] 62

333

ஆதலிற் குரிசி லவ்வுழி யகன்றங் கடவியும் புடவிசேர் தருவுந்
தாதவிழ் மலருந் தளிருநீள் வனமுஞ் சரிகளுங் கிரிகளுந் தடமும்
பேதவல் விலங்கும் பரிதியின் வெயிலும் பிறங்கிய தபனமுந் தவமும்
போதக விரவும் புலரியுங் கடந்து பொருவிலயங் கேரளம் புகுந்தான்.

[இ—ள்] அதன்பின் அரசன் அவ்விடத்தைவிட்டகன்று காடுகளும், மகரந்தத்தோடுதளிரும் மலரும் காயும் கனியுமுள்ள நீண்ட வனங்களும் பல வழிகளும, மலைகளும், தடாகங்களும்தாண்டி, பல மிருகங்கள் வசிக்கும் இடங்களும் மிகுதியாக வெயிலின் சூடு அதிகரிக்கும் பாலைவனங்களையும் பகலும் இரவுமாககடந்து ஒப்பில்லாத கேரளநாட்டை அடைந்தான் [எ—று] 63

334

எண்ணிலா தவரை வினவினன் விரைந்தா னேகினு னிலகுபுக் கொளியீங்
கண்ணிதோ வென்று னரற்றினன் படர்ந்தே யடர்ந்துசென் றெய்தினு [னதன்கண்
தண்ணிலா முடியோன் திருவவி நாசித் தனிமுதல் தயங்குபூஞ் சோலை
கண்ணினுற் கிடைத்தான் கரந்தலை குவித்தான் கரைக்கல மெனக்கடி [தணைந்தாள்.

[இ—ள்] அநேகம்பேர்களைப் புக்கொளியூர் எங்கே என்று கேட்டான் விரைந்து சென்றான். சமீபத்திலிருக்கிறதா என்று கதறினான். குளிர்ந்த சந்திரனைத்தரித்த முடியையுடைய சிவபெருமான் வீற்றிருக்கும் திருஅவிநாசித்தலத்திலுள்ள பூஞ்சோலையைக் கண்களினல் கண்டான். கையைத் தலைமேற் குவித்தான் கரையைக் கண்டு விரைந்து செல்லும் மரக்கலம்போல விரைந்து வந்தான் [எ—று] 64

335

மாலையம் போழ்து வந்தரித் துவசன் மன்னுபுக் கொளிவனக் கோயிற்
பாலையங் கடைந்த குணதிசை யடர்ந்து படர்நடைப் பருவர லொழிந்த
காலையிற் கலிங்கப் பாசடை நீக்கிக் காவியங் கண்மலர் விழித்து
மேலையங்கமலக் கரதலங் குவித்து வினவினுள் பொய்கைமெல்லியலாள்.

[இ-ள்] அரித்துவசன் மாலைக்காலத்தில் திருப்புக்கொளியூரில் உள்ள அழகான கோயிலையடைந்தான். கிழ்ப்பக்கம்சென்று கடந்து வந்த வருத்தம் நீங்கினபிறகு, தடாகம் என்கிற மெல்லிய தன்மையுள்ள பெண் பசுமையான இலையாகிய ஆடையை நீக்கி நீலோற்பலமாகிய கண்களை விழித்து மேலே நீட்டின தாமரை யரும்பாகிய கையைக் குவித்து வந்த காரியத்தை வினவினுள். [எ—று] 65

336

அற்றைநா ளிரவி லங்கவ தரித்தா னம்பர மெனுமொரு நண்பன்
முற்றவெண் மதியாம் பெருநகை பரப்பி மொய்த்ததா ரகைமலர் சிதறி
மற்றவ னறிவி லாவணத் திரைபோய் மாறிய தெனவிருண் மாய்த்துப்
பொற்றடந் தேரோன் றுணைவரு வதற்குப் புணரியந் தெருவலங்
கரித்தான்.

[இ—ள்] அன்று இரவு ஆகாயம் என்கிற ஒரு சிநேகிதன் வெண்மையான சந்திர ஒளியைப் பரப்பி, நெருங்கிய நட்சத்திரங்களாகிய மலர்களைச் சிதறி, அவ்வாசனது அறியாமையாகிய திரை நீக்கிற்று என்று சொல்லும்படி, இருளைப்போக்கி பொன்னாலாகிய பெரிய தேரையுடைய சூரியன் வருவதற்காகப் பெரிய கடல்ஆகிய அழகிய தெருவை அலங்காரம் செய்தான் [எ—று] 66

புணரி - கடல். கடல் சூழ்ந்த பூமியை

337

காலையிற் குரிசில் பொய்கைநீர் படிந்து கங்கைகூ வப்புனல் தெளியா
சோலையிற் புக்குப் பஞ்சவில் வாதி துணர்மல ரெடுத்தனன் மருங்கிற்
பாலையொத் திடுசொற் பன்னகக் கொடியும் பணிசெயற் குரியசேடியரும்
மாலையிற் சிறந்த பூந்துணர் கொய்து மயிலென நிற்கைகண் வைத்தான்.

[இ—ள்] விடியற்காலத்தில், பொய்கையில்ஸ்நானம்செய்து கங்காகூப ஜலத்தை தெளித்துக்கொண்டு, சோலையிற்புகுந்து, பஞ்சவில்வங்களையும், கொத்தாகிய மலர்களையும் பறித்தான். அப்போது பக்கத்தில் பாலையொத்த இனிய சொல்லைச் சொல்லுகின்ற நாக கன்னியும், பணிப்பெண்களும், சிறந்த மலர்களை மாலையாகத் தொ

டுப்பதற்கு மலர்களைக் கொய்து கொண்டு நிற்பதைப் பார்த்தான் [எ-று] 67

338

தேவகன்னிகையோ விஞ்சையர்குலத்திற் றிருந்தியதிலதகன் னிகையோ
மேவருந்தரணிவேந்தர்கன்னிகையோ வெற்பிடம்விளங்குகன்னிகையோ
பூவலர்க் கணையோன் புணருகன் னிகையோ பொன்னிதழ்க் கமலக்கன்
[னிகையோ
யாவரும் பரவு நாககன் னிகையோ இவரெவ ரென்றுளந் திகைத்தான்.

[இ-ள்] இவள் தேவகன்னிகையோ, வித்தியாதரர் உலகத்துக்குத் திலகமாய் விளங்குகின்ற கன்னிகையோ, பெருமை பொருந்திய பூமியிலுள்ள அரசரது கன்னிகையோ, மலையிடம் இருக்கிற கன்னிகையோ, புஷ்ப பாணங்களையுடைய மன்மதனது தேவியாகிய இரதியோ, பொன் தாமரையில் வீற்றிருக்கின்ற இலக்குமியோ, யாவரும் துதிக்கின்ற நாககன்னிகையோ இவள்யார் என்று திகைப்பையடைந்தான் [எ-று] 68

339

நிவந்தரு கணைந்து நிருபர்கோன் வினவ நின்றபே ருரகநாட் டரம்பை
நவந்தரு மவன்றன் இருந்திறங் கணியாள் நாண்மட மச்சமா நவியா
ளுவந்தநா ரியத்தில் வரைந்திடற் கரிய வோவியம் பொருவுவா ளுருவந்
தவந்தனில் வருந்துந் தன்மைகண் டிவள்பாற் சாருதல் பிழையெனத்
[தணந்தான்.

[இ-ள்] அரித்துவசன் திகைத்து சமீபத்திற்போய், நீயாரென்று கேட்க நாககன்னியானவள் அவனுடைய புதிய பேச்சையும் தன்மையையும் கருதாமலும், நாணம் மடம், அச்சம் இவைகளினால் வருந்தாமலும் எழுதுகோலால் எழுதுதற்கு அரிய சித்திரம்போல் இருந்தாள். அவளுடைய வடிவம், தவத்தால் வருந்துகின்ற தன்மையைக் கண்டு இவளிடத்தில் நெருங்குதல் பிழையென்று நீங்கினான் [எ-று] 69

340

அகலவே பின்ன ரரையனுஞ் செல்ல வாடரா வனிதைமுன் போந்து
சகலலோ கேசன் சந்நிதி நணுகிச் சானுவி கூவமஞ் சனத்தாற்
புகலரும் பூசை புரிந்தன ளவனும் புடைநின்று பூவைகைப் படிபார்த்
திகலறு மழுவோ னருச்சனை முடித்தா னிருவருந் துதிசெய்து நின்றார்.

[இ-ள்] அரசன் நீங்கினபின் நாககன்னியானவள். சகல உலகங்களுக்கும் தலைவனாகிய சிவபிரான் சந்நிதியைஅடைந்து வில்வம் முதலிய புஷ்பங்களாலும் கங்காகூப தீர்த்தத்தாலும் சொல்லுதற்

கரிய பூசையைச் செய்தாள். அதைப்பார்த்து அரசனும் பகைவர்களைக் கொல்லுகின்ற மழுவாயுதத்தைக் கையில்உடைய சிவபெருமானைப் பூசை செய்து முடித்தான். இருவரும் இறைவனைத் துதித்து நின்றார்கள். (எ—று) 70

341

பருவமா ரிருவ ரிளமையும் வடிவும் பயின்றொரு தானத்தி லிசைந்தும்
பொருகடை விழியும் புந்தியுந் திலத்திற் பொடிபடு பிளவள வேனு
மருவுறு விகார மடைகிலா துணர்ந்து மாதவப் பெருமையும் பார்த்துச்
செருவளர் பரசு தரித்தபுக் கொளியான் றிருவுளக் கருணையான் [மகிழ்ந்தான்.

[இ—ள்] தகுதியான இளமைப்பருவத்தையுடையஅரசனும் நாககன்னியும், ஒரே இடத்திலிருந்து பழகியும், போர்செய்கின்ற கடைக்கண்ணும் மனதும் ஒரு எள்ளின் பொடியளவாவது, பொருந்திய காமவிகாரம் இல்லாததையும், பெரியதவத்தினதுபெருமையையும் பார்த்து, யுத்தம் செய்யும் மழுவாயுதத்தைத் தரித்த திருப்புக்கொளியூரிலுள்ள இறைவன் திருவுளத்திற் கருணைகொண்டு மனம் மகிழ்ந்தான் [எ—று] 71

342

சுடர்மணி மிளிருங் கவின்முடிப் பதவி துறந்துமா தவவரித்து வசன்
கடமுனி யளித்த தனியுபதேசக் கடவுள்பூ சனையொரு தினமும்
படமிடற் றுறுவெம் பொறியுடற் பகுவாய்ப் பஃறலைப் பாந்தண்மா [மடந்தை
விடலறு நெறிசேர் திங்கண்மூ வேழின் விரதமு நிரம்பிய வேலை.

[இ—ள்] ஒளியையுடைய இரத்தினங்கள் பிரகாசிக்கிற அழகிய கிரீடத்தையணிந்து உலகத்தை ஆளும் பாக்கியத்தைத் துறந்து, பெரியதவத்தைச் செய்கின்ற அரித்துவசன் அகத்திய மகாமுனிவர் அளித்தஒப்பற்றஉபதேசப்படிபூசித்த தினமும்,படத்தைஉடைய கழுத்தையும், புள்ளிகளையும், பிளவுபட்ட வாயையும் பலதலைகளையும் உடைய ஆதிசேஷன் புதல்வியாகிய நாககன்னியினது இருபத்தொரு மாதத்தில் முடிவடைகின்ற விரதமும் முடியும் தினமாகப் பூசைநிரம்பிய காலத்தில் [எ—று] 72

343

தாணுவினிடத்தோர் வடிவுடன்றோன்றித் தவம்பல முடித்தனிர் வம்மின்
காணுமாறெமக்கு நிதியெனுமுரிய கங்கைநீர்த்தசும்பி னுட்புகுந்து
மாணுரகேசன் பதவியிலுதித்து மரபுளி மணவினைமணந்து
சேணுலகறிய வருகவென்றுரைத்தான் றிருவவி நாசியெம் பெருமான்,

[இ—ள்] திரு அவிநாசியில் அமர்ந்துள்ள எம்பெருமான் சிவ லிங்கத்தினிடத்திலிருந்து தோன்றி, பல தவங்களையும் செய்து முடித்த நீங்கள் எமக்குரிய செல்வமென்னும் உயர்ந்த கங்காகூபத் தின் வழியாகச் சென்று, பிலத்துவாரத்துட் புகுந்து பெருமை பொருந்தியஆதிசேடனது உலகத்தில்பிரவேசித்து நீங்களிருவரும் வேதவிதிப்படி திருமணம்புரிந்து பரந்த இவ்வுலகில் உள்ளவர் அறி யும்படியாக இங்கேவாருங்கள் என்று அருள் புரிந்தார் [எ—று] 73

## 344

அப்பரிசணங்கு கங்கைநீர் புகுந்தாளணிகிளர் பணித்தலமமர்ந்தாள்
செப்பிளமுலையா ரொருங்குட னுழைந்தார் திறலினுன் சிந்தையூடமுங்கா
வொப்பிலானருளே துணைகொடு பாய்ந்தானொய்வுறு தொருகணப்
பொழுதே
பைப்பணுடவியோ னுலகரசிருக்கும் பணிமுகப்பணைந்தனன் பரிவால்.

[இ—ள்] அவ்விதமாக நாககன்னியும், கங்கைநீருக்குள் புகுந் தாள் உடனே நாகலோகம்போய்ச்சேர்ந்தாள். பொற்கிண்ணத்தை யொத்த இளமையான தனங்களையுடைய பெண்களும் கூடவே சென்று நாகலோகம் அடைந்தார்கள். தனக்கு உவமை ஒருவரும் இல்லாத சிவபெருமானது திருவருளே துணையாகக்கொண்டு அர சனும் கங்காகூபத்திற் பாய்ந்தான். ஒருநொடிப்பொழுதில் அவ்வரச னும் மிகுந்த விஷப்பையையும் பல படங்களையும் உடைய ஆதி சேஷன் அரசுவீற்றிருக்கும் அரண்மனை வாயிலின்முகப்பை யடைந் தான் [எ—று] 74

## 345

வென்றிவேலரசு பின்னர்வந்தணுகி வேறயலிருப்பதும் வினவாள்
நின்றுபின்பாராள் நிறையுடைப்புனல்போல் நிமிர்சிகைமயிலென நடந்து
சென்றுதன் றாதை செழுங்கழல் வணங்கித் திருவளர் சினகரம் புகுந்து
முன்றில்வா யெதிர்ந்த வன்னையை யிறைஞ்ச முகமலர்ந் தெடுத்துமார்
[பணைத்தாள்.

[இ—ள்] வெற்றியையுடைய வேலைத்தரித்த அரசன், பின் அவர்களைச் சமீபித்து பக்கத்திலிருப்பதும், பாராமலும் கேளா மலும் நாககன்னியானவள் நிறைந்த தண்ணீர் போலவும் உச்சிக் கொண்டையையுடைய மயில்போலவும், நடந்து சென்று, தன்னு டைய தந்தையினது, அழகான பாதங்களை வணங்கி, அழகுவிளங்கு கின்ற அரண்மனையிற்புகுந்து, முற்றத்தில் இருந்த தாயை வணங்க அவள் முகமலர்ந்து மார்போடு எடுத்து அணைத்தாள் [எ—று] 75

## 346

ஈண்டுவே திகையி லிருவரு மருவி யிளங்கொடி சரிதைகேட்டிரங்கித்
தூண்டியவிளக்கஞ் சோதிபெற்றனபோற் றெருகுசிவ ஞானபோதகராய்க்
காண்டகு முகமுமிதயமுங் கமலக்காடென வலர்ந்தளிகலந்து
வேண்டிய தினிமேற்றிருமணம் புணர்த்த லெனவெழு வேட்கையரானர்.

(இ—ள்) அங்குள்ள மேடையில் தாய்தந்தையர் ஆகிய இருவரும் இளங்கொடிபோன்ற பெண்ணினுடைய வரலாற்றைக்கேட்டு, இரக்கமுற்று, தூண்டப்பட்ட விளக்கானது மிகுந்த ஒளியைப்பெற்றது போல மிகுந்தசிவஞான விளக்கம் உற்றவர்களாய், செந்தாமரைக் காட்டைப்போல முகமும் மனமும்மலர்ந்து அன்புற்று, இனிச்செய்ய வேண்டியது திருமணமாகும் என்றுஉண்டாகின்ற ஆசையையுடையவரானர்கள். (எ—று) 76

## 347

அன்றையினிரவு கழிந்துபோயினபினலைகட லுதயபூ தரத்திற்
றுன்றிய கிரணப்பரிதிவந் தெழுந்துதுளறு தோற்றமே பொலிய
வென்றிகொ ளுரக வேந்தரசிருக்கும் வெயின்மணிக் கனக மேடையின் மேற்
கொன்றையை மிலைந்த கடவுளைக் குறித்துக் குலவரித்துவசன்வந் திருந்தான்.

(இ—ள்) அன்றிரவு முடிந்தவுடன் அலையையுடைய கடலின்மேல்உதயகிரியில் கிரணங்கள் பொருந்திய சூரியன் வந்தெழுந்து பிரகாசிக்க, வெற்றியையுடைய ஆதிசேடன் அரசுவீற்றிருக்கும் பிரகாசம் பொருந்திய இரத்தினங்களால் இழைக்கப்பட்ட பொன்னுலாகியமேடையின் மேல், கொன்றைமாலையைத்தரித்த கடவுளை(நினைத்து)த்தியானித்துக்கொண்டு பெருமையைஉடைய அரித்துவசன் வீற்றிருந்தான் (எ—று) 77

## 348

இருந்ததன் மையையங் கியங்குவோ ருணர்த்த வெழுநிலை மாடம் விட்டகன்று
திருந்தரவரசன் செறிந்தெதிர் மருவத் தெற்றிவாய் பணிந்தரித்துவசன்
பொருந்துகை குவியாமுன்கர முகிழ்ந்துப் புறமொரா தனமிசைவைகி
யிருந்தலங் குலஞ்சீரியற்கையா தென்னவியல்பெலா மெதிர்மொழி [கொடுத்தான்.

(இ—ள்) அவன் அங்கு வீற்றிருந்த தன்மையை அங்குள்ளவர்கள் ஆதிசேடனுக்குத் தெரிவிக்க உடனே தன்னுடைய ஏழு நிலைகளையுடைய உப்பரிகையைவிட்டு நீங்கி, அரித்துவசனிடத்துவர, அவன்

கைகுவித்து வணங்குவதற்கு முன்னே ஆதிசேடனும் வணங்கி, ஓர் ஆசனத்தில் அமர்த்தி தானும் அமர்ந்து, அரித்துவசனது இடம், குலம், தன்மை முதலியவைகளை வினவ அவைகளுக்கு மறுமொழியும் கூறினன் (எ—று) 78

## 349

நாகலோ கேச னயந்துளந் தரித்து நரபதி யிளமையும் வளனு
மாகரு பகமு மாய்கலை யறிவு மரனடிக் கன்புமோர்ந் துணர்ந்து
மேகதா பரத்தின் மின்னனை யவட்கு மிகுமிவன் றகுமெனும் விருப்பாற்
பாகபோ னகமும் பளிக்கறை யிடமும் பஞ்சணைச் சயனமும் பகிர்ந்தான்.

(இ—ள்) அதுகேட்டு நாகலோகத்துக்கு அதிபதியாகிய ஆதிசேடன் மனம்விரும்பி, அரித்துவசனது, இளமையையும், செல்வத்தையும், அழகையும், கல்வியையும். கடவுளிடத்து உள்ள அன்பையும், ஆராய்ந்தறிந்து' ஒத்ததுணையாக நம்முடைய பெண்ணாகிய மின்னலை யொத்தவளுக்கு இவன் தகுந்தவரன் என்கின்ற ஆசையினால். மிகுந்த அறுசுவையோடும கூடிய உணவையும், பளிங்குக் கற்களால் ஆகிய அறையையும் கொடுத்து, பஞ்சுமெத்தையில் உறங்கவைத்தான். (எ—று) 79

## 350

எண்டிசை தயங்கு புயங்கபூ பதிகட் கேவலோர் வாய்மொழி போக்கி
யுண்டென வருவித் தவருடன் விளைவுற் றுயரிய வொருதினங்குறியா
விண்டொளிர் மணியாற் றமனியப் படத்தால் வியனகர் முன்றில்சீர் [விளக்கிக்
கொண்டலிற் கிளர்ந்த மணிமுர சதிர்த்துக் கோமளச் சுதைதனைக் [கொணர்ந்து.

(இ—ள்) மறுதினம் எட்டுத்திக்கிலுமுள்ள அரசர்களுக்கும் தூதுவர்களை அனுப்பி, அவர்களை வரவழைத்து, அவர்களுடன் பேசித்திருமணத்திற்கு ஒருநல்லநாளைக்குறித்து, பொன்னாலும. இரத்தினங்களாலும் நகரத்தை மிக அழகாக அலங்கரித்து மேகம்போன்ற ஒலியையுடைய அழ்கிய பேரிகையை முழங்குமாறு செய்தான். (எ—று) 80

## 351

விறலரித் துவச வேந்தர்கோ னருகு விழிகவின் றெதிரினி திருத்தி
யறன்வழிச் சுருதி வேள்விசான் றுக வலர்க்கையா லந்தணி ருகுத்துத்
திறன்மணிக் களத்திற் சிறந்தமங் கலநாண் செறித்திரு செழுங்கரம் [பிணைத்துத்
துறவின்மிக் கவர்கண் மணத்தொழின் முடித்துச் சோபனங் கண்டு கண் [களித்தான்.

(இ—ள்) பின் தன்னுடைய அழகிய பெண்ணாகிய சுதையை அழைத்துவந்து, வெற்றியையுடைய அரித்துவசன் சமீபத்தில் இருக்கச்செய்து, வேதவிதிப்படி அக்கினிசாட்சியாக, தாமரைமலர்போன்ற கையினால் தாரைவார்த்துக் கொடுத்து, பெண்ணினது அழகியகழுத்தில் திருமங்கலியநாணை அணியும்படிச்செய்து, மணமக்கள் கையைக் கோத்துக்கொண்டுவரவும், முனிவர்கள் வாழ்த்தவும், மங்கையர்கள் பல்லாண்டுபாடவும், திருமணம் புரிவித்துக்கண்டு மகிழ்ந்திருந்தான். (எ—று) 81

352

அட்டநா கப்பே ரரசர்சீ தனப்பே றளித்தன ரளப்பிலா மணியை
நட்டர சனந்த நிதியளித் தியாவு நல்குபொற் குளிகையு மளித்தா
னிட்டகா மியத்தை யிருவரும் புணர்ந்தே யீரிரண் டுபயநா ளளவு
மட்டற மகிழ்ந்து சுகக்கடல் பெருகி வழிந்திடத் திளைத்துமூழ் கினரால்

(இ—ள்) அட்டநாகங்களாகிய அரசர்கள் அளவில்லாத நாகரத்தினங்களை வரிசையாகக்கொடுத்தார்கள் ஆதிசேடனும் அளவில்லாதசெல்வத்தைக்கொடுத்து, நினைத்தவற்றைக்கொடுக்கக்கூடியகுளிகையொன்றையும் கொடுத்தான். இருவரும் எண்ணியவிருப்பப்படி எட்டுநாள் அளவு அளவில்லாத சந்தோஷத்தை அடைந்து ஆனந்த சமுத்திரத்தில் மூழ்கியிருந்தார்கள். (எ—று) 82

353

ஈட்டிய நவநா ளிரவுபூஞ் சயனத் திருவரு மினிதிருந் துரைப்பார்
நாட்டணி யியல்பாற் குலன்முறை வழக்கா னவையறு முயற்சியால் [வலியான்
மூட்டியகிளையான் மலரயன்வகுப்பான் முடிவுருவகையெலா மெமக்குக்
கூட்டியவருளோன் றிருவவிநாசி கிடைக்குமாறென்றெனக் குழைந்தார்.

(இ—ள்) ஒன்பதாம்நாள் இரவு, புஷ்பசயனத்தில் இருவரும் அமர்ந்து இனிதாகப்பேசிக்கொள்வார்கள். அழகியஇடத்தாலும், குலவழக்கத்தாலும், குற்றமற்றமுயற்சியாலும், சுற்றத்தாராலும், பிர்மாவினாலும் முடியாத நம்திருமணத்தைக் கூட்டுவித்த கருணையையுடையவன் அமர்ந்துள்ள திருஅவிநாசித்தலத்தை எப்பொழுது அடைவோம்என்று மனம் இளகினார்கள். (எ—று) 83

354

சீதள வனமே கோயில்கொண் டமருஞ் சிவபரிபூரண நினைந்தார்
மேதகு பரமா னந்தமேற் கொண்டார் மெலிந்துள மயங்கினா ரதன்கட்
போதலர் விழிக டயின்றிர வொழிந்து புலரியங் காலைகண் விழித்தார்
சீதனமுதல்க ளுடனிருவோருஞ் செழித்தபுக் கொளித்தலத் தெழுந்தார்

(இ—ள்) குளிர்ந்த அந்தவனமே கோவிலாகக்கொண்டு அமர்ந்திருக்கும் பரிபூரணராகிய சிவபிரானைநினைந்து மேன்மையான பரமானந்தத்தையடைந்தார்கள். தளர்ந்து மனம் மயங்கினார்கள். மலரை யொத்த கண்களுக்கு நித்திரைவரத்தூங்கினார்கள். அன்று இரவுவிடியு முன் விடியற்காலத்தில் கண்விழித்தார்கள் சீதனப்பொருள்களோடும் கூட அவ்விருவரும்திருப்புக்கொளியூர்த்தலத்தில் இருக்கக்கண்டார்கள். (எ—று) 84

355

முத்தனே சமய முதல்வனே யிமய முகிழ்நகை பாகனே போற்றி
நித்தனே விமல புரணனே கமல நெடுந்தகைக் கதிபனே போற்றி
மத்தனே புதிய மதியனே நதியம் வளர்சடை வள்ளலே போற்றி
யத்தனே காசித் திருவவி நாசி யண்ணலே யரகர போற்றி

(இ—ள்) அழியாதவனே, மலங்கள்நீங்கின எங்கும்நிறைந்தவனே மூத்தனே சமயங்களுக்கெல்லாந் தலைவனே போற்றி. தாமரைமலரில் உள்ள பிரமாவுக்குத்தலைவனே, பித்தனே, மூன்றாம்பிறைச்சந்திரனை யணிந்தவனே கங்காநதியையணிந்தநீண்டசடையையுடையவள்ளலே பிதாவே, காசியோடுசேர்ந்த திருஅவிநாசியிலுள்ள அண்ணலே அரகர உன்னை நமஸ்கரிக்கிறோம். (எ—று) 85

356

ஒருவனே யாகி யுலகெலா நிறைந்து மும்பருக் கரியனே போற்றி
பருவமி லெமையாட் கொண்டருள் பகுந்து பணிகொளும் பரமனே [போற்றி
பொருவரு மறைசேர் புக்கொளிப் பொருளே போற்றியோ போற்றியென் [றிரங்கி
யிருவருமுருகிப் பெருகுபேரின்பத் தெழுபெருங் கடல்படிந் தெழுந்தார்.

(இ—ள்) ஒருவனாகவேயிருந்து உலகம் முழுவதும் நிறைந்திருந்தும், தேவர்களுக்கு அருமையானவனே, பக்குவமில்லாதஎம்மையும் ஆளாக ஆட்கொண்டு எங்களது பணிகளையும் ஏற்றுக்கொள்ளும் மேலானவனே ஒப்பில்லாதவேதங்களின் பொருளாக அமர்ந்திருபபவனே திருப்புக்கொளியூரில் உள்ளவனே என்று இருவரும் உருகித்துதித்து பேரின்பக்கடலில் மூழ்கியெழுந்தார்கள். (எ—று) 86

357

சோரிவெங் கதிர்வேற் கரவரித் துவசன் சுமங்கல வனிதையை விளியா
வாரியின் மிகுந்த விடயசீ ரின்ப மயக்கினுட் டுளைந்தபுன் மதியேம்
பேரியல் கருணைக் கிழவனை முனம்போற் பிறங்குபூ சனைசெய றகுமோ
தூரிய வனப்பார் சினகர முதலாம் பணிசெய்து மெனவுளந் துணியா.

(இ—ள்) இரத்தக்கறை பொருந்திய ஒளியுள்ள வேலைத்தரித்த கைகளையுடைய அரித்துவசன் தன்மனைவியை அழைத்து, சிற்றின்ப சமுத்திரமாகிய மயக்கத்தில் அகப்பட்டு முழுகுகின்றஅற்பபுத்தியுள்ள நாம், மிகுந்தகருணையோடு கூடிய சிவபெருமானை முன்போல் விளங்குகின்ற பூசனை செய்தல்தகுமோ. கோவிலை அழகு பெறச்செய்யும் பணியைமேற்கொள்வோம் என்று துணிந்து. (எ—று) 87

## 358

உறையுண்மண் டபமு முபயமண் டபமு முயர்விடை கிடைகொண்மண்
நிறைதரு பரத நிர்த்ருதமண் டபமு நியமர்கள் பரவுமண் டபமு [டபமு
முறைபெற முரசு முழங்குமண் டபமு முதுமறை வேள்விமண் டபமுங்
குறைவிலாதமைத்துப் புரிசைசூழ்வரிசைக் கோபுர விதானமுங் குயிற்றி

(இ—ள்) கருப்பக்கிரகம், அர்த்தமண்டபம், மகாமண்டபம், வாகனமண்டபம், நிருத்தமண்டபம், யாவரும்வணங்குகின்ற அலங்கார மண்டபம் பேரிகை முதலிய வாத்தியங்கள் முழங்கும் மண்டபம், பழமையானவேத, வேள்விமண்டபம், முதலியவைகளைக்குறைவில்லாமல் கட்டி, சூழ்ந்த திருமதிலையும், கோபுரத்தையும், அழகாகச்சிறப்புறச் செய்து. (எ—று) 88

## 359

பழமறை மூலப் பொருட்குபர் நாகா பரணமும் புரணகோ ளகமு
மழமதி யுருவும் பகீரதி வடிவும் வயங்குதா ரகையின்மா லிகையுஞ்
சுழல்வர வியைந்த மருங்குபந் தனமுஞ் சுந்தரக் கஞ்சகத் தொடர்பு
மழகெழு மகர நாசிவா சிகையு மடர்ந்தபொற் படாகமு மணிந்து.

(இ—ள்) பழைய வேதங்களின் காரணப்பொருளாயுள்ள சிவபிரானுக்கு நாகாபரணமும் சந்திரஹாரமும், விளங்குகின்ற நட்சத்திர மாலையும், ஒட்டியானமும் அழகான கவசமும், செய்த மகர குண்டலமும், முத்து பொன்னாலாகிய பாடகத்தையும் அணிந்து (எ—று) 89

## 360

அற்புத நடனத் தரசுமர் னந்த வரம்பையு நிரம்பவீற் றிருக்கச்
சிற்பநூல் விதித்த சபாநிலை யரங்குந் திறங்கொளனங் கியும்பல கலனும்
பற்பல கதிர்சே ருரகமா ணிக்கப் பரிபுர மெடுத்ததாட் கணிந்த
பொற்புமாங்கமைத்துக் கருணைநாயகிக்கும் புகுவனவனெலாம்புரிந்து.

(இ—ள்) அற்புதமான நடனத்தைச்செய்கின்ற நடராஜப்பெருமானுக்கும், சிவகாமசுந்தரிக்கும் வீற்றிருப்பதற்கு, சிற்பநூல் விதிபிரமாணப்படி சிற்சபையும், உயர்ந்த அங்கியும், பல ஆபரணங்களும்,

*பல நாகரத்தினங்களால் இழைத்த சிலம்பையும் தூக்கிய திருவடிக்கு அமைத்து, கருணையைச் செல்விக்கும் பலவித ஆபரணங்களையும் செய்து (எ—று)* 90

361

வித்தகக் கடவு டிருமணி முன்றில் வெளிவட கீட்டிசைப் புறம்பு
பத்துநான் மடங்கு தனுக்கிடை கிடப்பப் பன்னகக் கன்னிதன் பெயரா
லுத்தம தீர்த்த மென்றுள தாக்கி யுயர்மறைக் குடிபல நிறைத்துச்
சித்திரை மதியத் திருவிழா வியற்றித் திசைமெலாம் புகழ்கொடி திகழ.

[இ—ள்] *அவிநாசி ஈஸ்வரர் சந்நிதானத்துக்கு முன்பு வடகீழ்த் திசையில் நாற்பது விற்கிடை தூரத்தில் நாககன்னியின் பெயரால் நாககன்னி தீர்த்தமென்ற ஒரு மேலான தீர்த்தத்தையும் உண்டாக்கி உயர்ந்த பிராமணர் பல பேர்களை குடிஇருக்கச்செய்து எட்டு திசையிலுள்ளவர்களும் புகழும்படி கொடியேற்றிச் சித்திரை விழாவைச் சிறப்பாக நடத்தி வைத்தார்கள் [எ—று]* 91

362

கடைதொறுங் கனக நவமணி விலைஞர் கரமவை யலதுதூக் காது
புடைதொறும் பரத சாதமே யலது பூவையர் புறம்பயி லாது
கிடைதொறும் புரிநூன் மாந்பகச் சிறுவர் கெழுமறை யலதுரையாது
தொடைபெறுங் கலைஞர் சிவகதை யலாது தொடாமலத் தொன்னகர்
[புரந்தான்.

(இ—ள்) *பொன்னையும் நவமணிகளையும் விற்பவர்களுடைய கைகள் வேறொன்றையும் தூக்காமலும், பக்கங்களில் நடனம், இசை இவற்றைப்பயில்கின்ற பெண்கள் தங்கள் வீட்டை விட்டு வேறிடத்திற்கு செல்லாமலும், முப்புரி நூலையணிந்த பிராமணச்சிறுவர்கள் வேதத்தையல்லது வேறொன்றை ஓதாமலும் செய்யுளைச் சொல்லும் கலைவல்லவர்கள் சிவ கதையை அல்லது வேரு ஓதாமலும் அந்தப் பழமையான நகரத்தை அரித்துவசன் அரசாண்டுவந்தான்.(எறு)* 92

363

இருந்தன னநேக யாகங்கள் புரிவித் தெண்ணிரு தானங்க ளியைந்து
பெருந்தல மேன்மை கேட்டுள மகிழ்ந்து பிறங்கிய தவத்திரு வினைத்து
வருந்திமெய் தளர்ந்த தமிழரித் துவச யோகியுங் கிழத்திய மறைநூற்
றிருந்துபுக் கொளிவாழ் திருவவிநாசிச் சிவனடித் தாமரை சேர்ந்தார்.

(இ—ள்) இன்னும், *அனேகயாகங்களைச் செய்வித்தும், பதினாறு தானங்களையும் செய்தும், மேன்மையான தலங்களின் மேன்மைகளை கேட்டு மகிழ்ந்தும், பல தவங்களைச் செய்து இளைத்தும், மெய்தளர்ந்த*

யோகிபோல் மனைவியுந்தானுமாக இருந்து மேன்மையான திருப்புக்கொளியூரில் உள்ள அவிநாசிப் பெருமான் திருவடித் தாமரையை அடைந்தார்கள் (எ—று) 93

364

கணங்கண்மா முனிவ ரரவொலி கிளைப்பக் கடவுளர் மலர்மழை தெளிப்ப
மணங்கமழ் கயிலை யிருவரு மடைந்த வாறுகண் டருளிய நந்தி
குணங்குறிகடந்த வொருசனற் குமரற் குணர்த்திமற் றுளகுறை குறுகார்
நிணங்குளித் தகலுங் கடுங்கணை வியாதன் பெறுங்கதி நிகழ்த்துமா
[றிசைந்தான்.

(இ—ள்) முனிவரர் கூட்டங்கள் அரகர என்று சப்திக்கவும், தேவர்கள் புஷ்பமாரி பொழியவும், வாசனை வீசுகின்ற கயிலையில் இருவரும் அடைந்ததைக்கண்ட நந்திதேவர், சனற்குமாரமுனிவர்க்குணர்த்தி, சத்துருக்களின் மாமிசத்தில் முழுகும் கொடியபாணத்தையுடைய வேடன் முத்தியடைந்த சரித்திரத்தைக் கேட்பாய்யென்று கூறத்தொடங்கினர் (எ—று) 94

ஆறுவது காசகன்னிச் சருக்கம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—364.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# வியாதச் சருக்கம்.

365

மன்னுவரு ணங்களின் மறைக்குலமு மாறு
நன்னெறியின் ஞானமு நயந்ததென வானிற்
றுன்னிதிய முங்கயிலை யுஞ்சுட ரிமைக்கும்
பொன்னசல மும்பெற வுயர்ந்தவட பூமி,

[இ—ள்] நிலைபெற்ற நான்குவருணங்களில் பிராமணகுலமும், மார்க்கத்தில் ஞானமார்க்கமும் தேவலோகத்தில பழமையான செல்வமும், உயர்ந்ததைப்போல, ஒளிவீசுகின்ற கயிலாயமும் மகாமேருவும் இருத்தலால் பூமியில் வடபூமி உயர்ந்ததாக கருதப்படுகிறது [எ—று] 1

366

முத்தர் வியன்றமிழ் முனிக்குரவ் னுளு
மத்தர்சயி லக்கென வடித்தளிர் சிவப்பப்
பத்தர்பர வும்படி படர்ந்தணைத லாலே
யுத்தர மியம்பரிய வுத்தர திசைப்பால்.

[இ—ள்] இயல், இசை, நாடகம் இம்மூன்று தமிழுக்கும் தலைவ ராகிய அகத்திய மகாமுனிவர், ஸ்ரீ கயிலாயமலையின்கண் அமர்ந்தி ருக்கின்ற சிவபெருமானைக்கண்டு துதிப்பதற்கு மற்றுமுள்ளபக்தர் களோடு தளிர்போன்ற பாதங்கள் சிவக்கச்சென்று அடைதலாலே சொல்லுதற்கரிய பெருமையை உடைய வடதிசையில் [எ—று] 2

367

நீளுலக மெங்கணும் நிவந்தபுகழ் பல்கும்
வேளுரிய குன்றுகளில் விந்தகிரி தென்பான்
மாளவ மெனும்பெரிய மாநகரி மூதூர்
நாளும்வள மேபெருகி நல்லறனு மல்கும்.

[இ—ள்] விசாலமான இந்த உலகம் முழுவதும், உயர்ந்தபுகழ் நிறைந்த, முருகவேளுக்குச் சொந்தமாகிய மலைகளில் விந்தியமலை க்குத் தென்பக்கத்தில் எப்பொழுதும் தருமமும் செல்வமும்நிறைந் து விளங்குகின்ற மாளவம் என்கின்ற பழைய பெரிய நகரம் ஒன்று உண்டு அதில் [எ—று] 3

368

சாடுதறு கட்செறி தரக்கெனு முருக்கோண்
டாடுகொடி மாடமு மரங்குநிலை சூழும்
பீடுறு மணித்தவிசில் வாழ்பிரச வாகை
வேடுவர் குலாதிபன் வியாதனெனு மேலோன்.

[இ—ள்] கொல்லுகின்ற அஞ்சாமையையுடைய புலிக்கொடி யாடும்படியான உப்பரிகையையும் நடனச்சாலைகளையும் உடைய, பெரிய இரத்தினங்களால் இழைக்கப்பட்ட ஆசனத்திலிருந்து தேன்பொருந்திய வாகைமாலையைச்சூடி அரசாளுகின்ற (வேடுவர் களுக்கு அரசனை (வியாதன் என்பவன்) ஒருவன் இருந்தான் (எ—று) 4

369

சீற்றமத னிற்கொடிய செந்தழலை யொப்பான்
மாற்றலர் தமக்கொருவ யங்கசனி போல்வா
னேற்றிய தனுத்தின மியற்றிய வெடுப்பான்
கூற்றென வடர்த்துயிர் கொடுங்கணை தொடுப்பான்.

(இ-ள்) அவன் கோபத்தில் அக்கினியையும், பகைவர்களுக்கு இடியையும் ஒத்தவனும், தினமும் புதியவில்லைத் தரிப்பவனும், கொடியபாணங்களைத் தொடுத்து உயிர்களை எமனைப்போலக் கொல்பவனும் [எ-று] 5

370

தானவரை யொத்ததறு கண்மைபெறு வன்மைக்
கானவர் குலத்துரிய கண்ணின்மணி யன்னான்
றேனனைய சொற்றிரு வெனப்பருவ மெய்து
மானமர பிற்புணரு மங்கையர்கண் மூவர்.

[இ-ள்] அசுரர்களையொத்த அஞ்சாமையையும் உடைய (வலிமையையும்) வேடர்குலத்திலுள்ளவர்களுக்குக் கண்மணியை ஒத்தவனும் ஆகிய வியாதன் தேன்போன்ற மொழியைச்சொல்லுகின்ற இலக்குமிக்குச் சமமான மூன்று பெண்களை மணந்திருந்தான் [எ-று] 6

371

அந்தவொரு மூவரு மரும்புதல்வ ரின்றிச்
சிந்தைதள ரத்தளர்வு செங்கரிய சீய
நந்தமெழி லென்கொலென நன்கொழியு நாளின்
முந்துமுர வோர்பகரு மூதறிவை யுன்னி.

[இ-ள்] அந்த மனைவியர் மூவரும் புத்திரப் பேறின்மையால் மிகவும் வருந்தினர்கள். அதனால் சிங்கத்தையொத்த அவ் வியாதனும் நம்முடைய வன்மையும் அழகும் இருந்து என்ன பிரயோசனம் என்று தானும் வருந்திய காலத்தில். மேலானஅறிவையுடைய பெரியோர்களின் வார்த்தையை நினைத்து [எ-று] 7

372

தீர்த்தந்தி யும்பர சிவன்பதியு நேடி
யார்த்ததவ மேபுரியு மன்புதலை வந்து
சேர்த்தகுல வேடரொடு செல்பொருளு மாகி
வேர்த்தலை வியாபியி லகன்றனன் வியாதன்.

[இ-ள்] உலகிலுள்ள பல தீர்த்தங்களிலும், நதிகளிலும் ஸ்நானம் பண்ணி, பல சிவதலங்களிலும் சென்று தரிசித்து, அன்போடு கூடிய தவத்தைச் செய்ய எண்ணி, தன் குலத்திலுள்ள வேடுவர்களோடு வேண்டிய பொருள்களையும் எடுத்துக்கொண்டு தன்னூரை விட்டு அகன்று யாத்திரை செய்யத் தொடங்கினான் [எ-று] 8

## 373

*வேறு*

கோதாவிரி கோமதி வாயு கொணர்ந்த தீர்த்தம்
வாதார்பவ மோச பிணுகிநல் வன்னி தீர்த்தம்
மீதாகிய வஞ்சன வேணி விமல தீர்த்தந்
தோதான்மிகு பொன்முக ரிப்புனல் சோணதீர்த்தம்.

(இ—ள்) *கங்கை, கோதாவிரி, கோமதி, வாயுதீர்த்தம், பிணுகி வன்னிதீர்த்தம் கிருஷ்ணவேணி, விமலதீர்த்தம், பொன்முகரி. சோணதீர்த்தம் முதலிய தீர்த்தங்களிலும்* (எ—று) 9

## 374

வீரேச மிருக்குயர் காசி விருத்த குன்றஞ்
சீரேற விளங்கு மணுமலை தெய்வக் காஞ்சி
யாரேற புனையுஞ் சிவனுடிய வால நீழல்
பாரேழ் பரவிங் கிவையாதி படிந்து போற்றி.

(இ-ள்) *காசி வீரேசம் விருத்தாசலம், புள்ளிருக்கும்வேளூர், என்கிற வைத்தீஸ்வரன்கோவில் திருவண்ணுமலை. தெய்வத்தன்மையுள்ள காஞ்சிபுரம் கங்கா நதியையணிந்த சிவபிரான் ஊர்த்தவ தாண்டவம் ஆடின, திருவாலங்காடு முதலிய தலங்களுக்குசென்று ஸ்னானம் செய்தும் தெரிசித்துத் துதித்தும்வணங்கியும்* (எ-று) 10

## 375

காயத்திரி யென்னும் வனத்திடைக் கான வேட
ராயத்தொடு செல்வுழி நல்வினை யார்த லாலே
தோயற்புல ராடை புலித்தொலிச் சோதி மேனி
யேயச்சுர கான தபோமுனி எய்திறு னல்.

]இ—ள்] *வேடர்கூட்டத்தோடு காயத்திரி என்கின்றவனத்துட் செல்கின்ற காலத்தில் காவியுடையும் புலித்தோலையும் அணிந்து பிரகாசமான சரீரத்தையுடைய எழிசையில்வல்லவராகிய தவத்தை யுடைய நாரதமகாமுனிவர் அங்குவந்து சேர்ந்தார்.* [எ—று] 11

## 376

நெடுமாதவ னேர்வெதி ரித்தரு நீழ னின்று
கொடுமாமர ணும மிடங்குறி கொள்கை கூறச்
சுடுமாறென வன்னவ னூழ்வினை தூளி போகத்
தடுமாறுதல் வீழ்தல் புலம்புதல் தன்னை யுற்ருன்.

[இ—ள்] பின்மூங்கிற்காட்டின் நிழலிலிருந்து வில்லைத்தரித்த கைகளையுடைய வியாதனென்னும் வேடனைப்பார்த்து, அவன் இடத்தையும் அடையாளத்தையும்அவன் அங்குவருவதற்குக்காரணத்தையும் விவரித்துக்கூறக்கேட்ட வேடன் ஆச்சரியமுற்று மனம் தடுமாறி வீழ்ந்து புலம்புகின்றவன் ஆனான். [எ—று] 12

### 377

வேண்டும்பரி சென்னென வேமுனி வேட ராசன்
ஈண்டின்புறு சந்ததி தந்தருள் கென்று கூறப்
பூண்டன்பு புகுந்த வவன்றலை பூங்கை தாங்கி
மூண்டுன் செயல் கூறுது மென்றனன் மூத்தி வல்லான்.

[இ—ள்] அதைக்கண்ட நாரதமுனிவர் உனக்கு வேண்டுவது என்னவென்று கேட்க சந்ததி வேண்டுமென்று கூற அவனிடத்து அன்பு கூர்ந்து, சிரசில் கையைவைத்து உன்னுடைய முற்பிறப்பை கூறுகிறேன் கேள் என்று மூத்தராகிய நாரதர்கூறுகிறார். [எ-று]13

### 378

மின்னற்பொலி வெங்கணை யங்கை வியாதனே கேள்
முன்னைச் சென னந்தனி லந்தண மூட னீகாண்
என்னத்தமி யேனஃதின் குல மேய்ந்த வாறு
முன்னற்கரி தாமக வின்மையு மோது கென்றான்,

[இ-ள்] மின்னுகின்ற கொடிய பாணத்தைக்கையில் தரித்தவியாதவனே. நீமுன் பிராமணகுலத்திற்பிறந்து, மூடனாய் இருந்தாய் என்று சொல்ல, அது நினைத்தற்கு முடியாதது. புத்திரன் இல்லாததற்கு சொல்லுங்கள் என்றான் வியாதன். [எ—று] 14

### 379

தாயத்துண ரந்தண யோனி சனித்து ளோர்கள்
காயத்திரி சந்தி கணற்றொழில் காலை பேணி
வாயற்புத வேத பராயண மல்க வோதி
யாயத்தம ரோர்பத மேபெற லாகு மல்லால்,

[இ-ள்] நல்ல அறிவையுடைய பிராமணகுலத்திற்பிறந்தவர்கள் காலையிலும், அந்தியிலும், காயத்திரிசந்தியாவந்தனம் முதலியவற்றைச்செய்து, அற்புதமாகிய வேதபாராயணம் செய்து முடிவில் தேவர்உலகத்தை அடையலாம் அதுவல்லாமல். [எ—று] 15

380

ஈசன்குரு மாதவர் தம்மையு மெள்ள லுற்ருர்
நேசம்பயி லன்னை பிதாவையு நிந்தை செய்தார்
வாசஞ்செறி கின்ற வகங்கனல் வைத்த பொல்லார்
நீசங்கள் பயின்று விடாநிய மங்கை விட்டார்.

[இ—ள்] கடவுள், குரு, பெரியோர்கள், முனிவர்கள், அன்புள்ள, தாய் தந்தை முதலியவர்களை இகழ்ந்தவர்களும், செய்யவேண்டியநியமங்களைக்கைவிட்டவர்களும், குடியிருக்கும் வீட்டில் தீ வைத்தவர்களும், இழிவானகாரியங்களைச்செய்கின்றவர்களும். [எ-று] 16

381

மறையோர் இரவற்பொரு ளாவன வௌவியுள்ளார்
றிறைசேர்வை யயிற்படை கைக்கொ டியற்றி யுய்ந்தார்
நிறைகூவ மழித்தனர் கோறலை நெஞ்சில் வைத்தார்
துறைமாநதி போகியு மப்புனல் தோய்கி லாதார்.

[இ—ள்] பிராமணர்களுடைய இரவல் வாங்கிய பொருளை மறைத்து அபகரித்தவர்களும், அரசனுக்குரியவேலைப்பிடித்துச்சண்டைசெய்யாமல் பிழைத்தவர்களும், நீர்நிறைந்த கிணறுகளை தூர்த்தவர்களும், கொல்லுந்தொழிலை மனத்தில்வைத்தவர்களும், தீர்த்தங்கள் உள்ள இடத்திற்குச் சென்றும் அதில் முழுகாதவர்களும். [எ—று] 17

382

மெலியாது வழங்கிய வன்னம் விலைமை கொண்டார்
நலியாமுறை நட்டவர் குத்திரர் நன்றி கொன்ருர்
பலியாது பலித்த குலக்கொடி பண்பு பற்ருர்
வலியார் பரதார விருப்பெனும் வஞ்ச மஞ்சார்.

[இ—ள்] வஞ்சகர்களும், ஒருவர்செய்த நன்றியைமறந்து அவர்களுக்குத்தீமைசெய்தவர்களும், நல்லகுலத்துதித்த பெண்ணுக்குத் துன்பம் செய்தவர்களும், அன்னியாது மனைவியை விரும்புவதற்கு அஞ்சாதவர்களும் [எ—று] 18

383

தருபந்தரி னீர்புகு சாடி தகர்த்த தீயார்
பொருதென்புல வூணை விலக்கினர் போதி கொய்தார்
வருகன்றிள வாவை யடர்த்து வருத்தல் கண்டார்
பெருகுங் கொலைப்பாதக யோனி பிறப்ப ரன்றே.

[இ—ள்] தண்ணீர் பந்தலில் வைத்திருக்கின்ற பானைகளை உடைத்தவர்களும், பிதுர்களுக்குக்கொடுக்கும் ஆகாரத்தைக்கொடா

தவர்களும், கன்றுகளையும், பசுக்களையும் அடிக்கிறவர்களும், ஆகிய வர்கள் அதிகரித்த கொலைப்பாதகங்களைச் செய்கின்ற தாழ்ந்தகு லத்திற்பிறப்பார்கள். [எ—று] 19

384

அப்பான்மையி னந்தண னாகி யமர்ந்த நீயும்
ஒப்பாரு மிலாயருள் கூர்பசு வொன்றை யுள்ளாய்
கைப்பா லுணவுந் தருவாய் சிறு கன்றுணவே
தப்பாது வருத்தி மறுத்தமு தத்தை யுண்டாய்.

(இ—ள்) ஆகையால் சமானம் இல்லாத பிராமணனாயுள்ள நீயும் ஒரு பசுவை வைத்துக்காத்து வந்தாய். கன்றுக்குப்பால் விடாமல் கறந்து அப்பாலை உண்டுவந்தாய். (எ—று) 20

385

அவ்வாவை யொறுத்தலின் வேடுவ னாகி வந்தாய்
தவ்வாது பரித்தலின் மன்னு தவத்தை யுற்றாய்
வெளவாது புனிற்றை மறுத்தலின் மைந்த னின்றாம்
இவ்வாறான தாழ்வினை யென்றன னிச்சை வென்றான்.

(இ—ள்) அப்பசுவைச் சரியாகக்காப்பாற்றாததாலும், கன்றுக்குப்போதுமான பால்விடாமலும் செய்துவந்தாய், அதனால் வேடர் குலத்திற்பிறந்தாய் புத்திரன் இல்லாமலும் இருக்கின்றாய், இப்படி உன் தாழ்வினையிருக்கிறதென்று, ஆசையை நீக்கின நாரதமகா முனிவர் சொன்னார். (எ—று) 21

386

முனிவாசக நெஞ்சு ணிறைத்து முரண்கை வேடன்
கனிவாயிரு தாண்மிசை நீர்பொழி கண்கள் சூடி
யினிவாழ்வகை யாதென வேசொ லிரந்து கூறப்
பனிவாண்மதி சேகர னுண்மை பரிந்து சொல்வான்.

(இ—ள்) இவ்வாறு நாரதமகாமுனிவர் சொன்ன வார்த்தையை மனத்திற்கொண்டு, பலம்பொருந்தியவேடன், அன்போடு அவர்பா தங்களில் வீழ்ந்து, நீர்நிறைந்த கண்களை அவர் பாதத்தில் ஒற்றிக் கொண்டு, இனிமேல் நான் வாழும் வகையாது என்றுபிரார்த்திக்க, குளிர்ந்த ஒளிபொருந்திய சந்திரனை தரித்த சிவபெருமானது உண் மையைக் கூறுவாராயினர். (எ—று) 22

387

வடகாசியி னின்றிம யாசல வல்லி யெய்திக்
கடகாபர ணஞ்செறி கின்ற கரங்க ளாலே
நடகாரணி னைப்பர விச்சிவ ஞான யோகந்
திடகால மிருந்த பெருந்தவ தெய்வ பூமி.

(இ-ள்) வடக்கிலுள்ள காசியிலிருந்து, பார்வதி தன்னுடைய இரத்தின வளையல்கள் பொருந்தியிருக்கின்ற கைகளினால், திருநடனஞ் செய்தருளும் சிவபிரானை வழிபட்டு பெருந்தவத்தைச்செய்து சிலகாலம், சிவஞானயோகத்திலிருந்ததாகிய தெய்வத்தன்மை பொருந்திய பூமியாகும். (எ-று) 23

388

தென்பூதல நீடு திராவிட சேர தேயம்
பொன்பூவுறை யுங்குட கொங்கமர் பொற்பி லூடு
மின்பூணணி தங்கிய பாரதி வேத வோதை
யின்பூரமு தம்பொழி புக்கொளி யென்னு மூதூர்

(இ-ள்) இதுவே தெற்குத்திக்கிலுள்ள சேரதேசமாகிய திராவிடநாடும், இலக்குமி வசிக்கின்ற கொங்குநாடுமாகும் அதில்பிரகாசிக்கின்ற ஆபரணங்களை அணிந்த சரஸ்வதியின்வேதமாகிய சுவையுள்ள அமிர்தம் எங்கும் பரவி யிருக்கின்ற திருப்புக்கொளியூர் என்கிற பழமையான ஊரானது (எ-று) 24

389

கந்தார்கரி யன்றுரி செய்தருள் காசி நாதன்
மந்தாகினி தங்கிய வாரண வாசி நாதன்
செந்தாமரை யந்தணர் கோனுப தேசி நாத
னந்தாத பரஞ்சுட ரம்மவி நாசி நாதன்

(இ-ள்)முற்காலத்தில் கட்டுத்தறியை முறிக்கின்ற யானையை உரித்துப் போர்த்தருளிய காசிநாதனும், கங்கைதங்கிய வாரணவாசிநாதனும், சிவந்த தாமரையிலுள்ளபிரமதேவருக்கு உபதேசிக்கும் நாதனும், குறையாத மேலான சுடரொளியாகிய அவிநாசிநாதனும் (எ-று) 25

390

காதற்கரு ணீலிய மிர்து கரந்த பாகன்
போதற்புத நாடக மார்பத புண்ட ரீகன்
மேதக்க சதாசிவன் மேவிய வில்வக் கான
மாதத்துவ யோகியர் மாதவர் வைகு தானம்,

[இ-ள்] அன்புள்ள கருணையைச்செல்வியைப்பாகத்தில்வைத்தநாத னும். அற்புததிருநடனத்தைச் செய்தருள்கின்ற செந்தாமரைமலர் போன்றபாதங்களையுடையநாதனுமாகியசதாசிவன் அமர்கின்ற இட மாயுள்ளது. அதுவே பெரியதவத்தைச் செய்கின்ற யோகிகளும் தவசிகளும் தங்கியிருக்கின்ற வில்வ வனமும் ஆகும்.(எ-று) 26

391

நாடிக்கடி தேகிய தன்புற நண்ணியே நீ
தேடிக்கொணர் தேனுவொ ரைந்திரு சேர்வை கோலிப்
பாடிக்கவ ருங்குட மேநிறை பால்கை யார
நீடிச்சிவ னுடிய வேலை நினைந்து பேணி.

(இ-ள்) அத்தலத்தை நாடி விரைந்து சென்று, அதன் பக்கத் திலிருந்து, பத்துப் பசுக்களைக்கொண்டு வந்துகாத்து அவைகள் கறக்கின்ற பாலைக் குடங்களில் நிறைத்துச் சிவபெருமானுக்கு அபிஷேகம் பண்ணவேண்டிய காலங்களில் அபிஷேகம் செய்து (எ-று) 27

392

வந்தித்தொரு திங்கண் மெலிந்துப வாசமா யே
கந்தத்தொடு சாக பலன்கொள் கடன்க ளாகிப்
பந்தப்பணி யில்வகை மூவகைப் பத்து நாளி
னந்தத்தம ராணிரை யைப்புன லாடல் செய்து.

(இ-ள்) சிவ பெருமானை வணங்கி, ஒரு மாத காலம் உபவாச மாயிருந்து காய்கனி கிழங்கு முதலியவைகளை உண்ணும் நியமத் தை மேற்கொண்டு, கட்டுப்பட்ட இத்திருத்தொண்டை முப்பது நாளும் செய்து முப்பதாம் நாளில் பசுக்கூட்டங்களை நீரில் முழுகச் செய்து (எ-று) 28

393

புதுவேரி யலங்கல் புனைந்து பொலன் பரர்வி
முதுவேனில் பிறங்கம வாசியின் முன்னு காலை
விதுவார்சடை யெம்முடை யானெதிர் வேட்கை கூர்ந்து
சதுர்வேத பராயணர் பாலுகு தாரை யீந்து.

(இ-ள்) தேன் பொருந்திய மலர்மாலையைச் சூட்டி, முதுவே னிற் காலமாகிய சித்திரைமாதத்து அமாவாசை காலையில் பிறைச் சந்திரனைத் தரித்த சடையையுடைய எம்பிரான் சந்நிதியின் முன், அன்புமிகுந்து, நான்கு வேதங்களையும் உணர்ந்த பிராமணர்களுக் குத்தாரை வார்த்துக் கொடுத்து (எ-று) 29

394

முன்புக்கொளி யாது பணிந்தெழ மூலகாசித்
தென்புக்கொளி மாநகர் மேவிய தேவ தேவன்
என்புக்கொளி யாமணி மார்புடை யெம்பிரா னின்
னன்புக்கொளி யாவர மீகுவ னைய மின்றால்.

(இ-ள்) சிவபெருமான் சந்நிதியை அடைந்து, வணங்கித்துதித்து எழுந்தால் காசியின் அடியிலிருந்து வேர்கிளைத்து அழகிய தெற்கிலுள்ள புக்கொளியூரிற் கொழுந்தாகி எழுந்தருளியிருக்கின்ற தேவர்களுக்குத் தலைவராகிய அழகிய மார்பில் என்பு மாலையை அணிந்த சிவபெருமான், உன்னுடைய அன்புக்கு ஒளியாமல் இரங்கி உனக்கு வேண்டிய வரங்களைக் கொடுப்பார். இதற்குச்சந்தேகம் இல்லை. (எ-று) 30

395

என்றேற்திரு வாய்மை புகன்றுள மின்ப மூற
நின்றேறசிலை யாளியை யேக நினைந்த பின்னர்ச்
சென்றேற வகன்றனன் மேதகு தீர்த்த வாச
நன்றேறபொலி வாகிய நாரத ஞான பானு.

(இ-ள்) என்றுமேன்மையுள்ள தீர்த்தயாத்திரைகளையும், தலயாத்திரைகளையும் செய்து ஞானசூரியனாக விளங்குகின்ற நாரத மகாமுனிவர் மனதுக்கு இன்பமுண்டாகச் சொல்லிக் கைலைக்குப் போவதாகப்போய்விட்டார். (எ-று) 31

396

வேறு

வில்லை யேந்தலா லம்பு விரவலால்
வல்ல கோனைத் தடிந்து மருவலால்
வெல்லும் வாகை வியாத னெனும்புயல்
செல்லு மோனகயிற் றென்றிசை யேகுமால்.

இச்செய்யுள் வேடனுக்கும் மேகத்துக்கும் உருவகம்.

(இ-ள்) பகைவர்களை வெல்லும் வெற்றியையுள்ள வியாதன் என்கிற மேகமானது இந்திரவில்லைத் தன்னிடத்துக்கொண்டிருத்தலாலும், வேடனும் வில்லைத்தாங்கியிருத்தலாலும், வலிய கிரகங்களை மறைத்திருத்தலாலும், வலிய குற்றம் செய்கிற மிருகங்களைக்கொன்று தங்குதலாலும் மேகமானது அம்பு என்னும் பெருள்ளநீர்த்துளிகளைத் தாவுதலாலும், வேடனும் அம்பு என்னும் பாணங்களை விடுதலாலும், வியாதன் என்கிற மேகமானது போகவேண்டும் என்ற பெருவிருப்

பத்தோடு தென் திசைக்குச் செல்லத்தொடங்கிற்று. இது உருவக வணி. (எ—று) 32

397

கான கம்புனல் கற்சுர நற்சரி
யான துஞ்சில நாள்சென் றகன்றுபூந்
தேன வாவுந் திருவவி நாசியா
ஞான மாதவ பூமியை நண்ணினான்.

(இ-ள்) காடுகளும், நதிகளும், கற்களுள்ள வழிகளும், பாலைவனங்களும், நல்லவழிகளும் ஆகிய இவைகளையெல்லாம் கடந்து, தேன் பொருந்திய சோலைகள் சூழ்ந்த திருஅவிநாசியாகிய, பெரிய தவத்தையுடைய ஞான பூமியை அடைந்தான். (எ—று) 33

398

சூழ்ந்த வேடரும் தூய வியாதனும்
பாழ்ந் திரோதப் பரவை கடந்துசீர்
வாழ்ந்த மாமணிக் கோபுர வாயின்முன்
தாழ்ந்து சென்னி தரைப்படப் போற்றினான்.

(இ-ள்) மனத்தூய்மையடைந்த வியாதனும் அவனைத்தொடர்ந்துவந்த வேடர்களும் வீணான மயக்கமாகிய சமுத்திரத்தைத்தாண்டி சிறப்புப்பெற்ற நிலையான பெரியஅழகிய கோபுரவாயிலுக்கு முன்னே சென்று சிரசு முதலிய உறுப்புக்கள் தரையில் படும்படி வணங்கினார்கள், (எ—று) 34

399

முழவு வானுற மூவகை யாமமும்
விழவ றாமணி வீதி மருங்கரின்
அழக தாகப் புகலிட மாக்கியே
பழக வைகினன் பத்தியின் பான்மையான்.

(இ-ள்) காலை, பகல், மாலை என்று மூன்று காலங்களிலும் உத்ஸவத்தின் பேரிகைச்சப்தம் வானுற முழங்கும், திருவீதியின் பக்கத்தில் தாங்கள் தங்கியிருத்தற்கு ஓர்இடத்தை நிலைபெறச்செய்து அதில் கடவுளைப்பத்தி செய்து தங்கி வந்தார்கள். (எ—று) 35

400

சுரிய வாவுங் கபிலமுங் கன்றுடன்
உரிய செல்வர்க ணெண்பொருள் போக்கியே
தெரிய வேற்றுத றெக்கணை யாக்கொணர்ந்
தரிய தூறு மறலு மருத்தினான்.

(இ-ள்) யானைகளும் விரும்பும் கபிலை என்னும் பசுக்களையும், கன்றுகளையும் பொருள் கொடுத்து வாங்கி அவைகளுக்கு அருமையான பசும்புற்களையுண்பித்து நல்ல நீரையும் பருகும்படி செய்தான், (எ—று) 36

401

மீக்கி ளர்ந்துள மீனக் குருவினில்
நீக்க மில்புன லாடிவெண் ணீறணிந்
தாக்கு லங்குழ லோசையி லன்புறத்
தேக்கு கன்றுணுஞ் சேடம் பிலிற்றியே.

(இ-ள்) மனம் மிகமகிழ்ந்து பங்குனி மாதத்தில் ஸ்நானம் செய்து, வெண்மையான திருவெண்ணீற்றையணிந்து, புல்வாங்குழலினது சப்தத்தால் பசுக்கூட்டங்கள் அன்புகொள்ள நிறைந்த கன்றுகள் உண்டபிறகு மடியைக்கழுவிக் கறந்து (எ—று) 37

402

தங்கு பாற்கட மேந்து தடநெடுஞ்
செங்கை யான்சிவ வேதியர் கைக்கொடுத்
தங்க ளுதனுக் காட்டுவித் தாதரம்
பொங்க வேமக வின்மை புலம்புவான்.

(இ—ள்) பெரிய நீண்ட கையினாலே பாற்குடத்தை எடுத்துக்கொண்டு சிவபெருமானுக்கு அபிஷேகம் பண்ணச்செய்து, அன்பு அதிகரிக்க, புத்திரனில்லாத குறையைச் சொல்லித் துதிப்பான் ஆயினன் (எ—று) 38

403

இந்த வாறொரு திங்க ளியற்றியே
யந்த மார்சித் திரையம வாசியி
னுந்து காலையிற் கன்று வொருபதுஞ்
சிந்து ராகமத் தெண்புன லாட்டினான்.

(இ—ள்) இவ்விதம் ஒருமாதகாலம், செய்து அதன் முடிவாகிய சித்திரை மாதத்து அமாவாசையில் காலை நேரத்தில், கன்றுகளோடு கூடிய பத்துப் பசுக்களையும் ஆற்றில் குளிப்பாட்டினான். (எ—று). 39

404

காலி லங்கண் பரிபுரங் கற்புர
மேலி லங்கு வியன்றுகில் வெள்விரி
யா லுங் கிண்கிணி கண்டத் தசைதர
நா லுஞ் குடிகை நீனுதல் நல்கவே.

[இ-ள்] காலில் சப்திக்கிற சிலம்புகளை அணிந்து, மேலே வெண்மையான வஸ்திரத்தைப் போர்த்து சப்திக்கிற சலங்கைகளைக் கழுத்தில் அணிந்து அசைய நீண்ட நெற்றிச்சுட்டியை நெற்றியிற்கட்டி. [எ-று] 40

405

கோட்டிற் றூங்கு கவரி குலாவுறத்
தோட்டிற் ற்மந் துதைந்து துயல்வரத்
தீட்டு சந்தத் திலதமிட் டண்ணலான்
வாட்ட மின்று திருமுன் வரல் செய்து.

[இ-ள்] பசுக்களின் இரண்டு கொம்புகளிலும் குஞ்சங்களைக் கட்டி மலர்மாலைகளையும் அணிவித்துவாசனையுள்ள கலவைச்சந்தனத்தால் பொட்டும் இட்டு பெருமை பொருந்திய பசுக்களை, சுவாமி சந்நிதிக்கு முன் கொண்டு வரும்படி செய்து [எ-று] 41

406

கேட லாநற் கிரியை நிகழ்த்தியே
பாடல் வேய்ங்குழல் பாங்கரிற் பண்பெற
வாடல் சேர்புனிற் றன்பு விளைத்தலுங்
கோடல் வேய்ந்த குயம்பிழிந் தேந்தினான்,

[இ-ள்] கெடுதல் இல்லாத நல்ல உபசாரத்தைச் செய்து, இசையை வெளிப்படுத்துகிற புல்லாங்குழல் ஓசையால் பசுக்களுக்குப் புதிய அன்பை உண்டாகும்படி செய்து, சுரக்கின்ற முலைக்காம்பிலிருந்து கறந்து அதைத்தாங்கினான் [எ-று] 42

407

செம்பொ னின்குடந் தேங்குங் குழுறொலி
பம்பு கின்ற பயனுரை பொங்கியே
வெம்பு காலையின் மெய்யெழுத் தஞ்சினு
லெம்பி ரான்முடிக் கேற்றுவித் தேத்தினான்.

[இ-ள்] அப்படிக்கறந்த பாலைச் செம்பொன்னாலாகிய குடங்களில் ஒலியோடுமிகுகின்ற நுரை அடங்கியபின் உண்மையான திரு ஐந்தெழுத்தை ஓதிச் சிவாசசாரியார்களைக்கொண்டு அபிஷேகம் செய்வித்தான். [எ-று[ 43

408

வெய்ய னேன்வினை யேன்விற லாளனேன்
பொய்ய னேன்சுத ரின்மை பொறுப்பதோ
செய்ய னேநற் றிருவவி நாசிவாழ்
ஐய னேசிவ தாவென் றரற்றினான்.

[இ-ள்] கொடியவன் தீவினையைச் செய்தவன் இரக்கமில்லாதவன், பொய்யன், இவன் என்று எண்ணி எனக்குப் புத்திரனில்லாமற் செய்தனையோ, செவந்த நிறம் உள்ளவனே திரு அவிநாசி என்னுந் தலத்தில் வாழுகின்ற தலைவனே, சிவபெருமானே என்று தோத்திரங்கள் செய்தான். [எ—று] 44

## 409

கண்ப டும்புனல் வெள்ளக் கலுழியும்
புண்ப டும்புலன் புந்தியு மாகியே
தண்ப டும்புதல் வோரைத் தருதியென்
றெண்ப டுங்குறை யெல்லா மியம்பினான்.

[இ—ள்] கண்களிலிருந்து வெள்ளம்போல் ஆனந்த நீர்த்துளிகள் சிந்தவும், புண்பட்ட மனமும் புத்தியும் உடையவன் ஆகி, சாந்த குணமுள்ள நல்ல புதல்வர்களைத்தருவாய் என்று தன்னுடைய குறைகளை யெல்லாம் சொல்லித் தோத்திரங்கள் செய்தான். [எ—று] 45

## 410

அன்ன தன்பி னருமறை வாணரி
னன்னர் மேவிய நல்குர வாளரை
முன்ன ராக்கி முறைமுறை கோவெலா
மன்னு தாரை வழங்கினன் வாழ்குவான்.

[இ—ள்] பின் அவ்வியாதன் வேதங்களை நன்றாய் உணர்ந்த வறுமையுற்ற பிராமணர்களைச் சந்நிதி முன்னே நிறுத்தி, ஒவ்வொரு பிராமணருக்கும் ஒரு கன்றோடு கூடிய பசுவைத் தாரை வார்த்துத் தானமாகக் கொடுத்தான். [எ—று] 46

## 411

அன்றி ராவினி லாணவச் சேனையை
வென்று கண்ட வியாதன் றுயிறலு
மன்று ளுதன் மழுவுடன் மானிளங்
கன்று மாகக் கனவிடைத் தோன்றினான்.

[இ—ள்] ஆணவக்கூட்டத்தை அடக்கி அறிவடைந்த வியாதன் அன்றிரவு தூங்கினபின் கனகசபையில் திருநிருத்தம் செய்தருளுகின்ற சிவபெருமான், மழுவையும் மான்கன்றையுந்தரித்த கையுடன் அவன் கனவில் தோன்றினார். [எ—று] 47

412

மேவருந்தவ வேடமெய் வேடனே
நீவருந்தலை நின்குலப் பாரிகண்
மூவருஞ் சுதர் மூவரை யேபெற
மாவரந் தனைநல் கினம் வாழியே.

[இ—ள்] மற்றவர்கள் செய்யமுடியாத மேன்மையான தவத்தைச் செய்த வேடனே நீ வருந்தாதே, உன்னுடைய குலஸ்திரீகளான மனைவியர்கள் மூவரும், மூன்று மேன்மையான புதல்வர்களைப் பெற, சிறந்த வரத்தை நாம் கொடுத்தோம். [எ—று] 48

413

ஆளவங் கவர்நாம மறைதல்கேள்
காள கண்டனுங் கார்விட கண்டனுங்
கோளகன் றகுண நீல கண்டனும்
வேளமர்ந்திடு மேலென மேவுவார்.

[இ—ள்] அவர்களுக்கு, காளகண்டன் என்றும், [கரிய] விடகண்டன் என்றும், குற்றம நீங்கின நீலகண்டன் என்றும் பெயரிடுவாய், அவர்கள் பிற்காலத்தில் மன்மதனைப்போல் விளங்குவார்கள் என்று சொல்லி [எ—று] 49

414

காமி யங்கள் வழங்கிடு காணியாம்
பூமி யாளப்புகு வித்ததன் பினர்
யாமி யங்கிடு புக்கொளி யெய்துவீர்
போமி னென்றனன் புண்ணிய நாயகன்.

[இ—ள்] அவர்களுக்கு சுகத்தைக்கொடுக்கின்ற காணியாகியபூமியை ஆளும்படி கொடுத்து அதன்பின் நீங்களெல்லாரும், நாம் இருக்கின்ற திருப்புக்கொளியூர் அவிநாசியை அடையுங்கள். இப்பொழுது உங்கள் ஊருக்குச் செல்லுங்கள் என்று புண்ணியத்துக்குத் தலைவராகிய சிவபெருமான் கூறினார். [எ—று] 50

415

காலை துஞ்ச லொழிந்தருட் கானவன்
சோலை நீழலுந் தொன்னெடும் பொய்கையு
நூலை யாய்பவர் நோற்குந் தவங்களுஞ்
சாலை வேள்வியுஞ் சந்தியுந் தானமும்.

(இ-ள்) சிவபெருமான் அருளைப்பெற்ற வியாதன், காலையில் நித்திரையை விட்டு நீங்கி சோலையின் நிழலையும் பழமையுள்ள விசாலமான பொய்கையையும் தவச்சாலைகளையும், வேள்விச்சாலைகளையும் [எ-று] 51

## 416

தோர ணங்கிளர் தூய்மணி வீதியும்
மார ணங்கிளரா டலும்பா டலும்
பூர ணங்கொள் புனற்பெய குடங்களுஞ்
சீர ணங்குவிழா வணிசே வையும்.

[இ—ள்] தோரணங்கள் கட்டிய அழகியவீதிகளையும், வேதங்களை ஓதும் இடங்களையும் ஆடல் பாடல் செய்கின்ற இடங்களையும், சிறப்பாக நடக்கின்ற திருவிழாக்களையும் [எ—று] 52

## 417

கன்னி மாடங் கமழ்நறுந் தாமமு
மின்ன தாமணி வீணை யிசைத்தலும்
பன்னி மார்விர கம்பயில் பான்மையு
மன்ன தான வரவொலி யார்வமும்.

[இ—ள்] கன்னிமாடங்களில் மணம் கமழும் மாலைகளையணிந்து பெண்கள்வீணை வாசித்தலையும், அன்னதானம் செய்கின்ற இடங்களில் உண்டாகிய சப்தங்களையும் (எ-று) 53

## 418

கண்டு கேட்ட றிந் துள்ளங் கனிந்துதான்
றொண்டர் மேவுந் தொகுதி வணங்கிநேர்
எண்டி சாமுக மேயபொற் கோபுரங்
கொண்ட வாய்த லிறைஞ்சிக் குவிகையால்.

(இ—ள்) கண்டும் கேட்டும் அறிந்து, மனங்கனிந்து, தொண்டர் கூட்டங்களையும் வணங்கி, எட்டுத்திக்குகளில் உள்ள கோபுரங்களையும் பணிந்து, (எ—று) 54

## 419

நீட ரீக மகன்றெதிர் நின்றுவிண்
ணோட ராதரித் தேத்திய நண்பனை
யாட ரவணி யற்புதக் கூத்தனை
வேட ராசன் விடைகொடு போதுவான்.

[இ-ள்] அதிகமான ஆசை நீங்கி சன்னிதிமுன்னே நின்று தேவலோகத்திலுள்ள தேவர்கள் விரும்பித்துதிக்கின்ற கடவுளும் ஆடுகின்ற சர்ப்பத்தை அணிந்து ஆச்சரியமான நிர்த்தனத்தைச் செய்பவனும் ஆகிய அவிநாசிநாதனிடத்தில் வேடராஜனான வியாதன் உத்தரவு பெற்றுக்கொண்டு அப்பதியை நீங்கி [எ-று] 55

## 420

தொண்ட கத்துடி போதை துரந்தெழ
விண்டு கைப்படு வேயிசை யார்ப்பவான்
கொண்ட லொத்த குலமுறை வேடுவன்
மண்ட லத்திசை யாத்திரை மல்கினன்.

[இ-ள்] வேடர்குலத்திற் பிறந்த வியாதன் மேகத்தையொத்த தொண்டகம் என்னும் வாத்தியத்தின் ஒலிமுழங்கவும், புல்லாங்குழலினுடைய சப்தம் சப்திக்கவும், பூமியில் யாத்திரை செய்யத் தொடங்கினன் [எ-று] 56

## 421

மாந்த ரீதல் பிறர்பொருள் வெஃகுறன்
போந்த தாரியி னுள்சில போக்கினன்
வேந்த னான வியாத வரோதயன்
ஏந்து சீரெயின் மாளவ மெய்தினன்.

[இ-ள்] பிறர் தனக்குக் கொடுக்கும் பொருளை விரும்பாமல், வழியிலுள்ள தலங்களையெல்லாம் தெரிசித்துப் பலநாள் சென்றபின், வேடர்தலைவனாகிய வியாதன் சிறந்த மதில்களையுடைய மாளவதேயத்தை அடைந்தான் [எ-று] 57

## 422

பம்பை பேரி பதலை துவைத்தெழக்
கொம்பர் தாரை குமுறிட வீதிவாய்
உம்பர் வாசி கவிகை யுலாவுடன்
றம்ப மாமணி மாளிகை சார்ந்தனன்.

[இ-ள்] பம்பை, பேரி, பதலை, கொம்பு, தாரை முதலிய வாத்தியங்கள் முழங்க, மேலான குதிரைகள் குடைகள் முதலிய வைபவங்களுடன் வேடர்கள் எதிர்கொண்டழைக்க அழகான தூண்களைஉடைய தனது மாளிகையை அடைந்தான் [எ-று] 58

423

விற்புரூரக் கணைவிழி மெல்லியற்
கற்பின் மாதர்கண் மூவருங் காதலன்
பொற்பினீடு புனைகழல் போற்றிசின்
நிற்ப மூறுமெழு கடலொன் றினார்.

(இ-ள்) வில்லை யொத்த புருவமும், அம்புகளை யொத்த கண்களும் உடைய மெல்லிய தன்மையையும் கற்பையும் உடைய அந்த மூன்று மனைவிகளும், கணவனுடைய அழகாகிய சப்திக்கின்ற வீரக் கழலை யணிந்த பாதங்களை வணங்கி இன்பமாகிய கடலில் மூழ்கினார்கள் (எ-று) 59

424

நம்பினோருங் கிளைஞரு நாடரும்
இம்ப ரியாவரும் வாழ்த்தெடுத் தேத்தினர்
செம்பொ னூசல மென்னத் திகழ்ந்தொளிர்
தம்ப நீவரச் செய்துந் தவமெனா.

(இ-ள்) அடைந்தஉடன், வியாதனுக்கு, சுற்றத்தாரும், சினேகிதர்களும், அவ்வூரிலுள்ளவர்களும்கூடி, மகாமேருமலையைப்போலநீ பிரகாசிப்பாய், நீவருதற்குயாங்களெல்லாம் என்ன தவம் செய்தோம் என்று வாழ்த்தித்துதித்தார்கள் (எ-று) 60

425

ஈது பான்மை யியங்குறு காலையின்
மூதின் மாதர் முறைதவி ராவகை
கோது தீரக் குயிற்றிய சேக்கையின்
மீது காமம் விளைத்து முயங்கினன்.

(இ-ள்) இந்தவிதமான வைபவத்தோடு இருக்கிறகாலத்தில் பழமையாயுள்ள பத்தினிகள் மூவருடனும் குற்றம் நீங்கிய பள்ளி அறையை அடைந்து அவர்களோடு வியாதன் சேர்ந்திருந்தான் (எ-று) 61

426

புந்தி யாகம் புலன்பொறி யாகிய
வந்த மாதி யழிவுறு காலையில்
எந்தை சீரரு ளாலிள நாரியர்
உந்தி யூடு கருப்ப முதித்தவே.

(இ-ள்) சரீரம். மனம், ஐம்புலன்கள், ஐம்பொறியாகிய எல்லாம் நின்றி வாழ்ந்துகொண்டிருக்கும் காலத்தில், எம்சிவபெருமான் அருளால் இளமைப்பருவத்தையுடைய மனைவியர்களிடத்தில் கருப்பம் உண்டாயிற்று [எ-று]

ஐம்பொறி மெய், வாய், கண், மூக்கு, செவி,
ஐம்புலன்கள் சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம். 62

## 427

செங்கை கால்விளர்த் தானனந் தேம்புறக்
கொங்கை வாய்கறுத் தங்கங் குழையவாய்
பொங்கு தாகம் புகைமட் சுவைபெறத்
திங்க ளீரைந் தறுதியுஞ் சேறலும்.

(இ-ள்) சிவந்தகைகால்கள் வெளுப்படைந்து, முகம் வாட்டம் அடைய, தனங்களின் காம்பு கறுத்து, சரீரம் தளர்ந்து, சாம்பல், செங்கல் முதலியவைகளைத் தின்னவிருப்பமுற்று தாகத்தையடைந்து இவ்வாறு பத்துமாதம் முடிந்தவுடன் (எ-று) 63

## 428

வேறு

காத லன்கண் களிபெற முன்னவள் காளகண் டனையீன் றாள்
பேத மின்றிய தனிவிடக் கண்டனைப் பின்னவள் பேறுற் றாள்
மாத வம்படர் நீலகண் டன்றனை மற்றவ டந்தா ளால்
வேத விஞ்சையர் பாவலர் காவலர் வேடுவர் மிகவார்த் தார்.

(இ-ள்) கணவனாகிய வியாதன் கண்கள் மகிழ்ச்சியையடைய மூத்தமனைவியானவள் காளகண்டனைப் பெற்றாள் இரண்டாம்மனைவி வித்தியாசமில்லாமல் விடக்கண்டனைப் பெற்றாள், மூன்றாம் மனைவி மிகுந்த தவத்தைச் செய்கின்ற நீலகண்டனைப் பெற்றாள் வேதத்தை யுணர்ந்த வித்தியாதரார்களும், பாவலர்களும், காவலர்களும், வேடுவர்களும் மிகுந்த சந்தோஷத்தினால் ஆரவாரித்தார்கள் (எ-று) 64

## 429

வெய்ய வாளியை நிறையவுண் டுமிழ்சிலை வேடுவர் குலதீ பன்
பெய்யு மாமுகி லென்னநின் றவரவர் பேற்றினந் தினமேற் பச்
செய்ய லாவன கடன்முடித் தலகெறி தேவராட் டுரியோர் தங்
கையி னுன்மயிற் கண்ணியுங் கவடியுங் காப்புமங் கணிவித்தான்.

(இ-ள்) கொடியபாணங்களை, மிகுதியாகத் தன்னிடத்திலிருந்து வெளியே செல்லும்படி பிரயோகிக்கின்ற வில்லையுடைய வேடுவர் குலங்களுக்குத் தலைவனாகிய தீபம்போல் விளங்குகின்ற வியாதன், அவர்அவர்களுக்குத்தக்கவாறு பெய்கின்ற மேகம்போலத் தினந்தோறும் வேண்டியபொருள்களைக் கொடுத்துச் செய்யவேண்டியகடன்களை முடித்து பக்தியோடு கடவுள் ஆவேசம் கொள்கிறவர்களுக்கு, மயிற்

பீலிகளையும். சங்குமணிகளையும், காப்புக்களையும் அணியும்படி செய்தான் (எ—று) 65

430

தந்தை யென்றொரு தற்பெயர் புணர்ந்தவெஞ் சமருடைச் சிலைவேந்தன்
கொந்து லாவுதண் குழலிய ரேந்திய குழவிக டமைநோக்கி
முந்து தாரக முனிபுகன் றருளிய முதுபதி யவிநாசி
யெந்தை காரணர் வருகவென் றெடுத்தணைத் தின்பவா ரிதியேய்ந் தான்.

(இ-ள்) கொடியயுத்தத்தில் வெல்லத்தக்கவில்லைக்கையிலேந்திய வியாதன் கொத்தாக மலர்களையணிந்த குளிர்ந்த கூந்தலையுடையதன் மனைவியர்கள் மூவரும் தன்னிடத்திற் கொடுத்த குழந்தைகளைப் பார்த்து, முன்னமே நாரதமுனிவரால் சொல்லியருளிய பழம்பதியாகிய அவிநாசியில் உள்ள சிவபெருமானது திருவருளால் பிறந்த குழந்தைகளே வாருங்கள் என்று கூறி அக்குழந்தைகளை எடுத்து அணைத்து சந்தோஷ சமுத்திரத்தில் மூழ்கினான் (எ—று) 66

431

யாண்டு சேறலுந் தளர்நடைப் பாலக ரியங்குமுக் குணமொத்தார்
வேண்டு மைந்தினிற் றெளிதகு மழலையில் விளங்குமுத் தமிழ்போன் றார்
மூண்ட பத்தினிற் றெருவிலை யாடலின் முச்சுடர் நிகரானார்
காண்ட கும்பதி னாறுடை வயதினிற் கடவுண்மூ வர்களன் னார்.

(இ—ள்) தவழும் பருவத்தையடைந்த பாலர்கள் மூவரும் ஒரு வருடம் முடிந்தவுடனே இராஜஸம், தாமசம், சாத்துவீகம் என்கிற மூன்று குணங்களையும் ஒத்து விளங்கினார்கள். மழலைச்சொல் தெளிந்து வருகின்ற ஐந்தாம் வயதில் விளங்குகின்ற இயல், இசை, நாடகம், என்கின்ற மூன்று தமிழையும் ஒத்து இருந்தார்கள் பத்தாம்வயதில், சந்திரன், சூரியன், அக்கினி என்கின்ற மூன்று சுடர்களையும் ஒத்திருந்தார்கள் மேலான பதினாறுவயதை யடைந்த காலத்தில் பார்க்கக்கூடியபிரமதேவர் திருமால், உருத்திரர் என்கின்ற மூன்று மூர்த்திகளையும் ஒத்துவிளங்கினார்கள் (எ-று) 67

432

தேங்கு சீர்பொலி செல்வமு மேன்மையுஞ் செவ்வியு மினிதாய
பாங்கு மாண்மையும் பலகலை யறிவுமார் பாலகர்க் குயர்தந்தை
கோங்கி னாண்முகைக் கோமளக் குவிமுலைக் குலமக ளிரைநேடி
வாங்கு பேரொளி மணிமுர சார்த்தெழ மணவணி மலிவித்தான்.

(இ-ள்) மிகுந்த கீர்த்தியோடு விளங்குகின்ற செல்வமும், பெருமையும், அழகும் இனிமையான பலநற்குணங்களும், பற்பலகலைகளை

யும் அறிந்த அறிவும்உள்ள குமாரர்களுக்குத் தந்தையாகிய வியாதன், கோங்குஅரும்புகளையொத்த அழகிய குவிந்த தனங்களையுடைய தங்கள் குலத்திற் பிறந்த பெண்களைத்தேடி, மிகுந்த சப்தத்தையுடைய அழகிய பேரிகைகள் முதலிய சகலவாத்தியங்களும் சப்திக்க திருமணங்களை மிகவும் சிறப்பாகச்செய்து வைத்தான் (எ—று) 68

## 433

கருமர் கைவலர் கடிநகர் குடியிறை கவின்பொருள் பரிசேனை
யொருமை பன்மைக ளுள்ளன வில்லன வுளவென வின்றுங்கி
யிருமை சேர்பெயர் மூவர்கள் கண்டரென் றெங்கணும் புகழோங்கத்
தரும வாழ்வெனத் தவநெறி விளைவயற் றலைபெறு நிலையென்ன.

(இ—ள்) கைத்தொழில்களில் வல்லவர்களையும், நகரையும், குடிகளையும், காத்தலிலும் வரிசைக்கிரமமாக வசூலித்தலிலும், பலவகையாகப் பொருளைச் சம்பாதித்தலிலும் யானை, குதிரை, தேர், காலாள் ஆகியவர்களை நடத்தலிலும் சிறிதும் குறைவென்பது இல்லாமல் பலவற்றிலும் திறமையுற்றவர்களாய் பெருமை பொருந்தியகாளகண்டன் விடகண்டன், நீலகண்டன் என்ற பெயரையுடைய மூவர்களும் கீர்த்தி அதிகரிக்க தருமத்தினுடைய வாழ்வென்று சொல்லும்படியும் தவமார்க்கம் விளைகின்ற மேன்மையானவயலென்று சொல்லும்படியும் விளங்கினார்கள் (எ—று) 69

## 434

மன்னு வேடுவ மரபினுக் கணிகல மணியென வறிஞோர்க்குப்
பொன்னி றைற்பொழி புயலென முயல்விதுப் புனைசிவ னடியார்க்குச்
சென்னி தாழ்த்தெழு வரையென வறிவினிற் றிரைக்கடலெனவாய்ப்பிற்
றன்னி னேர்பிறி தியாதென வியாதனுந் தனயரு முயர்நாளில்.

(இ—ள்) நிலைபெற்ற வேடர்கள் குலத்துக்கு, ஆபரணம் போலவும், தரித்திரர்களுக்குப் பொன்னைச்சொரிகின்ற மேகம்போலவும், முயற்கறைபொருந்திய சந்திரனை அணிந்த சடையையுடைய சிவபெருமான் அடியார்களுக்குத் தலைகுனிந்து எழுகின்ற மலையைப்போலவும், அறிவில் அலையையுடைய கடலைப்போலவும், எல்லாம் குறைவில்லாமல் பொருந்தியிருக்கும் நிலைமையில் தனக்குச்சமானம் உலகில் வேறொருவரும் இல்லை யென்று சொல்லும்படியாய் வியாதனும் அவனுடைய பிள்ளைகளும் மேன்மையை அடைந்து இருந்தார்கள் (எ—று) 70

435

விற்ற டங்கையான் விறன்முது கோளரி வியாதபுங் கவசிலன்
முற்ற வம்பயில் காசிவாழ் புக்கொளி முன்னவ னருளல்லான்
மற்ற றிந்திலான் மைந்தரை மகளிரை வளநகர் மனைவாழ்வைச்
சுற்ற மென்றுள தொகுதியை யிகழ்ந்தருந் துறவினின் மனம்வைத்தான்.

(இ-ள்) அப்படியிருக்கும் காலையில் பெரிய கையில் வில்லையேந்திய வெற்றியையுடைய வயது முதிர்ந்த சிங்கம் என்று சொல்லும்படியான மேன்மையுள்ள வியாதன் ஆனவன் முன்னேசெய்த தவத்தினால் காசித்தலத்தின் கொழுந்தாயெழுந்த திருப்புக்கொளியூர் என்னும் க்ஷேத்திரத்தில் வீற்றிருக்கும் சிவபெருமானுடைய கிருபையல்லாமல், வேறொன்றிலும் மனம் இல்லாதவனாய், புத்திரர்களையும், மனைவிமார்களையும், வளம்பொருந்திய நகரங்களையும், அரண்மனையையும் மற்றும் எல்லாவாழ்வுகளையும், சுற்றத்தார்களையும், பெரிதாக நினையாமல் அருமையான துறவு மார்க்கத்தில் மனம் வைத்தான். (எ-று) 71

436

வள்ளல் வாரண வாசியின் மேவிய வான்பொருள் கவரப்போங்
கள்ள மேவிய கானவ ஞானவன் கருவியு முளனாகி
யுள்ள மேவிய திருவருட் டுணையுட னுறங்குபஞ் சணைநீங்கி
நள்ளி ராவினின் மணிமதிண் மாளவ நகரிவிட் டயல்போந்தான்.

(இ-ள்) வாரணவாசியாகிய அவிநாசியில் அமர்ந்த வள்ளலாகிய ஒப்பற்ற பொருளாயுள்ள கடவுளைக் கவரச் செல்கின்ற கள்ளத்தன்மையுள்ள வியாதன் ஞானமாகிய வலிமைபொருந்திய ஆயுதத்தையும், தன்மனதில் பொருந்திய இறைவனது திருவருளாகிய துணையையும் கொண்டு படுத்திருந்த சயனத்தைவிட்டு நீங்கி, நடுராத்திரியில் எழுந்து, அழகிய மதில்களையுடைய மாளவதேச நகரத்தைவிட்டு வெளியில் வந்து சேர்ந்தான் (எ-று) 72

437

தென்ன ராகிய முன்னரே கியநெறி திவம்பல கடந்தேகி
யன்ன கேரள கொங்கினில் வடகுடக் கடர்வட பரிசார
மென்னு நாடணைந் திலகுபுக் கொளியெனு மிணையிலாத் தனிமூதூர்ப்
பொன்னி னீண்மதிட் கோபுரத் தூவியிற் பொலிவிடைக்கொடிகண்டான்

(இ-ள்) முன்னே சென்ற தெற்குத்திசைவழியாகப் பலநாள் சென்று பலதலங்களையும் கடந்து கேரளதேசமாகிய கொங்கு நாட்டின் வடமேற்கிலுள்ள வடபரிசாரம் என்னும் நாட்டைக்கடந்து,

விளங்குகின்ற திருப்புக்கொளியூர் என்கிற சமானமில்லாத பழைய ஊரில் அழகிய நீண்ட மதில்களையும் கோபுரங்களையும் அதன் உச்சியில் விளங்குகின்ற அழகான ரிஷபக்கொடியையுங் கண்டான் (எ—று) 73

438

ஆடுவன்குதி பாய்குவ னேய்குவ னர்த்திரு கைகொட்டிப்
பாடு வன்பத மண்டியிட் டெதிர்கொடு பணிகுவன் மணிதூங்கு
நீடு வன்சிலை வாங்குகை யோங்குகை நிலவுவன் லவுகிக
வேடு வன்றொழின் மாதவ முதுமையை மேவினும் விலகாவாம்.

(இ—ள்) கண்டவுடன் ஆனந்தத்தால் ஆடுவான், குதிப்பான், இரண்டுகைகளையும் கொட்டிக்கொண்டு பாடுவான், பாதத்தை மண்டியிட்டு வணங்குவான் மணியைக்கட்டிய நீண்டவில்லை வளைக்கின்ற கைகள் இரண்டும் சிரசின்மேல் ஏறிக்குவியும்படி கும்பிடுவான் லௌகீக வழியில் உள்ள வேடுவனது தவச்செய்கையானது முதுமைப்பருவம் அடைந்தபோதும் மாறவில்லை (எ—று) 74

439

திண்ட லத்துற வீழ்ந்தெழுந் தேழடி சேறலு மதுபான்மை
கொண்டு முற்றவுங் குறுகலு மறுகலர் கொன்றையஞ் சடையாளன்
மண்டு முச்சியங் காலபூ சனைபணி மாறிய திருச்சின்னங்
கொண்ட லொத்தவே டுவர்குல தீபகங் கேட்டுளங் குழைவுற்றான்

(இ—ள்) கெட்டியான பூமியில் விழுந்து ஏழ் அடி தூரம் நடந்து போய் சிவபிரான் முன் சென்றவுடன், அறுகையும், கொன்றை மலர்மாலையையும் அணிந்த அழகிய சடையையுடைய சிவபெருமானுடைய உச்சிக்கால பூசை சமயத்தில் ஊதுகின்ற திருச்சின்னங்களின் மேகம்போன்ற சப்தத்தையும், வேடுவர்குலத்துக்குத் தீபம் போல் விளங்குகின்ற வியாதன் கேட்டு மனம்இளகினான்(எ-று) 75

440

நீதி யாரண ரோதுமந் திரமலர் நீடுத லொழிகாறுங்
கோதி லாமணி குயிற்றிய காலிலைக் கோபுரப் புறமேனின்
றூதி நாயக னடியவ ரடியிணை யணிதுக ளொழியாது
பூதி மேனிதோய் புரள்வுறு பிதக்கணம் புரிந்துகா வணம்புக்கான்.

(இ—ள்) நீதியோடுகூடிய சிவாச்சாரியரால் மந்திரம்ஓதி அர்ச்சிக்கின்ற அர்ச்சனை முடிகிறவரையில், குற்றமில்லாமல் அழகாகச் செய்யப்பட்ட கால்களோடு பொருந்திய கோபுரத்துக்கு வெளியே

நின்று, ஆதிமுதல்வாகிய சிவபெருமானது அடியார்களுடைய பாததூளிகள் தன்மேனியிற் பொருந்தப் பூமியில் அங்கப்பிரதக்ஷிணம் செய்து மண்டபத்துக்குள் போனான் (எ—று) 76

## 441

பரிக லத்தொழிற் பரிசன ரெதிர்கொடு பண்டறி பழையானை
யுரிய சொற்களா லுபசரித் துறவினு முயரிய பெயராளு
ரரிய புக்கொளி யாளுடை நாயக னற்புத நடராசன்
சரிதை யைப்பெற வேடமு நீறுமாந் தன்மையிற் றலைநின்றான்.

(இ—ள்) திருக்கோயிலில் பணிசெய்து வருகின்றவர்கள் முன்னேயே தங்களுக்குத் தெரிந்த அந்த வியாதனைக்கண்டதும் எதிர்கொண்டு, தகுதியான வார்த்தைகளால் உபசரித்து உயர்ந்த நண்பர்கள் ஆனார்கள். அருமையான திருப்புக்கொளியூரில் உள்ள எல்லாரையும் அடிமையாகவுடையவரும், ஆச்சரியமான திருநடனத்தைச் செய்பவருமான சிவபெருமானுடைய திவ்யசரித்திரத்தைக் கேட்பதற்குத் தகுந்த விபூதி ருத்திராட்சங்களை யணிந்து சிவவேடத்தின் தலைமையாக விளங்கினான் (எ—று) 77

## 442

திரு மடைப்பளி யமுதடு சமிதைகள் செலுவன புகுவித்துப்
பெரு முடிக்கினி தாட்டிட வான்முலை பெய்த பால் கொணர்ந்தேற்றி
யிரு மணிப்பணி யாலயப் புறமெலா மிலகுசீ ரலகிட்டுப்
பொரு மெழுக்குமிட் டாலய மருங்கெலாம் புதுப்புனல் தெளிசெய்து.

(இ—ள்) திருமடைப்பள்ளியில் திரு அமுதை ஆக்குவதற்கு வேண்டிய விறகுகளையெல்லாம் கொடுத்து, சிவபெருமானது திருமுடியில் அபிஷேகம் செய்வதற்கு வேண்டிய பாலையும் கொடுத்து, அழகிய திருக்கோயிலுக்கு வெளியில் எல்லாம் (திருஅலகிட்டும்) கூட்டியும் தண்ணீரை எங்கும்தெளித்துச்சுத்தமாக்கியும் (எ-று)78

## 443

திவச காலையி லெழுந்தருள் வாகனத் திண்டிறற் றண்டேந்தித்
துவச வெண்குடைச் சோதிகொ டீபகந் தொழின்முறை முறைதாங்கிக்
கவச மாவனைந் தரவொலி வளர்த்திரு கையறை முரசோச்சி
நவச வுந்தரன் றிருவவி நாசிவாழ் நம்பனை வழிப்பட்டான்.

(இ—ள்) தினம்தோறும் விடியற்காலத்தில் எழுந்து, ரிஷபத்தோடு கூடிய வெள்ளித்தண்டத்தைப் பிடித்துக்கொண்டும்,கொடி குடை, பிரகாசமான தீபங்கள் முதலியவைகளைத் தாங்கிச் சென்

றும், பலபேர்கள் சூழும்படி பலதாம் அரஹர என்று சப்தம் செய்தும், இரண்டு கைகளினாலும் பேரிகையை அடித்து முழக்கியும் மேன்மையான திரு அவிநாசியில் வாழ்கின்ற அழகிய நம்பனாகிய கடவுளை வழிபட்டான் (எ—று) 79

444

இந்த வண்மையா லெயினர்சிந் தாமணி யாண்டொரு மூன்றெல்லை
சிந்தை யார்பணி செய்குவ தன்றியுஞ் சினகர வளர் தூவி
யந்த மாவது மைந்திதழ்க் கூவிளத் தறுதியுந் தரிசிக்குஞ்
சந்த மார்தரு விரதமு மாயினன் றளர்வுமா யினதன்றே.

(இ—ள்) இவ்விதமாக வேடர்களுக்குட் சிறந்தசிந்தாமணிக்குச் சமானமாகிய வியாதன் மூன்றுவருடங்கள்வரையில், அன்பு பொருந்திய மனத்துடன் வழிபட்டதும் அல்லாமல் தைப்பூச உத்ஸவத்தின் முடிவாகிய நாளில் ஐந்து இதழ்களையுடைய வில்வங்களினால் அருச்சனை செய்வித்து அதைத்தரிசிக்கும் விரதத்தையும் மேற்கொண்டான் அதனால் சரீரமும் தளர்ச்சியடைந்தது (எ—று) 80

445

மன்னு மந்தநாண் மகரபூ சம்புக மதிபதி சடையாளன்
மின்னு வெண்சுடர் வெள்ளிமால் விடைமிசை விஞ்சையர் முழவோதை
துன்னி யார்த்தெழத் தோகையர்நடம்வரத் தொண்டர்கண்டுளிசோர்ந்து
சென்னி யாற்றொழச் செழுமணி வீதியிற் றிருவுலாப் புறம்போந்தான்.

(இ—ள்) நிலைபெற்ற தைமாதத்தில் பூச நட்சத்திரத்தில் சந்திரன் பொருந்திய சடையையுடைய சிவபெருமான், வெண்மையான பிரகாசத்தையுடைய பெரிய ரிஷபவாகனத்தின்மேல் வித்தியாதரர்களுடைய வாத்தியங்களின் ஓசை மிகுதியாகச் சப்திக்கவும் அழகிய பெண்கள் நடனம் செய்யவும், தொண்டர்கள் கண்ணீர் சோரும்படி கைகளைச் சிரசின்மேற் குவித்துத் தொழவும், செழித்த அழகான வீதியில், திருவுலாக்காட்சி தந்தருளினார் (எ—று) 81

446

பத்தி வேடுவன் றற்பல பணியெலாம் பருவர லறியாமே
தத்தி யேபுரிந் தாடியும் பாடியுந் தாவியுந் தனிசோர்ந்து
புத்தி பூரண மடைவுற விழியிணை புடைசுழன் றுடனீங்கி
முத்தி நாயகன் மொய்கழற் சேவடி முண்டக நிழல் சேர்ந்தான்.

[இ—ள்] அப்போது பக்தியை உடைய வியாதன் தன்னுடைய சரீரத்தளர்ச்சியையும் கவனிக்காமல் ஆடியும் பாடியும் கூடவே சென்று சோர்வடைந்து இரண்டு விழிகளும்சுழன்று, புத்தியானது

கடவுளிடமே தங்கிப்பூரணத்தை யடையும்படி ஆவியானது உடலி லிருந்து நீங்கி, முத்திக்குத் தலைவனாகிய அவிநாசி அப்பரது வீரக் கழலை யணிந்த செந்தாமரைமலர் அடிகளின் நீழலை யடைந்தான் [எ—று] 82

447

விண்ணில் வானவர் விரைமலர் மாரியும் விதியுறு முனிவோர்கள்
கண்ணின் மாரியுங் காசினி மாந்தர்கள் கனகமா ரியுமார
மண்ணின் மீப்பொழிந் தணிவரக் குணதிசை மறுககன் றவிநாசி
யண்ண லாமெனை யாளுடை நாயகன் ஆலயத் தணைவுற்றான்.

[இ—ள்] உடனே தேவலோகத்திலுள்ள தேவர்கள் வாசனை யுள்ள மலர்மாரியைப் பொழிந்தார்கள். வேதவிதிப்படி நடக்கின்ற முனிவர்கள், ஆனந்தத்தால் கண்களிலிருந்து நீரை மாரிபோலச் சொரிந்தார்கள் இதைக்கண்ட மனிதர்கள் பொன்மாரி பொழிந் தார்கள் திரு அவிநாசியில் உள்ள என்னையாட்கொண்ட அண்ண லாகிய சிவபெருமான் வீதியைவிட்டு நீங்கி, திருக்கோயிலைச் சென் றடைந்தான் [எ—று] 83

448

என்று கூறிய நந்தியை வந்தனை யியல்சனற் குமரேச
னன்று நீபகர் ஞானபோ தகமெலா நனவிடைக் கவர்ந்தேன் போர்
வென்றி வேடரி லின்னமும் வான்கதி மேவின ரெவரென்னத்
துன்று பாதகச் சங்ககன் னன்பெறு தொல்கதி யுரைசெய்வான்.

[இ—ள்] என்று உரைத்தருளிய திருநந்தி தேவரைப்பார்த்து வணங்கி, சனற்குமாரர் தாங்கள் கூறிய உயர்ந்த ஞானத்தை விளை விக்கும். கதையை அறிந்தேன் போரில் வெற்றியையுடைய வேடு வர்களில் இதுபோல மேலானமுத்தியையடைந்தவர்கள்யாவரென் றுகேட்க, அதற்குப் பாதகம் பொருந்திய சங்ககன்னன் மேலான முத்தியையடைந்த கதையை நந்திதேவர் கூறுவாராயினர் [எ—று] 84

ஏழாவது வியாதச் சருக்கம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—448

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# சங்கசுன்னச் சருக்கம்

## 449

சனற்கு மாரரசை வாகமத் தலைவரே கேளிநலம்
புனற்கு மாரண வங்கிவிண் புகுந்தபுக் கொளியிற்
கனற்கு மாரனைக் கடவிய கண்ணுதல் பெருமை
பனற்கு மாரமு தாம்வினைப் பயன்களுந் தொலையும்.

[இ-ள்] வேதசிவாகமங்களையுணர்ந்த தலைவராகிய சனற்குமார முனிவரே கேட்பீராக தண்ணீரை உறிஞ்சுகின்ற அக்கினிச் சோதி புகுந்து ஒளித்துக்கொண்ட திருப்புக்கொளியூரில், நெற்றிக் கண்ணால் மன்மதனை எரித்தசிவபெருமானுடைய பெருமையானது சொல்லுதற்கு அமிர்தம் போல இனிமையாக உள்ளது. அல்லாமலும் நாம் செய்த தீவினையினுடைய பயன்களும் ஒழியும் [எ-று] 1

## 450

தேடி மாலயன் காணருந் தில்லையெம் பெருமான்
கோடி கோடிசெங் கதிரொளி குலாயகொள் கையினின்
ருடி யன்புகூர்ந் தருள்செய்பொன் னம்பலம் வகுத்த
கேடில் சிங்கவன் மாவளர் கெவுடபூ மியின்கண்.

(இ-ள்) மிகுந்த வளம் பொருந்திய கெவுடதேசத்தில் குற்றம் இல்லாத சிங்கவருமன் என்ற அரசன் ஒருவன் இருந்தான் அவன் பிரம விஷ்ணுக்களாலும் காணமுடியாத தில்லையின்கண்ணுள்ள சிவபெருமான் பல கோடி சூரியர்களது ஒளிவிளங்குகின்ற தன்மையோடு ஜீவர்களிடத்தில் அன்புமிகுந்து திரு நிருத்தம் செய்தருளும் சபையைப் பொன்னம்பலமாகச்செய்து கீர்த்தியோடு அரசாட்சி செய்துவந்தான் (எ-று) 2

## 451

நகர்களெம்மருங் குங்குடி நெருங்கிய நாப்ப
ணிகரில் பல்வகை வளங்களு நிவந்தெழில் விளங்கிச்
சிகர சாளரந் தெருத்தொறுந் திகழ்ந்துமல் கியசீ
ரகர மொன்றுள தக்கினி சாலையென் றதன்பேர்.

(இ-ள்) நகரங்கள் எவ்விடத்தும் குடிகள் நெருங்கியமத்தியில் ஒப்பில்லாத பலவகை வளப்பங்களும் உயர்ந்து, அழகாய் விளங்கி, உயர்ந்த மாடிகளின் சன்னல்கள் தெருக்கள் தோறும் நிறைந்து விளங்குகின்ற ஒரு அக்கிரகாரத்தை உண்டாக்கி அதற்கு அக்கினி சாலை யென்று பெயரிட்டான். (எ-று) 3

452

அந்த வண்மைசேர் கோத்திரத் தருமறைக் குலத்தி
னுந்து மீமிசை யரிதகோத் திரத்துளா னொருவன்
சந்தி யானமுந் தியானமுந் தவங்களுங் கிளர்ந்த
முந்து வேதநூற் கேள்வியும் வேள்வியு முயல்வான்.

(இ-ள்) அந்த வளம்பொருந்திய நகரத்தில், பிராமணகுலத்தி லே மேலான அரித கோத்திரத்திலே பிறந்த ஒரு பிராமணன், சந்தியாவந்தனம் தியானம் தவம், ஆகிய இவைகளைத் தவறாமற் செய்கின்றவனும், பழமையான வேதநூற் கேள்வியோடு யாகத் தையும் செய்கின்றவனுமாயிருந்தான் [எ-று] 4

453

துன்ப மென்னுநல் குரவினிற் றுவன்றிய காலந்
தென்பு லத்தவ ருணவுகூர் திவமெதிர்ந் தனுக
மின்பு ணர்த்திய மணிமுடி வேந்தரை யிரந்து
வன்ப ரப்பினுற் சிலபொருள் வருந்தியே கவர்ந்து.

(இ-ள்) துன்பத்துக்கிடமாகிய தரித்திரத்தால் அவன்வருந்து கிற காலத்தில் தெற்குத்திக்கிலுள்ளவர்களாகிய பிதுர்க்களுக்கு உணவு ஊட்டும் நாள் ஆகிய திவசம் வர, மின்னுகின்ற இரத்தின கிரீடத்தை அணிந்த அரசர் களிடத்திற் சென்று அவர்களை வேண் டியிரந்தும். கொடிய தரித்திரத்தினுற் சில பொருள்களைச் சிரமப் பட்டு வருந்திப்பெற்று வந்து (எ-று) 5

454

சாலி நுண்சிறு தண்டுலந் தன்னிகர் சூபம்
வாலி தாகிய சருக்கரை மறுவினெய் செழுந்தேன்
பாலின் வெண்டிரள் பத்திய பலாதிகண் முதலா
மேலி தம்பெற வுரியவை வேண்டுவ கொணர்ந்து,

(இ-ள்) செந்நெல் அரிசியும் பயறும், வெண்மையான சர்க்க ரையும், குற்றமில்லாத நெய்யும் நல்லதேனும், வெண்ணெயும், காய்களும், பழங்களும் முதலிய நன்மையாகவுள்ளபதார்த்தங்களைச் சேகரம் செய்துகொண்டு வந்து நிறைத்து (எ-று) 6

455

தூய தோர்கிர கத்தினிற் றுதைந்துகாப் புறுத்தி
யேய வந்தணர்க் காரமக் கதைகொடுத் தேகி
நாய கன்சமா ராதனை நாளையென் றுரைத்துச்
சாய ருங்கதி ரிரவினிற் றூபதன் றுயின்றான்.

(இ-ள்) சுத்தமான ஒரு வீட்டில்வைத்துப் பூட்டிப் பிராமணர்களுக்கு சந்தனம், அக்ஷதை கொடுத்து, நாளைக்குச் சமாராதனை நீங்களெல்லாரும் வரவேண்டும் என்று கூறி, பொழுதுபோனபின்பு இரவில் இந்தப்பிராமணன் நன்றாகத்தூங்கினான் (எ-று) 7

456

அன்ன காலையி லயற்புலத் தழிந்ததோர் மறையோன்
முன்ன மேயொரு பிரமகத் தியின்வினை முயன்றோன்
பின்னு மூனற வருந்துறும் பிழையனவ் வகத்தைக்
கன்ன மூன்றியங் குளவெலாங் கவர்ந்துகொண் டகன்றான்.

(இ-ள்) அந்த சமயத்தில் வேற்றூரிலிருந்து செய்கையில் இழிந்தவனும் பிரமகத்தி முதலிய பாவங்களைசெய்தவனும் மேலும் மதுவையும் மாம்சத்தையும் உண்ணுகிறவனுமாகிய ஒரு பிராமணன் அந்த வீட்டை கன்னம் வைத்து அங்குள்ள பொருள்களை எல்லாம் திருடிக்கொண்டு வெளியே வந்து (எ-று) 8

457

மாண் கருங்குளிர்க் கங்குலில் வழிப்பட நடந்து
காண் கொளுஞ்சிலை தாங்கிய கரவடர்க் கிடைந்து
சேண் கடந்துபோய்ச் சிறைப்புறக் குறும்பொறை செறிந்து
பூண் கழிந்ததோர் புலைக்கடைப் பரத்தையில் புகுந்தான்.

[இ-ள்] மிகுந்த குளிராயிருக்கின்ற அவ்விருட்டான அந்த இரவிலேயே வழிநடந்து, நாணைக்கட்டின வில்லையுடைய வஞ்சனை பொருந்திய வேடர்களுக்குப் பயந்து, வெகுதூரம்போய், ஒரு குன்றின் அடிப்பக்கத்தில் உள்ள கைம்பெண்ணாகிய நீசஸ்திரீயின் வீட்டுக்குள் புகுந்து அப்பொருள்களைக்கொடுத்தான் [எ-று] 9

458

ஆங்க மர்ந்துள நீசவே சையுமக மலர்ந்து
தாங்கு பண்டமுந் தசைகளும் புழுக்குவாய் ததும்ப
வாங்கி யுண்டுமட் டருந்திவான் சுரபிமாட் டுரிமேல்
வீங்கு கொங்கைதோய்ந் திடையற முயங்கினன் விடயம்.

[இ—ள்] அங்கிருக்கிற நீசஸ்திரீயாகிய வேசியானவள், மனம் மகிழ்ந்து, கொடுத்த உணவுகளையும், மாமிசத்தையும் நிறைய வாங்கியுண்டு, கள்ளைமிகுதியாகக்குடித்து, மாட்டுத்தோலில் அவளுடன் படுத்திருந்து இன்பத்தை அனுபவித்தான் [எ—று] 10

359

இருது காலமென் றிகழ்வுரு னிருந்தின முணரான்
பரிதி மாநதி முன்பரீ லென்பதும் பாரான்
குருதி நீர்மல வளறுபாய் குழிப்பகந் துளைந்திட்
டொருதி வாவினும் புனல்புகா தொழுகுவா னொருநாள்.

[இ—ள்] புண்ணிய நாளென்றும் கருதான் தூரமான ஸ்திரீ என்றும் நினையான் பகல் இரவென்றும் பாரான் இரத்தம் மலம் முதலிய அசுத்தங்களை வெளிப்படுத்துகின்ற குழியில் தோய்ந்தும் நல்ல நாளிலும் நல்ல தீர்த்தங்களில் ஸ்நானம் செய்யமாட்டான் [எ—று] 11

360

முனந்த காதவன் முதுபதி முரண்குறுஞ் சீறூர்ச்
சினந்த மாற்றலர் செருவரக் கருவிவாய்ப் பட்டே
யனந்த வாதைபட் டழிந்துட லொழிந்தபா தகனைக்
கனந்த பாசமுங் கதையுமா யமபடர் கலந்தார்.

[இ—ள்] இத்தன்மையுள்ள இவன் முன் செய்த குற்றங்களுக்காக இவனைப் பகைத்த பகைவர்கள் அரிவாளால் வெட்ட அதனால் வெட்டுண்டு இறந்தான் இவன் உயிரைக் கொண்டு போவதற்கு யமதூதர்கள், பாசத்தையும், கதையையும்கொண்டுவந்தார்கள் [எ-று] 12

461

கக்கு வேங்கனல் விழியினூற் கண்டவர் பகர்வார்
மிக்க சூதக விளைஞனைக் கொடுவிரைந் தனமேற்
புக்க காத்திரந் துளைக்குமப் புழுக்குழி நிரயந்
தக்க தன்றிவன் றனக்கெனத் தூதருந் தணந்தார்,

[இ—ள்] யம தூதவர்கள் இவனைக் கனற்பொறி பறக்கும்படி கண்களாற் பார்த்து, மிகுந்த பாபஞ்செய்த இவனைப் புழுக்கள் துளைக்கும்படியான நரகக்குழியில் தள்ளுதல் தக்கதென்று அந்நரகத்திலேயே தங்கும்படி விட்டு நீங்கினார்கள், இவ்வாறு சிலகாலம் நரகத்துன்பத்தை அனுபவித்தபின் [எ—று] 13

462

இங்கி வன்பிறி தும்பவ மியற்றுவான் பொருட்டுப்
பங்க மின்றிய பசுமுதற் கொலைகளே பயிலும்
வெங்கு றும்பொறைக் கிராதரின் வினைக்குலந் திரண்டு
சங்க கன்னனென் றொருகொடுந் தறுகணன் பிறந்தான்.

இவன் மேலும் பாவத்தைச் செய்யும் பொருட்டு, பசுமுதலாகிய கொலைகளையும் குற்றமில்லை யென்று கருதிச் செய்கின்ற கொடிய சிறியமலைச்சரிவுகளில் வசிக்கின்ற வேடுவர்கள் குலத்தில் பாபமெல்லாம் சேர்ந்து ஒரு வடிவெடுத்தாற்போன்ற ஒரு குமரன் பிறந்தான் அவனுக்கு வேடுவர்கள் சங்ககன்னன் என்று பெயரிட்டார்கள் [எ—று] 14

## 463

உரக வாயிடை யொருங்கிய வுறுதுளை யெயிற்றைக்
கிரக மாய்வளர் கடுவெனக் கெடுதலை விளைத்துக்
கரக பாணியான் கற்பகா லந்தொறுங் கடவா
நரகின் மூழ்குவான் கொலைஞரி னுண்முறை வளர்ந்தான்.

[இ—ள்] பாம்பின்வாயிலுள்ள துவாரத்தையுடைய பற்களை இடமாகக் கொண்டு வர வர வளர்கின்ற விஷத்தைப்போல யாவருக்கும் கெடுதலை விளைவித்து கமண்டலத்தைக் கையில் வைத்திருக்கிற பிரமனது கற்பம்வரையிலும் நீங்காமல் கொடிய நரகில் மூழ்குகின்றவனை சங்ககன்னன் கொலை செய்யும் வேடுவர்களால் கிரமமாக வளர்ந்து வந்தான் [எ—று] 15

## 464

ஐந்து நான்குமுன் றிரண்டொன்றி னளவின வயதுஞ்
செந்து வேமுத லாயின வுயிர்செகுத் ததன்மே
லுந்த கானக விலங்கெலா முயிருட னுயுமா
றெந்த வாறெனச் சங்ககன் னன்சிலை யெடுத்தான்.

[இ—ள்] ஒரு வயதுமுதல் ஐந்துவயதுவரையிலும் சிறிய செந்துக்களினுடைய உயிரையெல்லாம் கொன்று, அந்த வயதுக்குமேல் காட்டிலுள்ள எந்த விலங்குகளும் இனி எவ்வாறு உயிருடனிருக்கும் என்று கூறும்படி சங்ககன்னன் வில்லைக் கையிலேந்தித் திரிபவன் ஆனான் (எ—று) 16

## 465

மானு மேனமு மிரலையுஞ் சசங்களும் வதைத்தே
யூனு மீரலுங் குருதியு முவட்டவுண் டுதித்த
பானு வீழ்பொழு தளவினும் படர்நெறி படர்ந்து
மானு வாரையுந் தனித்தனி வழிப்பறி கொள்வான்.

(இ-ள்) மான்களையும், கலைமான்களையும், பன்றிகளையும், முயல்களையும், மற்றமிருகங்களையும் கொன்று அவைகளின் மாமிசங்களையும் ஈரலையும் மிகுதியாக வுண்டு, இரத்தத்தையும் குடித்து, சூரியன் அஸ்

தமிக்கும் வரையிலும் காட்டுவழிகளிற் சஞ்சரித்து, அங்குவருகின்ற மனிதர்களையும் தனித்தனியாக வழிப்பறிசெய்து கொண்டுவந்தான் (எ-று) 17

466

தங்கு காலையிற் சானுவி யாத்திரைத் தனத்தோர்
செங்கை யிற்சில பொருள்கொடு சேறலை நாடிப்
பங்க மின்றிய நெறியினைப் பழுதெனப் பகர்ந்து
கங்குல் போலிருட் கானக வழியினைக் காட்டி.

(இ-ள்) இவன் இவ்வாறு இருக்கின்றநாளில் கெங்காயாத்திரைக்குச் சில பொருள்களோடு செல்கின்றவர்களைக்கண்டு, குற்றமில்லாத நல்லவழியைக் கெட்டவழி என்று சொல்லி இருட்டு மிகுந்த காட்டு வழியினைக் காண்பித்து (எ-று) 18

467

சென்ற தாபதர் திணைகல ரடவியுட் செறிந்து
துன்று தாரிமுட் டுதைந்தடி பொருதுமெய் துடிப்ப
நின்று பேருயிர்ப் பெய்திமூழ் வினைநினைந் தரற்றிக்
கன்று நெஞ்சக ராய்மெலிந் தயர்வுறு காலை.

(இ-ள்) வந்த யாத்திரீகர்களைக் கல்லும், முள்ளும் நிறைந்த காட்டில் அழைத்துவந்து அவர்கள் அவ்வழியில் அடிவைக்கமுடியாமல் சரீரம் துடித்துப் பெருமூச்சுவிட்டுத் தங்கள் ஊழ்வினையை நினைத்து புலம்பி மன வருத்தத்தோடு சோர்வடைகின்ற காலத்தில் (எ-று) 19

468

வஞ்ச கன்கொடு நெஞ்சக வனசரன் கரிய
கஞ்சு கம்பொதிந் தரைபொரு கச்சடை விசித்து
முஞ்சி வெந்புறத் தசைதர முடிந்துபின் போக்கி
விஞ்ச வேதொடு தோற்றுணை வெஞ்சரண் வீக்கி,

(இ-ள்) வஞ்சகனும் கொடிய நெஞ்சையுடையவனுமாகிய சங்கன்னன் கறுப்புச்சட்டையையணிந்து இடுப்பை இறுக்குகின்ற கச்சை இடையில் கட்டிக்கொண்டு தலைமயிர் முதுகில் அசையும்படி முடிந்து பின் தொங்கவிட்டு கொடிய கால்களில் தகுதியான செருப்புக்களை அணிந்து (எ-று) 20

469

கிளைத்த கானகத் தொழித்தொரு கைவழி கிளத்தி
வளைத்த வெஞ்சிலை தலைக்கொடு வரிக்கணை வாங்கி
யிளைத்த தாபத னொருவனை யிலக்கெனத் தூண்டித்
துளைத்து வீழ்த்தவன் பொருளெலாந் துரந்துகைக்கொண்டான்,

(இ—ள்) பல கிளை வழியுள்ள காட்டில் நல் வழியை விலக்கி கெட்டபாதையைச் சொல்லி அழைத்துக்கொண்டுபோய் வளைத்த கொடிய வில்லிலிருந்து கூர்மையான பாணத்தைப் பிரயோகித்து, களைத்தவனாகிய பிராமணன் ஒருத்தனைக் கொன்று அவனுடைய பொருள் எல்லாவற்றையும் அபகரித்துக் கொண்டான். (எ—று) 21

## 470

அன்ன வூதியங் கொண்டுபோந் தடவியி லமர்ந்து
தன்னு ளேமகிழ்ந் துணருவான் றவப்பெருந் தீர்த்த
முன்னி யேகுவார் தமையொறுத் துண்கைபோ லினிய
பின்னும் வேறுள தோவெனப் பெருநகர் புகுந்தான்.

(இ—ள்) அப்பொருள்களைக் கொண்டுபோய்க் காட்டில் ஓரிடத்தில் தங்கியிருந்து தன்மனதுக்குள்ளே மிகமகிழ்ந்து, மேலான கங்கா யாத்திரையைக் கருதிச் செல்லுகின்றவர்களை அடித்து அவர்களுடையபொருள்களைக் கவர்தல்போல இன்னும் நமக்குக் கிடைக்குமோ என்று ஒரு பெரிய நகரத்துள் பிரவேசித்தான் (எ—று) 22

## 471

மேலு மிவ்வகைத் தீர்த்தயாத் திரையினை விரும்பி
மாலும் வேதியர் வருகுந ருளர்கொலோ வெனவே
சாலு மவ்வழி பார்த்திருந் தநேகநாள் சரித்தா
னாலு நன்னதி யாடிமீண் டணைகுவா ரதன்கண்,

(இ—ள்) பின் இவ்வகையாகத் தீர்த்த யாத்திரை செய்பவர்கள் வருகிறார்களாவென்று வழிகளையெல்லாம் பார்த்துக்கொண்டு பலகாலம் சஞ்சரித்துக்கொண்டிருந்தான் (எ—று) 23

## 472

தெரிந்த வெண்டிரைப் பகிரதிப் புனற்குடைவை செறிந்து
வரிந்து கோலிய காவடி வாகுவிற் பொறுத்துச்
சரிந்த மேனியுந் தளர்வுமெய்த் தவப்பெருங் குழுவைப்
பிரிந்து வந்தன னவ்வழித் தனித்தொரு பெரியோன்,

(இ—ள்) மேன்மையான வெள்ளிய அலைகளையுடைய கங்கை நீரை நிரப்பின சொம்புகளைக் காவடியிற் கட்டிக்கொண்டு தோளில் சுமந்து தளர்ந்தமேனியோடு சோர்ந்து வருகின்ற உண்மையான தவத்தைச் செய்கிறவர்களுடைய கூட்டத்தைப்பிரிந்து ஒரு பெரியவர் தனியே வந்தார் (எ—று) 24

473

கண்ட வன்மதிக் கொடியவன் கடிதுவந் தணுகிப்
பண்டை யோசனை நினைந்தனன் பயனின்மை யறிந்து
தண்ட மேசெய்து குண்டிகை காளகந் தடந்தோள்
கொண்ட காவடி முதற்றெலாங் குறைகெடக் கவர்ந்தான்.

(இ-ள்) ஒரு பெரியவர், தனியாகவருவதைப்பார்த்து கெட்ட புத்தியையுடைய அந்தச் சங்கன்னன் வேகமாகவந்து சமீபித்து, முன்போல் திருடுவதற்குப் பொருள் இல்லாமையை உணர்ந்து அவரை அடித்து, கமண்டலம் எக்காளம், பெரிய தோளில்தூக்கும் காவடி முதலிய எல்லாவற்றையும்எடுத்துக்கொண்டான்(எ-று) 25

474

திசை மயக்கிய புதை யிருட் கானகஞ் செறிந்து
தசை வெதுப்பியுண் டுண்டிய தாகமே பொருது
கசை பிணித்தகா வடிப்புனல் கமண்டலம் புகட்டி
நசை தணிப்புறப் பருகினன் பெருகவு நயந்தான்.

(இ-ள்) திக்குத்தெரியாத மிகுந்த இருட்டையுடையகாட்டில் வசித்து மாமிசத்தை வாட்டிச் சாப்பிட்டு, தாகம் தாங்க முடியாமையால் கயிற்றால் கட்டிய காவடியிலுள்ள கங்காதீர்த்தத்தை கமண்டலம் நிறைய ஊற்றி தாகம் தணியும்படி அந்நீரை மிகுதியாகப் பருகினன். மிகவும் மகிழ்ச்சியடைந்தான் (எ-று) 26

475

இவ்வ கைத்தன சிலதின மிருந்தனன் முன்போற்
செவ்வி பெற்றிலான் யாத்திரை யினரொடுஞ் செறிந்து
கவ்வை யற்றதே வாலய நிதிகளைக் கரவால்
வெளவு தற்கெனு மெண்ணமே மனத்தினின் மதித்தான்.

(இ-ள்) இவ்வகையாகச் சிலநாள் இருந்தனன் முன்போல் பொருளை மிகுதியாக எடுத்துக்கொண்டு யாத்திரைசெய்வோர் இல்லாமையினாலே யாத்திரைசெய்கின்றவர்களோடு தானும் சேர்ந்துகொண்டு, தேவாலயங்களில் சுவாமியினுடைய திரு ஆபரணங்களைத் திருடுவதற்கு எப்பொழுதும் எண்ணிக்கொண்டிருந்தான் (எ-று) 27

476

சுத்த மாகிய துவர்நிறத் தூசுடை வயக்கி
யொத்த நீள்சிகை யொப்பருந் தோப்பிகொண் டொளித்து
மெத்த வைதிக வெண்டிரு நீற்றொளி விளக்கி
வைத்த காவடிப் புயத்துடன் வழிப்பட நின்று.

(இ—ள்) பரிசுத்தமாகிய காவிவஸ்திரத்தைக்கட்டி நீண்ட குடுமியைத் தொப்பியினால் மறைத்து. மேலான வேதத்தாற்புகழப்படுகிற வெண்மையான திரு நீற்றின் ஒளிவிளங்கப் பூசி காவடியைத் தூக்கிய தோளுடன் வழி நடந்து (எ—று) 28

## 477

புண்ணி யத்திருப் புனல்கொணர் புனிதரிற் கலந்தான்
தண்ண றுங்கரை காலைபோய்த் தருப்பண மிறைப்பான்
கண்ணி மைத்துவாய் பதைத்தொரு கரமறைத் தசைப்பா
னுண்ணி ரப்பிய பலிகொடு பாகம்வைத் துண்பான்.

(இ—ள்) புண்ணியமான கங்காதீர்த்தத்தைக் கொண்டுவருகிற தூய்மையானவர்களுடன் சேர்ந்து, குளிர்ந்த நீர்த்துறையில் அதிகாலையில் போய்த் தருப்பணம் பண்ணுவான் கண்களை இமைத்து வாயை மூடிக்கொண்டு ஒரு கரத்தை மூடி ருத்திராக்ஷத்தை மறைத்து ஜபிப்பான், சமையல் பண்ணின உணவை நைவேத்தியம் செய்து உண்பான். (எ—று) 29

## 478

அன்ன வாறணைந் தான்மகிழ் காஞ்சிமா வரசை
யென்னை யாளுடை நாயகி யினியபூ சனையான்
மன்னு கோயிலுண் மருவிமா தவருடன் புகுந்து
சென்னி மேற்கரத் துடனின்று திசைதொறும் பார்த்தான்.

(இ—ள்) இத்தன்மையாக மகிழ்ச்சியோடு காஞ்சீபுரத்தில் ஒரு மாமரத்தின் அடியில் வீற்றிருக்கின்ற சிவபெருமானை என்னை அடிமையாக உடைய காமாட்சியம்மை இனிய பூசனை செய்து வீற்றிருக்கின்ற ஆலயத்தை அடைந்து, பெரியதவத்தினர்களோடு உள்ளே சென்று கையைச் சிரசின்மேற் குவித்து நின்று நான்கு திக்குகளையும் சுற்றிப்பார்த்தான் (எ—று) 30

## 479
### வேறு

துகட்டணி கம்பர்கோயிற் சோபான விமான வாயிற்
புகட்டணி கபாடந் தூணம் போதிகா தாரந்தூல
முகட்டணி சிகரந் தூவி முழுவதும் பிறவுஞ் செம்பொற்
றகட்டணி பொதிந்து மல்குந் தன்மைசண் டாளன் கண்டான்,

(இ—ள்) விபூதியை யணிந்த ஏகாம்பரர் கோயிலில் உள்ள படிகளையுடைய கர்ப்பக்கிரகத்தின் மேலும், கதவுகள், துவசத்தம்பங்

கள், வாகனங்களிலும் பொன் தகடு மூடியிருந்த தன்மையை சண்டாளனுகிய சங்ககன்னன் கண்டான். (எ—று) 31

480

கண்டவை யனைத்துந் தீண்டிற் கைபுகும் பொருள்க ளல்ல
கொண்டகன் றேகற் கெய்தா வென்செய்வான் குறித்துப் பின்னு
முண்டெனும் பதிகட் கெல்லா மூதிய மெளிதிற் காணுன்.
மண்டலம் பலசென் றேறி வளத்தின்கே ரளத்தின் வந்தான்.

(இ—ள்) கண்டசங்ககன்னன் இவைகளையெல்லாம் பெயர்த்தெடுத்தலும் சுலபமல்ல, எடுத்துச்செல்வதும் மிகக்கஷ்டம் என்று எண்ணி, பின்னும் உலகத்திலுள்ள ஆலயங்களுக்கெல்லாம் சென்று லாபத்தைக் காணுதவனுய் பல ஊர்களையும் கடந்து சென்று மிகுந்த வளம் பொருந்திய கேரள தேயத்தை அடைந்தான் (எ—ற) 32

481

செங்கையிற் கரகந் தூக்கித் திருமுனி கொணர்ந்த தெய்வக்
கங்கைநீர் கரந்து மேன்மைக் காவிரிப் பெரும்பேர் யாற்றைத்
துங்கமா தவர்கண் டேத்தத் தோடகா ரியுநின் றேத்தி
யங்கவர் செயலே போலப் புனல்குடைந் தாட லானுன்,

(இ—ள்) சிவந்த கையில் கமண்டலத்தைத் தரித்துக் கொண்டு அந்தணர்களால் கொண்டு வரப்பட்ட தெய்வத்தன்மைபொருந்திய கங்கை நீரை ஒளித்து வைத்து, மேன்மைபொருந்திய காவிரியை யடைந்து, மேலான பெருந்தவசிகள் துதிப்பதுபோலத் தானும் துதித்து, அவர்களைப்போல இப்பாவியும் நீராடி விபூதியை யணிந்துகொண்டு (எ—று) 33

482

தோய்ந்தெழு துறவோ ரெல்லாஞ் சோதிபா லிதயம் வைத்தார்
காய்ந்தவஞ் சகனும் பாய்ந்த கயன்மிசைக் கருத்தை யுற்று
ஞய்ந்தவித் திறங்க ளாலே யற்றையிற் கடன்றீர்த் தார்வம்
வாய்ந்ததண் பவானி சூழ்ந்த வடபரி சாரஞ் சார்ந்தார்.

(இ—ள்) நீராடிய துறவிகள் எல்லாரும் சோதிவடிவாகிய சிவபெருமானிடத்தில் மனதைச் செலுத்தியிருக்கின்ற காலத்தில் இவன் கயல் மீன்கள் பாய்வதைக்கண்டு மகிழ்ந்து அன்றையகடன்களை யெல்லாம் முடித்துக்கொண்டு குளிர்ந்த பவானி நதியால் சூழப்பட்ட வடபரிசாரம் என்கிறதலத்தைஅடைந்தான் (எ-று) 34

483

வருகவின் முனிக டாமும் வலியபா தகத்தி னுனு
முருகவி சாகரேயு முல்லையங் கொல்லை மேல்பா
லருகவி பாகசாலை யறப்பெருஞ் சாலை நீர்மை
பெருகவி நாசி யென்னும் பெயரிய தானஞ் சேர்ந்தார்.

*(இ—ள்) அழகிய முனிவர்களோடு கொடிய பாதகனுகிய சங்க கன்னனும் விசாகன் என்கிற திருமுருகன் அமர்ந்திருக்கிற திரு முருகன் பூண்டி என்னும் தலத்துக்குமேல்பாலுள்ள, மடைப்பள்ளி தருமசத்திரம் இவைகளையுடைய மேலான திரு அவிநாசி யென் னும் தலத்தையடைந்தான் (எ—று)* 35

484

நந்துமிழ் மணிய ருத நாககன் னிகைதீர்த் தத்தை
முந்துற வணைந்து மூழ்கி முதிரவெண் பூதி சாத்திப்
புந்தியின் விருப்பாற் போந்து புக்கொளிப் பெருமான் முன்னம்
பந்தமற் றவரு நின்றூர் பவனுறு நடுவு ணின்றான்.

*[இ—ள்] முத்துக்களையுடைய நாககன்னிதீர்த்தத்தை அடைந்து மூழ்கி திருமேனியில் திருவெண்ணீறு சாத்தி, திரு அவிநாசிப் பெருமான் முன் பத்தியினுல் துதிக்கின்ற பெரியோர்களின்நடுவில் இந்தப் பாதகனும் நின்றான் [எ—று]* 36

485

மேதகு பணிகள் போற்றும் வேதவிஞ் சையரை யிந்த
மாதல மேன்மை யாதென் றங்கவர் வணங்கிக் கேட்பத்
தீதகல் காசிமூலத் திருவவி நாசி யென்று
போதவுஞ் சகல சைவ புராணமும் புகலு மென்றூர்.

*[இ—ள்] வேதத்தையுணர்ந்தவர்களாகியமேன்மையான சிவத் தொண்டைச் செய்கின்றவர்களைப்பார்த்து, இத்தலத்தின் மேன் மைகளைச் சொல்லவேண்டுமென்று வந்தவர்கள் கேட்க, குற்றம் இல்லாத காசியாகிய அடித்தலத்துக்குக் கொழுந்தாயுள்ளது இது என்று சகல சைவபுராணங்களும் கூறு மென்று அதன் பெருமை யை விரித்துக் கூறினூர்கள். [எ—று]* 37

486

வாயக வுரைகேட்டந்த மாதவர் குகையை வாங்கி
யாயவை திறந்து நல்க வந்தண ரகங்கை யேந்தி
நாயகன் முடிமே லாட்ட நண்பர்கொண் டகன்ற பாவை
தாயகம் புகுந்த தென்னக் களித்தது தவளக் கங்கை.

[இ-ள்] அதைக்கேட்டுவந்த யாத்திரைவாசிகள் தாம் கொண்டுவந்த கங்காதீர்த்தத்தைச் சிவாச்சாரியாரிடம் கொடுக்க அவர் அதை வாங்கி நாயகனாகிய சிவபெருமான் திருமுடிமேல் அபிஷேகித்தார் அப்போது கங்கை, தாய்வீடு சேர்ந்ததுபோல் களித்தாள் [எ-று] 38

487

மணக்கவ டொழியா னிங்ஙன் வெளவுதற் கிடமுண் டென்று
பனகமின் பெரிதா மின்பம் பயிலரித் துவசன் சாத்துங்
கனகமு மணியுஞ் சேர்த்த கலன்கள்விட் டிலங்கா நின்று
தினகர கிரணம் போலத் திகழ்வதிற் சிந்தை வைத்தான்.

[இ-ள்] மனதிற் கபடம் நீங்காத சங்ககன்னன் இங்கே திருடுவதற்கு என்ன இருக்கிறதென்று நினைத்து, அரித்துவசனும் நாககன்னியும் சுவாமிக்குச் சாத்திய இரத்தினாபரணங்கள் சூரிய கிரணத்தின் ஒளிபோல விளங்கினதால் அவைகளைத் திருடலாமென்று எண்ணினான் [எ-று] 39

488

நின்றமா தவர்கள் காசி நிமலனைப் பரவி யேத்தி
யன்றிர வங்கண் வைகி யருணதோற் றத்தெ ழுந்து
துன்றலை தவழி ராமீச் சுரங்குறித் தேக லுற்றார்
புன்றொழிற் கொடியோ னந்தப் புரத்தினிற் காத்த லானான்.

[இ-ள்] வந்த யாத்திரீகர்கள் அவிநாசியில் அமர்ந்துள்ள சிவபெருமானைத் துதித்து வணங்கி, அன்றிரவு அங்குதங்கி, அருணன் உதிப்பதற்கு முன்னே எழுந்து சமுத்திரத்தின் அலைகள் தவழும் இராமேச்சுரத்துக்குச் செல்லத் தொடங்கினார்கள். அற்பத்தொழிலை உடைய கொடியவனாகிய சங்ககன்னன் அந்த அவிநாசிதலத்திலேயே தங்கிவிட்டான் [எ-று] 40

489

மற்றைய தினத்தில் வெள்ளை வாரணக் கயத்தின் மூழ்கி
யுற்றதோய் கலைக ளாற்றி யுடுத்துநீ றடுத்துப் பூசி
நற்றவர் தம்மின் மிக்க ஞானபோ தகரே போன்று
பொற்றடம் பரமர் கோயிற் புகுந்தனன் புலனிற் பொல்லான்.

[இ-ள்] கெட்ட புத்தியையுடைய சங்ககன்னன். மறுநாள் உதயகாலத்திலேயே ஐராவததீர்த்தத்தில் முழுகி, தோய்த்துலர்த்தின வஸ்திரத்தை உடுத்திக்கொண்டு. வெண்மையான விபூதியை மேனியில் தரித்து நல்லதவத்தைச் செய்கின்றவர்களினும் மேலான ஞானத்தைப்போதிக்கின்றஆசாரியர்களைப்போல அழகிய விசாலமான

கோயிலுக்குள் சிவபெருமானை வணங்குவதற்குப் போகிறவர்களோடு போனான், [எ—று] 41

490

இடங்கொள்புக் கொளியில் வாழு மெந்தைமற் றையனுற் பூண்ட
படங்கிளர்ந் தெழுந்தநாகா பரணமும் பகுவா யைந்துங்
குடங்கவித் தனைய செம்பொற் கோளகச் சிறப்புங் கோலத்
தடங்கணின் மகர நாசித் தலையும்வா சிகையுங் கண்டான்.

(இ-ள்) விசாலமான திருப்புக்கொளியூரில் அமர்ந்துள்ளஎமது பிதாவாகிய சிவபெருமானுக்குரிய, பிளந்தவாயையுடையஐந்து தலைகளோடுகூடிய நாகாபரணங்களையும் உயர்ந்த தங்கமயமாகிய பட்டு வஸ்திரங்களையும், அழகிய பெரிய மகாகுண்டலங்களையும். பலவிதமான இரத்தினமாலைகளையும் பார்த்தான் (எ—று) 42

491

உமையரு கிருப்ப நாப்ப ணொளிரும்வேற் குமரி வைக
வமைதரு மருண மோங்கு சடிலநா யகர்க்கு நாளிற்
சுமைபெறு நாக லோக சுமங்கலி மகிழ்ந்து சாத்தி
யிமையறத் தெரிசித் தேத்து மிரத்தினுங் கியையுங் கண்டான்,

(இ—ள்) பார்வதியம்மையார் பக்கத்திலிருக்க நடுவில்பிரகாசிக்கும் வேலையுடைய ஸ்கந்தமூர்த்தி இருக்க பெருமை பொருந்திய சிவந்த சடையையுடைய சோமாஸ் கந்தமூர்த்திக்கு, முன்னாளில், நாகலோகத்திலுள்ள நாககன்னி மகிழ்ந்து சாத்தி இமையாமல் தெரிசித்துக்கொண்டிருந்த இரத்தினங்களால் இழைக்கப்பட்ட அங்கியையும் கண்டான் (எ—று) 43

492

இனியதென் றிசையிற் போந்தி யாதென நாட்டம் வைத்தான்
கனிவுகூர்ந் தருளு ஞானக் கருணையா ரமுத மென்னும்
பனிவரை பயந்த செல்வி பங்கயப் பதமட் டாகத்
தனியொளி விளக்கும் பீதாம் பரவுடை தயங்கக் கண்டான்.

(இ—ள்) தெற்குத்திக்கில் போய் என்ன இருக்கிறதென்று ஆராயும்போது மனம் இளகி அன்பர்க்கு வேண்டியவற்றை அருளுகின்ற கருணையைச் செல்வியாகிய ஞானமயமாகிய இமயமலையாசன் புதல்விக்கு தாமரை மலர்போன்ற பாதம்வரையில் உடுத்திருந்த ஒளிவீசுகின்ற பீதாம்பரம் விளங்குவதையும் கண்டான் (எ—று) 44

### 493

ஆக்கிய வடபாற் சென்று னற்புதா நந்தக் கூத்திற்
றாக்கிய கமலத் தாளிற் சுடரும்வா சுமிமா ணிக்கம்
வீக்கிய சிலம்பைக் கண்டு வேறெலா மடங்கா விந்தப்
பாக்கிய மெளிதிற் கிட்டுங் கவர்குவ னென்று பார்த்தான்.

(இ-ள்) வடதிசையிற்போய் ஆனந்தநிர்த்தனத்தைச் செய்வதற்காகத் தூக்கிய தாமரை மலர்போன்ற பாதத்திற் பிரகாசிக்கிற நாகரத்தினத்தால் ஆகிய சிலம்பைக்கண்டு மற்றைய ஆபரணங்கள் எல்லாம் இருக்கட்டும் இந்த ஒரு ஆபரணமாகிய பாக்கியம் எனக்குச் சுலபமாகக் கிடைத்துவிடும் இதனைக்கவர்ந்து செல்வேனென்று பார்த்தான் (எ-று) 45

### 494

தினத்தினும் பணிசெய் வோர்க டிரிதர வொழியுங் கால
மனத்தியா னத்தர் போல வாய்புதைத் திருகண் மூடிக்
கனத்தகா ருடல்கம் பித்துக் கைவிரித் திரக்கங் காட்டிப்
புனத்தலை யசைத்துத் தாழ்ந்து பொய்யன்பு விளைத்து நின்றான்.

(இ-ள்) ஒவ்வொருநாளும் பணி செய்கிறவர்கள் ஓயாமல் திரிந்துகொண்டிருத்தலால் அப்பொழுது மனதினால் கடவுளைத் தியானிக்கிறவர்கள்போல வாயை மூடிக்கொண்டு இரண்டு கண்களையும் மூடிக்கொண்டு, உடம்பு அசையும்படி கையை விரித்து ஆடியும், பாடியும் தலையை வணங்கியும் இவ்வாறு மெய்யன்புடையவர்கள் போல் நடித்து பொய் அன்பு மிகுந்து நின்றுகொண்டிருந்தான் (எ-று) 46

### 495

நிற்றலு மமையங் காணு னீங்கினன் புறமே போந்தான்
முற்றுமைந் திதழ்சேர் வில்வ மூலமார் கோல நீழ
லுற்றிருந் தொன்று மெண்ணு னும்பரா லறிய வொண்ணுப்
பொற்றிருச் சிலம்புந் தாளும் புந்திவிட் டகலா வானுன்.

(இ-ள்) இவ்விதமாக இவன் நின்று கொண்டிருந்தும், சமயம் வாய்க்கப்பெறாமல் வெளியே சென்றான் ஐந்து இதழ்களோடுகூடிய வில்வமரத்தடியில் இருந்து ஒன்றும் எண்ணாதவனாகி, தேவர்களாலும் அறியமுடியாத அழகிய பாதத்தையும் அதில் அணிந்துள்ள சிலம்பையும் தன்னுடைய புத்தியில் சிறிது நேரமும் நீங்காமல் நினைத்துகொண்டிருந்தான் (எ-று) 47

## 496

சேண்பட நடக்கும் போதுந் தெருப்பலி கவரும் போதும்
ஊண்பல நுகரும் போதும் உறங்குறு கனவின் போதும்
வீண்பல கழியும் போதும் விடாமலெப் பொழுது நெஞ்சிற்
காண்பன மணிச்சி லம்புங் கழலெனுங் கமலப் போதும்.

(இ-ள்) வெகுதூரம் நடக்கும்போதும் தெருவில் பிச்சைக்குப் போகும்போதும் பல உணவுகளை உண்ணுகிறபொழுதும், கனவிலும், உறங்கும்போதும், வீணுகக் காலத்தைப் போக்குகிற நேரத்திலும் ஆகிய எப்பொழுதும் அங்கடராஜப் பெருமானுடைய தாமரை மலர்போன்ற பாதமும். வீரக்கழலும் இரத்தினங்களாலாகிய சிலம்பும் அவனுடைய கண்களிலும் மனத்திலும் நீங்காமல் தோன்றிக் கொண்டேயிருந்தது. (எ-று) 48

## 497

இவ்வகை யொருநாட் போல வீரிரு தினமெம் பெம்மான்
திவ்விய தோற்றங் கண்ட சிந்தையான் சங்க கன்னன்
வெவ்விய கரவு தீக்கோள் வினைக்கொலைக் கமைத்த கும்பிப்
பெளவநீ ணரகம் வற்றிப் பசையற வறந்த தன்றே.

(இ-ள்) இவ்வாறு ஒருநாள்போல நான்குநாளும் எம்பெருமானுடைய மேன்மையான திருவடியை மனதில் இருத்தினமையால், சங்ககன்னன் இதுவரையிற் செய்த கொடிய வஞ்சனை, திருட்டு, கொலை முதலிய குற்றங்களால் ஆனபாவக்கடலாகிய நீரெல்லாம் (முழுவதும்) வற்றிப் பசையறக் காய்ந்தது (எ-று) 49

## 498

காசிவா ரணவா சிச்செங் கதிர்க்கொழுந் தெழுந்த காட்சி
ஆசிலா திரையிற் போற்ற வருமுனிக் கணத்தை நீங்கிக்
கோசிகர் வாம தேவர் கோதமர் சவுன கேசர்
மாசில்கண் ணுவரின் னேரும் வந்தன ரந்த வேலை.

(இ-ள்) வாரணவாசியாகிய காசியின் அடியிலிருந்து எழுந்து பிரகாசித்து விளங்குகின்ற காட்சியைத் திருவாதிரையிற் கண்டு துதிக்கவருகின்ற முனிவர் கூட்டங்களை நீங்கி குறையில்லாத விசுவாமித்திரர் வாமதேவர், கௌதமர். சவுனகர் கண்ணுவர் முதலியவர்கள் வந்த சமயத்தில் (எ-று) 50

499

விச்சுவ மூல மாக விளங்கவி நாசி நாதன்
உச்சியங் காலை கோயில் உபநிட தத்து வேத
விச்சையர் முழக்குங் கீத வீணையந்தொனியும் பூணுங்
கச்சிள முலையார் பாடற் கானமு மமையுங் காறும்.

(இ-ள்) எல்லாவற்றிற்கும் மூலகாரணராக விளங்குகின்ற அவிநாசிக்குத் தலைவராகிய சிவபெருமானுக்கு உச்சிக்காலத்தில் வேதங்களையும் உபநிடதங்களையும், வேதியர்கள் முழங்குகிறமுழக்கமும், இனிய கீதம் அமைந்த வீணையின் ஒலியும், ரவிக்கையை அணிந்த இளமையான தனங்களையுடைய பெண்களது பாட்டும். மற்றும் உள்ளவாத்தியங்களின் ஓசையும்ஒய்கிறவரையில்(எ-று) 51

500

ஐந்தித ழடர்பூங் கொம்ப ராறுகா லெழுபண் பாடக்
கொந்தவிழ் பருவ மெட்டுங் கூவிள தாரு நீழல்
வந்திருந் தெழுதொ ணாத மவுனமந் திரத்தை யுன்னித்
தந்தமிற் சமாதி கூடிச் சகலமு முணர்வ ரானார்.

[இ-ள்] ஐந்து இதழ்களையுடைய வில்வமரத்தின் கிளைகளில் ஆறுகால்களையுடைய வண்டுகள் ஏழு இசைகளைப் பாடவும் கொத்தாக மலருகின்ற அம்மரத்தடியில் (இருந்து) எட்டுக்காலங்களிலும் தங்கியிருந்து எழுதமுடியாத மவுன மந்திரத்தை த்தியானித்துக் கொண்டு எல்லாவற்றையும் உணர்பவர் ஆனார்கள் [எ-று] 52

501

அக்கணஞ் சங்க கன்ன னெதிர்நின்று னவனுள் ளத்திற்
றிக்கெலாம் விளக்கஞ் செய்யுஞ் செம்மணிச் சிலம்புந் தாளு
மொக்கவே நின்ற தோளு முரங்கொளுங் கரங்க ளைன்கு
முக்கணுஞ் சடையுங்கூத்து முனிவர்கண் டதிச யித்து.

[இ-ள்] அப்பொழுது சங்ககன்னன் அவர்கள் முன் நின்றான். அவனுடைய நெஞ்சில் திக்குமுழுதும் பிரகாசிக்கின்ற சிவந்தஇரத்தினங்களாலாகிய சிலம்பும், தூக்கிய திருவடியும் நான்குதோளோடும் பொருந்திய நான்கு கரங்களும், மூன்று கண்களும், சிவந்த சடையும், நடராஜப்பெருமானுடைய ஆனந்த நிர்த்தனமும் முனிவர்கள் கண்டார்கள். கண்டவுடன் அதிசயித்து [எ-று] 53

502

சிவசிவ சகல லோக தேவசிற் பரமா நந்த
சிவசிவ கயிலை மேவுந் திங்கள்சே கரபூ தேச
சிவசிவ கருணை பாக திருவவி நாசி நாத
சிவசிவ சிவசி வாய வெனநின்று தெரிசித் தார்கள்.

[இ—ள்] எல்லா உலகங்களுக்கும் தலைவரே, சிவ, சிவ. மேலான ஞான ஆனந்தமூர்த்தியே கைலையில் எழுந்தருளிய சந்திரனை யணிந்த சடையையுடையவரே, சிவ, எல்லா உயிர்களுக்கும் தலைவரே, சிவ. கருணையைச்செல்வியை ஒரு பாகத்தில் உடையவரே சிவ திரு அவிநாசித் தலத்துக்குத் தலைவரே சிவ என்று தோத்திரம் செய்தார்கள். [எ—று] 54

503

பனிமதி பரவு வேணிப் பரமனம் பரமே யானுன்
முனிவர்க ளிவனில் வந்த மூலசஞ் சிதத்தைப் பார்த்தார்
துனிதரு நிரய மூழ்கிக் கிடக்குந் தொன் னெடுங்கா லத்தைப்
புனிதமே புரிந்த திந்தப் புக்கொளி யன்றோ வென்றார்.

[இ—ள்] குளிர்ந்த சந்திரனை அணிந்த சிவந்த சடையையுடைய சிவபெருமான் அவனுடைய மனதில் தோன்றி மறைந்தவுடன், அவன்முன் செய்த தீவினைகளையெல்லாம் அறிந்தார்கள் இவனைப் பழமையாக வெகுகாலம் துன்பத்தை அனுபவிக்கக்கூடிய நரகத்திலிருந்து இப் புக்கொளியூர் அல்லவா பரிசுத்தமான இன்பத்தை அடையும்படிச் செய்தது என்று ஆச்சரியம் அடைந்தார்கள் [எ—று] 55

504

அத்தன்மை யடைந்த வேலை யருள்பெறுஞ் சங்க கன்னன்
இத்தலத் துழன்ற காய மிருவினை யொப்பா னீத்து
மத்தனூ புரபொற் பாத மாணிக்கச் சுடரின் மூழ்கி
நித்தில விமான மேறி நீணெடுங் கயிலை சேர்ந்தான்.

[இ-ள்] இவ்வாறு சங்ககன்னன் திருவடியில்உள்ள சிலம்பைத் திருடமுடியாமல் அதையே நினைத்துக்கொண்டு இத்தலத்திலேயே சுற்றிக்கொண்டு இருவினை யொப்புவந்ததனால் சரீரத்தைவிட்டு ஆவி நீங்கினவனைப் அத்தனாகிய சிவபெருமானுடைய சிலம்பையணிந்த அழகிய பாதத்தினது மாணிக்கமயமான சோதியிலேயே கலந்து, முத்துக்களால் ஆகிய விமானத்தில் ஏறிக்கொண்டு உயர்ந்த பெரிய கயிலைமலையை அடைந்தான் [எ—று] 56

505

சிவையொரு பாகமேவுந் தேவர்கோன் கயிலை தன்னிற்
றுவைபடு முழவி னோதை துந்துபித் துழனி யோங்கு
மவையிடைச் சங்க கன்ன னரவொலி யுடன்போய் வீழ
நவையறு முடிகம் பித்துப் புன்றிரு நகையுஞ் செய்தார்.

[இ-ள்] உமாதேவியை ஒரு பாகத்தில் உடைய சிவபெருமான் எழுந்தருளிய கயிலைமலையின்கண், அடிக்கப்படுகின்ற மத்தளத்தின் ஓசையும் மற்ற தேவவாத்தியங்களின் ஓசையோடு சங்ககன்னனது அரகர என்கிற சப்தமும் சிவபெருமானுடைய காதுகளில் விழ, சிரசையசைத்துப் புன்முறுவல் செய்தார் [எ-று] 57

506

இமையவ ரவைகண் டஞ்சி யெழுந்துநின் றெந்தாய் போற்றி
உமையிட முகந்தாய் போற்றி போற்றியென் றுரையா லேத்தி
யெமையுளோ புறமோ விந்த வதிசய மென்ன நாத
னமைவிலா நரகுக் காளா மிவனணைந் ததனு லென்றான்.

[இ-ள்] அத்தேவசபையில் உள்ளவர்கள் இதைப்பார்த்துப் பயந்து, எழுந்து நின்று எமது தந்தையே போற்றி உமாதேவியை ஒரு பாகத்தில் விரும்பி வைத்தவரே போற்றி என்றுதுதித்து இப் புன்சிரிப்புக்குக் காரணமானவர்கள் இங்கு அல்லது புறத்தில் உள்ளவர்களா என்று கேட்க இறைவனாகிய சிவபெருமான், மிகுந்த நரகத்துக்கு ஆளாகும் இச்சங்ககன்னன் இங்கு வந்த காரணத்தாலே தான் என்று கூறினார் [எ-று] 58

507

மாயினுங் கிடையா நின்னை மந்திர மலரிட் டேத்தா
வாயுநற் கிரியை யோருக் கருளுமிச் சாமீ பத்தைத்
தாயினு நிலை குன்றாத தவரினுந் தீங்கு செய்த
தீயினுங் கொடியோ னெய்தச் செய்வதே னென்றார் தேவர்.

[இ-ள்] உடல், பொருள், ஆவி மூன்றையும் உனக்கே அர்ப்பணம் பண்ணுகிறவர்களுக்கும் அடையமுடியாத உன்னை, எப்பொழுதும் மந்திரம் சொல்லி மலர்களினால் அருச்சித்து, உன்னையே தியானிக்கின்றவர்களுக்கு அருளுகின்ற இந்த சாமீபமான பதவியை, தாயைக்காட்டிலும் அன்புள்ள தவசிகளுக்குந் தீங்குசெய்தவனாகியும் நெருப்பினுங் கொடியவனாகியும்உள்ள இவனுக்குக் கிடைக்கும்படி செய்தது என்ன காரணம் என்று தேவர்கள் கேட்டார்கள் [எ-று] 59

508

வலம்புரிக் குழையோன் செய்ய வாய்மலர்ந் தருள்வா னின்னோன்
பலம்புணர்ப் பவரிற் கொண்ட பகீரதிப் புன லுந் துய்த்தா
னலம் பெய்புக் கொளியுஞ் சார்ந்தா னுகபூ மியின்மா ணிக்கஞ்
சிலம்பினுக் கெமது தாளிற் சிந்தையுந்திகழ வைத்தான்.

[இ-ள்] இதைக்கேட்ட சங்கக்குண்டலத்தையணிந்த சிவபெருமான் கூறுகின்றார் இவன் கங்காதீர்த்தத்தைக்.கொண்டுவந்தவர்களிடமிருந்து பிடுங்கிக் கொண்ட கங்கை நீரை அருந்தினன் நன்மையைச்செய்கின்ற புக்கொளியூரை யடைந்தான் நாகலோகத்து நாககன்னியாற் செய்து சாத்திய மாணிக்கச் சிலம்போடு எமது திருவடிகளிலும் எப்பொழுதும் சிந்தை வைத்திருந்தான் [எ-று] 60

509

ஈதினும் பெருமை சார்ந்த தியம்புது மெமர்க ளான
கோதின்மா முனிவ ரைவர் கோசிகன் முதலா வங்க
ணுதிரை நாளின் வில்வத் தைந்திதழ்ப் பெருநீ ழற்கட்
சோதிசேர் நிட்டைசெய்தா ரெதிர்நின்று துனியுந் தீர்ந்தான்.

இதிலும் மேன்மையுடையதாக ஒன்று சொல்கிறோம் எமக்கு அன்பர்களான குற்றம் இல்லாத விசுவாமித்திரர் முதலாகவுள்ள ஐந்து முனிவர்களும் திருவாதிரை நாளில் ஐந்து இதழ்களையுடைய வில்வமரத்தின் நீழலின் கீழமர்ந்து நிஷ்டைசெய்து சோதியைக் காண்கிற அவர்கள் முன்பு நின்று துன்பம் நீங்கினன் [எ-று] 61

510

எனத்திரு வுள்ளம் வாழ்ந்த வெம்பிரா னிமையோர் நிற்கச்
சனத்தமா சிவகணத்திற் சங்ககன் னனையொன் றாக்கித்
தினத்தினும் பெயர்மெய்ஞ் ஞான தெரிசியென் றருளிச் செய்யப்
பனத்தகு பெருமை சார்ந்த பதத்தினி லமர்ந்தா னன்றே.

[இ-ள்] என்று கூறி எம்பெருமான் தேவர்கள் எல்லோரும் நிற்க. கூட்டமான சிவகணங்களுக்குள்ளே சங்ககன்னனை ஒருவனுகச் செய்து, உண்மைஞானத்தைக் கண்டவன் என்று அருள் செய்து. பெருமையாகச் சொல்லக்கூடிய பதத்தில் அமர்த்த அவனும் அமர்ந்திருந்தான் [எ-று] 62

511

சங்ககன் னனையா தன்ன தறுகணெஞ் சகர்க ளேனுஞ்
சங்ககன் னனையே பேசுஞ் சரிதைகேட் டளவின் மேலாஞ்
சங்ககன் னனையு மெண்ணுர் தனிநெடுங் கயிலை மேவுஞ்
சங்ககன் னனையே சாருஞ் சாலோக மடைவ ரன்றே.

கற்கள் பலகாலம் தண்ணீரிற் கிடந்தாலும், மெதுவாக இல்லாமல் கடினமாயிருப்பதுபோல அஞ்சாத நெஞ்சுடையவர்களாறுலும், சங்ககன்னனுடைய சரித்திரத்தைக்கேட்ட மாத்திரத்தில், சங்கையேந்திய திருமாலையும் ஒரு பொருளாகக் கருதாமல் ஒப்பற்ற பெரிய கயிலாயமலையில் அமர்ந்தருளுகின்ற சங்கக்குண்டலத்தையணிந்த சிவபெருமானுடைய சாலோகபதவியையடைவார்கள் [எ—று] 63

512

என்றிவை நந்தி கூற விருஞ்சனற் குமரன் கேட்டுத்
துன்றுகோ டீர பாரந் துளக்கியே விளக்கி யன்பை
நன்றிது பெற்றே னின்னு முற்றது நவில்வா யென்ன
மின்றிகழ் தெய்வ ரம்பை யுய்ந்தமை விளம்ப லுற்றான்.

[இ—ள்] என்று நந்திகேசுவரர் சொல்ல பெருமைபொருந்திய சனற்குமார முனிவர் கேட்டு சடைமுடியை அசைத்து அன்போடு நன்மையாக இக்கதையைக் கேட்டேன் இன்னும் உள்ள கதையையும் கூறுவீர் என்று சனற்குமார முனிவர் கேட்க, மின்னலைப்போலப் பிரகாசிக்கின்ற தெய்வரம்பை அவிநாசிப்பெருமானைப் பூசித்து நற்கதியையடைந்த கதையை நந்தி தேவர் சொல்லத் தொடங்கினார் [எ—று] 64

எட்டாவது சங்ககன்னச் சருக்கம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—512

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# தெய்வரம்பைச் சருக்கம்.

513

முந்து வாசவன் சாபத்தோர் மொய் குழ லரம்பை
வந்து பூமியிற் சனித்திகழ் பரத்தையாய் வைகி
யெந்தை புக்கொளித் தலம்புகுந் தியைந்தவான் கதியை
நந்தி யெம்பிரான் சனற்குமு ரேசற்கு நவில்வான்.

(இ-ள்) முன் ஒரு காலத்தில் தேவேந்திரனுடைய சாபத்தினால் ஒரு நெருங்கிய கூந்தலையுடைய தெய்வரம்பையானவள், பூமியில் வந்து பிறந்து விளங்குகின்ற தாசியாய் இருந்து திருப்புக்கொளியூரில் வந்து எம்பெருமானாகிய அவிநாசியப்பரது கிருபையால் மேலான முத்தியை யடைந்தகதையை நந்தியெம்பெருமான், சனற்குமார முனிவர்க்குச் சொல்லத்தொடங்கினார் (எ-று) 1

514

வெல்லும் வச்சிரப் படையுடை விண்ணவர் வேந்தன்
னொல்க திக்கெலாம் பெருவளஞ் சுரந்தினி தளித்து
மல்கு பொற்பின வியல்பின மரபின வாய்ந்து
நல்கு கற்பக தாருவஞ் சோலையி னுப்பண்.

(இ-ள்) யாவரையும் வெல்லுகின்ற வச்சிராயுதத்தையுடைய தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரன். பழமையான நல்ல நிலைமையையுடையவர்களுக்கெல்லாம் அவரவர்களுக்குத் தகுந்த பொருள்களை மிக அதிகமாகக்கொடுத்து இனிமையாக ஆராய்ந்து கொடுக்கும்படியான, மிக அழகு பொருந்திய கற்பக மரங்களையுடைய அழகிய சோலையின் நடுவில் (எ-று) 2

515

சிலைக்கு லோதயச் சுடர்மணிப் பீடிகைச் சிறப்பி
னிலைத்த கால்களி னடித்தலத் திசைதொறு ஞெளித்த
தலைப்பைந் நாகபொற் படவிழி யொளிபெறத் தயங்கி
மிலைத்த நீடிருு டொலைப்பன விளக்கென நிறைந்து.

(இ-ள்) உதய சூரியனைப்போல விளங்குகின்ற இரத்தினங்களால் இழைக்கப்பட்ட பீடத்தினது சிறப்போடு நிலைபெற்ற கால்களின் அடியில் எல்லாம் நெளிக்கின்ற அழகிய படத்தையுடைய நாகத்தினது கண்கள் போல் பிரகாசித்து மிகுந்த இருட்டைத் தொலைக்கின்ற விளக்கைப்போல நிறைந்து (எ-று) 3

516

மெய்த்து கிர்க்கணின் யாளிவாய்ச் சுருட்படி விடாது
பத்தி பெற்றிடு நிருத்தமண் டபத்தினிற் பணித்த
வத்தி மத்தகத் துதைந்துதாங் கரியணைத் தவிசின்
மத்தி யத்தில்வந் திருந்தனன் மகபதிக் கடவுள்,

(இ-ள்) நல்ல பவளம்போன்ற கண்களையுடைய யாளிகள், வாயிலிருந்து தொங்குகின்ற மாலைகளை விடாது பற்றிக்கொண்டி

ருக்கிற வரிசையோடு கூடிய நிருத்த மண்டபத்தில், யானையின் தலையில் உதைந்து கொண்டு சுமப்பதுபோலச் செய்யப்பட்ட சிம்மாசனத்தின் மத்தியில் தேவர்களுக்கு அரசனாகிய இந்திரன் ஆனவன் அமர்ந்திருந்தான் (எ-று) 4

517

விடுக திர்ச்சுடர் மவுலியை மிலைந்தவிண் ணவரும்
படிவ மொப்பிலா வியக்சரும் பகர்மருத் துவரு
முடிவின் மெய்த்தவ முனிவரு முறைநெறி வழாது
நெடிது மற்றவ னவையினி னிவந்துவந் திருந்தார்.

(இ-ள்) பிரகாசிக்கின்ற கிரீடத்தை அணிந்த தேவர்களும், அழகில் தங்களுக்கு ஒப்பில்லாத இயக்கர்களும், மருத்துவர்களும், முடிவில்லாத உயர்ந்த தவத்தைச் செய்கின்ற முனிவர்களும் கிரமம் தவறாமல் அவரவர்கள் இருக்கவேண்டிய இடத்தில் வந்து தங்கியிருந்தார்கள் (எ-று) 5

518

கரம்ப யின்றன விடக்கைதுந் துபியிசை கறங்க
வரம்பை யொன்றிய வளைத்துளைக் கருவிநேர் வயங்க
வுரம்பு ரந்தவிஞ் சையரியா ழுகிர்நரம் புளர
நிரம்பு பேரழ கரம்பையு நடஞ்செயா நின்றாள்.

(இ-ள்) கையினால் வாசிக்கக்கூடிய இடக்கை, துந்துபி முதலாகிய வாத்தியங்களின் ஒலி சப்திக்கவும், அளவோடு கூடிய துளைக்கருவிகளாகிய புல்லாங்குழல், நாதஸ்வரம் முதலிய வாத்தியங்களின் ஓசை விளங்கவும் மிகுந்த தேர்ச்சிபெற்ற வித்தியாதரர் யாழ், வீணை முதலிய நரம்புக்கருவிகளைத் தடவி வாசிக்கவும், அழகு முழுமையும் அமையப்பெற்ற அரம்பை ஆனவள் நடனத்தைச் செய்தாள் (எ-று) 6

519

சுமைப்ப யோதர வணங்கினின் சுரதநாட் டியத்தி
னமைத்த செங்கையி னபிநய வழகினைக் காண்பார்
சமைத்த கூர்விழி யிமைக்கினுந் தணப்பெனத் தரியா
ரிமைப்பு றுவகை நாட்டமுற் றிமையவ ருய்ந்தார்,

(இ-ள்) தனங்களாகிய சுமைகளையுடைய தெய்வரம்பையின் இனிமையான நடனத்தில், சிவந்த கையினால் காட்டுகின்ற அபிநய அழகினைக்காணுகின்ற தேவர்கள், சிறிதுநேரம் கண் இமைத்தாலும், பொறுதவர்களாய் இமைக்காமல் அந்நடனத்தைக்கண்டு மோகங்கொண்டு தங்களை மறந்திருந்தார்கள் (எ-று) 7

520

விண்கொள் வானவ ரியற்கையும் வேட்கையும் விளைவுங்
கண்க ளாயிரன் கண்டுபூங் கரமமைத் தகற்றத்
தண்க லாமதி வதனியர் தமினட வனிதை
யெண்கொ ளாமையஞ் சலியொழிந் திகழ்ந்துபோ யினளால்.

(இ-ள்) தேவலோகத்திலுள்ள தேவர்களது தன்மையையும் அவர்கள் விருப்பத்தையும், அதனாலுண்டாகிய பயனையும். ஆயிரம் கண்களையுடைய தேவேந்திரன் கண்டு போதும் என்ற கருத்தோடு அழகிய கையை அமைத்துக்காட்ட, குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரன் போன்ற முகத்தையுடைய பெண்களில், நடனம் செய்கின்ற தெய்வரம்பையானவள் அது பொறுக்காமல் வெறுப்படைந்து சபையோர்களுக்கு வந்தனம் செய்யாமல் இகழ்ந்து தன் இருப்பிடம் சென்றாள் (எ-று) 8

521

முனிவர் கண்டிவ ளிகழ்ந்தவா றென்னென மொழிந்தார்
ரனித மிங்கெமக் கன்றுபோ லடுமென வஞ்சி
நனிதிகழ்ந்துநீர் பொறுமினென் றவள்வர நவிற்றிப்
புனித னங்கவண் மலர்முகம் புலரவே முனிந்து.

(இ-ள்) இவள் இவ்வாறு சென்றதைக்கண்ட முனிவர்கள் என் இவள் நம்மை இகழ்ந்தாள் என்று இந்திரனைக்கேட்க, இந்திரன் முனிவர்கள் என்னைச்சபிப்பார்களோ என்று பயந்து, நீங்கள் இக்குற்றத்தைப் பொறுத்துக் கொள்ளுங்கள் என்று முனிவர்களிடம் சொல்லி அவளை அழைத்து வரச்சொல்லி அவள் வந்தவுடன் இந்திரன் அத்தேவரம்பையின் முகம் வாட்டமடையும்படி கோபித்து (எ-று) 9

522

மன்னு பூதலத் தென்னரின் மானிடப் பிறப்பிற்
கன்னி காவெழிற் கணிகையாய் நாண்மடங் கழிந்து
முன்னர் யாவரு மிகழ்வசை மொழிதரக் கிடந்தாங்
கின்ன லேபெறக் கடவையென் றியாகமன் சபித்தான்.

(இ-ள்) பூமியில் நிலைபெற்ற தென் தேயத்தில் மனிதப்பிறப்பில்கணிகையர் குலத்தில் அழகிய தாசியாய்ப் பிறந்து, நாணம், மடம், அச்சம் முதலிய நற்குணங்களில்லாமல், யாவரும் வசை மொழிகூறி இகழும்படி இருந்து துன்பம் அடையக்கடவாய் என்று நூறுயாகம்செய்த இந்திரன் சபித்தான் (எ-று) 10

523

மொழிந்த சாபவி மோசன மெங்கென வரம்பை
யழிந்த சிந்தையா லறைகுவா னமரர்கோ னமது
பொழிந்த சீரயி ராவத முன்புபோய்ப் புகுந்த
சுழிந்த கங்கைசேர் புக்கொளித் தலமெனச் சொற்றான்.

(இ-ள்) இதைக்கேட்ட தெய்வரம்பை மன வருத்தத்தை யடைந்து இந்தச்சாபம் எப்போது எவ்விடத்தில் நீங்கும் என்று கேட்க இந்திரன் எனது பெருமையையுடைய அயிராவதம் முன்பு சென்று பூசித்துச் சாபம் நீங்கின, நீர்ச்சுழியுள்ள கங்காகூபம் இருக்கிற திருப்புக்கொளியூர்தான் உன்னுடைய சாபத்தையும் போக்க வல்லது என்று கூறினான் (எ-று) 11

524

ஆக லானயன் விதித்திடு மநந்தவா ருயிர்க்கும்
போக பூமியாய் விளங்கிய திராவிட புலத்தின்
மாக தாரியின் மேகசா லத்துடன் மயங்கும்
பூக வாவிசூழ் நாமிகா புரிமணித் தெருவில்.

(இ-ள்) பிரமாவினால் படைக்கப்பட்ட அளவில்லாத நிறைந்த ஜீவர்களுக்குப் போகபூமியாய் விளங்குகிறதென்னாட்டில், ஆகாயத்தில் சஞ்சரிக்கிற மேகக்கூட்டங்களோடு சேர்ந்திருக்கிற பாக்கு மரங்கள் அடர்ந்த சோலைகளாலும் தடாகங்களாலும் சூழப்பட்ட நாமிகாபுரியென்னும் ஊரிலுள்ள அழகிய வீதியில் (எ-று) 12

525

ஞால விஞ்சையர் குலத்தொரு நாடகக் கணிகை
கோல வுந்தியிற் பிறந்திளங் கொங்கையங் குவட்டிற்
பால ருந்தியும் வளர்ந்துதற் பருவங்க ளகன்று
வால கிஞ்சுக மழலையந் தீஞ்சொலை மறந்து.

(இ-ள்) சங்கீத வித்தையிலும் நடனஞ் செய்தலிலும் சிறந்த தாசியின் அழகிய வயிற்றிற் பிறந்து தனங்களிற் பாலருந்தி பல பருவங்களையும் கடந்து இளையகிளியைப்போல மழலைச் சொல்லைச் சொல்லும் பருவத்தைக்கடந்து (எ-று) 13

526

பாடி னாளிசை வீணையின் றாகம் பயின்றாள்
ஆடி னாள்பர தாகம வருங்கலை யறிந்தாள்
சூடி னாண்மணிக் கலன்களும் பருவமுஞ் சுரந்து
தேடி னாளனு போகவா ரிதியினிற் றிளைத்தாள்.

(இ—ள்) பாடல்களைப் பாடுதலிலும், இராகங்களை வீணையில் வாசித்தலிலும் தேர்ச்சியடைந்தாள் பரத சாஸ்திரங்களைப்பயின்று நடனம் ஆடுதலிலும் வல்லவள் ஆனாள் இரத்தினாபரணங்களையும் அணிந்து கொண்டாள் சிற்றின்பமாகிய சமுத்திரத்தில் விளையாடினாள் (எ—று) 14

527

விடலை யோர்கொடுங் காமுகர் யாவரும் விரும்பி
யுடலை யேகவர்ந் தொறுப்பதற் கொருமைசார்ந் தவர்க்காய்
மடலை யேந்திய வளமையு மிளமையு மயர்ந்து
நடலை யோய்ந்தது குலைந்தது நாண்மட மச்சம்.

(இ—ள்) காளைப்பருவத்தையுடையவர்களும், மிகுந்த காமிகளும், யாவரும் தன்னையேவிரும்பிவர அவர்கள் பலரோடும் சேர்ந்ததனால், சரீர வலிமையும், அழகும், இளமையும் கெட்டு தன்னுடைய கொண்டாட்டம் எல்லாம் குறைந்தது. நாணம், மடம் அச்சம் எல்லாமும் போய்விட்டன (எ—று) 15

528

இடைய றாதநல் குரவுவந் துணவினு மிளைத்து
விடைய ரோகவே தனையினான் மெலிந்துளம் வருந்தி
நடையி லோய்வுகண் டியாவரு மிகழ்ந்தனர் நகைத்தார்
கடைய ளென்றுரை கழறினா ரணுகுதல் கடிந்தார்.

(இ—ள்) நீங்காத தரித்திரம் வந்தடைந்தது. உணவுக்கும் வழியில்லாமல் உடம்பு இளைத்து பல ரோகங்கள் வந்தடைந்ததனால், மெலிந்து உளம் வருந்தி,நடக்கவும் சத்தியற்று, இருந்தாள் இதைப் பார்த்தயாவரும் இகழ்ந்தார்கள், பரிகாசம் செய்தார்கள் மிகவும் கீழானவளென்று கருதி ஒருவரும் சமீபத்திற்குப் போவதற்கும் அருவருத்து நீங்கினார்கள் (எ—று) 16

529

இத்தி றத்தெழு பருவமுங் கடந்து மூப் பெய்திச்
சுத்த நீதியிற் றலைப்படத் தொன்மைசே ருலகோ
ரத்தர் புக்கொளித் திருவவி நாசியா ருடையார்
சித்தி ரைப்பெரு விழாவெனச் சேறல்கண் டலர்ந்தாள்.

(இ—ள்) இந்தவிதம் பெண்களுக்குரிய ஏழு பருவங்களும் கடந்து கிழத்தன்மையை அடைந்து, பழமையான உலகத்திலுள்ளவர்கள் மேன்மையான நீதியிற் சிறக்கும்படி, சிவபெருமான் அமர்ந்த

ருளிய திருப்புக்கொளியூர் அவிநாசியில் நடக்கின்ற பெரிய சித்திரைமாதத்து உற்சவத்துக்குப் பக்தர்கள் கூட்டம் கூட்டமாகச் செல்லுதலைக் கண்டாள் (எ-று) 17

பருவம் எழு பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை தெரிவை-பேரிளம் பெண்-என்பன.

530

தேச மெண்பரி சனரில்வீ ணையுங்கொடு சென்று
வாச மங்கல வடபரி சாரமாம் வளநாட்
டாச கன்றன திருவவி நாசியை யடைந்து
வீசு மஞ்சரித் தோரண வீதியும் புகுந்தாள்.

(இ-ள்) அப்படிச் செல்லுகின்றவர்களோடு தானும் செல்ல வேண்டுமென்று நினைத்து, வீணையையும் எடுத்துக்கொண்டு மங்களகரமாக விளங்குகின்ற வளம் பொருந்திய வடபரிசார நாட்டில் உள்ள, குற்றம் இல்லாத திரு அவிநாசித்தலத்தையடைந்து, அசைகின்ற பூங்கொத்துகளால் அலங்கரிக்கப்பட்ட தோரணங்கள் கட்டிய வீதியைஅடைந்தாள் (எ-று) 18

531

பொய்ய கற்றயி ராவதப் பொய்கைநீர் மூழ்கி
மெய்ய ழுத்திய நீறுடன் வீணையுங் கையுமா
யையர் புக்கொளி நாதர்முன் கவரிசின் றசைக்குந்
தைய லர்க்கெதிர் நாடகி சந்நிதி யடைந்தாள்.

(இ-ள்) பொய்சொல்லுதலினால் உண்டாகிய பாபத்தைப் போக்குகின்ற அயிராவத தீர்த்தத்தில் மூழ்கி, சரீரத்தில் விபூதியைத்தரித்து கையில் வீணையை ஏந்தி இறைவராகிய திருப்புக்கொளியூர் நாதரது சந்நிதிமுன்னே சாமரைவீசுகின்ற பெண்களுக்கு எதிராக வந்து அடைந்தாள் (எ-று) 19

532

எழுந்து செம்பொனின் றுவசபா தத்தரு கிறைஞ்சித்
தொழுந்த வர்க்கெலா நீவியந் துகிலினை யொதுக்கி
யழுந்த வங்கையாற் றந்திரி முறுக்கியார்ந் தமர்ந்த
செழுந்தொ னிக்குர லிசைத்துநின் றருந்துதி செய்தாள்.

(இ-ள்) எழுந்து சென்று செம்பொன்மயமாகிய துவஜஸ்தம்பத்துக்கு முன் வணங்கி கடவுளை வணங்குகின்றபெரியோர்களுக்கு முன் வஸ்திரத்தை யொதுக்கிக்கொண்டு, வீணையையெடுத்து முறு

க்காணிகளை முறுக்கி, சாந்தமான இனியகுரலால் வீணை சுருதி யோடு பொருந்தும்படியாக அருமையான தோத்திரங்களைப் பாடி ஞள் (எ—று) 20

533

மூவ ராகிய பகவனே முதல்வனே யென்ருள்
ஆவ லாயிரு விழிப்புன லரும்புவ தடங்காள்
சேவ ரோதயர் கருணையுந் தெரிவைபே ரன்பு
மோவ ருவொளிர் காந்தமு மூசியும் பொருவ.

[இ—ள்] பிர்மா, விஷ்ணு உருத்திரன் ஆகிய மூவராயிருக்கிற வரே அந்த மூவர்களுக்குந் தலைவராயிருக்கின்றவரே, என்று துதித்தாள். ரிஷப வாகனத்தின்மீதமர்ந்து காட்சிதந்து கருணைபுரியுந் தன்மையும், பாடுகின்ற வளது நீங்காத பேரன்பும் காந்தமும் இரும்புஊசியும் போல் ஒன்றை யொன்று விட்டு நீங்காதிருந்தது [எ—று] 21

534

கால மங்கதிற் கடமுனி வடதிசை யினும்போந்
தேல மேல்கிரி மாயனை யிறைஞ்சியக் குணபான்
ஞால மொன்றிய சயம்புபூ சனைசெய்து நணுகி
மூல நாதனைச் சந்நிதி முன்னின்று பணிந்தான்.

[இ—ள்] இவ்விதம் அன்போடு இவள் பாடிக்கொண்டிருக்கும் போது, அகஸ்திய முனிவர் கைலாசத்துக்குப்போய்ச் சுவாமிதரிசனஞ் செய்து திரும்பி வந்து மேல்கிரியிலுள்ள விஷ்ணுவையும் வணங்கி அதற்குக் கீழ்ப்பக்கத்தில் சுயம்புவாய் விளங்குகின்ற சிவபெருமானைப் பூசித்து அதன்பின் காசியிலிருந்து வேர் ஓடிக் கிளைத்து எழுந்த கொழுந்தாயுள்ள மூலகாரணனைச் சந்நிதிமுன்பாக வந்து நமஸ்கரித்தார் [எ—று] 22

535

பணிந்த மாமுனி பாட்டினி பயிலிசை கேட்டுத்
திணிந்த ஞானபோ தகக்கணுற் றிலத்திலத் தனைபார்த்
தணிந்த பூதியு மகத்தன்பு மறிந்தவக் கணமே
தணிந்து போயின வமரர்கோன் புணர்த்திய சாபம்.

[எ—று] நமஸ்கரித்த அந்த அகஸ்தியமுனிவர், பாடுகின்ற தாசியின் இனிய இசையைக்கேட்டு ஞானதிருஷ்டியால் பார்த்தார் பார்த்து அவள் தரித்துள்ள விபூதியையும், அவளுடையமனத்தின் கண் உள்ள அன்பையும் அவர் அறிந்து கொண்ட அந்த க்ஷணத்தி

லேயே அமரர்கோனாகிய இந்திரன் இட்ட சாபம் நீங்கியது [எ-று] 23

536

அண்ண லார்தமக் காரமு தருத்துதற் கமைத்த
வெண்ணி லாததற் காலமென் றெவரொடு மகன்று
வண்ண வாலயம் வலம்வந்து மாலியம் பருகித்
தெண்ணி லாமுகக் கணிகையுந் தெருவுழிச் சென்றாள்.

[இ-ள்] சிவபெருமானுக்குத் திருவமுது செய்தற்குரிய நைவேத்தியம் ஆவதற்கு மிகவும் காலமாகுமென்று அழகிய ஆலயத்தை வலம் வந்து, அபிஷேகமான தீர்த்தம் முதலியவற்றைப்பருகி தெளிவான சந்திரன்போன்ற முகத்தையுடைய அத்தாசியும்தெரு வழியாகச் சென்றாள் [எ-று] 24

537

சரியு மாநதி யோங்குசெஞ் சடிலநா யகரை
யுரிய சித்திர நவமணித் தேர்மிசை யுயர்த்துப்
பரிச னத்தவ ரணிவடம் பற்றநீள் பசும்பொற்
கிரிநடப்பது போன்றது வீதியிற் கெழுமி.

[இ-ள்] ஓடுகின்ற பெரிய கங்காநதியைத்தரித்து விளங்குகின்ற செவந்த சடையையுடைய சிவபெருமானைப்புதிய அழகிய மணிகள் கட்டிய தேரின்மேல் எழுந்தருளச்செய்து சூழ்ந்துள்ள பக்தர்களெல்லாம் அழகிய வடத்தைப்பற்றி இழுக்க. அந்தத்தேரானது, பொன்மலையாகிய மகாமேரு நடந்துவருவதுபோலத்தோன்றிற்று [எ-று] 25

538

தடங்கொ டேர்மிசைத் துகிலணி தயங்கிய முகிலோ
படங்கொ ணீள்கொடி பரவிய கோள்களின் பதமோ
குடங்கொ ளீவிழு தண்டமோ வண்டகோ ளகைமே
லிடங்கொள் வெண்குடைத் துருவமண் டலமதோ வென்பார்

[இ-ள்] பெரிய தேரின் மேலுள்ள வஸ்திரமானது ஆகாயத்தில் சஞ்சரிக்கிற மேகமோ என்று சொல்லும்படியும், கொடிவஸ்திரங்கள் பறத்தலானது விசாலமான ஒன்பது கிரகங்கள் இருக்கின்ற இடமோ என்று சொல்லும்படியும். குடம்போல் காணப்படுகின்ற ஸ்தூபி பழைய அண்டமோ என்று சொல்லும்படியும், அதன்மேல் வைத்திருக்கின்ற குடை துருவமண்டலமோ என்று சொல்லும்படியும் விளங்கிற்று [எ-று] 26

539

சுழல்வ தாகிய சகட்டெழு மோதையுந் துறந்த
கிழமை மாதவ ரரவொலி யோதையுங் கெடாது
பழகு பேரிதுந் துபிவளை தண்ணுமை படக
முழவி னோதையு மெழுகட லோசைபோன் முழங்க.

(இ-ள்) சுற்றுகின்ற தேர்ச்சக்கரம் உருளும்போது உண்டாகும் ஓசையும் துறவிகளான பெரியதவத்தைச் செய்கிறவர்களுடைய அரகர என்கிற ஓசையும், பேரிகை, துந்துபி, சங்கு, மத்தளம், படகம்குடமுழா முதலிய வாத்தியங்களின் ஓசை ஏழுகடல் ஓசை போல் முழங்கவும் (எ-று) 27

540

தரையில் வாசியிற் றந்தையின் மேடையிற் றளத்தி
னிரைகொள் சாலையிற் புரிசையிற் பரிசனர் நெருங்க
வுரைசெய் தேவர்கள் விமானங்க ளூடுவந் துலவ
வரைவில் வானமுந் தரணியு மொருவழி மயங்க.

(இ-ள்) வெறுந்தரையிலும் குதிரைமேலும், யானையின்மேலும், மேடையின்பேரிலும், தளவரிசைபண்ணின இடத்திலும், வரிசையாயுள்ள சாலைகளிலும், மதில்களின் பேரிலும் திரளாகச் சனங்கள் நெருங்கவும், கீர்த்திபெற்ற தேவர்களுடைய விமானங்கள் இடையிடையே உலாவவும், எல்லையில்லாத ஆகாயமும் பூமியும் ஒன்றாகமயங்கவும் (எ-று) 28

541

மன்னு தூபவண் புகையுமா குதிவனப் புகையு
மன்ன தானசீ டரங்கினி லமுதடு புகையும்
பொன்ன னார்குழ லகினறும் புகையுமே லெழுந்து
மின்னு மாகலோ கம்புகச் சிவமணம் வீசும்.

(இ-ள்) நிலைபெற்ற வாசனைத்தூபங்களினுடைய புகையும், யாகத்தில் உண்டான புகையும், அன்னதானம் செய்கின்ற தர்ம சத்திரத்தில் சமையல் செய்கின்ற புகையும், திருமகளை ஒத்த பெண்களது கூந்தலுக்குப் போடுகின்ற அகிலினது வாசனையுள்ள புகையும் பிரகாசிக்கின்ற தேவலோகமும் புகுந்து சிவமணம் வீசிக்கொண்டிருக்கும் (எ-று) 29

542

கொடியர் யாரும்வெங் கொலைஞரும் புலைஞருங் குறையா
மிடிய ராகிய பிணியரும் பணியரும் விடருங்
கடிய ராவணி திருவவி நாசியெங் கடவுள்
அடியர் பாததூ ளியின்மறைந் ததிசயம் பெறுவார்.

(இ—ள்) கொடிய குணமுள்ளவர்களும், கொலை செய்கிறவர்களும், புலைஞரும் குறையாத தரித்திரத்தை உடையவர்களும், வியாதியுடையவர்களும், காமிகளும் ஆகியஎல்லோரும் கடிக்கின்ற பாம்பை ஆபரணமாக அணிந்த திரு அவிநாசியில் உள்ள ஈசுவரனுடைய அடியார்களது பாததூளியின் தன்மேற் படுதலினாலே, தங்களுடைய பாபம் நீங்கி அதிசயிக்கும் படியாகப் புனிதத்தன்மை பெறுவார்கள். (எ—று) 30

543

காலை யந்தியாய் நெடியதேர் நிலையினிற் கலவா
வால யந்தனி லாதிநா யகரெழுந் தருளச்
சேலை வென்றக ணரிவையுந் தெரிசன முடித்து
மாலை யம்பொழு தயலினோர் வைகிடம் புகுந்தாள்.

காலையிலிருந்து மாலை நேரம் வந்தவுடன் நீண்ட பெரியதேர் நிலையினில் வந்து சேர்ந்து, ஆதிநாயகராகிய திருபுக்கொளியூரில் உள்ள சிவபெருமான் ஆலயத்துக்கெழுந்தருளினவுடன், சேல்மீனை வென்ற கண்களையுடையதாசியும், தெரிசனத்தை முடித்துக் கொண்டு கோயிலுக்கு வெளியே ஓரிடத்தில் தங்கியிருந்தாள் (எ—று) 31

544

திருந்து தத்துவர்க் கிரங்குவார் திருவருளமுதம்
விருந்த ளிக்கவுண் டுவட்டியூழ் வினைப்பசி தொலைந்தா
ளருந்து தற்கட னற்றன ளூற்றவாய் மொழிகேட்
டிருந்த னர்க்கியான் றலவுப வாசமென் றிசைத்தாள்

திருத்தமான உண்மை ஞானிகளுக்கு இரங்கியருள் செய்பவராகிய சிவபெருமானது, திருவருளாகிய அமிர்தத்தை விருந்தாக அளிக்க அதைப்போதுமென்ற அளவும் உண்டு ஊழ்வினையாகிய பசிநீங்கி விட்டாள். உண்ணவேண்டிய வேலையில்லாதவள் ஆனள் நீ உண்ணவேண்டியதில்லையா வென்றுகேட்கிறவர்களுக்கு இன்றைக்கு யான் இத்தலத்தில் உபவாசமிருக்கவேண்டியது என்னுடைய நியமம் என்று கூறினள் (எ—று) 32

545

தெரித வம்பெறு கருணையஞ் செல்விபுக் கொளிநீள்
புரியில் வந்தனு பூதிசேர் போதகக் கணிகை
யரிய சஞ்சித விருளகன் றருள்விளங் கியபோ
தூரிய கங்குல்போ யருணவெங் கதிரவ னுதித்தான்.

(இ—ள்) தவத்தினால் அடையும் பயனையருளுகின்ற கருணாலயச்செல்வி அமர்ந்திருக்கின்ற திருப்புக்கொளியூரில் வந்து திருவருள் பெற்ற நாடகக்கணிகை நீங்குதற்கரிய பழைய சஞ்சிதவினைகளாலாகிய அஞ்ஞானமாகிய இருட்டு நீங்கியதுபோல உலகத்தை மூடிய இருள் நீங்கும்படி உஷ்ணகிரணங்களையுடைய சூரியன் உதயம் ஆனான் (எ—று) 33

## 546

முந்து மக்கணந் துந்துபி முழக்கமோ வென்று
ளிந்தி ரப்பெரு விமானமோ விங்கிது வென்றுள்
சுந்த ரப்புரி யட்டக சூக்குமம் புகுந்தா
ளுந்து தற்பத மெய்தினு ளும்பர்நாட் டரம்பை.

(இ—ள்) தேவலோகத்தில் இருந்த அரம்பையானவள், அந்த நேரத்திலே தேவவாத்தியங்கள் முழங்க, அழகியபுரியட்டக சரீரம் என்னும் சூட்சுமசரீரத்தோடு இந்திரனுடைய பெரிய அழகிய விமானத்தில் அமர்ந்து முன்னிருந்த தனது பதவியை அடைந்தாள் (எ—று) 34

## 547

பாவ மாயிரந் திரண்டபெண் பிறப்பெனும் பரத்தை
மூவர் நாயகன் றிருவவி நாசியின் முடிந்து
தேவர் தம்பொனு டணைந்தமை திருநந்தி யுரைப்ப
வாவ விற்சனற் குமரன்கேட் டதிசய மடைந்தான்.

(இ—ள்) ஆயிரம் பாவங்கள் ஒன்றுசேர்ந்தது ஒரு பெண் பிறப்பென்று சொல்லக்கூடிய தாசியானவள் மூவர்களுக்கும் தலைவனாகிய சிவபெருமான் அமர்ந்தருளிய திருஅவிநாசித்தலத்தின் மேன்மையால் தேவர்கள் இருக்கின்ற பொன்னுட்டை அடைந்தாள் என்று நந்திதேவர் சொல்ல, சனற்குமார முனிவர் ஆசையோடு கேட்டு ஆச்சரியம் அடைந்தார் (எ—று) 35

## 548

ஈண்டு மத்தலத் ததிசய மிதுவென்கொ லுலகிற்
காண்ட குங்கொடுந் தீயசண் டாளவோர் காகந்
தூண்டு வெண்சுடர்க் கயிலைசென் றேறிய தொன்மை
மூண்டு கேள் சனற் குமரவென் றருணந்தி மொழிவான்.

(இ—ள்) மேன்மையுள்ள இந்தத்தலத்தின் ஆச்சரியம் இது எவ்வளவு? கொடிய சண்டாளத்தன்மையையுடைய ஒரு காகமானது, மிகுந்த வெண்மையான பிரகாசத்தையுடைய கைலாயமலையைப்போய் அடைந்த பழமையான கதையைச் சனற்குமார

*முனிவரே கேட்பீரென்று கிருபையையுடைய நந்திதேவர் சொல்லத் தொடங்கினர். (எ—று)* 36,

*ஒன்பதாவது தெய்வரம்பைச் சருக்கம் முற்றிற்று,*

*ஆகத்திருவிருத்தம்—548.*

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# காகச் சருக்கம்.

549

அதிர்பேரலை குலாவியற லூடுகயல் யாய்
முதிர்காவிரி பவானிமுறை கூடுதுறை சேர்
உதிர்பூவ தரிகான முளதா மதனையே
யெதிர்வேறுள தெனுதுசிவ பூமியென லாம்.

[இ—ள்] *சப்திக்கின்ற பெரிய அலையோடு கூடிய தண்ணீரில் கயல் மீன்கள் பாய்கின்ற பழமையான காவிரியும் பவானியும் கூடுகின்ற துறைகளோடு கூடிய மலர்களை யுதிர்க்கின்ற வதரிகாச்சிரமம் என்ற ஒரு வனம் உள்ளது. அது தனக்கு இணையில்லாத சிவ பூமியென்று சொல்லத்தக்கது. [எ—று]* 1

550

வேறு.

எண்ணரிய வத்தல மியங்குமுனி வர்க்கு
விண்ணுற வளர்ந்து குளிர் நீழலை விரித்து
வண்ணவியல் பாகிய பலங்களை வழங்கித்
தெண்ணரு மலர்த்தரு வசைப்பன சிரங்கள்,

[இ—ள்] *எண்ணுதற்கு அரிய பெருமையுள்ள அந்த வனத்தில் தலை வணங்குவரைப்போல் வளைந்து அசைகின்ற மரங்கள் ஆகாயத்தை அளாவி வளர்ந்து குளிர்ந்த நிழலையும் அழகிய நிறத்தோடு கூடிய பழங்களையும் அங்கு சஞ்சரிக்கின்ற முனிவர்களுக்கு கொடுக்ககூடியதாயும் [எ—று]* 2

551

ஓமம்வளர் தூமமுகின் மேனியி லொளிக்கும்
வாமமிகு வெண்பொரி மலர்த்திரளை மானுஞ்
சாமமறை யோதையளி யோதையொடு சாரு
நாமமுனி வோர்களுறை சாலையென நல்கும்,

[இ—ள்] மேலும் அவ்வனத்தில் வளர்க்கின்ற யாக குண்டங்களிலிருந்து எழுகின்ற புகையானது மேகமண்டலம்வரை போய் ஒடுங்ககூடியதாயும் வெண்மையான அழகிய பொரியானது புஷ்பங்கள் மிகுதியாயிருப்பதுபோல விழுங்ககூடியதாயும் சாமவேதத்தின் ஓசையானது வண்டுகள் சப்தத்தோடு சேர்ந்து சப்திக்ககூடியதாயும் பெயர்பெற்ற முனிவர்கள் வாசம் செய்வதற்கு நல்ல இடமாகவும் உள்ளது. [எ—று] 3

## 552

வாயுவல கிட்டுவரு ணன்புன றெளிப்பத்
தோயுமலர் வெண்புதிய சுண்ணநிறை தூவ
வாயுமவர் ஞானவொளி பாயிரு ளகற்ற
வேயுமண முன்றில்பொரு மவ்வனமெந் நாளும்.

[இ—ள்] எக்காலத்திலும் அவ்வனமானது, வாயுபகவான் கூட்டவும், வருணபகவான் நீரைத் தெளிக்கவும், வெண்மையான மலர்கள் வெண்மையான பொடியைத் தூவவும், கடவுளை ஆராய்கின்ற முனிவர்களுடைய ஞானவொளி மிகுந்த இருளைப்போக்கவும் திருமணச்சாலைபோலவும் விளககுகின்றது [எ—று] 4

## 553

தேசடரு மந்தவன வாசநிலை செய்ய
மாசற விளங்குதுரு வாசமுனி வந்து
நேசமிக வேயுரிய தேனுபய நீட
வீசனுயர் பூசனை யியைந்தினி திருந்தான்

[இ—ள்] பிரகாசமான அந்த வனத்தில் நிலைத்து வசிக்க விரும்பி, குற்றம்யில்லாமல் விளக்குகின்ற துருவாச முனிவர், மிகுந்த அன்புள்ள காமதேனுவானது மிகுந்த பாலைக் கொடுக்க அதனாலே சிவபெருமானுக்கு அபிஷேகம் முதலிய செய்து பூசை பண்ணிக்கொண்டு இனிதாக இருந்தார். [எ—று] 5

## 554

ஆறுமொரு நாளரனை யாடியருள் விக்கும்
பேறுடைய கோவரவு சீரிது பிழைக்க
வேறுபுரி பல்வகை விலங்கென நலங்கி
மாறுபடு கென்றுதவ மாமுனி சபித்தான்.

[இ—ள்] இவ்வாறு இருக்கின்றநாளில் ஒரு நாள், சிவபெருமானுக்கு அபிஷேகிப்பதற்கு பஞ்சகவ்வியத்தைத்தந்து அவருடைய அருளைப் பெறுதற்குப் பாக்கியமுள்ள அந்தக்காமதேனு உரிய கா

லத்தில் வராமல் தாமதிக்க தவத்தையுடைய துர்வாச முனிவர் கோபித்து, காட்டிலுள்ள மற்ற மிருகங்களைப்போல உன்னுடைய மேன்மை கெட்டு மாறுபடக் கடவாயென்று சபித்தார் [எ-று] 6

555

கேள்விபெறு மாவெதிர் கிடந்தலறி யூழ்கிக்
காழ்படு மனத்தினொடு கண்கலுழி பொங்கிப்
பாழ்விதி வசத்தைவினை விப்பதை பதைத்தே
வாழ்வகை யெனக்கருள்க வென்றடி வணங்க.

[இ-ள்] இவ்வாறு சபித்ததைக் கேட்ட காமதேனுவானது, கீழே விழுந்து கதறி வருந்தியமனத்தோடு, கண்களிலிருந்து கண்ணீர் பொங்கி வழிய தன்னுடைய பாழான விதிவசத்தை நினைந்து துடிதுடித்து முனிவரைப்பார்த்து, யான் இனிமேல், பிழைக்கும் வழியை அருள்செய்யவேண்டுமென்று பாதத்தை வணங்கியது. [எ-று] 7

556

மீனுவரி சூழுலகை வெல்லுமுனி யொல்குந்
தேனுவை நயந்துனது சாபவினை தீர
வானுயர் வராகவரை யின்வட புலத்தே
பானுவுட னேதவசு பற்றென விடுத்தான்.

மீன்களை மிகுதியாகவுடைய சமுத்திரத்தினால் சூழப்பட்ட உலக இன்பங்களைத் துறந்தவராகிய துர்வாச முனிவர், காமதேனுவை விரும்பிப் பார்த்து, உன்னுடைய சாபமானது நீங்கும்படி, மிக உயர்ந்த வராகமலையின் வடபக்கத்திலே இருக்கின்ற சூரியன் பூசைசெய்கிற பழனிமலையில் நீயும் அவனோடு பூசித்து உன் சாபம் நீங்குவாய் என்று கூறி அனுப்பிவிட்டார் [எ-று] 8

557

தண்ணிலவு மாநதி சயம்பரவு கூட
னுண்ணிறைவு கொண்டுமை யுகந்தருளி வாழ்வா
ரண்ணலை வணங்கி விடை பெற்றுலகின் மற்றும்
புண்ணிய தலம்பரவ வெண்ணிமுனி போவான்.

[இ-ள்] அதன்பின், குளிர்ந்த சந்திரனையும், பெரிய கங்காநதியையும் அணிந்த சிவபெருமானாகிய பவானி கூடலில் பார்வதியோடு மகிழ்ந்து வாழ்கின்ற அண்ணலை வணங்கி வழிபட்டு விடைபெற்றுக்கொண்டு உலகின்கண் உள்ள மற்றப் புண்ணிய தலங்களையும் தெரிசித்து வணங்க எண்ணி துர்வாசமுனிவர் செல்லத் தொடங்கினார் [எ-று] 9

## 558

### வேறு.

பூத லத்தெதிர் புக்கொளி புணர்குண திசைப்பான்
மாத வித்தளிர் வனத்திடை வளரும்வான் பொருளை
மேத கத்தனி யெம்பிரான் மிகுதியர்ச் சனையின்
போத கத்தமர் கந்தமா புரியுழைப் புகுந்தான்.

[இ-ள்] *பூமியில் மேன்மையான திருப்புக்கொளியூர் என்னும் க்ஷேத்திரத்திற்குக் கீழ்ப்பக்கத்தில் உள்ள குருக்கத்தியும், வசந்தமல்லிகையும் நிறைந்த வனத்தில் அமர்ந்திருக்கிற ஞானகுருவாயிருக்கின்ற முருகன் சிவபெருமானை மிகுதியாய் அர்ச்சனைசெய்துவீற்றிருக்கின்ற கந்தமாபுரி என்னும் திருமுருகன் பூண்டியை அடைந்தார்* [எ-று] 10

## 559

முருக நாமநா யகர்பத முண்ட கம் வணங்கி
யருகு நேர்பெரு காவணத் தினிதமர்ந் தருளிப்
பெருகு மித்தல மகிமையா தெனப்பிறங் காங்கோர்
செருகு சொற்பழ முறைதர வடமொழி தெரிந்தான்.

[இ-ள்] *அங்கு அமர்ந்திருக்கின்ற முருகநாதர் என்ற பெயரையுடைய சிவபெருமானது பாததாமரைகளை வணங்கி, அங்கேயுள்ள ஒரு மண்டபத்தில் அமர்ந்து. மேன்மையான இத்தலத்தின் மகிமை யாதென்று துருவாசமுனிவர் கேட்க, அங்கே பழமையான வடமொழியை நன்றாகத் தெரிந்த ஒரு பெரியவர் பதில் கூறுவாராயினர்.* [எ-று] 11

## 560

துன்று மந்நிலை பிதிர்க்களின் றீவினை தொலைய
வென்றி வேலிறை தானத்திற் கிரியைகள் விளைப்ப
வொன்று கோடிய பலன்றரு முவமைவே றிதற்கு
மன்றல் வாரிசத் தொருவற்கு மதிப்பரி தென்னும்.

[இ-ள்] *வெற்றிவேலைத்தரித்த திருமுருகன் அமர்ந்திருக்கிற இத் தலத்தில், பிதிர்க்களுடைய தீவினை நீங்கும்படி பிதிர்க்கிரியைகளைச் செய்தால், ஒன்று கோடியாகப் பலன்தரும் ஆதலால் இத்தலத்திற்குச்சமமாக ஒரு தலமும் இல்லை. இதன் பெருமை வாசனையுள்ள தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமதேவராலும் மதிப்பிட முடியாது என்று கூறினர்.* [எ-று] 12

561

நிகரி லவ்வுரை யுணர்ந்தன னெருநல்போ யினபின்
மகர வொண்பெருந் திங்களில் வருமமவாசி
பகரு மந்தநாள் வந்தெதிர்ப் பலித்தமை பார்த்துச்
சகர நீரெனத் தண்ணளி பெருகினன் றவத்தோன்.

[இ—ள்] சமானமில்லாத அந்த வார்த்தையை உணர்ந்த தூர்வாச மகா முனிவர் அன்று பொழுதுபோனபின் மறுநாள் மகரமாதமாகிய தைமாசத்து அமாவாசை வந்து நேர்ந்த படியால் அதைக்கண்டு குளிர்ந்த கருணைக்கடல் என்று சொல்லும்படி மிகுந்த மகிழ்ச்சியை அடைந்தார்[எ—று] 13

562

எதிர்ந்த காலையிற் புனல்படிந் திடையற விளைந்தே
யுதிர்ந்த சாலிக ளெடுத்துடைத் தூரியதண் டுலமும்
பிதிர்ந்த செந்துவை யொழித்தன சமிதையும் பிறழா
ததிர்ந்து பாய்நதிப் புனலுநீ டரணியின் கனலும்.

[இ—ள்] பொழுது விடிந்தபின் தீர்த்தக்கரையிற் சென்று நீராடி விபூதியைத்தரித்துக்கொண்டு, நன்றாய் விளைந்த நெல்லைக் குற்றி அரிசியாகச்செய்து பூச்சி புழுவில்லாத சமித்துக்களையும் சப்தித்துச் செல்லும் நதியிலிருந்து நீரையும் தீக்கடைகோலால்உண்டாக்கப்பட்ட நெருப்பையும் கொண்டுவந்து [எ—று] 14

563

நீச மின்றிய தானமு மியற்றிநேர் நிருதி
வாச மொன்றிய வுத்தியா னந்தனை மருவி
யீச னன்புறு பூசையும் யாகமும் புரிந்தாங்
காச றும்படி யோதனம் பாகமா வமைத்து.

[இ—ள்] இடத்தைச் சுத்திசெய்து, நிருதி திக்கிலுள்ள வாசனை பொருந்திய மலர்கள் நிறைந்த உத்தியானவனத்தை யடைந்து, சிவபெருமானுக்கு அன்பான பூசையையும், யாகத்தையும் செய்து, குற்றமில்லாமல் அன்னத்தைப்பாகமாகச் சமைத்து [எ—று] 15

564

தளிர்த்த காரையி னடகவி சாகவே புரிந்து
மிளிர்த்த மூவறு கடிகைசென் றேறிய வேலை
யொளிர்த்த சோதிபா லமுதினை யுறநிவே தித்துக்
குளிர்த்த சிந்தையாற் பிதிர்க்களுக் குணவையுங் கொடுத்து.

[இ—ள்] தளிரோடுகூடிய காரையிலையைக் கறியாகச்சமைத்து, பதினெட்டு நாழிகை முடிந்தவுடனே பிரகாசமான சோதிசொரூபரா

கிய சிவபெருமானுக்கு அமுதத்தை நிவேதனம்செய்து, சந்தோஷமா னமனதுடனே பிதிர்க்களுக்கு மந்திரபூர்வமாக உணவையும் கொடுத்து [எ-று] 16

565

பண்டு மானிடர் பசித்தவர்க் கோதனம் பகாமே
யுண்ட நால்வரு மைந்துசண் டாளயோ னிகளிற்
கொண்ட தோர்மர பின்வழி நிமித்தமைங் குணங்கள்
கண்டு மாதவக் குரிசில்கா கப்பலி யளித்தான்.

[இ-ள்] முற்காலத்தில் பசித்தமனிதர்களுக்கு அன்னம் பகிர்ந்து இடாதவர்களாகியுண்ட நான்குவருணத்தவர்களும், பஞ்சமாபாதகம் பண்ணுகிற சண்டாள குலத்திற் பிறப்பார்கள் என்றதை அறிவிக்கவும் சண்டாளப் பிறப்பை யடைந்தும் உயர்ந்த ஐந்து குணங்களை யுடையதாயிருத்தலினால் அந்தப் பெருமையை நோக்கி, பெரியதவத்தையுடைய துர்வாசர் காகத்துக்கு முதலில் பலியளித்தார் [எ-று] 17

காக்கையின் ஐந்துகுணங்களாவன காலை யெழுதல், காணுமலே புணர்தல், மாலை குளித்து மனைபுகுதல், சாலவே உற்றாரைக் கூவி உடனுண்டு வாழ்தலிவை கற்றோயோ காக்கைக் குணம் என்பதனால் அறிக.

566

வைத்த பிண்டத்தை வாயச மொன்றுகண் டணுகி
யித்து ருக்களை விளித்துட னுண்டுபார்ப் பினுக்கு
மொத்த வாறுவா யடக்கிநீ டும்பரின் குடபாற்
கொத்த லர்ந்த பூஞ் சோலையிற் குடம்பைநேர் குறுக.

[இ-ள்] வைத்த சோற்றுண்டையை காகம் ஒன்று பார்த்து நெருங்கி, தனக்குச் சினேகமான காகங்களைக் கூப்பிட்டு அவைகளோடு சேர்ந்து சாப்பிட்டு தன் குஞ்சுகளுக்குக் கொடுப்பதற்கு, வாயில் அடக்கிக்கொண்டு. ஆகாயவழியாகப் பறந்து சென்று, மேற்கில் கொத்தாக மலர்ந்த புஷ்பங்களையுடைய சோலையிலுள்ள தன்னுடைய கூட்டிற்குச சமீபித்தவுடன் [எ-று] 18

567

நார ணன்புக லாரண னணுகுதற் கரிய
பூர ணன்றிருப் புக்கொளிப் பிரானெழுந்தருளுந்
தோரணந்திகழ் வீதியிற் றெருகுவிசும் பினிலோர்
காரணந்தொடர்ந் தெழுந்தது பின்னுமோர் காகம்,

[இ-ள்] பிரமாவும் விஷ்ணுவும் அடையமுடியாதவராயுள்ள எங்கும் நிறைந்திருக்கிற, திருப்புக்கொளியூரில் உள்ள சிவபிரான் எழுந்தருளும் தோரணங்கள் கட்டப்பட்ட வீதியில், மற்றொரு காகம் அதன் வாயில் உள்ள இரையைக் கவரவெண்ணி எதிராகவந்தது [எ-று] 19

568

எதிர்ந்த காகமங் கதனிரை யிடைபறித் தடரப்
பிதிர்ந்த துண்டமுங் கண்டமும் பிறழவே மறிந்து
முதிர்ந்த காலத்திற் பகுந்ததோ ரன்னத்தின் முறைபோ
லதிர்ந்து வாய்விட வலகுவிட் டவிழ்ந்ததோ ரன்னம்.

[இ-ள்] வந்து எதிர்த்த காகமானது இதன் வாயில் உள்ள இரையைப் பறித்தவுடன், மூக்கும் தொண்டையும் விரிந்து சப்திக்க வாயிலிருந்து தவறி ஓர் அன்னம் கீழே விழுந்தது அந்த அன்னம் [எ-று] 20

569

அங்கண் விதியில் வேடமு நீறுமஞ் செழுத்துந்
தங்கு மந்தகன் றாங்கிய பலிக்கலந் தனிலே
பங்க மின்றிநேர் பலித்தமை யறிந்திலான் பதமாஞ்
செங்க ணுலறி வின்கணுற் சிறிதிடம் பெயர்ந்தான்.

[இ-ள்] அந்த விசாலமான வீதியில் திருநீறு பூசிச் சிவ வேடந் தரித்து திருவைந்தெழுத்தை யோதுகின்ற ஒரு அந்தகன் எடுத்துச் செல்லும் பிக்ஷாபாத்திரத்திலே விழுந்தது. அவன் அதை அறியாதவனாய் அவ்விடத்தை விட்டகன்றான் [எ-று] 21

570

அவ்வி டத்திலோ ரந்தணீர்ப் பந்தரு மவணே
தவ்வ லில்குளிர் நீழலு மிருப்பவை சார்ந்து
செவ்வி திற்பலி யோதன முண்டுதேக் கெறிந்து
கவ்வை யற்றிருந் தற்புதா னந்தத்திற் களித்தான்.

[இ-ள்] அகன்ற அந்தக்குருடன் சிறிது சமீபத்தில் தண்ணீர்ப் பந்தரும், குளிர்ந்த நிழலுமிருப்பதை அறிந்து, அங்கு தங்கி, பிச்சை அன்னத்தைச் செவ்வையாக உண்டு, யாதொரு கவலையுமில்லாமல், ஆனந்தமாய் மகிழ்ந்திருந்தான். [எ-று] 22

571

அன்ன தானமா வவிழிழந்தொன் றளித்தவக் காகம்
பின்னு மோதனந் தேடியே பெலி முன்னின் றெழுந்து
பன்னு தாருவிற் பார்ப்புறு சேக்கைநேர் படரத்
தன்னி னேர்கொடுந் தறுகண னறவுண்டை தெறித்தான்.

[இ-ள்] வாயிலிருந்த அன்னத்தை இழந்த அக்காகம், மறுபடியும் குஞ்சுகளுக்கு உணவூட்ட வெண்ணி அன்னத்தைத் தேடிப் பெற்று வாயிற் கவ்விக்கொண்டு, முன்னுள்ள மரத்திலிருக்கிற கூட்டுக்குநேராகவர, அதைக்கண்ட உயிர்க் கொலைக்கு அஞ்சாத நெஞ்சை

யுடைய ஒரு வேடன் வில்லை வளைத்து அதில் களிமண் உண்டையை வைத்து அடித்தான் [எ—று] 23

572

உரந் னிற்றனு வுண்டைபண் டூன்றிய வொல்லை
பரந்து வாய்விடுத் தலறிவிண் பறைவிடச் சுழன்று
துரந்து நேமியிற் றலைகெட வீழ்ந்துடல் துறந்து
வரந்த ருந்திருப் புக்கொளி மறுகுணின் றதுவே.

[இ—ள்] அந்த உண்டை மார்பில் பட்டவுடன் சீக்கிரமாகக் கீழேவிழுந்து, வாய்விட்டு அலறி சுழன்று பூமியில் விழுந்து உயிர் துறந்தது. அதன் உயிரானது மேன்மையான வரங்களைக்கொடுக்கும் திருப்புக்கொளி யூரில் தங்கியிருந்தது [எ—று] 24

573

அக்க ணந்தனி லரம்பைய ரள வில்விஞ் சையர்கண்
மிக்க செம்பொனின் விமானங்கொ டிழிந்துமேல் கொண்டு
தக்க வந்தர நெறியிலுத் தரதிசை யேறிச்
செக்கர் வேணியன் றிருவளர் கயிலையைச் செறிந்து.

(இ—ள்) அந்நேரத்தில், அரம்பா ஸ்திரீகளும், அளவில்லாத வித்தியாதரர்களும் மேன்மையான செம்பொன்னாலாகிய விமானத்தைக் கொண்டு வந்து இறங்கி தேவ உருவத்தோடு அக்காகத்தை விமானத்தில் ஏற்றிக்கொண்டு ஆகாயவழியாக வடதிசை சென்று சிவந்தசடையையுடைய சிவபெருமான் அமர்ந்திருக்கின்ற அழகு விளங்குகின்ற கைலையை அடைந்தது. (எ—று) 25

574

பரத நாடகன் பரையருட் பாகனற் றிருமுன்
விரத மேறுசா மீபமாய் வீழ்ந்தெழுந் தயலே
கரத லங்குவித் ததிர்நின்ற காகதன் றனைப்பார்த்
திரத மூறுசெம் பவளவா யிளநகை புரிந்து.

(இ—ள்) பரதநடனத்தைச் செய்கின்றவரும், உமையை யொரு பாகத்தில் உடையவரும் ஆகிய சிவபெருமானது சன்னிதிமுன்னே சென்று கீழேவிழுந்து வணங்கி நின்று எழுந்து பக்கத்திலே கையைக் குவித்து நின்ற காகதனைப் பார்த்து, இனிய செம்பவளம் போன்ற திருவாயில் புன்னகை புரிந்து (எ—று) 26

575

பத்தி யாலறம் பொருந்திய திருந்திழாய் பாராய்
சித்தி யாகநீ தவமுனஞ் செய்தபுக் கொளியிற்
சுத்தி யினவா யசமிது தனதுதுண் டத்தாற்
கொத்தி யேவரு மவிழிலொன் றவிழ்ந்தது கொள்கை.

[இ—ள்] பத்தியால் தருமங்களை வளர்க்கின்ற திருத்தமான ஆபரணங்களை அணிந்த பெண்ணே நீ முன்னே தவம் செய்து பலன் அடைந்த திருப்புக்கொளியூரில், சுத்தமில்லாத இந்தக் காகம் தனது மூக்கினால் கொத்தி வருகின்ற அன்னத்தில் சிறிது சிந்தின அன்னம் [எ—று] 27

576

இன்ன வாறுகொல் புகுந்ததென் றெந்தைவாக் கருள
வன்னை யாயுல கீன்றவ ளஞ்சலி புரிந்து
நின்னை யல்லது தமியளா னிகந்தது முளதோ
கன்ன லோவமு தின்பமோ பொருளெனக் கனிந்தாள்.

[இ—ள்] கண்ணில்லாத சிவ வேடந்தரித்தவனது பிச்சைப் பாத்திரத்தில் விழுந்ததனால் இந்த இடத்துக்கு வர ஏதுவாயிற்று என்று எமது பிதாவாகிய சிவபெருமான் கூற உலகங்களை யெல்லாம் ஈன்ற அன்னையாகிய பார்வதி, கைகூப்பி வணங்கி, தேவரீரையல்லாமல் என்னால் என்ன ஆகும் என்று கரும்போ, அமிர்தமோ என்று சொல்லும்படியான இனிய சொல்லால் கூறினாள் [எ—று] 28

577

அன்று காணிம யாசலை யேயநின் றிலையே
யென்று மேயநம் வாமபா கத்தினி திருந்து
மன்றல் வாவுபுக் கொளிதனில் வலப்புறம் பெறலா
லொன்று கோடிய பலன்களென் றுரைசெய்தா னுடையோன்.

[இ—ள்] மலையரசன் மகளாகிய பார்வதியே, எப்பொழுதும் நீ நம்முடைய வாமபாகத்திலிருந்து, இந்த மங்களமான திருப்புக்கொளியூரில் வலப்பாகத்தை நீ அடைந்ததனால், இதில் தருமஞ் செய்தால் ஒன்றுக்குக் கோடியாகப் பலன் உண்டாகும் என்று சிவபெருமான் கூறினார் [எ—று] 29

578

ஏற்கு மாறுநின் றிமையவ ரிறைஞ்சுபே ரவையிற்
கார்க்கு லோதய மெனநின்ற காகதன் றனக்குத்
தீர்க்க துண்டனென் றொருபெயர் திருந்தவாக் கருளி
யார்க்கு மேலென வுறைகவென் றிருங்கதி யளித்தான்.

[இ—ள்] தேவர்கள் நின்று கொண்டு பிரார்த்தித்து வணங்குகின்ற பெரிய சபையிலே, இருட்டே வடிவமான காகதனுக்குத்தீர்க்க துண்டன் என்ற ஒரு அழகிய நாமம் இட்டு நீ யாவருக்கும் மேலாக இங்கு வசிக்கக்கடவாய் என்று அதற்கு உயர்ந்த பதவியைச் சிவபெருமான் தந்தருளினார் [எ—று] 30

579

சொல்லு மங்கிலே சோதிடத் துயர்தினந் தோறும்
பல்கொ ழுங்கனி சருக்கரை பாயச முதற்று
வொல்கு தாபதர் தேசிகர் மகேசருக் குவந்து
நல்கு மன்னதா னப்பல னவிற்றுமா றெளிதோ.

[இ—ள்] சோதிடத்திற் சொல்லப்படுகின்ற உயர்ந்த தினங்களில் எல்லாம், பல செழிப்பான கனி, சருக்கரை, பாயசம் முதலியவகை யோடு தபசிகள் தேசிகர் மகேசுவரருக்கு உவப்போடு உண்பிக்கும அன்னதானத்தின் பலனைச் சொல்லுதல் எளிதோ சொல்லமுடியா தென்றபடி [எ—று] 31

580

தரும மீதென்று காகத னடைந்தசற் கதியி
னருமை கேட்டவ ரளப்பிலா வன்னதா னத்தின்
பெருமை வல்லவ ரென்றெழிற் பிறங்குசீர் நந்தி
தரும வாய்மைபெற் றலர்ந்தனன் சனற்குமரேசன்.

[இ—ள்] காகதன், தருமம் இது வென்று அடைந்தநல்லகதியின் வரலாற்றின் அருமையைக்கேட்டவர்கள் சொல்லமுடியாத அன்ன தானத்தின் பெருமையை நன்கறிந்தவராவார் என்று அழகியபெரு மையையுடைய நந்திதேவர் கூற அவ்வுண்மையைக் கேட்ட சனற் குமார முனிவர் மிகுந்த சந்தோஷத்தை யடைந்தார் [எ—று] 32

பத்தாவது காகச் சருக்கம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—580.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# எஞ்ஞகுத்தச் சருக்கம்.

581

பரம்பரன் றிருவோ லக்கம் பண்ணவர் நெருக்கந் தீரப்
பிரம்பினு லடர்க்குஞ் செங்கைப் பெருந்திற னந்திதேவ
னுரம்பெறு சனற்கு மார னுண்மகிழ்ந் துவந்து கேட்ப
வரம்புடை யெஞ்ஞ குத்தன் செய்கையை வழுத்த லுற்றான்.

[இ—ள்] திருக்கைலாய மலையில், சிவபெருமான் திருவோலக் கமண்டபத்தில் வீற்றிருத்தலைக்கண்டு தெரிசிக்கவருகின்ற தேவர்களு

டைய நெருக்கம் நீங்கும்படி, பிரம்பினால் அடிக்கும் சிவந்தகையையும் மிக்கவல்லமையையும் உடைய திருநந்திதேவர், மேன்மைபொருந்திய சனற்குமாரமுனிவர் மனமகிழ்ந்து கேட்க, வேதவரம்பின்படி நடந்த எஞ்ஞகுத்தனது சரித்திரத்தைச் சொல்லத்தொடங்கினார் [எ—று] 1

582

மன்னுபுக் கொளியாங் காசி வாரண வாசி மூதூர்
முன்னவன் றிருக்கண் சாத்துக் குரியவர் முகத்துவார
சன்னிதிக் குணபா கஞ்சேர் தானமார் ஞான பூமி
முன்னமும் பகர்ந்த தொன்னீண் முல்லையந் திணைகு ழெல்லை.

[இ—ள்] வாரணவாசியென்னும் பெயரையுடைய காசியினது கொழுந்தாக நிலைபெற்ற பழமையான திருப்புக்கொளியூரிலே, சிவபெருமானது திருக்கண்ணோக்கம் படுகின்ற சந்நிதிக்கு, கீழ்ப்பக்கத்திலே, பழமையான முல்லைநிலமாகிய எல்லையிலே ஒரு ஞான பூமி உள்ளது, [எ—று] 2

583

பாதவஞ் செறிந்து சேர்ந்த பாசடைக் கொம்பர் தோறுந்
தாதவிழ் மலரைச் சூழ்ந்த தமனியத் தறுகா லோதை
மாதடங் குருளை மாக்கள் வளரிளஞ் செவியான் மாந்திப்
பூதல மகிழ்ந்து வெவ்வே றிடங்களிற் பொருகண் டுஞ்சு ம்.

[இ—ள்] மரங்கள் நிறைந்து பசுமையான இலைகள் நெருங்கிய கிளைகள் தோறும், மகரந்தத்தோடு மலர்ந்த மலரைச் சுற்றியுள்ள, பொன்னிறமான வண்டுகளின் ஓசையைப் பெரியபலமிருகங்களின் குட்டிகள் காதுகளினால் கேட்டு மிக மகிழ்ச்சியடைந்து வெவ்வேறிடங்களிலும் தங்கி நித்திரை செய்யவும். [எ—று] 3

584

மன்றலந் துளவு தோய்ந்த மரகத மணியை வேண்டி
நின்றன குருந்தங் காயா நீழல்சே ரரங்கு கோலுங்
கன்றையு மலது காணக் கபிலைபா லமுதங் காலும்
கொன்றைபொன் வழங்குஞ் சார்ந்த குமிழுமங் குமிழுஞ் சுண்ணம்

[இ—ள்] வாசனையுள்ள துளசிமாலையைத் தரித்த மரகத இரத்தினத்தைப் போலப்பிரகாசிக்கின்ற, திருமாலைப் பிரார்த்தித்து நிற்பனபோல குருந்தமரங்கள், காயாமரங்கள் அடர்ந்த சபையிலே நிற்கின்றதம்கன்றுகளைக் காண்பதற்கு முன்னே கறவைப்பசுக்கள் பாலைச் சொரிவும். கொன்றை மரங்கள் பொன் போல மலர்களைச் சிந்துகின்றனவாயும் குமிழஞ் செடிகளும் மகரந்தப் பொடிகளை உதிர்க்கின்றன வாயும் [எ—று] 4

585

அவ்வனத் திடையி லேவந் தசுர றுத் தொழித்த வாற்று
லெவ்வியற் கையுமொன் ருக வியங்கவோர் சிவலிங் கத்தைப்
பவ்வமற் றெவரும் வாழப் பச்சிம முகந்தா பித்துச்
செவ்வயிற் குகன்பூ சித்த திருநக ராய தன்றே.

(இ—ள்) மிருகங்களும் பறவைகளும் பகையென்பதில்லாமல் கலந்து வாழ்கின்ற அந்தவனத்தின் மத்தியில், செம்மையான வேலாயுதத்தைத் தரித்த முருகக் கடவுள் அசுரர்கள் கூட்டங்களை வேரறுத்து ஒழித்து, வந்து தங்கிப்பாவம் நீங்கி எல்லாரும் வாழும் படி, சிவபெருமானை மேற்குமுகமாகத்தாபித்துப்பூசித்த திருமுருகன் பூண்டியென்ற ஒரு நகரம் உள்ளது. (எ—று) 5

586

கணித்தநா ணிருதிப் பாலாற் கனைகடல் குளித்த வேலா
லணித்ததோர் தீர்த்தங் கண்டங் கறுமுகச் சிறுவன் போற்ற
மணித்தடம் பரசு பாணி மகிழ்ந்தன னத்தீர்த் தத்திற்
பணித்தெழு பலனும் பேறும் பருவமு முரைக்க லுற்றும்.

(இ—ள்) ஆறுமுகங்கள் உள்ள கடவுள், தனக்குநிருதித்திக்கில் சப்திக்கின்ற கடலில் மூழ்கியெழுந்த வேலாயுதத்தினுல் ஒரு தீர்த்தம் உண்டாக்கி நல்ல நாளில் அந்தத்தீர்த்தத்தால், பெரிய அழகிய மழுவாயுதத்தைத் தரித்த கைகளையுடைய சிவபெருமானுக்கு அபிஷேகம் பண்ணச் சிவபெருமான் மன மகிழ்ந்தார். ஆனதால் அத்தீர்த்தத்தில் முழுகுதற்குரிய காலங்களையும் கூறுகின்றோம். (எ—று) 6

587

கார்த்திகை மதியி லர்றல் கலந்ததிற் புகர்வா ரத்தி
லேத்தரும் பருதி தோற்றத திருவிழி யிசைய நாட்டிக்
கோத்தெடுத் தந்நீர் கொண்டு குகன்றிரு வெழுத்தா லாட்டி
மூத்தசொற் புகன்று ருறு முறைபெற வலம்வந் தோர்கள்,

(இ—ள்) கார்த்திகை மாதத்து வெள்ளிக்கிழமையில் கார்த்திகை நாளில் யாவரும் துதிக்கின்ற சூரிய உதயகாலத்தில், அந்தத் தீர்த்தத்தை எடுத்துக்கொண்டு முருகனுடைய மந்திரங்களைச் சொல்லி அபிஷேகம் செய்து துதித்து முப்பத்தாறு முறை வலமாக வந்து தரிசித்தவர்கள் (எ—று) 7

588

முயலகங் கரிய குட்ட முழுநிறச் சுவேத ரோக
மயலிவை முதலா வுள்ள வருந்தநீர்ந் துலகில் வாழ்வா
ரியல்புடன் றினமு நோற்று ரிருநிதிக் கிறையா யப்பாற்
புயற்பரி யுகைப்போன் றெய்வப் புவியையும் புரப்ப ரன்றே.

(இ-ள்) முயலகன் என்னும் நோயும், கருங்குஷ்டம், வெண் குஷ்டம், பயித்தியம் முதலிய நோய்களும் நீங்கப்பெறுவார்கள். மேலான வாழ்வை அடைவார்கள் கிரமமாகத்தினமும் இவ்வாறு செய்கின்றவர்கள் குபேரன்போல வாழ்ந்து, பின்மேகவாகனத்தை யுடைய இந்திரனது பொன்னுட்டையும் ஆளுவார்கள். (எ-று) 8

589

தாணுவுத் தரபா கத்தோர் தனுசரம் படர்தா னத்தின்
மாணுறு தீர்த்த மொன்று மதிமநுப் பெயரால் வைகுங்
காணுமப் புனலின் மூழ்கக் கரவசத் தியம்பொய் யென்னுங்
கோணுறு பவங்கள் யாவுங் கோடிவிற் கடைபோ மன்றே.

(இ-ள்) சிவபெருமான் இருக்கின்ற இடத்திற்கு வடபாகத் தில் ஒரு வில்லிலிருந்து பாணம்போய் விழுகிற தூரத்தில் பெரு மை பொருந்திய தீர்த்தம் ஒன்று சந்திரனுடைய பெயரால்விளங்கு வது, அந்தத் தீர்த்தத்தில் மூழ்கினுல், வஞ்சனை, பொய் முதலிய வைகளால் உண்டாகும் பாவங்கள் வெகுதூரம் போய்விடும் (எ-று) 9

590

அத்திருச் சயம்பு தானத் தனலவன் றிசையி லாரச்
சத்திய தீர்த்த மென்றோர் சலோதய முளதா மங்க
ணித்திய நானஞ் செய்வார் நிகழ்சர வணத்திற் றோன்றும்
வித்தக னருளாற் றொல்லை வினைப்பய னவையும் வெல்வார்.

(இ-ள்) அந்த அழகிய சுயம்புமூர்த்தியிருக்கின்ற இடத்திற்கு அக்கினிதிசையில் சத்தியதீர்த்தம் என்று ஒரு தீர்த்தம் உள்ளது. அத்தீர்த்தத்தில் தினந்தோறும் ஸ்நானம் செய்கிறவர்கள், சரவண பவனது திருவருளால் முற்பிறப்பிற்செய்த பாவங்களெல்லாம் நீங்கப் பெறுவார்கள். (எ-று) 10

591

இன்னதன் மையினு லோங்கி யிருமைசேர்ந் திலங்குந் தான
முன்னமர் முருகர் நாமம் புனைந்துள மூதூ ராகிப்
பொன்னணி மாட வீதிப் புரிசையின் வரிசை போந்து
பன்னரு மறையோ ராதி பல்குடி நிறைந்த பாங்கர்.

(இ—ள) இந்தத்தன்மைகளினால் ஓங்கிப் பெருமைபொருந்தி விளங்குகின்ற திருமுருகன் பூண்டியானது பொன்மயமான அழகிய உப்பரிகைகளோடு கூடிய வீதிகளும் மதில்களும் நிறைந்து, சொல்லுதற்கரிய, பெருமைபொருந்தியது அந்தணர்கள் முதலான பல வருணத்தார்களும் நிறைந்து விளங்குகின்ற அவ்வூரின் நடுவில் (எ—று) 11

592

தெருவுறுஞ் கடையுஞ் சேர்ந்த தெற்றியு மதன்மேன் மிக்க
கருவுலச் சரக்கும் போந்த காயங்கள் பலவுங் குன்றாப்
பெருநனிப் பலபண் டத்தின் பிறழ்ச்சியுந் தனமும் பெய்தங்
கிருநிதிக் கிழவோ னென்ன விருந்தன னெஞ்ஞ குத்தன்

(இ—ள்) எஞ்ஞகுத்தன் என்னும் ஓர் வைசியன்தெருவிலுள்ள திண்ணையில் கடைவைத்து பலசரக்குகளையும், குறையாமல் வைத்துக்கொண்டு அதனோடும் காசுக்கடையும் வைத்து, மிகுந்த செல்வத்தையுடைய குபேரன் போல வாழ்ந்து கொண்டிருந்தான் (எ—று) 12

593

விண்டுவுக் குரிய நாம வெண்குறி நுதலின் மேவித்
திண்டிறற் புயத்தின் மார்பிற் றிரிவிதப் புரிநூல் சேர்த்தி
யெண்டரப் பொருத சிந்தை யிராசத குணத்தி னால்வீண்
பண்டியை வளர்த்துக் காமப் பயிர்விளைத் தொழுகா நின்றான்.

(இ—ள்) மகாவிஷ்ணுவுக்குரிய பட்டை நாமங்களை. நெற்றியிலும்,புஜத்திலும் மார்பிலும்தரித்துக்கொண்டு, மூன்றுபுரி கொண்ட பூணூலையும் அணிந்து எண்ணமுடியாத இறுமாப்பாகிய இராசத குணத்தினால் வீணாக வயிறு நிறைய உண்டு, காமமாகிய பயிரை வளர்த்துக்கொண்டு வருகிறகாலத்தில் (எ—று) 13

594

ஆவிகண் டகமென் றேயோ ரவுடதச் சரக்கு வேண்டின்
மேவிய கிரயந் தன்னின வியன்பதின் மடங்கு கொள்வா
னீவிய துலையாற் றூக்கி நிறைசெய்து குறையே நேர்வ
னாவினா லுண்மை சொல்லான் பொறையிலான் பயிலு நாளில்.

(இ—ள்) பிராணனைக் காப்பாற்றுவதற்கு ஒரு மருந்துச் சரக்கு வேண்டு மென்று கேட்டால். அதற்குள்ளவிலையைவிடப் பத்து மடங்கு அதிகமாகச் சொல்லிவிற்பான் உயர்ந்த தராசில் நிறைய வுள்ளது போலத் தூக்கிக் காண்பித்து, குறைவாகவே சாமான்

களைக் கொடுப்பான். நாவினால் ஒரு காலத்திலும் உண்மை சொல்ல மாட்டான். பொறுமையென்பது சிறிது மில்லாமல் வாழ்ந்துகொண்டிருக்கும் நாளில் (எ—று) 14

595

செல்வியங் கருணை பாகன் றிருவவி நாசி மூதூர்
தொல்விதி மேடத் திங்கட் டொகுவிழா வியாபாரங்க
ணல்வளம் பெருக்கி யேற்றி நடாத்தியத் தலத்தை நண்ணி
வல்விடைக் கொடிசூழ் கீழ்பான் மறுகிடைக் கடை வகுத்தான்.

(இ—ள்) கருணாலயச் செல்வியை ஒரு பாகத்தில் உடைய சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற பழமையான திரு அவிநாசித் தலத்தில், வெகுநாளாக நடந்து வருகின்ற சித்திரைத் திருவிழாவில், வியாபாரம் செய்வதற்காக மிகுதியான சாமான்களை வண்டியில் ஏற்றிக்கொண்டு சென்று அத்தலத்தை அடைந்து, வலிமையான கொடிமரத்துக்குக் கீழ்ப்பக்கத்தில் உள்ள வீதியில் கடை வைத்துக்கொண்டிருந்தான் (எ—று) 15

596

நிலைசெயுந் தெற்றிமீது நிரப்பிய சரக்கை நேர்ந்து
விலைசெயும் பருவந் தன்னில் வீதிவாய் விலங்க லொன்றைச்
சிலைசெயும் பெருமா னந்தித் திருவுலா வரவின் மாரன்
கலைசெயுங் கணிகை மாதர் சாயலிற் கருத்தை வைத்தான்.

(இ—ள்) நிலைபெற்ற திண்ணையில் தான் கொண்டுவந்த சரக்குகளையெல்லாம் நிரப்பி வியாபாரம்பண்ணிக்கொண்டிருக்கும்போது திருவீதியில் மகாமேருமலையை வில்லாகவளைத்த சிவபெருமான் உலாவர அப்போது மன்மதனது கலையில் வல்ல கணிகைமாதர்கள் நடனம் செய்வதில் மனதைச் செலுத்தினான். (எ—று) 16

597

அந்தவான் மகளிரன்ன ராடக மணிக்கோ லோச்சிக்
கொந்தவிழ் பின்ன லோதி குலவவண் கொங்கை பொங்க
விந்துவா ணுதல்வேர் வார விடைதுவண் டொசிய நாக
பந்தமா வசந்த சாரி பாடியா டுதலுங் கண்டான்.

(இ—ள்) அந்த தேவலோகத்து அரம்பைமாதர்களை ஒத்த கணிகையர்கள் பொற்பிரம்பை ஓங்கி கொத்தாக மலர்ந்த பூக்களைப் பின்னலாக அணிந்த கூந்தல் அவிழவும் வளப்பமான தனங்கள் விளங்கித் தோன்றவும், சந்திரனைப்போலும் நெற்றியில் வியர்வை உண்டாகவும் இடுப்பானது துவண்டு வளையவும், நாகபந்தம்

*என்கிற அதாவது நாகவராளி என்கிற இராகத்தோடு கூடிய யாட்டைப்பாடி அதற்குத்தக்கபடி நிர்த்தனம் பண்ணுதலேயும் கண்டான் (எ—று)* 17

598

பின்னரே சென்ருன் கோயிற் பெருந்திரு வாயிற் புக்கான்
பன்னகா பரணன் மேவும் படிவமண் டபத்திற் போந்தான்
அன்னபோ தந்திக் காப்புக் கணுகிின் றரிவை யார்பால்
மன்னிரு விழியு நெஞ்சும் வைத்தனன் மறந்தான் றன்னே.

(இ—ள்) *பின் அவர்களோடே கோயிலுக்குச் சென்ருன் பெரியதிருவாயிலுக்குள் புகுந்தான். பாம்பை ஆபரணமாகத் தரித்த சிவபெருமானுடைய அலங்கார மண்டபத்துக்குப்போய் அந்திக் காப்புக்காக சமீபித்து நின்ற அந்தக் கணிகையரிடத்தில் இரு கண்களையும், மனதையும்வைத்தான் தன்னேமறந்தான் (எ—று)* 18

599

ஒளிகிளர் தீபமேந்தி யுபநிட தத்தோர் மாற்றத்
,தெளிவுற விளக்கும் வேலே திடுக்கெனும் பார்வை தீட்டக்
கிளிமொழிக் கருணே பாகன் கிரணபே ரழகு ஞானத்
துளிவிழி வசிட்ட னின்று தொழுந்தெரி சனமுங் கண்டான்.

(இ—ள்) *ஒளி விளங்குகின்ற தீபத்தை ஏந்தி உப நிஷத்தை உணர்ந்த அந்தப்பிராமணர்கள் தெளிவாகத்தெரியும்படி தீபாராதனே செய்யும்போது கிளிபோன்ற வார்த்தையையுடைய கருணலயச் செல்வியை ஒரு பாகத்திலுடைய சிவபெருமானது பேரழகையும், கண்களிலிருந்து ஆனந்த அருவி சொரிய வசிட்ட முனிவர் நின்று வணங்கித் தெரிசிப்பதையும் கண்டான் (எ—று)* 19

600

கணிகையர்க் கினிய தூசுங் கனகமு மியற்றி வேட்கை
தணியுமப் பொருட்டாற் போந்தான் சபாமணி மண்ட பத்தின்
அணிகெழு மறையோர் கூட்ட மண்ணலார் தலமான் மீயத்
திணிகதைச் சுலோக பாட லிசைத்தமை செவியி லுற்ருன்.

(இ—ள்) *பின் தாசிகளுக்கு வஸ்திரமும் திரவியங்களும் கொடுத்துத் தன் ஆசையைத்தீர்த்துக்கொள்ள எண்ணிப்போகிற காலத்தில் அழகிய சபாமண்டபத்தில், மேன்மை பொருந்திய கூட்டம், அவிகாசித்தல மான்மியத்தை வடமொழியிலுள்ளதைத் தமிழில் மொழி பெயர்த்துச் சொன்னதைக் காதுகளினல் கேட்டான் (எ-று)* 20

601

ஒண்டொடி மடவார் கீத வோதையென் றணுகிப் பார்க்கத்
திண்டிறன் மாச்செ விக்குச் செவிகண்டு சிலபோ துற்றான்
றண்டக விரத நோற்ற தாடகை சரிதை நூலி
னுண்டெனு மமர பாகத் தொருபதத் தொருசொற் கேட்டான்.

[இ—ள்] பிரகாசமான பொன்வளையல்களை யணிந்த கணிகையருடைய சங்கீத ஓசையென்று சமீபித்துக்கேட்க அவனுடைய வலிய பெரிய காதுக்கு இனிமையாயிருத்தலைக்கண்டு சிறிது தாமதிக்க அவிநாசிப்புராணத்தில் தாடகை தவம்செய்த கதையின் பிற்பாகத்தில் உள்ள ஒரு சொல்லைக் கேட்டான் [எ—று] 21

602

மற்றவுங் கேட்பான் மாதர் மயற்றிரைப் பெருக்கா றீர்ப்ப
நிற்றலை யாற்றான் போந்து நிகழிடத் துதரச் செந்தீப்
பற்றலும் பொருமே யன்னம் பலகறி யமைக்கும் பாலோர்
பெற்றதும் பெறுது மாகக் கொணர்ந்துதா லத்திற் பெய்தார்,

[இ—ள்] முழுவதுங்கேட்பதற்குமுன்னே பெண்ணாசையாகிய பெரிய ஆறு இழுத்துச் செல்லுதலாலே, நிற்கமுடியாதவன் ஆகி போகிறபோது மிகவும் பசிவந்தபடியால். அன்னம் பலவகைக்கறிகள் சமைக்கிற இடத்துக்குச் சென்று உணவுகேட்க அவர்கள் தம்மிடம் உள்ளவைகளைப் பரிமாறினார்கள் [எ—று] 22

603

அல்லதோர் கோயிற்கால மானதோ தோகை யாரை
யில்லிடங் கொணரப் பாங்கர் யார்கொலோ வினிய வின்பம்
புல்லிடுங் காலம் வீணே போவதோ வென்று பொங்கி
யொல்லையில் விரைந்து பற்றி யோதனங் கவர்வ தானான்.

[இ—ள்] கோயிலில் காலமெல்லாம் முடிந்து விட்டதே, யாரைக் கணிகையை அழைத்துவர அனுப்பலாம் இன்பமாகக் கழிக்கும் காலம் வீணாகப் போகின்றதே என்று எண்ணி மிக விரைவாக ஆகாரத்தை உண்ணலானான் [எ—று] 23

604

அடர்த்துடன் செறிந்து துன்றி யன்னகண் டகம்வந் தெய்திப்
படர்த்தெழு கரங்கா லுந்தி பதைபதைத் தவசம் பாய்ந்தாங்
கிடர்த்துடல் வெயர்த்து வாயு வியக்கமற் றிவற்றி னூடு
சுடர்த்தகண் செருகி யாவி சோர்ந்துபித் திகையிற் சாய்ந்தான்.

[இ-ள்] வேகமாக உண்டதனால் சோறு உள்ளே தொண்டையில் அடைத்துக் கொண்டு கை, கால் வயிறு முதலியவைகளெல்லாம் பதை பதைத்து தன் வசம் இழந்து கீழேவிழுந்து, உடலில் வெயர்வை யுண்டாய் மூச்சின் ஓட்டம் தடைபட்டு, பிரகாசமான கண்கள் சொருகி உயிர் சோர்ந்து திண்ணையில் சாய்ந்தான். [எ-று] 24

605

அக்கணந் தென்பானின்ற வந்தகன் றூத ரெய்தித்
திக்கெலாம் வெருவக் கண்கள் செறிகனற் பொறிகள் சிந்தக்
கைக்கொடுங் கயிற்றால் வீசிக் கவிழ வீழ்த் தீர்க்குங் காலை
முக்கணன் கயிலைக் காவற் கணங்களு முன்வந் துற்றார்.

[இ-ள்] அந்த க்ஷணத்திலே தெற்குத்திக்கில் இருக்கிற எமனுடைய தூதர்கள் வந்து, திக்கிலுள்ளவர்களெல்லாம் பயப்படும்படி, கண்களிலிருந்து நெருப்புப் பொறிகள் சிதற, கையிலுள்ள பாசக் கயிற்றால் வீசிக் கீழே விழும்படி இழுக்கும் போது, மூன்று கண்களையுடைய சிவபெருமான் எழுந்தருளி யிருக்கிற கயிலையைக் காக்கின்ற கணங்களும் அங்கு வந்து சேர்ந்தார்கள் [எ-று] 25

606

சிவகணங் கண்ட தூதர் திகைத்தன ரவர்தம் பின்னே
நவகதிர் விமான மொன்று நணுகைகண் டகல நின்று
தவகதிக் குரிய நீவிர் சார்ந்தவா றென்கொ லென்றே
யுவகையிற் பணிந்து கேட்ப வுத்தர முரைக்க லுற்றார்;

[இ-ள்] சிவகணங்களைக் கண்ட தூதர்கள் பிரமித்து நிற்கும் போது புதிய பிரகாசமான விமானம் ஒன்று சமீபித்துவருவதைக் கண்டு தவத்தைச் செய்கிறவர்களை அழைத்துப்போகக்கூடிய நீங்கள், இங்கு அடைந்தது யாது காரணம் என்று மகிழ்ந்து பணிவோடு கேட்கப் பதில் சொல்லத் தொடங்கினார்கள். [எ-று] 26

607

இனித்தசொற் றூதர் கேண்மி னெம்பொருட் டெஞ்ஞ குத்தன்
சனித்தது முருக னுமத் தடம்பதி மரண வெல்லை
குனித்தவற் புதவா னந்தக் கூத்துடைக் குழகன் மேவுந்
தனித்திரு வவிநா சிப்பேர் தக்கபுக் கொளியூ ராமால்,

[இ-ள்] இனிமையான சொல்லையுடைய தூதர்களே கேளுங்கள் எஞ்ஞகுத்தன் பிறந்தது திருமுருகன்பூண்டி, மரணம் அடைந்தது, அற்புதமான ஆனந்தக் கூத்தைச் செய்கின்ற குழகன் அமர்

திருக்கின்ற திருப்புக்கொளியூர் அவிநாசி யென்னும் திருப்பதியாகும் [எ—று] 27

608

எண்ணருங் காசி தன்னி லிறக்கவே முத்தி யென்றாற்
றண்ணமர் காசி மூலந் தழைத்த புக் கொளியா மிந்தப்
புண்ணியத் தலத்தே முத்தி புணர்ப்பதும் பொய்யோ வேதப்
பண்ணவ னடைந்த சாபம் பறிந்தமை யறிந்தி லீரோ

[இ—ள்] நினைத்தற்கரிய பெருமையையுடைய காசியில்இறக்க முத்தியென்று சொன்னால், காசியாகிய அடியிலிருந்து தழைத்த கொழுந்தாயுள்ள திருப்புக்கொளியூராகிய இந்தப் புண்ணியத்தலத்தில் முத்தியடைதல் பொய் ஆகுமா. வேதங்களையெல்லாம் உணர்ந்த பிரமதேவாது சாபம் நீங்கியதை நீங்கள் அறியவில்லையோ [எ—று] 28

609

இத்தலப் புராணக் கேள்வி யியல்பினை யியம்பு கின்றேஞ்
சுத்தமின் றியதா னத்திற் சொற்படு கேள்வி துக்கம்
பத்தியை யொழிந்த கேள்வி பழிபடு பகைவந் தெய்துஞ்
சத்தியந் தவிரா ரோகந் தலைப்படுஞ் சயனக் கேள்வி.

[இ—ள்] இந்த அவிநாசித்தலபுராணத்தைக் கேட்கும் தன்மையைக் கூறுகின்றோம் சுத்தமான இடத்தில் இல்லாமற் கேட்டால் துக்கம் உண்டாகும் பக்தியில்லாமற் கேட்டால் பழிக்கப்படுகின்ற பகை உண்டாகும் படுத்திருந்து கேட்டால் நீங்காத ரோகம் சம்பவிக்கும் [எ—று] 29

610

உயர்ந்தபீ டிகையி லேனு மும்பர்மஞ் சத்தி லேனு
நயந்திருந் தகந்தை யோடு கேட்டவர் நமன்றென் னாட்டிற்
கயந்தரு நிரயத் தேயோர் கழுநுதி பதிந்தோர் யாண்டு
வியந்தக வருந்திப் பின்னும் பிறப்பர்தீவினைக்கீ டாக.

[இ—ள்] உயர்ந்த திண்ணையிலேனும் மேலான மஞ்சத்திலேனும் விரும்பி அகம்பாவத்தோடு கேட்டவர்கள், எமனுடைய தெற்கு நாட்டில் நாகத்தில், கழுவின் நுனியில் ஏற்றப்பட்டு ஒருவருடம் மிக வருந்தி தான் செய்த தீவினைக்குத் தகுதியாகக் கீழான பிறப்பில் பிறப்பார்கள் [எ—று] 30

611

கூறைபோர்த் திருந்து கேட்கிற் குறுகும்வெண் குட்டரோக
நீறணி யாது கேட்பி னீசரிற் கடையாய் நேரு
மாறுபா டுரைக்கின் வாயால் வழிபுழு நெளிய வாக்குந்
தூறுடைக் கருத்தாய் வன்கண் டுயிலிற்றுன் மரணஞ் சூழும்.

[இ—ள்] வஸ்திரத்தைப் போர்த்துக்கொண்டு கேட்டால் வெண்குஷ்டம் உண்டாகும் விபூதிதரிக்காமற் கேட்டால் நீசப் பிறப்பையடைய நேரும், கதைக்கு விரோதமாகச் சொன்னல் வாயிலே புழு உண்டாகி நெளியும்; கருத்தில்லாமல் தூங்கினல் துர் மரணம் உண்டாகும் [எ—று] 31

612

செஞ்செய லாகக் கேட்குந் திறஞ்சொல்கேந் தபதி மாந்தர்
வஞ்சக வினைசேர் தால பத்திர வலேகந் தன்னில்
வஞ்சமற் றுயர்ந்தோர் கையால் வழுவின்றி வரைதல் செய்தாங்
கஞ்சனக் காப்புச் சாத்தி யரிசன மிழைத்த பின்னர்.

[இ—ள்] புராணங்களை நன்மையாகக் கேட்குந்தன்மையைச் சொல்வோம் தபதிகளால் செய்யப்பட்ட ஓலைச்சுவடிகளில், வஞ்சனை யில்லாமல் உயர்ந்தவர்கள் கையினல் பிழையில்லாமல். எழுதச் செய்து, கரியமையைத் தடவி, பின் மஞ்சளைத்தடவி [எ—று] 32

613

ஆலய மாசான் வாழ்க்கை யரசவை யகரஞ் சாலை
சோலைவாய் நதியின் றீரஞ் சொலுமிவை யொன்றில் வைகி
மேலைய பீடந்தன்னில் வெண்படாம் விரிமீ துற்ற
காலையின் முறையே யேந்திக் காப்புவிட் டிலச வேற்றி.

[இ—ள்] கோயில் ஆசாரியருடைய வீடு. அரசசபை, பிராமணர்கள் வீடு, பாடசாலை சோலை, நதிக்கரை, இவ்வகையான இடங்கள் ஒன்றில் தங்கியிருந்து, உயர்ந்த பீடத்தில் வெள்ளைவஸ்திரம் தரித்து அதின்மேல் சுவடியை வைத்து கட்டியிருக்கிற கட்டை அவிழ்த்து. [எ—று] 33

614

தாதவிழ் மலர்கள் பெய்து சந்தகிற் கலவைத் தெண்ணீர்
போதுறத் திவலை யேற்றிப் புணர்நறும் புகைய ளாவி
வேதவிஞ் சையரின் மிக்கோர் மிடறிய விசையா லோதிப்
பேதமில் பதங்க டோறும் பொருள்செயும் பெற்றி யோரை.

[இ—ள்] மகரந்தத்தைச் சிந்துகின்ற மலர்களைத் தூவி அருச்சித்து, பரிமளமான சந்தன நீரைத்தெளித்து, நல்லமணமான தூபத்தைக் கொடுத்து, வேதவித்தையின் மேம்பட்டவர்கள் இசையோடு செய்யுளைப் படித்து, குற்றம்இல்லாமல் பதங்களுக்கெல்லாம் அர்த்தம் சொல்லுகின்ற தகுதியுடையவரை [எ—று] 34

615

தாட்பணிந் திருக்கை யேற்றித் தனபரி தான மீந்து
வேட்புறு பரிவாற் கேட்பின் மெய்ஞ்ஞான விளைவுண் டாகு
நாட்பல பயின்று கேட்பி னம்பலம் பலக்கூத் தாடற்
காட்படு மடியார் பெற்ற வருங்கதி யடைவ ராமால்.

[இ—ள்] பாதங்களில் வணங்கி, ஆசனத்தில் அமரச்செய்து தக்ஷிணைகளும் கொடுத்து விருப்பத்தோடு கேட்டால் உண்மையான ஞானமானது உண்டாகும் பலநாளும் விரும்பிக்கேட்டால், பொன்னம்பலத்தில் ஆடுகின்ற சிவபெருமானுக்குஆட்பட்ட அடியவர்களுக்கு உண்டாகின்ற அருமையான பதவி உண்டாகும் [எ—று] 35

616

அணிபெறு புராணத் தின்பே றறைதுமா லயமே கோலிப்
பணிபுரி சிவலிங் கத்தைப் பஞ்சசூத் திரந்தா பித்துக்
கணிபெறும் பதிட்டை செய்து காலபூ சனைக ளேற்றிப்
பணிபவர் பெற்ற பேற்றின் பலங்களு மிலங்கு மன்றே.

[இ-ள்] அழகு பொருந்திய அவிநாசிப்புராணத்தைக் கேட்பவர்கள் அடையும் பயனைச் சொல்வோம். ஆலயத்தைஉண்டாக்கிக் கோயில் கட்டிப் பஞ்சசூத்திரத்தால்தாபித்து, அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகத்தைச் செய்து பின்காலந்தோறும் பூசனை செய்வதற்கு வேண்டிய மூலதனத்தையும வைத்து வணங்குகின்றவர்கள் அடையும் பயனையும் அடைவார்கள் [எ—று] 36

617

ஆதலா லிவனெம் பெம்மான் அந்திக்காப் பழகுங் கண்டு
மேதகு வசிட்டன் மேனி விசிட்டமுந் தெரிசித் தங்ங
னேதமில் புராண முங்கேட் டிறந்ததாற் கிளர்வி மான
மீதுகொண் டேகற்குற்றே மென்றனர் கணத்தின் மிக்கோர்.

[இ—ள்] ஆகையினால் இவன், அவிநாசிப்பெருமானுடைய சந்தியா கால தெரிசனமும் செய்து, மேன்மைபொருந்திய வசிட்ட முனிவருடைய திருமேனியின் மேன்மையையுங் கண்டு, குற்றம் இல்லாத புராணத்தையும் கேட்டு பின் இறந்ததனால்விளங்குகின்ற

விமானத்தில் அழைத்துக்கொண்டு போவதற்கு நாங்கள் வந்தோ மென்று சிவகணநாதர்கள் சொன்னார்கள் [எ—று] 37

618

வெம்மைகூர் மறலிதூதர் விளம்புவார் சிறுபுன்மாற்ற
மெய்ம்மொழியுர வீர்சிந்தைக் கேற்குமோ வியல்பன்றேயோ
கைம்மற மெனினுஞ் சொல்வேங்கட் கடைமுனிவுறாது
செம்மையீர் கேண்மினென்று புகன்றனர் சிறிதுவாய்மை.

[இ—ள்] கொடுமை மிகுந்த இயமதூதர் சொல்லுவார் சத்திய வார்த்தையைச் சொல்லுகின்ற அறிவுடையவர்களே தங்கள் மன துக்குச் சமாதானமாயிருக்குமோ தகுதியல்லாததோ யாங்கள் சொல்லுவது வெறுக்கத்தக்கதாயிருந்தாலும், சிறிதும் கோபம் கொள்ளாது மேலானவர்களே கேளுங்கள் என்று சில உண்மை களைச் சொல்லத் தொடங்கினார்கள் [எ—று] 38

619

பூதலத்தறம் போற்றாத பொய்ந்நெறி யெஞ்ஞகுத்த
னாதுலர்க் கொரு போதேனுமைய மிட்டறிந் தானல்லன்
வேதகர்க் கலர்ந்தகைக்கு வெறுங்கையுங் குவிக்கவெண்ணான்
மாதவர்க் ககலான் கோவைவருத்து வான்வழி பாடொன்றான்.

[இ—ள்] இப்பெரியபூமியில், தருமத்தைப் பாதுகாக்காத பொய்யான மார்க்கத்தில் நடக்கின்ற எஞ்ஞகுத்தன், வறியவர்களு க்கு ஒரு நாளாகிலும் சாதம் போட்டுஅறிந்தவனல்லன். வேதத்தை யுணர்ந்த பெரியவர்களைக் கண்டால் ஒரு பொழுதும் கைகுவித்து வணங்கமாட்டான். பெரிய தவத்தையுடையவர்களைக்கண்டு வழி விலகமாட்டான். பசுக்களை வருத்துவான். கடவுளை வணங்கமாட் டான் [எ—று] 39

620

ஒக்கவா ணிபங்களே னூமூதியம் விரும்பி யல்லாற்
புக்கொ ளித்தல மென்றெண்ணிப் புகுந்தடைந் தானுமல்லன்
மைக்க ணார்கணிகை மாதர்வதனம் பார்த்துய்ந்த தல்லாற்
செக்கர் வேணியன் பொற்பாதஞ் சிந்தைவைத் தவனுமல்லன்.

இலாபத்தையடைய வியாபாரங்கள் செய்யவேண்டு மென்று எண்ணி இங்கு வந்தானேயல்லாமல், இது மேன்மையையுடைய புக்கொளியூர் என்று எண்ணி இங்கு வந்தவனுமல்லன் கரிய கண்களையுடைய பரத்தையர்களது முகங்களைப் பார்த்து மகிழ்வ தற்கு வந்தானேயல்லாமல் சிவந்தசடையையுடைய சிவபெருமானு டைய அழகியபாதத்தை மனத்தில்வைத்தவனும்அல்லன்[எ—று]40

621

மண்ட பத்தமைந்த சிற்பவடிவெனப் பார்த்ததல்லான்
முண்ட கானனவசிட்ட முனியென விழித்தானல்லன்
பண்ட னிற்றெளிந்த சொல்லார் பாட்டெனக் கேட்டதல்லா
லெண்ட ருதலபுராண மென்று கேட்டவனு மல்லன்.

[இ—ள்] மண்டபத்திலே அமைக்கப்பட்ட சிற்பவடிவங்களைப் பார்த்ததுபோலப் பார்த்தானேயல்லாமல், தாமரைமலர்போன்ற முகத்தையுடைய தவமுள்ள வசிட்டமுனியென்று பார்த்தவன் அல்லன். இராகத்தில் தெளிந்தவர்கள் பாடுகிற பாட்டென்று கேட்டதேயல்லாமல் மேன்மையுள்ள புராணம் என்று நினைத்துக் கேட்டவனுமல்லன் [எ—று] 41

622

ஆக்கு மிக்கொடியோன் றன்பாலருள் வரம்புடையீர் முன்ன
மாக்கு லமறையோன் சேயாமார்க் கண்டன் வழியால் வந்த
வேக்கமு மிடரும் வல்லேமென்று நின்றவன் கண்டத்தில்
வீக்கிய பாசநீக்கி விடைகொடு தூதர்போனார்.

கொடுமையை மிகவும் செய்த இவனிடத்திலும் கிருபையை உடையவர்களாயிருக்கிறீர்கள் முன்னமே பெருமைபொருந்திய பிராமணகுலப் புத்திரனை மார்க்கண்டனிடத்திலிருந்து உண்டான கவலையும் துன்பமும் இப்பொழுதும் உணருகின்றேமென்று சொல்லி அவனுடைய கழுத்தில் கட்டிய பாசக்கயிற்றை நீக்கி விட்டு விடைபெற்றுக் கொண்டு தூதுவர் போய்விட்டார்கள் [எ—று] 42

623

கொற்ற மாக்கணங்களெஞ் ஞுகுத்தனை முத்தின்கோவை
பெற்றுள விமானமீது பிறங்கவாரு டஞ்செய்யச்
செற்றவழ் ககனவீதி யாறதாய்ச் செக்கர் போன்ற
கற்றையஞ் சடையான் மேவுங்கயிலையஞ்சயிலஞ் சேர்ந்தான்.

[இ—ள்] வெற்றியையுடைய சிவகணங்கள் எஞ்ஞுகுத்தனை முத்துமாலைகளால் அலங்கரிக்கப்பெற்ற விமானத்தில் சிறப்பாக இருக்கும்படிசெய்து, மேகங்கள் சஞ்சரிக்கிற ஆகாய வீதி வழியாகச் செவ்வானம் போன்ற திரண்ட சிவந்த சடையையுடைய சிவபெருமான் அமர்ந்திருக்கின்ற கயிலாயமலையையடைந்தார்கள் [எ—று] 43

624

அவஞ் செயுஞ் சரிதமல்லாலணு விலெட்டோர் பங்கேனுந்
தவஞ் செயா வெஞ்ஞகுத் தன்சாலோக மடைந்தா னென்னி
னவஞ் செயற் புதக்கூத் தாடுஞான நாயகன் றனத்திற்
றிவஞ் செய விரதநோற் றார்சேர்கதிக் கிறுதியுண்டோ.

[இ-ள்] வீண்காரியம் செய்ததல்லாமல் அணுவில் எட்டிலோர் பங்கேனும் தவம் செய்யாத, எஞ்ஞகுத்தனும் சாலோகம் அடைந்தான் என்று சொன்னால், புதுமையான ஆச்சரிய நடனத்தைச் செய்கின்ற ஞானநாயகன் ஆன சிவபெருமான் அமரும் புக்கொளியூர்த் தலத்தில், தினம் விரதம் அனுட்டிக்கிறவர்கள் அடையும் கதிக்கு ஓர் எல்லை உண்டோ [எ-று] 44

625

என்றிவை நந்திதேவ னியம்பு புக்கொளியூ ரென்னுந்
தென்றிசைக் காசியான திருவவி நாசிமேன்மை
யொன்றிரு செவியாரூ கவுளக் கடனிரம்பு நீத்த
மன்றியுந் தருமசேன னடைந்த பேறடையக் கேட்பான்.

[இ-ள்] என்று நந்திதேவர், தென்றிசையிலுள்ள காசி என்று சொல்லத்தக்க திருப்புக்கொளியூர் அவிநாசித்தலத்தின் மேன்மையைச்சொல்ல இரண்டுகாதுகளின் வழியாக உள்ளத்தில் நிறைந்த பின்பு தருமசேனன் பேறு அடைந்த கதையும் சனற்குமார முனிவர் கேட்கத் தொடங்கினர் [எ-று] 45

பதினொருவது எஞ்ஞகுத்தச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-625.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# தருமசேனச் சருக்கம்

626

வண்டிரைத் தெழுமலர் மருங்கு சூழ்வன
விண்டலத் தவர் புனலாடன் மேவுவ
குண்டகழ்ப் புணரிநேர் குறைவி லாதன
தேண்டி ரைக்கவு தமநதி யின்றீரமே.

[இ—ள்] வண்டுகள் சப்தித்து எழுகின்ற மலர்கள் நிறைந்து விளங்குவன வாகியும், தேவலோகத்திலுள்ளவர்களும் வந்து ஸ்நானம் செய்யத்தக்கதாகியும், ஆழமான நீர் நிறைந்த சமுத்திரம் போன்ற தெளிந்த அலைகளோடு கூடினதாகியும்உள்ள கவுதம நதி யென்று ஒரு நதி உண்டு [எ—று] 1

627

அந்நதிப் புறம் வருமழகின் மாநகர்
தன்னின் மிக்குரி யனதகுதி சார்வது
மின்னெயிற் சுடர்மணி வெயில்விண் டோய்வது
பொன்னகர் சதுமுக புரமென் றோங் குமால்

[இ—ள்] அந்நதியின் கரையில் அழகில் மிகச்சிறந்ததாகியும் தனக்கு நிகரில்லாததாகியும், மின்னலைப்போலப் பிரகாசிக்கின்ற இரத்தினங்கள் பதித்த மதிலின் பிரகாசம் ஆகாயத்தை யளாவக் கூடியதாயும்உள்ள சதுமுகபுரம் என்று ஒரு உயர்ந்த நகரம் உண்டு [எ—று] 2

628

கதுமெனப் பனசமுட் கனியின் றேனுகும்
பதுமநெட் டிதழ்முகை பழனத் தேற்பதுஞ்
சதுமுகக் கடவுளைத் தந்தவுந் திசேர்
முதுமுதற் கமுதும்பொற் கடமு முன்னுமே.

[இ—ள்] அந்நகரத்தில் முட்களையுடைய குடம்போன்ற பலாப் பழம்வெடித்து அதிலிருந்து வடிகின்ற தேன் ஒழுகுவதும் அந்தத் தேனை வயல்களில் உள்ள நீண்ட இதழ்களையுடைய தாமரை மலர்கள் தாங்குவதும், நான்கு முகங்களையுடைய பிரமதேவரைப்பெற்ற திரு உந்திக்கமலத்தையுடைய திருமாலுக்குப் பொற் குடத்திலிருந்து அமிர்தத்தை ஊற்றுவது போலவும், அதைத் திருமால் கையில் ஏந்துவது போலவும் இருந்தது, [எ—று] 3

629

விண்படர் கொடிநெடு வீதி வாய்கயற்
கண்படர் மாதர்கைத் தரளக் கந்துகந்
தண்படர் மதிப்பகை தணிந்து தாமரை
நண்படர்ந் தனவெனுஞ் சிறப்பை நல்குமால்.

[இ—ள்] ஆகாயத்தையளாவிய நீண்ட கொடிகள் கட்டிய வீதியில் உள்ள கயல்மீன் போன்ற கண்களையுடையபெண்களதுகையில் முத்துக்களாற் செய்யப்பட்ட அம்மானை தங்கியிருத்தல், குளிர்ந்த

கிரணங்களையுடைய சந்திரன் பகை நீங்கி பெண்களது கையாகிய தாமரையினுடைய நடுவில் தங்கியிருக்கின்ற மேன்மையை ஒத்துள்ளது [எ—று] 4

தாமரை மலர் பெண்களுடைய கைகளுக்கும், முத்தினாற் செய்யப்பட்ட அம்மானை வெண்மையான சந்திரனுக்கும் உவமை

630

வேளர மகளிரார் விரக வேல்விழிக்
கோளர வல்குலார் குலாய கோலவண்
சாளர நிலைகளுஞ் சதுரச் சேனையு
நீளற னுடைமையும் படைத்த நீர்மைய.

[இ—ள்] ஆசையை உண்டுபண்ணுகின்ற வேல்போன்ற கண்களையும் கொடியபாம்பின் படம்போன்ற அல்குலையும் உடைய தெய்வப்பெண்களையொத்த மாதர்கள் சேர்ந்திருக்கின்ற சன்னல்களும், யானை, தேர், குதிரை காலாள் என்கின்ற நால்வகையான சேனைகளும் மிகுந்த தர்மத்தோடு கூடியனவாக விளங்குகின்றன. [எ—று] 5

631

இறையி னாற் குடிதளா ராமை யேற்பன
பொறையினா லகனெடும் புடவி போல்வன
முறையினா னிறைதரா சனைய மூசிய
திறையினா லளப்பருஞ் செல்வ மோங்குவ.

[இ—ள்] வரிகளினால் குடிகள் தளராமல் வரிப்பொருள்களை வசூலிப்பவனும் பொறுமையினால் மிகுந்த விசாலமான பூமியைப் போல் இருப்பவனும் அரசாளுகின்ற முறைமையினில் தராசை ஒத்தவனும் ஆகிய அவ்வரசனுக்குத் திறைப்பொருள்களினால் அளக்கமுடியாத செல்வங்கள் மிகுந்து விளங்குவன [எ—று] 6

632

வெங்கொடுங் கோளரி சுமந்த வேதிகைப்
பொங்கொளிப் பணிமணித் தவிசிற் பூவையர்
பங்கமர் சாமரை யிரட்டப் பாவலர்
சங்கமுங் கிதவிஞ் சையருஞ் சார்குவ.

633

தொனிக்குல மறையவர் சூழத் தொன்னெறி
நனிக்குலத் தமைச்சர்பா லணுக மேயினன்
பனிக்குல மிரியும்வாட் பரிதி கோத்திரத்
தனிக்குல சேகரன் றரும சேனனே.

[இரண்டு கவியும் ஒரு தொடர்]

[இ—ள்] பனிக்கூட்டங்கள் ஓடும்படி ஒளியைவீசுகின்ற சூரியனது வமிசத்திற்கு முடிபோன்றவனுன அங்கதேசத்தை ஆளுகின்ற தருமசேனன் பக்கத்தில் அழகிய பெண்கள் வெண்சாமரையை வீசவும். கவிகளைப்பாடுகின்ற வித்துவான்களது கூட்டமும், சங்கீத வித்துவான்களுடைய கூட்டமும் சேர்ந்திருக்கவும், வேதத்தை ஓதுகின்ற பிராமணர்கள் சூழவும், உயர்குலத்திற் பிறந்த நல்ல மார்க்கத்தில் நடக்கின்ற மந்திரிகள் நெருங்கியிருக்கவும், மேடையில் மிகுந்த கொடுமையையுடைய சிங்கத்திஞற் சுமக்கப்பட்ட, மிகுந்த ஒளியை வீசுகின்ற இரத்தினங்களால் இழைக்கப்பட்ட சிங்காதனத்தில் வீற்றிருந்தான் [எ—று] 7–8

634

ஆங்கவன் மனுநெறி யளக்கு மந்தநா
ணீங்கரி தாயவெண் ணீற்றின் செல்வமுந்
தீங்கின்மா தவரிடைச் செறிந்த சிந்தையு
மோங்கிய தருமநூ லுணர்வு மொன்றினன்.

[இ—ள்] அத் தருமசேனன் மனுநெறி தவருமல் அரசாட்சி செய்யுங்காலத்தில், திருவெண்ணீருய செல்வத்தையும் குற்றமில்லாத பெரிய தவசிகளிடத்தில் நீங்காத அன்பையும், உயர்ந்த தரும சாஸ்திரங்களில் வல்லவனுயுமிருந்தான் [எ—று] 9

635

சங்கர னடியவ ரடிக டாங்கியு
மங்கல விரதநோற் றுடலம் வாடியும்
பொங்குசீர்ப் புண்ணியப் புனல்சென் றுடியுஞ்
செங்கையா னிதியளித் தறங்க டேற்றியும்.

[இ—ள்] சுகத்தைக் கொடுக்கக்கூடிய சங்கரனது அடியார்களிடத்தில் அன்புடையவனுயும் நன்மையைத் தரத்தக்க விரதங்களைச் செய்து சரீரம் வாடினவனுயும் மிகுந்த கீர்த்தியையுடைய புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்தும் சிவந்த கையினுல் பொருளைக் கொடுத்துப் பல தருமங்களையும் செய்து வந்தான் [எ—று] 10

636

இவ்வகை நாட்கழித் தொழுகு மெல்லையிற்
றிவ்விய மதிகதிர் புணர் திவாவினில்
அவ்வர சிருந்தபே ரவையி லாகமச்
சைவவே தியரொரு முனிவர் சார்ந்தனர்.

[இ-ள்] இவ்விதமாக அரசாட்சி செய்துவருங்காலத்தில் மேன்மையான சந்திரனும் சூரியனும் சேரும்படியான அமாவாசையில் அரசனுடைய சபையில் ஆகமங்களையுணர்ந்த ஒரு சைவப் பிராமணர் வந்து சேர்ந்தார் [எ—று] 11

637

காதிசை குண்டலங் கரக மண்டலம்
பூதிதூ ளிதமுடை சேந்த பூங்கலை
சோதிசெய் விழிமணி தொடர் சடாமுடி
யோதிடும் வடமொழி முறையோன் றேங்கவே.

[இ-ள்] காதுகளிலே மகாகுண்டலங்களும், கையிலேகமண்டலமும், உடம்பு முழுதும் வெண்ணீறணிந்தும் சிவந்தகாஷாயத்தை உடுத்தியும், பிரகாசிக்கின்ற உருத்திராட்ச மாலைகளையும் அணிந்து சடைமுடியோடு வடமொழியில் எழுதப்பட்ட சுவடி கையில் விளங்கவும் வந்தார் [எ—று] 12

638

வந்தருண் முனிவரை மன்னர் கேசரி
முந்தெதிர் வரவுகண் டெழுந்து முண்டகச்
செந்தளி ரடிமிசைச் சென்னி தாழ்த்துநின்
றந்தன திருக்கைமே லமர்த லாற்றியே.

[இ-ள்] வந்த முனிவரைப் பகைவர்களுக்குச் சிங்கம்போன்ற அரசன் கண்டு அவருடைய செந்தாமரை மலரை யொத்த பாதங்களை வணங்கி யெழுந்து அழகிய ஒரு ஆசனத்தின் மேல் அமரச் செய்து [எ—று] 13

639

அலகியல் கரதல முகைய விழ்ந்தநி
லிலகிய நீறுபெற் றயவி ருந்துபின்
னுலகிலங் கொருவரை யுவமி யாருடன்
விலகரும் புன்மொழி விளம்பன் மேயினான்.

[இ-ள்] கையாகிய தாமரையை விரித்து அவரிடத்திலிருந்து விபூதியை வாஙகித் தரித்துக்கொண்டு, ஒருவரையும் உவமை சொல்லுவதற்கு அரிய அந்த முனிவரிடத்தில் சில வார்த்தைகளைச் சொல்லத்தொடங்கினான் [எ—று] 14

640

குரவநீ யிவ்வுழிக் குறுக வஞ்சனே
னுரவிய தவமுயன் றுடைய தென்கொலோ
விரவிய விருண்மலம் வெருள வென்னிடைப்
பரிவுறு பவியுகந் தருளற் பாலென.

ஆசாரியரே, தாங்கள் இங்கு வருவதற்கு யான்செய்த மேலாகிய தவம் யாதோ அறிகிலேன் என்னிடத்தில் உள்ள அஞ்ஞானமாகிய குற்றம் நீங்க, யான் அன்போடு அளிக்கும் பிக்ஷையை யேற்றுக்கொள்ள வேண்டுமென்று கூறி [எ—று] 15

## 641

அருந்தனிப் பாகமா மமுத ருத்துவித்
திருந்துதன் பாரியு மிணையி ருனுமே
திருந்திய பரிகல சேடந் துய்த்துநீள்
பெருந்தவர் தமையொரு பீடத் தேற்றியே.

[இ—ள்] தேவாமிருதம் போன்ற உணவை உண்பித்து, அவருண்டபரிகலசேடத்தைத் தானும் தன் மனைவியும் உண்டு, அதன் பின் அம் முனிவரை ஒரு ஆசனத்தில் அமரச்செய்து [எ—று] 16

## 642

செம்மலை வழிபடு திறங்க டேர்ந்துநின்
றிம்முறை யாதென விறைவன் கேட்டலுங்
கைம்மழி பரசுளான் காசி மூலமென்
றம்மறை பகர்தல புராண மாமென.

[இ—ள்] அம்முனிவரை வணங்கி, கையில் உள்ள இப்புத்தகம் யாதென்று இறைவன் கேட்டவுடன் கையின்கண் மழுவாயுதத்தைத் தரித்த சிவபெருமானது காசி மூலத்தினின்று எழுந்தகொழுந்தாயுள்ள கடவுளமர்ந்திருக்கின்ற புக்கொளியூர் அவிநாசியென்னுந் தலத்தின் புராணமென்று சொன்னர் [எ—று] 17

## 643

தென்றிசை முனிநிகர் செவ்வி யோய்சிறு
புன்றமி யேன்செவிப் புலத்திற் கேற்புற
நன்றமர் சிவகதை நவிற்று கென்றுசீர்
மன்றன்மா மலரடி வணங்கி வாழ்த்தினன்.

(இ—ள்) தெற்குத்திக்கில் வீற்றிருக்கின்ற அகத்தியமுனிவரை ஒத்த மேன்மையுடையவரே அற்பனுகிய என்னுடைய காதுகளில் தகுதியாகக் கேட்கும்படி நன்மையாயுள்ள இந்தச் சிவகதையைச் சொல்லவேண்டுமென்று மேன்மையான வாசனையுள்ள தாமரை மலரை யொத்த பாதங்களை வணங்கி வாழ்த்தினன் (எ—று) 18

644

முன்னவ னுவகையான் முறையின் காப்புவிட்
டின்னவை பகர்குவ னிறைவன் கேட்புறத்
தொன்னெடும் பிரளயந் தொடர்சங் காரமா
மன்னபே ரொளியுமா லயன்முன் னோரெலாம்.

(இ-ள்) அதைக்கேட்ட முனிவர் சுவடியின்கட்டை அவிழ்த்து அரசனைப்பார்த்துச் சொல்வாராயினர் உலகத்தை யெல்லாம் சங்காரஞ் செய்கின்ற பேரொளியும், திருமால், பிரமன் முதலானவர்களெல்லாம் (எ-று) 19

645

ஒக்கவே புகுந்தொளித் துரிய தன்மையை
மிக்கபூ மியினிடை விளங்கக் காட்டிய
புக்கொளி யெனுமொரு பொருவி லுனப்பேர்
தக்கவி நாசமின் றியவுஞ் சாருமால்.

(இ-ள்) முழுவதும் புகுந்து ஒளித்துக் கொள்ளுந் தன்மையை மேலான இந்தப் பூமியில் விளங்கும்படியாகக் காட்டுகின்ற புக்கொளியூர் என்கின்ற ஒப்பில்லாத தலமானது எக்காலத்தும் அழிவில்லாத தன்மையையும் உடையது (எ-று) 20

646

கூறுமத் தலத்தி லிமயமீ ன்றெடுத்த கோமளக் கருணையங் கோதை
தேறுமா தவமோ ராயிர மாண்டிற் சிவன்வலப் பாகம்பெற் றமர்ந்தா
ளூறுதன் கமல னூறியாண் டளவு நனிமலர் புனிதமஞ் சனத்தாற்
பேறுசேர் பூசை புரிந்துகே தகையிற் பிழைபடு சாபமுந் தொலைந்தான்.

(இ-ள்) சொல்லப்பட்ட அந்தத்தலத்திலே இமயமலை அரசன் புதல்வியாகியகருணையச்செல்வி ஆயிரவருஷம் உயர்ந்ததவத்தைச் செய்து சிவபெருமானுடைய வலப்பாகத்தைப்பெற்று அமர்ந்தாள், வாசனை வீசுகின்ற செந்தாமரைப்பூவிலிருக்கின்ற பிரமதேவர் மிகவும் பரிசுத்தமான புண்ணிய தீர்த்தத்தால அபிஷேகம் செய்தும். பயனைத்தரக்கூடிய சிவபூஜையைச் செய்தும். தானும். தாழம்பூவும் பொய் சொன்னதற்காக அடைந்த சாபத்தை நீங்கினான், (எ-று) 21

647

இந்திர னயிரா வதமதம் பெருகி யிருநிலத் திழிந்திட லுழந்து
பந்தமா தவத்தாற் றமனிய வுலகிற் பதிந்தது பன்னிராண் டளவின்
மந்தர மனைய தாடகை மலடாள் வருடமூன் றமர் விர தத்தாற்
சந்ததி வரம்பெற் றுனிலை யணைந்து சமரமா ரீசனைப் பயந்தாள்.

(இ-ள்) தேவந்திரனுடைய அயிராவதமானது மதம் பெருகிப் பெரிய பூமியில் வந்து துன்பத்தை அனுபவித்து, இத்தலத்திற்கு வந்துசிவபெருமானை 12வருடம் பூசித்தபயனால் பொன்னுலகத்தை அடைந்தது. மந்தரமலையை ஒத்த தாடகைமூன்றுவருடகாலம் விரதமிருந்ததன் பயனால் சந்ததியைப்பெற்றுக்கருவூரானிலையடைந்து போரில் வல்ல மாரீசனைப்பெற்றாள். (எ-று) 22

648

முந்துசீ ருரக வரசிள மடந்தை மூவெழு திங்களா தரித்த
சிந்தைசேர் ஞான பூசையான் மணமுஞ் சித்தியு முத்தியு மடைந்தாள்
வெங்தொழில் வேட வியாதபூ பதியும் விரைந்து நாண் முப்பதில் விளங்க
மைந்தரைப் பெருநல் வரங்கள்பெற் றதன்பின் மருவினன் சிவகதி வாழ்வை.

(இ-ள்) மேற்பட்ட சிறப்பினையுடைய ஆதிசேடனது புத்திரியாகிய நாககன்னி இருபத்தோருமாதம் அன்போடுசெய்த ஞான பூஜையால் திருமணத்தையும், சித்தி முத்திகளையும் அடைந்தாள். கொடிய தொழிலையுடைய வேடர் குலத்திலுதித்த வியாத அரசனும், விரைவாக முப்பதுநாள் சிவபெருமானைப்பூசித்ததால் பிள்ளைகளைப்பெற்று அதன்பின் சிவகதியையும் அடைந்தான், (எ-று) 23

649

கோள்களின் மிகுந்த சங்ககன் னனுமக் குவலய விளக்கமாந் தலத்தி
நாள்களோ ரைந்தி லற்புதானந்த நாடகா டகபத மடைந்தா
னீள்கதி மகவா னுலகினி லரம்பை நிலத்தொரு பரத்தையாய்ப் பிறந்து
வாள்கதிர் மணிசேர் புக்கொளி பரவி மருவிருன் பதவியோர் நாளில்

[இ-ள்] குற்றங்களில் மிகுந்த சங்ககன்னனும் உலகத்துக்கு ஒளியாய் விளங்குகின்ற அத்தலத்தில், ஐந்து நாட்களில், ஆச்சரியமான ஆனந்த நாடகத்தை தரிசித்து, சிவபெருமானது பொற்பாத கமலங்களையடைந்தான். உயர்ந்த தேவ உலகிலுள்ள தெய்வ ரம்பை பூவுலகத்தில் ஒரு தாசியாய்ப் பிறந்து, ஒளிபொருந்தியகிரணங்களோடு விளங்குகின்றதிருப்புக்கொளியூரையடைந்துசிவபெருமானை வழிபட்டு ஒரு நாளில் சிவபதம் அடைந்தாள். [எ-று] 24

650

குறைதரும் பிறவிக் கொடியசண்டாளக் கொடியெனும் பரவையோ ரவிழா
விறைதிரு வருள்பெற் றோரியா மத்தி லெண்ணருங் கணத்துளாயினதாற்
பொறையறி வொழிந்த வெஞ்ஞகுத் தனுமப் புண்ணியத் தலத்திறந் தொழிந்து
மறையவர் கணிக்கு மொருகடி கையிற்போய் வாழிய கயிலைபெற் றுயாந்தான்.

[இ—ள்] இழிவான பிறவியை அடைந்த கொடிய சண்டாளனாகிய காகப்பறவை சிந்தின சாதத்தால், சிவபெருமானுடைய நிறைந்த திருவருளைப்பெற்று. ஒரு ஜாமத்தில், எண்ணுதற்கரிய சிவகணங்களுள் ஒன்றாக ஆயினது. பொறுமை அறிவு முதலிய நற்குணங்கள் இல்லாத எஞ்ஞதத்தனும், அந்த புண்ணிய தலத்தில் இறந்து நீங்கி பிராமணர்கள் எண்ணுகின்ற ஒரு முகூர்த்த காலத்தில் வாழ்வையுடைய கயிலையை அடைந்துயர்ந்தான். [எ—று] 25

651

இப்பெருந் திறத்த திருவவி நாசி ரியனவளர் புக்கொளிப் புரத்தில்
விப்பிரர் முதலா மெவரெவ ரேனு மெலிந்தொரு தவத்தினை விளைத்தாற்
றப்புறு தநந்த மிதத்தரு மிறுதி சதாசிவ பதந்தரு மெனவே
யொப்பிலா கமங்க ளுரைக்குமென் றுரைத்தாங் குணர்த்தினன்
உண்மையு முரவோன்

[இ—ள்] இவ்விதமான மேலான தன்மைகளையுடைய திருஅவிநாசியாகிய திருப்புக்கொளியூரில், பிராமணர்கள் முதலாக யார் யாராக இருந்தாலும் தவத்தைச்செய்து இளைத்தவர்கள், தவறாமல் பலவிதமான இன்பங்களை அடைந்து முடிவில் சிவபதவியை அடைவார்கள் என்று சமானமில்லாத ஆகமங்கள் கூறுகின்றன, என்று மிகுந்தஞானத்தையுடைய அம்முனிவர்உண்மையை உரைத்தருளினார். [எ—று] 26

652

கேட்டதி சயித்துப் புளகமெய் பொடித்த கிளரொளி மணிமுடி வேந்தன்
வேட்டபே ரன்புங் காலமும் வினையும் வெளிப்படும் பரிசென விரும்பி
யிட்டமா முனிவர் மகிழவே தீர்த்த யாத்திரைத் தானமும் வழங்கித்
தாட்டளி ரிணைகள் பணியமற் றவருந் தவளநீ றளித்தகன் றனரால்.

[இ—ள்] இவ்வாறு முனிவர் சொன்னதைக்கேட்ட பிரகாசிக்கின்ற இரத்தின கிரீடத்தையணிந்த அரசர் அதிசயித்து, சரீரம் புளகம் அடைந்து மிகுந்த அன்பும், நன்மையடையும் காலமும், செயலும் வெளிப்பட்டதென்று சொல்லும்படி, கூட்டமான முனிவர்கள் மகிழ தீர்த்த யாத்திரை செய்வதற்குமுன் கொடுக்க வேண்டிய தானங்களையும் கொடுத்து அவர்களுடை இரண்டு பாதங்களையும் பணிய அம்முனிவர்களும் வெண்மையான திருநீற்றைக் கொடுத்து ஆசிர்வதித்து அகன்றார்கள். [எ—று] 27

## 653

வளமிகு குரிசி றனதுபூ தலமும் வயமிகும் பதாதியும் வழாமே
யிளவர சமைச்சர் கருணர்தூ தியல்வோ ரிணையில்சே னாபதி முதலா
வுளர்தமை நியமி  துதியர்பூ மியிலோ யுத்தமத் திருவவி நாசிக்
களமுகின் மணியைக் கிடைப்பதற் கியைந்து கமனயாத் திரைத்தினங்
கணித்தான்.

[இ—ள்] சகல வளங்களும் நிறைந்த பூமியை ஆளுகின்ற அரசராகிய தருமசேனர், நாடும், சைனியங்களும் குடிகளும் கெடாதபடி, இளஅரசையும், சேனாதிபதிகள், மந்திரிகள். தூதுவர்கள் முதலாக மற்றும் உள்ளவர்களையும் நியமித்து, சேரர் நாட்டிலுள்ள மேலான திருஅவிநாசியில் அமர்ந்துள்ள நீலகண்டராகிய கடவுளை அடைவதற்குக் கருதி பயணத்திற்குரிய நாளைக் குறிப்பிட்டார். [எ—று] 28

## 654

கருமவே தியரு மாகவ னீயங் காருகந் தெக்கணாக் கினியுந்
தருமசே னனுமா தர்களிரு வோருந் தகுதொழிற் பரிசனர்யாருஞ்
செருமுனை யவருங் கவிகையும் பரியுஞ் சிவிகையுந் திமிலைபல் லியமும்
பருநிதிக் குவையுங் கலன்கலைத் தொகையும் பதியைவிட் டகன்றிடும்
பருவம்.

[இ—ள்] ஆகவனீயம், காருகபத்தியம், தக்ஷிணாக்கினியம் என்னும் மூன்று அக்கினியையும் வளர்க்கின்ற தொழிலையுடைய பிராமணர்களும் தன்னுடையமனைவியரிருவரும், ஏவல் தொழிலைச் செய்கின்ற சுற்றிலுமுள்ளவர்களும், படைத்தலைவர்களும். குடைகளும், குதிரைகளும் பல்லக்குகளும பலவித வாத்தியங்களும் பின்தொடர, மிகுந்த திரவியங்களையும், வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் எடுத்துக்கொண்டு, காணத்தகுந்த நல்ல சகுனத்தையும் பார்த்து அரசராகிய தருமசேனர் பயணமானார். [எ—று] 29

## 655

காண்டகு நனிய நிமித்தமா தரித்துக் கவுதம தீர்த்தமுங் கடந்து
சேண்டரு புவியிற் றென்றிசை படர்ந்த செறிதரு தேயங்கள் கடந்து
பூண்டபே ரன்பாற் பொருவில்கா விரிவாய்ப் புண்ணியத் திருப்புனல்
படிந்து
மூண்டகே ரளத்திற் பவானிசூழ் சுருதி மொழிகொள்புக் கொளியைவந்
தணைந்தான்.

[இ—ள்] தருமசேனர் தன் ஊரைவிட்டு நீங்கிக் கௌதம தீர்த்தத்தைக் கடந்து விசாலமான பூமியில் தெற்குத்திக்கில் உள்ள நிறைந்த தேசங்களையெல்லாந்தாண்டி மிகுதியான அன்பினால்

*சமானம் இல்லாத காவிரியாகிய புண்ணிய தீர்த்தத்திலும் ஸ்நா ணம் செய்து மிகுந்த பெருமையையுடைய கோளா நாட்டில் பவானி நதியால் சூழப்பட்ட, வேதங்கள் துதிக்கின்ற திருப்புக்கொளியூரை வந்து சேர்ந்தனர். [எ—று]* 30

656

தவஞ்செய வருவான் றன்மைகேட் டறிந்து தலபரி சனபதாதிகள்சென்
றுவந்துபோந் தணுகி யெதிர்கொடு நிற்ப வுத்தர தேசர்தங் கோமா
னிவந்தபொற் றரளச் சிவிகைவிட் டிழிந்து நிலனிடைப் புலனுடல் பொருந்தச்
சிவந்தொளி ரழகு துகள்பட வீழ்ந்து தெண்டனிட் டெழுந்துநின் றுரைப்பான்.

*[இ—ள்] அரசர் வருகின்ற தன்மையைக்கேட்ட அந்தத்திருப் புக்கொளியூரில் உள்ள அன்பர்கள் கேட்டு மகிழ்ந்து எதிர்கொண்ட ழைப்பதற்கு நின்று கொண்டிருப்பதை வட நாட்டில் உள்ளவர் களுக்கு அரசராகிய தருமசேனர்பார்த்து, உயர்ந்த பொன்னு லாகிய முத்துச்சிவிகையினின்று இறங்கி, பூமியில் தன்னுடைய சிவந்த அழகிய திருமேனி பொருந்த விழுந்து தூசுபடும்படி, நமஸ் கரித்து எழுந்து நின்று கூறுவார் ஆயினர் [எ—று]* 31

657

அரவணி சடையான் றிருவவி நாசி யாளுடை நாயகன் றலத்தில்
விரவுமோர் புழுவாய்ப் பிறந்திலே னென்று மெலியுமித் தமியனை விரும்பி
வரவெதிர் கொளனீர் தகுமதோ வந்து மானுடக் கணங்களாச் சனித்த
குரவரே முன்போ மென்றுபின் சென்று குவித்தக்கைச் சிரத்துடன் புகுந்தான்.

*[இ—ள்] திருஅவிநாசியில் அமர்ந்து எல்லாரையும் ஆளாக உடைய தலைவனாகிய சர்ப்பங்களையணிந்த சடையையுடைய சிவ பிரானது திருப்புக்கொளியூரில் வாழுகின்ற ஒரு புழுவாகவும் பிறக் திலேன் என்று வருந்துகின்ற தமியேனாகிய என்னையும் விரும்பி நீங்கள் எதிர்கொள்ளல் தக்கதோ ஐயோ! மானுடர் கூட்டங் களாகப்பிறந்த ஆசாரியர்களே நீங்கள் முன்னேசெல்லுங்களென்று பின்சென்று சிரசிற்குவித்தகையுடன்ஊருக்குட்புகுந்தான்[எ-று]*32

658

சித்திரை மதியத் திருவிழா வொழியாச் செழுமடப் புறவணி வீதி
மத்தியந் தனிலே நின்றுபெற் சிகர மாமணித் தூவியை வணங்கி
நித்தமா விரிஞ்ச னந்தநா ளமைத்த நிருதிசேர் பருதிதீர்த் தத்தி
னுத்தர வருகே பாடிவீ டமைத்தாங் குறுசனத் தவருட னமர்ந்தான்.

[இ—ள்] சித்திரை மாதத்துத் திருவிழா நீங்காத செழிப்பான மடப்புறமாகிய அழகிய வீதியின் நடுவிலே நின்று பொன்மயமாகிய அழகிய ஸ்தூபியை வணங்கி, எப்பொழுதும் உள்ளதாகப்பிரமன் முற்காலத்திலே ஏற்படுத்திய நிருதி திக்கிலுள்ள பருதி தீர்த்தத்தின் வடக்கில் தங்கும் இடம் அமைத்துக்கொண்டு, அங்கே தன்னுடன் வந்த பரிவாரங்களோடு தங்கினான். [எ—று] 33

# 659

மகரமா சத்தின் மதிகொள்பூ சத்தின் மனைவியருந் தருமனை வியரும்
பகரும்வே தியரும் புலரியம் பொழுது பானுதீர்த் தத்தினுட் படிந்து
புகர்மத கரிவான் பொய்கைநீ ராடிப் புயங்கமின் கயங்குடைந் தெழுந்து
நிகரறு கலைபூண் புனைந்துநீ றணிந்து நியமதா ரணைகளு நிரப்பி.

[இ—ள்] தை மாதத்தில் வருகின்ற பூரண சந்திரன் விளங்குகின்ற பூச நக்ஷத்திரத்தில் தன் மனைவியர் இருவரோடு தானும், சொல்லப்பட்ட வேதங்களையுணர்ந்த பிராமணர்களும் விடியற்காலையில் எழுந்து சூரிய தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணி, புள்ளிகளையுடைய மதம்பொருந்திய அயிராவதத்தால் உண்டாக்கிய, அயிராவத தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, நாககன்னி தீர்த்தத்திலும் ஸ்நானம் செய்து எழுந்து சமானமில்லாத உயர்ந்த வஸ்திரங்களையும், ஆபரணங்களையும் அணிந்து திருநீற்றைத் தரித்து, செய்ய வேண்டிய நியமங்களையும் குறைவில்லாமற்செய்து. [எ—று] 34

# 660

முன்னதிர் வேத முழுப்பொரு ளெனவாழ் முக்கணன் புக்கொளி முதல்வன்
சந்நிதி புகுந்து முகுந்தனை மிகுந்த தடவிடை யிடைபெறு வடபா
லுந்நதி யுதய கங்கைகூ வத்தை யணுகியே கவிழ்நய னத்தான்
மன்னதி ருப சாயைபார்த் தகோர மந்திர நூறுருச் செபித்து.

[இ—ள்] சப்திக்கின்ற வேதங்களுக்கு முழுமுதற்பொருளான மூன்றுகண்களையுடைய திருப்புக்கொளியூரில் உள்ள சிவபெருமான் சந்நிதியையடைந்து மகாவிஷ்ணுவாகிய பெரிய ரிஷபமிருக்கிற இடத்துக்கு வடபக்கத்திலிருக்கிற உதயகங்கா கூபத்தையடைந்து கீழ்நோக்கி அரசன் தன்னுடைய அழகியநிழலைப்பார்த்து அகோரமந்திரத்தை நூறு உருசெபித்து [எ—று] 35

661

மாசறு மந்நீர் கொண்டுமேற் றெளித்து வலம்புரிந் திடம்புரி மனத்தாற்
பூசனைக் குரிய திரவியந் திருத்திப் புனிதனுக் கினிதுற வேற்றி
வாசமென் களபம் புனைந்துபொற் கலிங்கம வனைத்துபன் மணிக்கலன் சாத்தித்
தேசடர் தளிகைத் திருவமு தமைத்துத் தீஞ்சுவைப் பலநிவே தித்து

[இ—ள்] *குற்றம் இல்லாத அந்த நீரை மேலே தெளித்துக் கொண்டு வலம் வந்து விரும்புகின்ற மனதினால் பூசைக்குரியவற்றையும் அபிஷேகத்திற்குரியவைகளையும் திருத்தமாக அமைத்து சுவாமிக்கு இனிமையாக அபிஷேகித்து, வாசனையோடுகலந்த சந்தனத்தை அணிந்து பொன் ஆடை சாத்தி, பல இரத்தினாபரணங்களை அணிவித்து மேன்மையான தளிகைத்திருவமுதை வைத்து இனிய சுவைகளையுடைய பல பழங்களையும் நிவேதனம் செய்து.* [எ—று] 36

662

நிறைதரு தாம்பூ லங்கொடுத் தெதிரே நீடுப சாரங்க ளளித்து
மறையவர் சுருதி முழக்குடன் றிருமுன் மண்டிலங் கொண்டுறநடித்து
முறைபெற வணங்கிப் புறவலம் போகி முதிரிளங் கருணைநா யகிக்குந்
திரை களிட் டிறைஞ்சிக் குறையெலா முரைக்கச் சிந்தையு ளிதம்பெறத் தெளிந்து.

[இ—ள்] *நிறைந்த தாம்பூலத்தையும் கொடுத்து, முன்பாகச் சோடசோபசாரங்களையும் செய்து, வேதப்பிராமணர்களின் வேத சப்தத்தோடு, சுற்றி வந்துநடித்து, கிரமமாக வணங்கி வெளியில் வலம்வந்து மிகுந்த கருணையோடு கூடிய கருணையைச்செல்விக்கும் சுவாமிக்குச்செய்தபடியே அபிஷேக ஆராதனைகளைச்செய்து வணங்கித் தன்னுடை குறைகளையெல்லாம் சொல்லிப்பிரார்த்திக்க மனதில் தெளிந்து* [எ—று] 37

663

நெடியதாட் பருங்கட் பிறையெயிற் றிருதோ ணிசியுடற் றறுகணெட் டுரவெங்
கொடியதா டகைக்குஞ் சுதவர மளித்த குலகிரிக் கோமளக் குயிலே
மிடியனேன் வாழ்க்கையறம்பொரு ளின்பம்வீடிவை மகவினால்விளங்கிப்
படிபுரந் தொழுகும் படிவழங் கெனவிப் படிமணிப் படியரு கொதுங்கி,

[இ—ள்] *நீண்டகால்களையும், பெரிய கண்களையும் பிறைச் சந்திரன் போன்ற பற்களையும், இரண்டு கெட்டியான தோள்களையும், கரிய உடலையும், அஞ்சாமையும், பலத்தையுமுடைய, கொடி*

ய தாடகை என்பவளுக்கு புத்திரப்பேறருளிய மலையரசன் மகளாகிய அழகிய குயில்போன்ற கருணாலயச்செல்வியே ஏழையாகிய என்னுடைய வாழ்க்கையானது அறமும். பொருளும் இன்பமும். வீடும் புத்திரனால் விளங்கி, இவ்வுலகத்தைக் காக்கும்படி அருள் வேண்டுமென்று இந்த விதமாகசெல்வி அழகிய படியருகில் ஒதுங்கி நின்று. [எ—று] 38

664

கரங்குவித் திருகண் புனலுகப் புலம்பிக் கரணமுங் குழைந்தொருப் படநின்
றிரங்குதற் கிரக்கித் திருவருள் சிறந்தாள் யாவையு மெனையுமீன் றெடுத்துப்
புரங்கனற் பொரித்த புக்கொளிப் பெருமான் புடையமர் கருணையம்பூவை
வரங்களிற் சிறந்த சுதவர மளித்து வரைபுரை நிதியமு மளித்தாள்.

[இ—ள்] கைகளைக்குவித்து இரண்டு கண்களிலும் ஆனந்தக் கண்ணீர் சிந்தும்படியாகத்தோத்திரம் செய்து அந்தக்கரணங்கள் இளகி. மனம் ஒருவழிபட்டு இரங்கிப்பிரார்த்தித்ததற்கு, உலகம் யாவையும் எளியேனாகிய என்னையும், பெற்றெடுத்தும் திரிபுரசம்ஹாரம் செய்தருளிய திருப்புக்கொளியூரில் உள்ள சிவபெருமான் பக்கத்தில் அமர்ந்திருக்கின்ற கருணாலயச்செல்வி மனமிரங்கி, வரங்களில் மேலான புத்திர வரத்தையும் கொடுத்து, மலையை யொத்த செல்வத்தையும் கொடுத்தாள். [எ—று] 39

665

கொற்றவன் மகிழ்ந்தா வரணதேவர்களைக் குறையிரந் தகன்றுபோம்பொழுது
கற்றவர் புகழக் குரவர்கை விரிப்பக் கவினமர் புகலிடங் கரந்து
மற்றும்வே தியர்கள் சந்ததாக் கினியை வணங்கிமா தவர்குரு போதர்க்
குற்றவை யுதவித் தலபுரா ணங்கேட் டொழிவிலா தொருதினம்போல்.

[இ—ள்] அரசன் மகிழ்ச்சியடைந்து, பரிவார தெய்வங்களையும் பிரார்த்தித்து போகும் பொழுது. படித்த வித்துவான்கள் புகழவும் ஆசாரியர்கள் கையை விரிக்கவும், அழகு விளங்குகின்ற தன்னிடத்தில் அமர்ந்து, மற்றுமுள்ள பிராமணர்களையும். யாக அக்கினியையும் வணங்கி பெரிய தவசிகளுக்கும், குருமார்களுக்கும் ஞானிகளுக்கும் வேண்டியவைகளைக் கொடுத்து தவறாமல் ஒருநாள்போல பல நாளும் செய்து. [எ—று] 40

666

யீாண்டுசெல் லளவு மியற்றின னதற்கு ளிமயநா யகிதிரு வருளான்
மூண்டநற் பருவக் குவிமுலைக் கயற்கண் முகிற்குழன் மனைவிய ரிடமா
வாண்டகைப் புதல்வ ருபயாவந் துதிப்ப வந்தணர் கணிதமா தரித்தே
யீண்டுசீர் நாம மக்கினி வரும னிரணிய சேனனென் றிசைத்தார்

[இ—ள்] ஒரு வருடம் வரையில் இவ்வாறாகச் செய்து வந்தான் இந்த நாளிலேயே இமய அரசன் புதல்வியாகிய பார்வதியின் திருவருளால், மேன்மை பொருந்திய ஆண் பிள்ளைகள் இரண்டு மனைவியர் வயிற்றிலும் வந்து பிறந்தார்கள். பிராமணர்கள் ஜாதக கருமத்தைச்செய்து பெருமை பொருந்திய, அக்கினிவர்மன் என்றும் இரணியசேனன் என்றும் பெயரிட்டார்கள். [எ—று] 41

667

சொற்பெறுகுருசி லமரருண்டுவபபத் தொலைவில்புக்கொளிநகர்விளங்கத்
தற்பய ரதனு லொருபெரு வேள்வி தயங்குற வியக்குவான் சமைந்து
பொற்புற நிலவு மிரவிதீர்த் தத்தின் புறவரு கமர்வட குணபாற்
சிற்பநூல் விதியாற் றபதிய ரமைக்கச் சிறந்தது வேதிகா சாலை.

[இ—ள்] கீர்த்திபெற்றதருமசேனர், தேவர்களெல்லாம் உண்டு மகிழவும், ஒருகாலத்திலும் அழியாததிருப்புக்கொளியூர் நகர்விளங்கவும், தன்னுடைய பெயர் நிலைபெறும்படி ஒரு பெரிய யாகத்தை விளங்கும்படி செய்ய நிச்சயித்து, அழகாக விளங்குகின்ற சூரிய தீர்த்தத்தின் பக்கத்தில் வடகிழக்கு திசையில், சிற்ப நூல் விதிப்படி யாகசாலையை ஸ்தபதியர்களால் சிறப்பாகச்செய்து முடித்தார், [எ—று] 42

668

கோலிய வசந்த விருதுவிற் சுளகிற் குளிர்கலை நிறைமதிப் பகலின்
மேவிய மறையோர் தருமவேள் வியினை விதிவழி நிறைப்புறும் வேலை
மாலினை யயனைப் புரந்தரா தியரை மந்திரச் சுருதியா லழைத்துத்
தூலிய கனலின் சுடர்வழிப் பகுந்தார் தொகுமுறை மிகுமவிப் பாகம்.

[இ—ள்] அழகான வசந்த ருதுவாகிய வைகாசி மாதத்து நிறைந்த மதியோடு கூடிய விசாக நக்ஷத்திரத்தின் நடுப்பகலில் பிராமணர்கள் செய்கின்ற தரும யாகத்தை விதிப்படி பூர்த்திசெய்யும்போது. திருமாலையும், பிரமனையும், இந்திரன் முதலிய தேவர்களையும். சுருதியோடு கூடிய மந்திரங்களினால் வெளிப்படையாகத் தெரிகின்ற அக்கினி மூலமாக அவிர்ப்பாகத்தை அவரவர்களுக்கும் கிரமமாகப் பகிர்ந்து கொடுத்தான். [எ—று] 43

669

இந்தவா றளித்த தருமயா கத்தி லிருநிலப் பரப்பில்வே தியராய்
வந்தமா தவர்கள் பெறுவன தானம் வழங்கிமா மணிமுர சதிர்த்துச்
செந்தழல் வடிவோன் றிருவவி நாசித் தெருவலம் புரிந்துநல் லடியார்
பந்தனை யறுக்குஞ் சிகர தூ பியமும் பஞ்சகூ விளமுநேர் பணிந்தான்

[இ—ள்] இந்த விதமாகச்செய்த தரும யாகத்தில் பெரிய பூமியில் உள்ள வேதம் பயின்றவராகிய பெரிய தவசிகளுக்கு உரிய தானங்களைக்கொடுத்து பெரிய அழகிய பேரிகையை முழக்குவித்து சிவந்த நெருப்புப்போன்ற வடிவையுடைய சிவபெருமான்வீற்றிருக்கின்ற திருஅவிநாசியின் வீதியை வலம் வந்து, நல்ல அடியார்களது பாச பந்தத்தைக் கெடுக்கும்படியான உச்சியையுடைய ஸ்தூபியையும் பஞ்ச வில்வத்தையும் நேராக நமஸ்கரித்தான். [எ—று] 44

670

தளமிகு பதிக ளாறிரண் டறுதி சார்ந்தன விலைபட வாங்கி
வளமிகு பணிக ளநுதின விசேட மாதபூ சனையுடன் வசந்த
வளவிலாப் பருவந் திருவிழா வியற்றி யற்புதா நந்ததாண் டவமா
டிளமதி யணிந்த திருவவி நாசி யெந்தைதாள் சிந்தைவைத் திருந்தான்.

[இ—ள்] அழகானபன்னிரண்டு கிராமங்களைவாங்கி, மேன்மை பொருந்திய ஆபரணங்களைச்செய்தும், நித்திய பூசை, மாத பூசை, விசேட பூசை, வஸந்தஉத்ஸவ முதலாகவுள்ள திருவிழாக்களையுஞ் செய்து அற்புத ஆனந்தத் தாண்டவத்தைச்செய்கின்ற புதிய மூன்றாம் பிறையை அணிந்த திருஅவிநாசியின்கண் உள்ள எந்தையாகிய சிவபெருமானது திருவடிகளைத் தியானித்துக் கொண்டிருந்தான். [எ—று] 45

671

நெடும்பெரு நீழற் றருக்களுந் தெருக்க ணிரையெலா மறுதிசா லைகளுங்
குடும்பவே தியர்க்குக் கிரகமுங் குமரர் குலமறை யோதுநற் கிடையு
மடும்பர தேச வதிதியர் பொசிப்பு மந்தணர்க் கன்னசத் திரமும்
படும்புது மணநீர்ப் பந்தரும் பிணிகள் பரிகரிப் பிடங்களும் பயிற்றி

[இ—ள்] சாலைகளில் பெரிய நிழலைச்செய்யும் நீண்ட மரங்களை வைத்துப்பயிராக்கியும், தெருக்களின் வரிசைகளிலெல்லாம் அறுதிகளைக்காப்பாற்றும் அன்னசாலைகளையும், குடும்பத்தோடு இருக்கிற வேதப்பிராமணர்களுக்கு வீடுகளையும், குமாரர்கள் வேதமோதுதற்கு வேத பாடசாலைகளையும், வெளியூரிலிருந்து வருகின்ற அதிதிகள் சாப்பிடுவதற்கு இடங்களையும், பிராமணர்களுக்கு அன்னசத்திரங்

களையும் புதிய நல்ல மணங்கமழும் வாசனைப்பொருள்கள் போட்ட நல்ல தண்ணீர்ப் பந்தல்களையும் வியாதிகளைப் போக்குதற்குரிய மருந்துச்சாலைகளையும் ஏற்படுத்தி. [எ—று] 46

672

தேனுவின்றெளிந்த நறுநெயா லிழையாற்றிருந்துகாற்பாசவெண்டிரியாற்
பானுவின் கிரணம் படிதரு விகலை முதலெழு பருவத்தி னளவா
மானுகந் தருள்வோன் ஆலய முழுது மாணமர் தூணிழல் படாம
லீனு மொண் சுடரா லாயிரம் விளக்கிட் டிருவிழி களிக்கநின் றிறைஞ்சி.

[இ—ள்] பசுவினுடைய நல்ல நெய்யைவிட்டு பருத்திப்பஞ்சினால் திரியிட்டு சூரியன் கிரணம் தோன்றுகிறவிகலைமுதல் எழு பருவத்திலும், பஞ்ச கவ்வியம் அபிஷேகத்தைவிரும்பும் சிவபெருமானுக்கு ஆலயம் முழுவதும் தூணினுடைய நிழல் படாமல் ஆயிரக் கணக்கான தீபங்களையிட்டு இரு கண்களும் சந்தோஷிக்கக்கண்டு வணங்கியும். [எ—று] 47

673

மற்றவுந் தெரிந்து பதினொராம் பக்கம் வழாதமர் சிவபிர தோடம்
பெற்றபூ ரணைநாண் மதியொளி காலம் பிறிதுபுண் ணியதினந் தோறு
முற்றசந் யாசர் பரமயோ கீசர் உயர்தரு பிரமசா ரியரைக்
கற்றைவார் சடையான் கங்கையங் கூவக் கரைவட வருகுநேர் வைத்து.

[இ—ள்] எல்லாவற்றையுந் தெரிந்து ஏகாதசி, திரயோதசி, பருவம், அமாவாசைகளிலும் மற்றபுண்ணிய தினங்களிலும், சன்யாசிகள், யோகிகள், பிரமசாரி ஆகிய இவர்களை, திரண்ட நீண்ட சடையையுடைய சிவபெருமானது கங்காகூபக் கரையினுடைய வடபக்கத்தில் நேராகவைத்து [எ—று] 48

674

ஒண்டெளி தரளச் சின்மணிக் குவைபோ லோதனம் போதநன் கியற்றித்
தண்டருமமுதின் றீஞ்சுவைக்கனிதேன் சருக்கரையுருக்குதேம்புதுநெய்
வெண்டயிர்முதுபா லிவையெலாமமைய விரிந்தமட் கலந்தனி லமைத்துக்
கண்டகா லையிலே காணரும் புலனுங் காயமுங் களித்திட வளித்தான்.

[இ—ள்] பிரகாசமான முத்துக்குவை போலச் சாதத்தைச் சமைத்து, குளிர்ந்த அமிர்தத்தைப்போல இனிய ருசியையுடைய பழங்கள். தேன் சருக்கரை உருக்கின புதுநெய், வெண்மையான தயிர், பால் இவைகளால் எல்லாம்பொருந்தவிசாலமான மட்பாத்திரத்தில் அமைத்து. யாரைக்கண்டாலும் கண்டபோதேபுலன்களும் சரீரமும் சந்தோஷிக்க அளித்தான். [எ—று] 49

675

காவலன் பின்னுங் களிகிரம் பாமற் காசியின் வாசியாந் தலத்திற்
றேவர்தம்பெருமான்றிருநிலைதொடுத்துத்திருத்தகுமருத்துவின்றிசையிற்
ருலல்சேர் மூன்று பாணபா கத்திற் சத்தியோ சாதவத் திரத்திற்
பாவக விலிங்க மொன்றுதன் பெயராற்பதித்தனன்றுதித்தனன்பலகால்.

[இ—ள்] தருமசேனன் பின்னும் ஆசைமுடிவடையாமல், காசியை விட மேலாகிய இத்தலத்தில், சிவபெருமான் அமருங்கருப்பக்கிரகத்திலிருந்து வாயுதிக்கில் மூன்று விற்கிடை தூரத்தில் சத்தியோசாத முகத்தோடு தன்னால் பாவிக்கப்பட்ட லிங்கம் மூன்றைத் தாபித்து பல காலமும் தோத்திரம் செய்து கொண்டிருந்தான். [எ—று] 50

676

அங்கணோர் தீர்த்தந் தருமபுட் கரணி யாமென வகழ்ந்தன னதற்குச்
செங்கதிர்க் குணபா லொருசரம் படர்ந்த சேணிடைப் பூணணி சிறப்பிற்
றுங்கபத் திரைமா காளியை நிலைத்துத் தொகுபலிக் கணப்பறை முழக்கி
மங்கலப் பதிக்கு வடதிசைக் காவல் வழக்கினு னுழக்குவா சியினுன்.

[இ—ள்] வெற்றியுள்ள குதிரையையுடைய அரசன் அவ்விடத்தில் தருமபுஷ்கரணி என ஒரு தீர்த்தத்தை உண்டாக்கி அதற்குக் கிழக்கில் ஒரு விற்கிடை தூரத்தில் மிகுந்த ஆபரணங்கள் அணிந்த சிறப்பினையுடைய உயர்ந்த பத்திரகாளியைப் பிரதிஷ்டை பண்ணி, மங்கலமுடைய அந்த அவிநாசிப்பதிக்கு வடதிசையில் காவலாயிருக்கும்படி வைத்து பலியிடுவதற்குக் கூட்டமாகிய வாத்தியங்களை முழக்கிப் பலியிட்டான் [எ—று] 51

677

இம்முறை பலநா ளியற்றின னதன்பின் எழுநிலை மாடகோ புரத்தின்
மைம்முகி லுறங்குந் திருவவிநாசி மழவிடை யனை விடை கொண்டு
செம்மணி மகுடக் குருசிலுஞ் சகல திறங்களும் பிறங்கயாத் திரையாய்
மும்முர சதிர வடதிசைப் போகி யடைந்தனன் சதுமுக மூதூர்,

[இ—ள்] இவ்வாறு பற்பல நாள்களும் பற்பல தருமங்களையும் செய்துவந்தபின் ஏழுநிலை மாடங்களையுடைய கோபுரத்தில் கரிய மேகங்கள் தூங்குகின்ற ரிஷபவாகனத்தையுடைய சிவபெருமானிடத்தில் விடைபெற்றுக்கொண்டு நவரத்தினங்களால் இழைக்கப்பட்ட கிரீடத்தையணிந்த அரசனாகிய தரும சேனனும், சகல வைபவங்களோடும் யாத்திரையாய்ப் புறப்பட்டு. வீர முரசு, நீதி முரசு, தியாகமுரசு என்கின்ற மூன்று முரசுகளும் சப்திக்க வட

திசையாகச் சென்று தனது பழமையான ஊராகிய சதுமுகபுரம் என்கிற நகரத்தை யடைந்தான் [எ—று] 52

678

முந்தவோ ரவிழாற் காகதன் கயிலை முதுகதி யடைந்தபுக் கொளியி
லிந்தவா றநந்த தருமமுந் தவமு மியற்றிய புயறரு வனையான்
பந்தபா சங்க ளனைத்தையு மகன்று பனிமதி சகசிரம் பரவி
யந்தமா யமர்ந்த சிவகதிப் பெருமை யகிலத்தி லளப்பவ ருளரோ.

[இ—ள்] முன்னே மூக்கிலிருந்து சிந்தின சாதத்தால் காகமானது பழமையான கைலாயத்தையடைதற்கேதுவான திருப்புக்கொளியூரில், இவ்விதம் அளவில்லாத தருமமும் தவமும்செய்த மேகத்துக்கும் கற்பகத் தருவுக்கும் ஒப்பான அந்தத்தருமசேனன் பந்த பாசங்கள் எல்லாம் நீங்கி, ஆயிரம் பிறைகண்டு தொழுது. முடிவாய் அடைந்த சிவகதியின் பெருமையை இப்பூமியில் அளவிட்டுச் சொல்பவர் யாரிருக்கிறார்கள் [எ—று] 53

679

தேனுகம் பதுமச் சதுமுகன் பறந்துந் தெரிகிலா மணிமுடிக் கணியாய்
மானுகம் பலைசேர் கங்கைநா யகன்முன் வலம்புரி முழக்கினைப் புரியும்
பானுகம் பருந்தம் மாயிரம் வாயாற் பாயிரத் தளவையே பகரத்
தானுகம் பலவுஞ்செலுமென வுரைத்தான் றந்தசீர் நந்தியெம்பெருமான்.

[இ—ள்] தேனைச்சிந்துகின்ற அழகிய தாமரைப்பூவில் அமர்கின்ற நான்கு முகங்களையுடைய பிரமன் பறந்துங்காண முடியாத அழகிய சிரசிற்கு அழகாகப் பொருந்த சங்குகளையும் அலைகளையும் உடைய கங்கையைத் தரித்த சிவபெருமான் சந்நிதியில்சங்குகளைச் சப்திக்கும்பானு கம்பனும் தன் ஆயிரம் வாயாலும் தருமசேனருடைய சிறப்பை முகவுரை அளவும் சொல்லுவதற்குப் பல யுகங்கள் செல்லுமென்று மிகுந்த சிறப்பினையுடைய நந்திதேவர் கூறினார் [எ—று] 54

680

கேட்டுளங் களித்த வொருசனற் குமரன் கெழுமியகருணைகூர்ந்திமையா
நாட்டமூன் றுடைய கணங்களிற் பெரியோய் நம்பர்தம் பெருமையை [யுணர்த்த
வாட்டமுற் றிரங்காய் நாவகஞ் சலியாய் வதனபங் கேருகம் புலராய்
மீட்டுமென் குறைக்கு விளம்புதற் குரியாய் வாழிய மிகுதியு மென்றான்.

[இ—ள்] இதைக்கேட்டு மனமகிழ்ந்த சனற்குமார மாமுனிவர் மிகுந்த கருணைகூர்ந்து. இமையாத மூன்று கண்களையுடைய சிவ

கணங்களுள் மேலானவரே, சிவபெருமானுடைய பெருமையைக் கூறுதற்கு தாங்கள் ஒரு சிறிதும் தளரமாட்டீர்கள், நாவுஞ்சலிக்க மாட்டீர்கள், முகமாகிய தாமரைபுலரமாட்டீர்கள் மறுபடியும் நான் கேட்பதை சொல்லுதற்குரிமையுடனிருக்கின்றீர்கள் ஆத லால் வாழி யென்று சனற்குமார முனிவர் கூறினர் [எ—று] 55

681

தெய்வவெண் கயிலை காசியென் ரேங்குந் திருவவி நாசிமான் மியமாஞ்
சைவநூ லதனைத் திருந்தரு ணந்தி சனற்கும ரேசனுக் களித்த
மெய்வகை யடைவே சூதமா முனிவன் விளம்பல்கேட்டுளம்பரவசமாய்
நைவகை யொழிந்த சிவபத மடைந்தார் நைமிசா ரண்யவா சியர்கள்.

[இ—ள்] தெய்வத்தன்மையையுடைய வெண்மையான கைலை யைப்போலவும், காசியைப்போலவும் உயர்ந்தபெருமையினையுடைய திரு அவிநாசிமான்மியமாகிய சைவநூலைத் திருத்தமான அருளை யுடைய நந்திதேவர், சனற்குமார முனிவருக்கு உணர்த்தின உண் மைப்படி சூதமாமுனிவர் சொல்லக்கேட்டு மனம்பரவசம்அடைந்து நைமிசாரணியவாசிகளாகிய முனிவர்கள் வருந்துதல் இல்லாத சிவ பதவியை யடைந்தார்கள். [எ—று] 56

பனிரெண்டாவது தருமசேனச் சருக்கம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-681.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சுந்தரச் சருக்கம்

682

படியவர்க் கமுத மென்னப்பதிகமுத் தமிழைப் பாடி
நெடியவற் கரிதாஞ் சைவ நிலைசெய்து நிலவுண் டிங்கண்
முடியவர்க் கன்ப ராய முப்பதிற் றிரட்டி மூவ
ரடியவர்க் கடிமை சாரு மடிகள் பொன் னடிகள் போற்றி.

[இ—ள்] பூஉலகத்திலுள்ளவர்களுக்கு அமிர்தம் என்று சொல் லும்படி முத்தமிழோடு கூடிய பதிகத்தைப்பாடி, நெடியவரான திருமாலுக்கும் அறிதற்கரிதாகிய சைவத்தை உலகத்தில் நிலை

பெறும்படி செய்து, நிலவை வீசுகின்ற பிறைச் சந்திரனை முடியில் தரித்த சிவபெருமானுக்கு அன்பராய் விளங்குகின்ற அறுபத்து மூன்று நாயன்மார்களுக்கு அடிமையாவேன் என்று பாடிய திரு நாவலூரரது பொன்போன்ற திருவடிகளுக்குநமஸ்காரம் [எ—று] 1

683

ஒருமுனைப் பொருளா மண்ணல் புக்கொளி யுவந்து போற்றத்
திருமுனைப் பாடிநாடர் சுந்தர ரணைந்த செய்தி
பெருமுனைச் சூல கால னுயிர்கொளும் பிறப்புத் தோறும்
வருமுனைத் தடுத்தாட் கொள்வர் நெஞ்சமே வழுத்து கண்டாய்.

[இ—ள்] ஒப்பற்ற முதற் பொருளாயுள்ள பெருமை பொருந்திய திருப்புக்கொளியூரில் உள்ள சிவபெருமானை விரும்பித் துதித்தற்கு திருமுனைப்பாடி நாடாகிய சுந்தரமூர்த்தி நாயனார் வந்தடைந்த வரலாற்றைக் கூறி மனமே அவரைத் துதிக்கக் கடவாய் பெரிய கூர்மையான சூலாயுதத்தையுடைய காலன் நம்முடைய பிறப்புக்களில் உயிரைக்கொண்டு போவதற்கு முன்னே வந்து நம்மைத் தடுத்தாட்கொள்வர் ஆதலால் [எ—று] 2

684

திருவளர் கயிலை யோங்கத் தென்றிசை மருங்கி லோர்பாற்
பொருவருஞ் சுருதி யாய்ந்த புலிமுனி புரிந்த பேற்றால்
வருமுப மன்னியப் பேர் மாதவக் குருசில் வைகப்
பருவமார் முனிவர் சூழ்ந்தங் கிருந்தனர் பரவை போன்று,

[இ—ள்] அழகு வளர்கின்ற கயிலை மலையின் தெற்குத் திசையில் ஒரு பக்கத்தில் வேதங்களை யுணர்ந்தவரும், தனக்குச் சமானமில்லாதவரும் ஆகிய வியாக்கிரபாதர் செய்த தவத்தாற் பிறந்தவரான உபமன்யுவாகிய பெரிய தவமுனிவர், தகுதியுள்ளபல முனிவர்களும் சமுத்திரம் போலத் தன்னைச் சூழ்ந்திருக்க வீற்றிருந்தார் [எ—று] 3

685

தொன்மைய சிவபு ராணந் தொகுமுனி வகுத்துச் சாற்றத்
தன்மையான் மதிமா ணாக்கர் தளிர்த்தறி விரங்கிக் கேட்பப்
பன்முறை விழிநீர் மல்கிப் பங்கய விதயந் தோறுஞ்
சின்மய பரமா னந்தச் சிவமணங் கமழ்ந்த தன்றே.

[இ—ள்] பழமையான சிவபுராணங்களைஉபமன்யுமகாமுனிவர் வகுத்துச்சொல்ல புத்தியையுடைய மாணாக்கர்கள் பணிவான தன்

மையோடு மகிழ்ந்து அன்பாய்க் கேட்க பலதாம் கண்களிலிருந்து ஆனந்தக்கண்ணீர் நிறைந்து மனமாகிய தாமரைமலர்தோறும், ஞானமயமாகிய மேலான சிவானந்தமாகிய மணம் வீசினது [எ—று] 4

686

ஆங்கமர்ந் தன்ன காலை யண்டமு நிலனு மொன்று
யோங்குபே ரொளியொன ரெவ்வா வுயர்வொடு தென்பாற் ரேன்றத்
தேங்குசீர் முனிவர் கண்டு செவ்வியோ யிதுவென் னென்னப்
பாங்குற வருளிச் செய்வான் பாற்கடல் பயின்ற வாயால்.

[இ—ள்] இவ்வாறு பல முனிவர்களும் சூழ உபமன்யு மகா முனிவர் வீற்றிருந்த சமயத்தில், ஆகாயமும் பூமியும் ஒன்ருய்த் தோன்றும்படி உயர்ந்த பெரிய ஒளியானது தனக்கு ஒப்பில்லாத மேன்மையோடு தெற்குப் பக்கத்தில், தோன்ற மிகுந்த சிறப்பினை யுடைய முனிவர்கள் கண்டு உயர்ந்த தன்மையையுடையமுனிவரே இந்தப் பிரகாசம் என்ன என்று கேட்க, திருப்பாற்கடலை யுண்ட திருவாயினுல் உபமன்யு முனிவர் தகுதியாக அதற்குப் பதில் உரைக்கத் தொடங்கினுர் [எ—று] 5

687

கணங்களி லாலகால சுந்தரன் கடவுள் வாக்கா
லணங்கின ரின்பமென்னு மலைகடன் மூழ்கி யேறிக்
குணங்குறி கடந்து முன்போற் குழாத்திடை யடைவதாய் வந்
திணங்கின னவன்றன் மேன்மை யாந்தொழற் கியலு மென்ருன்.

[இ—ள்] சிவகணங்களில் உயந்தவராகிய ஆலால சுந்தரர், கைலையின் கண் உள்ள சிவபெருமானது திருவாக்கால், தெய்வப் பெண்களுடைய இன்ப மென்கின்ற சமுத்திரத்தில் முழுகி அதி னின்றும் கரையேறி, முன்போலக் குணம், குறி இவைகளைக் கடந்து, சிவகணத்தில் அடைவதாய் வந்திருக்கிருர். அவருடைய மேன்மையானது நாம் எல்லோரும் தொழுது துதிக்கக் கூடியது என்ருர் [எ—று] 6

688

அன்னவன் பெருமை யாமிங் கறிவுறல் வேண்டுமென்று
முன்னவ ராயிருந்த முனிவரர் மகிழ்ந்து கேட்ப
வுன்னருங் கால மூன்று முள்ளத்தி னுணர்ந்தா ராய்ந்து
மன்னுப மன்னியன்ருன் வரன்முறை வழுத்த லுற்ருன்.

[இ—ள்] உடனே முனிவர்கள் அவருடையபெருமையை நாம் இங்கே அறிந்து கொள்ளவேண்டுமென்று மகிழ்ந்து கேட்க நினைத் தற்கரிய மூன்று காலங்களையும் மனதில் உணர்ந்து ஆராய்ந்து, நிலை பெற்ற பெருமையினையுடைய உபமன்யு முனிவர் கிரமமாகச் சொல்லத்தொடங்கினார். [எ—று] 7

689

தேனவிழ் கொன்றை வேணித் திங்கள்சேர் கயிலை நாதன்
வானவ ருலக முய்ய நுகரும்வல் விடத்தி னூடு
தானமர் வடிவு தோன்று சாயையங் குலியான் மாற்ற
வானதோர் கணமாய் நின்றங் காலசுந் தரனே யானான்.

[இ—ள்] தேனைச்சொரிகின்ற கொன்றை மலர் மாலையையும், பிறைச்சந்திரனையும் அணிந்த சடையையுடைய கயிலையிலுள்ள சிவபெருமான், தேவருலகத்திலுள்ள தேவர்கள் பிழைக்கும்படி உண்ட ஆலகாலவிடத்தில், தன்னுடைய வடிவமானது தோன்ற அதை விரலினால் அழைக்க அவ்வுருவம் ஆலாலசுந்தரர் என்ற வடிவத்தோடு ஓர்கணமாய் அமர்ந்தார். [எ—று] 8

690

பண்ணவ ருய்ந்த பின்னர் பாற்கடல் கடைய நீல
வண்ணனை விடுத்துஞான மாமுத லிருப்ப மற்றோன்
கண்ணுத லிருமுன் சார்ந்து கரங்குவித் தொல்கி யேநின்
றண்ணலே யரசே போற்றி யரகரா போற்றி போற்றி.

[இ—ள்] தேவர்கள் பிழைத்த பிறகு திருப்பாற்கடலைக் கடையும்படி நீல நிறத்தையுடைய திருமாலை அனுப்பிவிட்டு ஞானத் துக்குத்தலைவனாகியசிவபெருமான் இருக்க ஆலாலசுந்தரர் நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமானது முன்பு வந்து, கைகளைக்குவித்து துவண்டு நின்று, அண்ணலே அரசே நமஸ்காரம், அரகரா போற்றி போற்றி. [எ—று] 9

691

செய்பணி தமிய னேற்குத் திருவருள் புரிவா யென்னக்
கொய்பல மலர்வெண் ணீறு கொணர்பணி கொடுத்தா னெம்மான்
மையயின் மெருமுகும் பூங்கா வனத்தில்வை கறைபோ யாய்ந்து
மெய்படு குடலை துன்ற விரைமல ரெடுத்த வேலை.

[இ—ள்] அடியேனுக்கு நான் செய்யவேண்டிய பணியை இன்னதென்று தெரிவிக்கவேண்டுமென்று சொல்ல, அதற்குச் சிவபெருமான், பலமலர்களைக்கொய்து மாலைதொடுத்து அணிதலும், வெண்

ணீறு கொண்டுவந்துகொடுத்தலும் நின்கடமை என்று கட்டளையிட இருண்டு கருமையாய் விளங்குகின்ற பூஞ்சோலையிற் சென்று, விடியற்காலத்தில்நல்ல மலர்களாய் ஆய்ந்தெடுத்து, குடலையில் நிறைய வைத்தபின்பு. [எ—று] 10

## 692

இமவரை வல்லி மேவு மெழுநிலை மாடக் கோயி
லமர்பணி புரியு மாத ரநேகரி னழகின் மிக்க
கமலினி யநிந்தி தைப்பேர்க் கன்னியர் போந்து தாமுந்
தமரவண் டலம்பு நந்தா வனத்திடைத் தாமங் கொய்தார்.

[இ—ள்] இமய அரசன் மகளாகிய கொடிபோன்ற பார்வதி வீற்றிருக்கின்ற உயர்ந்த நிலைகளையுடைய கோவிலில் தங்கிப் பணிவிடை செய்யும் மாதர்கள் பலபேர்களிலும், அழகில் மேம்பட்ட கமலினி, அனிந்திதை என்கின்ற பேர்களையுடையகன்னியர்களும் வந்து வண்டு சப்திக்கின்ற அந்த நந்தவனத்தில் மலர்களைக் கொய்தார்கள். [எ—று] 11

## 693

பொருவரு முருவ முள்ளார் புதியபே ரழகைக் கண்டாங்
கிருவர்தம் மனமுங் கண்ணு மிடையற விணைந்து பாய
வொருவர்தம் விழியு நோக்க வுள்ளமு முபய மாதர்
பருவதமா முருவந் தோறும் பாய்ந்தன படைவேள் பாணம்.

[இ—ள்] சமானம் இல்லாத வடிவழகையுடைய சுந்தரரைக் கண்டு அந்தப்பெண்கள் இருவருடைய மனமும், கண்களும் சேர்ந்து தொடர்ந்துபாய, சுந்தரரது கண்களும் அவர்களைப் பார்த்ததினாலே அவருடையஉள்ளமும், இரண்டு பருவமுள்ள பெண்களிடம் செல்ல, மன்மதனது பாணங்கள் இருவர் பேரிலும் பாய்ந்தன. [எ—று] 12

## 694

அன்னசுந் தரர்போ யன்பு ளவர்மணிக் கோயில் சார்ந்து
பொன்னறு மலரைப் பூமண் டபத்தினிற் பொதுளல் செய்து
தொன்னெறி பிழைத்த லஞ்சித் தொழுதுநிற் பதனை நோக்கி
முன்னவர் முதல்வன் செவ்வாய்முகிழ்த்தபுன் முறுவல் செய்தான்.

[இ—ள்] உடனே சுந்தரர் சென்று தனக்கு அன்பாயுள்ள சிவபெருமானது அழகிய கோவிலுக்குட்புகுந்து, அழகிய வாசனையோடு கூடிய புஷ்பங்களை பூமண்டபத்தில் வைத்துவிட்டு, தொன்மையான மார்க்கத்திலிருந்து தவறினதற்குப் பயந்து வணங்கி நிற்

பதைப்பார்த்து தேவர்களுக்குந் தேவனாகிய சிவபெருமான் சிவந்த வாயை மூடிக்கொண்டு புன்முறுவல் செய்தார். [எ—று] 13

695

ஆதலா லால கால சுந்தர ரயிர்த்து மேனி
மீதெலா நடுக்க முற்று வெயர்த்திரு விழிநீர் மல்கிப்
போதுலா முகம் புலர்ந்து புலம்பிநெஞ் சலம்பி யெந்தை
பாததா மரையின் மீது பயங்கொடு பதைத்து வீழ்ந்தார்.

[இ—ள்] புன்முறுவல் செய்ததைக்கண்ட ஆலாலசுந்தரர், சந்தேகித்து, சரீரம் எங்கும் நடுக்கத்தையடைந்து, வியர்வையுண்டாகி இருகண்களிலும் நீர் நிறைந்து, தாமரைப்பூப்போன்ற முகம் வாடி நெஞ்சுவருந்தி அழுது, பயந்து எமதுபிதாவாகிய சிவபெருமானது பாத தாமரையில் துடிதுடித்து வீழ்ந்தார். [எ—று] 14

696

தோகையர்க் கறிவை யீந்த சுந்தரா சொற்றல் கேணீ
மாயையிற் செனன மெல்லா மாதியாய் வருத லாகு
மாகையிற் புவியிற் றோன்றி யரிவைய ரின்பந் துய்த்து
வாகையிற் கிளர்ந்த நம்பால் வருதியென் றருள வுள்ளல்.

[இ—ள்] சிவபெருமான் சுந்தரரைப்பார்த்து, பெண்களுக்கு உன்னுடைய அறிவைக்கொடுத்த சுந்தரா, நீ கேள், மாயையினால் ஆதியிலிருந்தே பிறப்பானது வந்து கொண்டே இருக்கும். ஆகையினால் நீ பூமியில் பிறந்து பெண்களால் உண்டாகும் இன்பங்களை அனுபவித்து வெற்றி மிகுந்த நம்மிடத்துக்கு வருவாயென்று கூறினர். [எ—று] 15

697

நாதனே யும்பர் காணா நம்பனே யருள் பெறாத
கோதினே னவனி போந்து குரம்பையொன் றெடுத்தே னயின்
மீதநே கம்பி றப்பு விருப்பினால் வெறுப்பி னால்வந்
தோதநீ ருலகி னூனும் வினையுமா யுழலுங் காலை.

[இ—ள்] நாதனே, தேவர்களாலும் காணாத நம்பனே, உன்னுடைய அருளைப்பெறாத குற்றமுடையவனான நான் பூவுலகிற்போய் சரீரம் ஒன்றையெடுத்தேன் ஆனால், அதற்குமேல், ஆசை, கோபம் இவைகளினால் சமுத்திரத்தினால் சூழப்பட்ட பூமியில் யானும் என் வினையுமாகச் சுற்றிக்கொண்டிருக்கும் பொழுது. [எ—று] 16

## 698

தோற்றிய வுந்தி தோறுஞ் சுக்கிலத் துளியிற் போந்து
வேற்றுவேற் றுருவாய் மண்மேல் வீழ்ந்துறு துயரை மேவிக்
கூற்றடர் கொடுமை யானுங் கொலைபடத் தமிய னேனுக்
காற்றுமோ வென்னை யாண்ட வையநின் னபய மென்றான்.

[இ-ள்] விந்துவின் துளியினாலே, ஒவ்வொரு கர்ப்பத்திலும் தங்கி வேறு வேறு வடிவங்களாய் பூமியின்மேல் விழுந்து மிகுந்த துன்பத்தையடைந்து இயமன் வருத்துகின்ற வருத்தத்தினால் இறந்துபட அடியேனுக்கு முடியுமோ என்னையாண்ட ஐயனே உன்னுடைய அபயம் நான் என்று கூறினார். [எ-று] 17

## 699

துறந்துளங் கவலா நின்ற சுந்தர வஞ்ச லஞ்ச
னிறந்தரு சனனவாரி நீந்தனின் செயலோ வென்றுஞ்
சிறந்தவைந் தொழிலும் யாமே யியற்றலாற் சிறிது முன்னை
மறந்திரோந் தடுத்தாட் கொண்டுன் பின்செல வருதுமென்றான்.

[இ-ள்] பிரிந்துவிடுவோமென்று மனம் வருந்துகின்ற சுந்தரா அஞ்சவேண்டாம் அஞ்சாதே, பலபேதமான ஜன சமுத்திரத்தை நீந்துதல் உன்னுடைய செயலோ, எப்பொழுதும், சிறப்பான படைப்பு முதலாகிய ஐந்து தொழிலும் யாமே செய்தலினாலே, சிறிதும் உன்னை மறந்திருக்கமாட்டோம் உன்னைத் தடுத்தாட் கொள்ளப் பின்னே வருவோம் என்று கூறினார் [எ-று] 18

## 700

ஆகுவ தெனினும் யானுன் னடியிணைக் கன்புறாது
போகுவ தழகன் றேனும் புகன்றதுந் தவிர லாற்றே
னாகுலந் தணியுங் காறு நின்பணிக் கமர்ந்து பின்ன
ரேகுவன் புவியிற் றோன்றி யென்கடன் முடித்தற் கென்றார்.

[இ-ள்] தாங்கள் சொல்வது தக்கதானாலும் தேவரீருடைய பாததாமரைகளுக்கு அன்பு வைக்காது நீங்கிப்போதல் அழகன்று, தாங்கள் சொன்னதையுந் தடைசெய்ய முடியாதவனாயிருக்கின்றேன். ஆதலால் என்னுடைய துன்பம் நீங்கும் வரையில் நின்பணியில் அமர்ந்திருந்து மறுபடி பூமியிற் பிறந்து என் கடமையைச் செய்து முடித்தற்குப்போவேன் என்று கூறினார் [எ-று] 19

## 701

அந்தவா சகமுட் கொண்டங் ககணித வநந்த ரூபன்
பந்தமார் நெடிது காலம் பணிவிடை யுகந்து பின்னர்
நந்தல்சேர் கலியின் றோற்ற மாதியாய் நடக்கு நானி
லிந்தமூ வரையுங் காய மெடுமினென் றருளிச் செய்தான்.

[இ-ள்] *அந்த சுந்தரர் சொன்ன வாசகத்தைத் திருவுளத்திற் கொண்டு அளவு படாத பல வுருவங்களையுடைய சிவபெருமான், நீண்டகாலம் சம்பந்தமுள்ள பணிவிடையை யுகந்து, மறுபடி கெடுதல் பொருந்திய கலியின் ஆரம்பத்தில் இந்த மூவரையும் பூவுலகிற் போய்ப் பிறக்கக்கடவீர்கள் என்று கூறினார் [எ-று]* 20

## 702

மன்றல்சேர் பொன்னி நாட்டில் வண்டிமிர் தொண்டை நாட்டி
லொன்றிய நடுவு நாட்டத் துயர் முனைப் பாடி நாட்டின்
முன்றில்வாய் வசந்த மூர முகம்புரி பழன மூரத்
தென்றமிழ்ப் பதிக மூருந் திருநாவ லூர தாமால்.

[இ-ள்] *மங்களம் பொருந்திய காவிரிநாட்டுக்கு அப்பாலுள்ள தொண்டை நாட்டின் நடுவிலுள்ள உயர்ந்த திருமுனைப்பாடிநாட்டில், முற்றங்களில் எங்கும் தென்றற் காற்று வீசவும், வயல்களில் சங்குகள் ஊரவும் தென்தமிழ்ப் பதிகமாகிய தேவாரம் அதிகரித்து விளங்குதற்கு ஏதுவாகிய திருநாவலூரில் [எ-று]* 21

## 703

அண்ணலா ருருவ மேனி யடுதழற் பிழம்பென் றாலுந்
துண்ணென விரைந்து நீண்டுந் தொழிற்பெருந் தகைமை சார்ந்த
திண்ணமாஞ் சைவ ஞானச் சிவமறை மரபுக் கெல்லாங்
கண்ணென விளங்கா நின்ற கௌசிக கோத்தி ரத்தில்.

[இ-ள்] *பெருமைமிகுந்த சிவபெருமானது திருமேனி கொல்லுகின்ற நெருப்புப்பிழம்பாக இருந்தாலும் விரைந்து தொடும்படியான மேலான தொழிலையுடைய உறுதியான சைவ ஞானத்தையுடைய சிவமறையோரது மரபுகளுக்கெல்லாம் கண்ணென்று பிரகாசிக்கின்ற கௌசிக கோத்திரத்தில் [எ-று]* 22

## 704

ஓகையா லுருத்தி ராக்கந் தவளநீ றொளிரு மெய்யார்
பாகையார் வேள்வி யுள்ளார் பரசிவார்ச் சனையின் பண்பா
ரீகையார் சடையி னார்பங் கிசைஞானி யாரென் றோதுந்
தோகையா ருதரத் தொன்றிச் சுந்தர ருதயஞ் செய்தார்.

[இ—ள்] விருப்பத்தோடு உருத்திராக்ஷத்தையும் திருநீற்றை யும் அணிந்து பிரகாசிக்கின்ற சரீரத்தையுடையவர் தேவர்களுக்கு இனிமையான வேள்விகளைச் செய்பவர் சிவார்ச்சனை செய்கின்ற தன்மையை யுடையவர் கொடுக்குங்குணம் உடையவர் ஆகிய சடை யனாருக்கு அவரது மனைவியாராகிய இசைஞானியார் என்று சொல்லப்பட்ட மயில் போன்ற சாயலையுடையவருடைய திருவயிற் றிலிருந்து சுந்தரர் திருஅவதாரம் செய்தார் [எ—று] 23

705

சைவமுந் திருவெண்ணீறும் தயங்கிய செல்வங் காண
மெய்வரு மாறுபத்து மூவர்தம் பெருமை காண
மைவரி முதலை யுண்ட மதலைசீ ரழகு காணத்
தெய்வவெண் கைலை காணத் திருவிழி திறந்தா ரன்றே.

[இ—ள்] சைவமும், திருவெண்ணீறுமாக விளங்குகின்ற இரண்டு செல்வங்களைக்காணவும், உண்மையான அறுபத்து மூன்று அடியார்களுடைய பெருமையைக் காணவும், கரிய வரிகளையுடைய முதலையுண்ட பாலனது சிறந்த அழகைக் காணவும் தெய்வத்தன் மை பொருந்திய வெண்மையான கைலாயத்தைக்காணவும், அழ கிய இரண்டுகண்களையுந்திறந்தார் [எ—று] 24

706

வேய்மலி தோளு மார்பும் வதனமு மிகப்பூ ரித்த
தாய்முலை சுரந்து தூண்டுந் தண்ணறு மமிர்த முண்டார்
தீய்மலக் குறும்பு தீர்ப்போன் றிருச்செவிக் கின்பந் தேங்க
வாய்மலர்ந் தமுத வாக்கு வழங்குதற் குரிய வள்ளல்.

[இ—ள்] கெட்ட ஆணவம், மாயை கன்மம் ஆகிய மூன்று மலங்களால் உண்டாகும் சேஷ்டைகளை நீக்குகின்ற சிவபெருமா னது திருச்செவிகளுக்கு இன்பம் அதிகரிக்கத் திருவாய் மலர்ந்து தேவாமிர்தம் போன்ற பாடல்களை வழங்குகின்ற வள்ளலாகிய சுந் தரர் மூங்கில் போன்ற தோள்களும். தனங்களும். முகமும் மிக மகிழ்ச்சியடைந்த தாயான இசை ஞானியார் தனங்களில் பால் சுரந்து ஊட்டும்படியான குளிர்ந்த நல்ல பாலை உண்டார் [எ—று]25

707

நாளொரு மூன்றிற் காலை ஞாயிறு விழித்துப் பின்னுங்
கோளறு மதியம் பார்த்துக் கோதெரி சனமுஞ் செய்து
காளகந் தரர்வெண்ணீற்றுக் காப்புங்கைக் காப்புஞ் சாத்திக்
கோளமர் கன்ன வேதை புணர்ந்துசெங் கீரை யாடி.

[இ-ள்] மூன்று நாள் ஆனபிறகு காலையில் தோன்றுகின்ற சூரியனைப்பார்த்து, பின் குற்றம்இல்லாத சந்திரனையும் தெரிசித்து பசுவையும் பார்த்து, கறுத்த கண்டத்தையுடைய சிவபெருமானது திருநீற்றுக்காப்பையும் அணிந்து, கையிலும் காப்பு அணிந்து, நல்ல நாளில் கர்ணபூஷணமான காது அணிகளை அணிந்து, செம்மையானவார்த்தையை உச்சரித்து [எ-று] 26

708

பூப்பயி ருல்சப் பாணி புனிதவாய்த் திவலை முத்தந்
தாய்ப்பரிந் துதவு மன்னஞ் சௌளங்கண் டருளி நண்பால்
வாய்ப்புற வருகை திங்கண் மணிப்பறை சிறுதேர் சிற்றில்
சேப்படு பதங்க ளொல்கத் திருவிளை யாடல் செய்தார்.

[இ-ள்] அதன்பின் தாயார் அழகிய தால் ஆட்ட ஆடியும், கைகளைக்கொட்டியும் பரிசுத்தமான முத்தம் கொடுத்தும் தாய் அன்போடு ஊட்டுகின்ற அன்னத்தை உண்டும், சௌளத்தை ஏற்றுக்கொண்டும், ஆசையோடு கூப்பிடுகிறவர்களிடத்துக்கு வந்தும், அம்புலியை அழைத்தும் அழகிய சிறுபறை முழக்கியும், சிறுதேர் உருட்டியும், பெண்கள் கட்டும் மணற்சிறு வீட்டைக் காலால் அழித்தும் சிவந்த பாதங்கள் வருந்தும்படி இவ்விதமான திருவிளையாடல்களைச்செய்தார் [எ-று] 27

709

ஞாலமே புரக்குங் கோமா னரசிங்க முனைய னென்பான்
சீலமார் நாவ லூரிற் றெருவுலா வெய்தும் வேலை
வாலவே தியனார் முன்றின் மறுகிடை யாடல் கண்டு
சாலவெண் சிவிகை யேற்றித் தடம்புயத் தணைத்துக் கொண்டு.

[இ-ள்] அக்காலத்தில் அந்நாட்டை ஆண்டுவருகிற அரசராகிய நரசிங்கமுனையர் என்பவர் மேன்மை பொருந்திய திருநாவலூரில் தெருவீதியில் திரு உலாவாக வருகின்ற காலத்தில், இளவயதையுடைய சுந்தரர் வீதியில் விளையாடுதலைக் கண்டு தன்னுடைய வெண்மையான பல்லக்கில் ஏற்றிக்கொண்டு, பெரிய தோளில் அணைத்து [எ-று] 28

710

மணிமுகப் பணுகி வைகி மைந்தனார் தந்தை யாரைப்
பணிபுரி பவரைப் போக்கி வரவழைத் தருள்பா லித்துத்
துணிவினால் யாவு முள்ளேன் சுதரின்றி யடைந்த சோபந்
தணிவுற வுமது பாலர்க் குரியன தருவே னென்ன.

(இ-ள்) அழகிய தன்னுடைய அரண்மனை வாயிலின்முகப்பை யடைந்து, தன்னிடத்தில் வேலை செய்யும் வேலையாட்களை யெல்லாம் அவர்களிடங்களுக்குச் செல்ல விடை கொடுத்து மிகுந்த தவத்தையுடைய சடையனாரை வரவழைத்து, அவரிடத்தில் மிகவும் அன்புள்ளவராய் நான் எல்லாப் பாக்கியங்களையும் அடைந்திருக்கின்றேன் பிள்ளை யில்லாமையால் உண்டாகிய சோபம் நீங்கும்படி உமது புத்திரருக்காக உமது விருப்பப்படி உள்ள பொருளைத்தருவேனென்று கூற (எ-று) 29

## 711

வறுமையின் றலைநின் றுள்ள மாதவர் சடைய னாரும்
பெறுமனப் பரிவுங் கிஞ்சிற் பேதமு முளரா யிம்மை
மறுமையின் பெருமை சார்ந்த மரபிடை வழாமை யுண்டே
லுறுமெனக் குருசில் கேட்டுப் பணிக்கல மொருபாற் பெய்து.

(இ-ள்) ஏழ்மையையுள்ள மாதவராகிய சடையனாரும் மனதில் சிறிது வருத்தமும் அன்பும் உள்ளவராகி, எங்களுடைய மரபு நெறிக்குத் தவறாமல் வளர்க்கவேண்டும் என்றுகூற அதைக்கேட்ட அரசரும் சம்மதித்து சடையனாருக்கு வேண்டிய பொருள்களைக் கொடுத்து, சுந்தாருக்கு வேண்டிய ஆபரணங்கள் பலவற்றையும் ஒரு பெட்டியில் நிறைத்து (எ-று) 30

## 712

நிரைபெறு சுடிகை தூக்கி நித்திலக் குதம்பை சேர்த்துப்
புரையற வயிரத் தாமம் புனைந்துபொற் கலன்கள் பூட்டி
யரைவட நெருங்க வொண்கிங் கிணிமணி யசைய நாற்றித்
தரைபடத் தாளிற் றண்டை தமனியச் சிலம்பு சாத்தி.

(இ-ள்) கல்விழைத்த நெற்றிச் சுட்டியும் கடுக்கனும், வயிரப் பதக்கங்களையுடைய மாலைகளையும் பொன் ஆபரணமாகிய மாலைகளையும், காப்பையும் அணிவித்து பொன் அரை நாணும் சிறுசதங்கைகளையும் அணிவித்து கால்களில் பொன்னாலாகிய தண்டை சிலம்பு முதலிய ஆபரணங்களையும் சுந்தார்க்கு அணிவித்தான் (எ-று) 31

## 713

காண்பெறு சிறப்பி னோங்கிக் கண்களி கொண்ட மன்னன்
மாண்பெறு சடையனார்தம் வதனபங் கயத்தை நோக்கித்
தூண்பெறு வயிரத் தோளார் சுந்தர மதலைக் கேற்க
வூண்பெறு மினிய வெல்லா மொருப்பட வுதவி செய்தான்;

(இ—ள்) காணத்தக்க சிறப்பாக எல்லா ஆபரணங்களையும் அணிவித்து கண்களாற் பார்த்துச் சந்தோஷித்த அரசன் சடைய ஞருடைய முகமாகிய தாமரையை நோக்கி வயிரத்தூண்கள் போன்ற தோள்களையுடைய சுந்தரருக்கு உணவுக்கு வேண்டியவை களையெல்லாம் கொடுத்து உதவி செய்தான் (எ—று) 32

714

வடமொழி தெரித்த நூலுந் தமிழ்மொழி மதுர நூலு
மடர்தரு வேத நூலு மாகமச் சைவ நூலும்
படரவே பயின்றேழ் யாண்டிற் பரிந்துப நயன மென்னுஞ்
சுடர்மறை வேள்வி முந்நூல் சடங்குடன் றேள்சேர் வித்தார்.

(இ—ள்) வடமொழியாகிய சம்ஸ்கிருத நூல்களையும், தென் மொழியாகிய தமிழ்மொழியில் உள்ள இலக்கண இலக்கிய நூல் களையும், மிகுந்துள்ள வேதநூல்களையும், சைவாகம நூல்களையும் அதிகமாகப் பழகுவித்து ஏழாவது ஆண்டில் உபநயனம் என்கின்ற பூணூல் கல்யாணத்தையும் வேதவிதிப்படி செய்து வைத்தார் (எ—று) 33

715

நரசிங்க முனைய மன்ன னுவலூர் வேதக் கன்றை
முரசங்க ளதிர வார்ப்ப முத்தின் பொற் சிவிகை யேற்றிக்
கரசங்க முரல மாதர் கவினிறை கவரி சாய்ப்பப்
பரசிடுங் கவிக ளேத்தப் பதிவலங் கொண்டு புக்கான்.

(இ—ள்) நரசிங்கமுனையர் என்கின்ற அரசர் திருநாவலூரரா கிய பிராமணச் சிறுவரை வாத்தியங்கள் சப்திக்க பொன்னுற் செய் யப்பட்ட முத்துப்பல்லக்கில் ஏற்றி சங்குகள் ஒலிக்க அழகிய பெண் கள் வெண்சாமரையை வீச வித்துவான்கள் தோத்திரம் செய்ய அந்த ஊரை வலஞ்செய்வித்து தன் அரண்மனைக்குள் அழைத்துக் கொண்டு போனன் (எ—று) 34

716

பாவலர் நாவ லூரிற் பஞ்சாதி மறையி னேருந்
தூவலர் கமலத் தாமத் தொடையணி சடைய னுரு.
மேவல் செய் பாரியான விசைஞானி யாரும் வாழ்த்தக்
காவலர் குலகோ மானுங் களிகலந் தொழுகு நாளில்.

(இ—ள்) திருநாவலூரராகிய சுந்தரரை மற்ற வேதங்களைச் சொல்லுகின்ற வேதப்பிராமணர்களும் பரிசுத்தமான தாமரைப்பூ மாலையை அணிந்த சடையனுரும், அவருக்கு ஏவல் செய்கின்ற

மனைவியாகிய இசைஞானியாரும் தன்னை வாழ்த்த சுந்தரரை அவருடைய இல்லத்துக்கு அனுப்பிவைத்து அரசர்க்கு அரசனாகிய நரசிங்கமுனையரும் சுந்தரர் வீட்டிலுள்ளவர்களும் மிகுந்த மகிழ்ச்சியோடு வாழ்ந்து கொண்டிருக்கும் நாளில், (எ—று) 35

## 717

நீடலைப் பவளங் கஞ்ச நித்திலங் கயல்சங் கேற்று
வேடலை வணங்கும் வீதி விடங்கரு ரூரான் முன்னின்
றாடல்செய் கணிகை யாரிற் கமலினி யணங்கு தோன்றிப்
பாடல மலர்மென் கூந்தற் பரவையா யமர்ந்தா ரன்றே.

[இ—ள்] மிகுந்த அலைகளையுடைய சமுத்திரத்திலுண்டாகின்ற பவளத்தையும், தாமரையையும், முத்துக்களையும், கயல்மீன்களையும், சங்குகளையும்கொண்டுவந்து மன்மதன் தலைவணங்கி நிற்கின்ற வீதிவிடங்கராகிய திருவாரூரிலுள்ள தியாகராஜப்பெருமானது சந்நிதி முன்னே நின்று ஆடுகின்ற உருத்திரகணிகையர் குலத்தில் கமலினி என்கின்றதெய்வப்பெண்பிறந்து ஆடல்பாடல்செய்கின்ற அழகிய மலரையணிந்த பரவை என்கின்ற திருநாமத்தோடு வளர்ந்து வந்தார். [எ—று] 36

## 718

உலையன லனைய ராகி யொற்றியூ ருடைய ராகி
நிலைபெற வரும்பு கோத்த நின்மலன் பணியராகி
யலைவரு சேடிமாரி லநிந்திதை யணைந்து வேளாண்
டலைமைய னிடத்திற் றோன்றிச் சங்கிலி யெனவமர்ந்தார்,

[இ—ள்] உலையிலுள்ள நெருப்பையொத்தவராகியும், கயிலையில் இருப்பவராகியும் உள்ள நின்மலனாகிய சிவபெருமானுக்கு மலர்மாலை கட்டும்படியான தொழிலையுடைய தோழிமாரில் ஒருவராகிய கெடுதலில்லாத மற்றொரு தெய்வப்பெண்ணாகிய அநிந்திதை என்பவள் திருவெற்றியூரில் வேளாளர் குலதிலகராயுள்ள ஒருவருக்குப் புத்திரியாகப் பிறந்து சங்கிலி யென்கின்ற திருநாமத்தோடு வளர்ந்து வந்தார் [எ—று] 37

## 719

அங்கவர் வளர்ந்து மங்கைப் பருவமா யரனுக் கன்பாய்ப்
பொங்குகற் புடனே வாழப் புண்ணியக் குமரர் தாமுஞ்
சங்கையில் பிரமசாரித் தன்மையில் வழுவா வண்ணந்
திங்களின் விளக்கம் போன்று திருமணப் பருவஞ் சார்ந்தார்.

[இ—ள்] தெய்வப்பெண்களாகிய அவ்விருவரும் இவ்வாறு வளர்ந்து சிவபெருமானுக்கு அன்பராய், விளங்குகின்ற கற்போடு மங்கைப் பருவத்தையடைந்து வாழ்ந்து கொண்டிருக்கப் புண்ணிய மூர்த்தியாகிய சுந்தரரும் குற்றம் இல்லாத பிரமசாரித்தன்மையிலிருந்து தவறாதபடி பிறைச்சந்திரன்போல் வளர்ந்து திருமணம் செய்யும் பருவத்தை அடைந்தார். [எ—று] 38

## 720

ஒருகுடை நீழல் வேந்த னுத்தமச் சடைய னாரைத்
திருமகற் குரிய கோதை சேர்மணம் புரிய வெண்ணி
யருமறைக் குலத்தி னேடி யநுமதி கொணர்தி ரென்று
வெருவரும் பொருளு மீந்து விடுத்தன னடுத்த வேலை.

[இ—ள்] இவ்வுலகத்தை ஒருகுடை நிழலில் ஆளுந்தன்மையுள்ள நரசிங்கமுனையர், மேலான சடையனாரை அழைத்து அவருடைய திருமகனுக்குத் தகுதியாக ஒரு ,பெண்ணை திருமணம் புரிவிக்க நினைத்து அருமையான சிவாச்சாரிய குலத்தில் ஆராய்ந்து பெண் வீட்டாருடைய சம்மதத்தைப்பெற்று வருவீர்களென்று வேண்டிய பொருளையும் கொடுத்து அனுப்பினார். அந்த சமயத்தில், [எ—று]39

## 721

புண்ணியச் சடைய னாரும் புந்திமந் திரியும் போகி
வெண்ணெய்மா நகரின் பாங்கர் வேதகோத் திரமாம் புத்தூர்
நண்ணி நன் னிமித்தம் போற்றி நாண்முறை மேன்மைகொண்டு
தண்ணமர் குணத்தான் மிக்க சடங்கவி முன்றில் புக்கார்.

[இ—ள்] புண்ணியராகிய சடையனாரும், புத்தியை யுடைய மந்திரியும்போய் திருவெண்ணைநல்லூரின்பக்கத்திலுள்ள புத்தூரை அடைந்து நல்ல சகுனத்தையும் பார்த்து நல்ல நாளாகத் தெரிந்து சாந்த குணத்தால் மேம்பட்ட சடங்கவியாருடைய வீட்டுக்குள் புகுந்தார். [எ—று] 40

## 722

மற்றவர் கண்டெழுந்து மதிமுக மலர்ந்து முந்நூற்
பொற்றட மார்பம் புல்லிப் புல்லியற் றிருக்கை யேற்றி
யுற்றமு தனைய பாக மளித்தபி னுரவீர் பெற்ற
விற்றனு நுதலை வேட்டல் வினவுதற் கணைந்தோ மென்றார்.

[இ—ள்] உடனே சடங்கவி சிவாச்சாரியார் மகிழ்ச்சியடைந்து சந்திரனைப்போல் முகம் மிகமகிழ்ச்சி கொண்டு, முப்பிரி நூலை யணிந்த அழகிய மார்போடு அணைத்து, தருப்பாசனத்தில் இருக்க

வைத்து, தேவாமிர்தத்துக்குச் சமமான உணவையளித்து உபசரித்த பிறகு, மேன்மையுடையவர்களே நாங்கள் வந்த காரியம் நீங்கள் பெற்ற வில்லைப்போன்ற நெற்றியையுடைய பெண்ணை மணம் பேசுவதற்கு வந்தோம் என்று கூறினார்கள். [எ—று] 41

723

சடங்கவி மகிழ்ந்து பின்னுந் தமர்களுஞ் சடைய னுருங்
குடங்கொணீர் சிவனுக் காட்டுங் குலமுறை விளக்கி நாக
படங்கிளர் நிதம்ப கும்பப் பணைமுலைப் பேதும்பை நாளைத்
தடங்கைக்கா தலனுட் கேற்றிப் பொருந்துவ தயிலா ராய்ந்து.

[இ—ள்] அதைக்கேட்ட சடங்கவியார் சந்தோஷித்து, தம்முடையசுற்றத்தார்களும், சிவபெருமானுக்கு அபிஷேகம் பண்ணுகின்ற குலத்தின் நன்மையை தெளிவாகத்தெரிந்து, பாம்பின் படம் போன்ற அல்குலையும், கும்பம் போன்ற பெருந்தனங்களையுடைய பெண்ணினுடைய நட்சத்திரத்துக்குப் பொருத்தமாகப் பெரிய கைகளை யுடைய மணமகனது நட்சத்திரம் பொருந்தியிருக்கிறதா என்பதை ஆராய்ந்து. [எ—று] 42

724

காயடை கனக மீந்து கணிதத்தி னுயர் திவாவி
லேயநன் மணநா ளோலை யெதிரெதிர் வழங்கிப் பின்னர்
சாயவில் பெருமைத் தன்மைச் சடங்கவி யுறையு ணீங்கிச்
சேயமர் நாவலூரைச் செறிந்தனர் சிறப்பின் மிக்கார்.

[இ—ள்] தாம்பூலம் மாற்றிக்கொண்டு பொருளையும் கொடுத்து சுபமுகூர்த்தத்தில் திருமணப் பத்திரிகையை ஒருவருக்கொருவர் வழங்கி அதன்பின் குறையாத பெருமையையுடைய சடங்கவியார் தன் ஊரைவிட்டு நீங்கி, சுந்தரர் இருக்கின்ற நாவலூரை மிகச் சிறப்போடு அடைந்தார்கள். [எ—று] 43

725

மந்திரி முன்னுற் றேகு மறையவர் பின்ன ரேசென்
றிந்திரற் குவமை சான்ற விறையவ னிருக்கை யெய்திக்
கந்தரக் கமுக நீலக் கடைவிழிப் பொற்பூங் கொம்பைச்
சுந்தரர்க் குறுதி செய்த சோபனம் பகர்ந்து நின்றார்.

[இ—ள்] மந்திரி முன்னே போகவும், பிராமணர்கள் பின்னே சென்று, தேவேந்திரன் போல விளங்குகின்ற அரசர் அரண்மனையை அடைந்து கமுக மரத்தை ஒத்த கழுத்தையும், நீலோற்பலம்

போன்ற கண்களையும் உடைய அழகிய பூங்கொம்பு போன்ற பெண்ணை நிச்சயம் பண்ணின சுபச்செய்தியைச் சொன்னார்கள். [எ—று] 44

726

கோன்முறை நெடிய கோமான் குறுகினர்க் குவகை யேற்றி
மேன்முர சறைந்து முன்றில் வெண்சுதை மெழுக்கிட் டாங்குக்
கான்முறை நிரைத்த பந்தர் காவண விதானங் கோலி
நான்மறை மரபோர் யார்க்கு நாட்பெரு விருந் தளித்தான்.

[இ—ள்] செங்கோன் முறைமையை உடைய உயர்ந்த அரசர், அடைந்தவர்களுக்கு மகிழ்ச்சியுண்டாகும்படி, மேன்மையான முரசறைவித்து, எங்கும் வெள்ளையடித்து, வரிசையாகக் கால்களை நாட்டி பந்தலைப்போட்டு மேலே வஸ்திரங்களால் விதானம் கட்டி, நான்குவருணத்திலுள்ளவர்களுக்கும் பெரிய விருந்தை அளித்தார் [எ—று] 45

727

மங்கல முழவ மார்ப்ப மைந்தரை மணநீ ராட்டிப்
பொங்கொளிக் கலன்கள் பெய்து பூங்கலை யலங்கல் சேர்த்திட்
டங்குரம் பெய்து கைக்காப் பணிந்தனள் வேள்வி யேற்றித்
துங்கமே தருச மாவர்த் தனவிதி தோன்றச் செய்தார்

[இ—ள்] மங்கல வாத்தியங்கள் சப்திக்கச் சுந்தரரை மங்கள ஸ்நானம்செய்வித்து, பீதாம்பரங்களைஉடுத்து, மிகுந்தபிரகாசத்தை யுடைய ஆபரணங்களால் அலங்காரம் செய்து மலர் மாலைகளையும், இரத்தினமாலைகளையும்யணிவித்து. முளைப்பாலிகைகளை விதைத்து கையிற்காப்பு நூலையணிந்து, வேள்வித்தீயை வளர்த்து சமாவர்த்தனம் என்கின்ற வைதீக சடங்கைச் செய்வித்தார்கள், [எ—று] 46

728

மற்றைய தினத்தில் வேந்தன் மதகய மலங்க ரித்துப்
பெற்றபே றனையார் தம்மைப் பிறங்கவா ரூடஞ் செய்து
கொற்ற வெண் கவிகை யோங்கக் குரவர்தங் குழாம்பின் செல்லச்
சுற்றமுங் கிளையும் வேதத் தொகுதியுந் துதைந்து சூழ.

[இ—ள்] மறு தினத்தில் அரசர் மதத்தையுடைய யானையை அலங்காரம் செய்து, தன்னுடைய புத்திரர் போன்ற சுந்தரரை, அந்த யானையின்மேல் ஏற்றி, வெண் கொற்றக் குடை நீழலில் அமர்ந்து சிவாச்சாரியார்களுடைய கூட்டம் பின்னே வரவும், சுற்றத்தார்களும், வேதபிரர்மணர்களுடைய கூட்டமும் தன்னைச் சூழ்ந்து வரவும். [எ—று] 47

729

பாவலர் படன வோதை பல்லிய மியற்று மோதை
நாவலூர் வேந்தர் வந்தா ரெனச்சின்ன நவிற்று மோதை
வாவல்செய் பரியுந் தந்தா வளங்களும் வழங்கு மோதை
யோவரு மிடைகை ளெல்லா முருமுவோ தையைவென் றோங்க.

(இ-ள்) வித்துவான்களுடைய பாடல் ஓசையும், பலவாத்தியங்களினுடைய ஓசையும், நாவலூர் அரசர் வந்தாரென்று முழங்குகின்ற சின்னங்களின் ஓசையும் தாவிச் செல்லுகின்ற குதிரை யானைகளினுடைய முழக்கமும், ஆகிய இவ்வொலிகள் எல்லாம் இடியினுடைய ஓசையை வென்று மேல் ஓங்கவும் சுந்தரர் வந்தார் (எ-று) 48

730

மறிகடற் பெருக்கே போல வதுவையாத் திரைசென் றேறிச்
செறிமதிற் புத்தூ ரென்னுந் திலதமூ தூரை யெய்தித்
தறிநிலை யனைய தொன்மைச் சடங்கவிப் பெரியோன் முன்றில்
வெறிகம ழலங்க றூங்கும் விதானகா வணமுன் னின்றார்.

[இ-ள்] மடங்கி வீசுகின்ற அலைகளையுடைய கடலைப்போலப் பெருங் கூட்டமாகத் திருமணம் நடைபெறுவதற்காகப் பயணம் சென்று, ஊர்களுக்குள் திலகமாக விளங்குகின்ற மதில்களையுடைய புத்தூரென்கிற பழமையான ஊரையடைந்து பழமையான நீதி மார்க்கத்தில் நிலைத்திருக்கின்ற சடங்கவி சிவாச்சாரியார் வீட்டின் முற்றத்தில் வாசனையுள்ள மலர் மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட மேற்கட்டியையுடைய பந்தலுக்குள் முன்னே நின்றார் (எ-று) 49

731

மறுவில்புக் கொளியூர் தன்னில் வன்கரா வுண்ட வேதச்
சிறுவனைக் கொணரப் பாடுஞ் செல்வரைக் கண்டோ ரெல்லா
முறுவல்வத் திரத்துக் கேற்ற முத்தின்பொற் சுடிகை யென்பார்
பெறுவரத் திமையோர் காணும் பேரழ கன்றோ வென்பார்.

(இ-ள்) குற்றம் இல்லாத பெருமையையுடைய திருப்புக்கொளியூரில் கொடிய முதலையினால் உண்ணப்பட்ட பிராமணப் பையனை உயிருடன்வரத் திருப்பாடல்களைப் பாடின சுந்தரரைக் கண்டவர்கள் எல்லாம் புன்சிரிப்போடுகூடியமுகத்தின் அழகுக்குப் பொருத்தமாக முத்தினாலாகிய நெற்றிச்சுட்டி இருக்கிறதென்று சொல்வார்கள். மேன்மையையுடைய தேவர்கள்காணத்தக்கபேரழகல்லவா இவருடைய அழகு என்று சொல்வார்கள் (எ-று) 50

## 732

காதினின் றுலவுந் தோறுங் கதிரொளி விளக்கம் போன்ற
கோதிலா வயிர நீலக் குண்டலம் பாரு மென்பார்
பூதிசா தனத்தி லிட்ட புண்டர மென்பார் தெய்வச்
சாதியோ யாரே யென்பார் சந்தித்தோ முய்ந்தோ மென்பார்.

(இ—ள்) காதிலிருந்து ஆடும் பொழுதெல்லாம் சூரியன் போன்ற பிரகாசத்தை வெளிப்படுத்துகின்றகுற்றமில்லாத வயிரக் கடுக்கன்களைப் பாருங்கள் என்று சொல்வார்கள். திருநீற்றினலிடப் பட்ட திரிபுண்டரத்தைப் பாருங்கள் என்று சொல்வார்கள். இவர் தெய்வப் பிறப்போ என்னவோ என்று சொல்வார்கள். இவரைத் தரிசித்து நாம் எல்லோரும் உய்ந்து விட்டோம் என்று கூறுவார்கள் [எ—று] 51

## 733

இந்தமைந் தரையே பெற்ரு ரெத்தவம் புரிந்தா ரென்பார்
சுந்தர ரென்று நாமஞ் சொல்லவுந் தகுமே யென்பார்
தந்திர வேள்வி வல்ல சடங்கவி மறையோ னீன்ற
பைந்தொடிக் கடுத்த செல்வம் பகருதற் கெளிதோ வென்பார்.

[இ—ள்] இந்தச் சுந்தரரைப் பெற்றவர்கள் என்ன தவம் புரிந் தார்களோ என்று சொல்வார். இவருக்குச் சுந்தரர் என்ற பெயர் தகும் என்பார்கள். வேதாகமங்களிலும் யாகம் செய்தலிலும் வல்ல சடங்கவியாரின் புத்திரிக்குக் கிடைத்த பாக்கியம் சொல்வதற்கு எளிதோ என்று கூறுவார்கள் [எ—று] 52

## 734

காளமார் கண்ணி ஞர்கள் கருப்புர விளக்க மேந்திச்
சூழநிற் பதுவே யன்றிச் சோபனம் பாட லாறு
ரீழமெய்க் கலன்க ளாலே யிரணிய கயமென் றேத்தும்
வேழம்விட் டிழிந்து நின்ருர் வெள்ளானை யேறும் வேந்தர்.

[இ—ள்] கரியமைதீட்டிய கண்களையுடைய பெண்கள் கர்ப்பூர தீபங்காட்டுதலோடு சோபனப் பாடலையும் பாடினர்கள் மேலே அணிந்த ஆபரணங்களாலே பொன்னிறம் பொருந்திய யானை யென்றுகூறத்தக்க யானையை விட்டிறங்கிக் கீழேநின்ருர் இனிக் கயிலாயத்திலுள்ள வெள்ளை யானையில் ஏறுகின்ற வேந்தராகிய சுந்தரர் [எ—று] 53

## 735

மாமறை வல்லோர் நல்லோர் மணமெதிர் கொண்டு வாழ்த்தத்
தாமகா வணத்திற் சென்று தகுமின்னூர் விளக்கங் கண்டு
தூமவேள் வியின்முன் போந்து தொழுது பொற்றவிசின் மேவக்
கோமளை தனைக்கொணர்ந்து தந்தைதன் குறங்கில் வைத்தார்.

[இ—ள்] பெருமை பொருந்திய வேதங்களில் வல்லவர்கள் எதிர்கொண்டுவாழ்த்தவும் மாலையால் அலங்கரிக்கப்பட்ட பந்தலுக் குட் சென்று. மேன்மையுள்ள மின்னற் கொடி போன்ற பெண் ணினுடைய அழகைக்கண்டு, புகையையுடைய யாககுண்டத்தின் முன்போய்வணங்கி பொன்மயமான ஆசனத்திற் பொருந்தியிருக்க அழகுள்ள பெண்ணைக்கொண்டு வந்து தந்தையாகிய சடங்கவியா ருடைய தடையின் மேல் வைத்தார்கள். [எ—று] 54

## 736

உச்சியம் பகலின் மேலா மோரைபார்த் துதகஞ் செய்யப்
பச்சிளங் கொடியின் கையுங் கனகமுந் தங்கைப் பற்று
மச்சதி சஞ்சி தத்திற் புகாவகை தடுத்தாட் கொள்ள
முச்சுட ரொளியா மெந்தை வந்தவா மொழிய லுற்றும்.

[இ—ள்] நடுப்பகலில் மேலானலக்கினத்தை ஆராய்ந்து தாரை வார்த்துக் கொடுப்பதற்காக பசிய இளங் கொடிபோன்ற பெண் ணினுடைய கையையும் பொன்னையும் கைபற்றும்படியான அந்த நேரத்தில் அவரைச்சஞ்சிதகர்மதத்திற்குப் போகாதபடி தடுத்தாட் கொள்ளும் பொருட்டு சந்திரன் சூரியன் அக்கினி என்கின்ற முச்சு டர்களின் பிரகாசமாயிருக்கின்ற சிவபெருமான் வந்தவிதத்தைச் சொல்லத்தொடங்குவோம் [எ—று] 55

## 737

வயதுநூ றனைய ராகி வானரை முடித்த குஞ்சி
செயல்புரி முந்நூல் வெண்ணீ றணியொளி சிறந்த மார்ப
முயர்சிலைக் குறுகல் கூன லூன்றுதண் டுத்த ரீயம்
வியனுடைக் கையி லோலைக் குடையுடன் வேடங்கொண்டார்.

[இ—ள்] நூறு வயது சென்றவரைப்போல் மிகவும் வெளுத்த தலைமயிரை முடிந்து முப்பிரிநூலையும் வெண்மையான திருநீற்றை யும் அணிந்து கூனிய முதுகுடனே தண்டை ஊன்றிக்கொண்டு உத் தரீயத்தைத்தரித்து பெரியகையிலே ஓலையையும் குடையையும் பிடித்துக்கொண்டு கிழவடிவத்தோடு வந்தார். [எ—று] 56

738

வேளைபோய் விடுமென் ருேடி விரைந்துவீழ்ந் தெழுந்து மண்மேற்
ருளிணை வருந்த வொல்கிச் சசிமுகங் குறுவேர் வொன்றத்
தோளிணை கயங்க முந்து சுவாச மேற் கொள்ள வந்து
சாளர நிரைசேர் புத்தூர்த் தனிமண முன்றில் புக்கார்.

(இ-ள்) திருமணஞ்செய்கின்ற நேரம் தாண்டிவிடும் என்று விரைவாகத் தள்ளாடிவந்து இரண்டு பாதங்களும் பூமியில் பட்டு வருந்தத் துவண்டு சந்திரனைப் போன்ற திருமுகத்தில் வியர்வை யரும்ப இரண்டு தோள்களும் வருந்த மேல் மூச்சுவாங்க வந்து வரிசையான சன்னல்களையுடைய திருப்புத்தூரில் திருக்கல்யாண வீட்டின் முற்றத்துக்கு வந்து சேர்ந்தார் (எ-று) 57

739

ஒருகர மெடுத்து நின்று ரந்தணீ ரோகோ வென்றூர்
பெருமுழ வமைத்துக் கேட்கிற் பேசுத லுளதொன் றென்று
ரருமறை யவரும் பார்த்திங் கரற்றுவான் யாரே யென்ன
வொருதிலத் தளவு மோரா ரொண்ணுதன் மணத்தை யோர்வார்.

(இ-ள்) நிறைந்த பிராமணர்களே என்று ஒரு கையை உயரத் தூக்கி ஓகோ என்று கூறி பெரிய வாத்திய சப்தத்தை நிறுத்திக் கேட்டால் நான் சொல்லுதல் ஒன்று உண்டு என்று கூறினர் அருமையான வேதங்களை யுணர்ந்த பிராமணர்களும் பார்த்து இங்கே கத்துகின்றவன் யார் என்று கேட்க அதை ஓர் எள்ளளவும் கவனிக்காமல் பிரகாசம் பொருந்திய நெற்றியையுடைய பெண்ணின்மணம் நடக்கிற இடத்தை நோக்கிச் செல்வாராயினர் (எ-று) 58

740

மணத்துமுன் முறையோ வென்னல் தகாதிந்த மதியி லார்தங்
குணத்தினை யறிந்து நீக்கித் தாரைபின் கொடுப்போ மென்று
கணத்தினிற் பெரியோர் பேசிக் கறங்கிய மமைத்துக் கேட்ப
வுணர்த்துவா ருலக மெல்லாந் தாமெனு முருவ முள்ளார்.

[இ-ள்] திருமணம் நடக்கிற காலத்தில் முறையோ என்று கூறுதல் தக்கதல்ல இந்தப்புத்தியில்லாதவரது குணத்தினைத் தெரிந்து இவரை முன்னே நீக்கிவிட்டுப் பின்பு தாரை வார்த்துக் கொடுக்கலாம் என்று அக்கூட்டத்தில் உள்ளவர்களிற் பெரியோர்கள் சொல்லி வாத்திய முழக்கத்தை நிறுத்திக்கேட்க உலகமெல்லாந் தன்னுடைய உருவமாகவுள்ளவராகிய சிவபெருமான் தெரிவிக்கின்றூர் [எ-று] 59

741

சிவமறைப் பெரியோர் கேண்மின் சுந்தர னெமது சிற்று
ளவமல பழைய மூல சாதன வடிமை யாகுந்
தவமெனத் தொடர்ந்து வந்தேன் சமம்பெற வழக்குக் கேட்டுப்
பவமறத் துன்பந் தீர்த்து மணம்பினர்ப் பயில்வீ ரென்றார்.

[இ—ள்] ஆதி சைவகுலத்திற் பிறந்தபெரியோர்களே கேளுங்கள் இந்தச் சுந்தரன் எமது அடிமையாள். நான் சொல்வது வீண் அல்ல, அடிமை யென்பதற்கு மூலசாதனம் இருக்கிறது மேலாக நான் தொடர்ந்து வந்திருக்கின்றேன் என்னுடைய வழக்கை நடுவு நிலைமையாகக்கேட்டு இதைத் துன்பமில்லாமல் தீர்த்துவிட்டபின் திருமணத்தைச் செய்யலாம் என்று கூறினார் [எ—று] 60

742

அவைசொல நகைத்தெங்கேனு மந்தண ரடிமை யுண்டோ
நவைசொலா தகற்று மென்று நாவலூர் ஆள்வோர் கன்றிக்
கவையுற வெழுந்து போந்து கடைதொறு முழலும் பித்தன்
சவையணு குவதென் னென்று தள்ளவே சுழன்று வீழ்ந்தார்.

[இ—ள்] இவ் வார்த்தைகளைச் சிவபெருமான் சொல்லக் கேட்டவர்கள் சிரித்து எங்கேயாவது பிராமணர்கள் அடிமையாவதுண்டா குற்றமான வார்த்தைகளைச் சொல்லாதீர் என்று சொல்ல அந்நாவலூருக்கு அரசாகிய சுந்தரர் கோபித்து எழுந்து சென்று வீடுகள்தோறும் திரிகின்ற பித்தன் சபையை அடைவது என்ன வென்று தள்ளினார் கிழவரும் சுற்றிக் கீழேவிழுந்தார் [எ—று] 61

743

வீழ்ந்தபோ தயனுங் காணு வேணியே காணி யாகு
மாழ்ந்த நீர்க் கங்கை யாறும் ஐந்துபைந் தலைய ராவும்
போழ்ந்தவம் புலியுஞ் சிந்திப் போகாமற் பரசு மானும்
வாழ்ந்த பொற் கரங்க ளூன்றி வருத்தமுற் றெழுந்து நின்றார்.

(இ—ள்) அவர் விழுந்த பொழுது பிரமாவினாலும் காணமுடியாத சடையையே தனக்கு இடமாகக்கொண்ட கங்காநதியும், ஐந்து படங்களையுடைய பாம்பும், கீற்றாக விளங்குகின்ற சந்திரனும் கீழே விழாமல், மழுவையும் மானையும் வைத்திருந்த கரங்களை ஊன்றி வருத்தத்தோடு எழுந்திருந்தார் [எ—று] 62

744

பித்தனே யிவனிவ் வாறு பிழைசெயக் கடவோ னென்பார்
இத்தனை முறையுங் கேட்க விறைவரு மிலையோ வென்பார்
சுத்தனென் றிவனைக் கண்ட சுருதிவே தியரே நீர்சற்
றத்தனை பாரு மெம்பா லடிமைச்சா தனத்தை யென்றார்.

(இ-ள்) பித்தனாகிய என்னை இவன் இவ்விதம் குற்றம் செய்யக்கூடியவனோ இவன் தான் கூறுகின்ற இவ்வளவு முறைகளையும் கேட்கத்தக்க அரசரும் இங்கு இல்லையோ என்று கூறுவார், சுத்தமான குணம் உடையவனென்று இவனைத் தெரிந்திருக்கிற வேதாகமங்களில் வல்ல பிராமணர்களே நீங்கள் எம்மிடத்துள்ள அடிமைச் சாதனத்தைச் சிறிது பாருங்கள் என்று கூறினார் (எ-று) 63

745

வேறு

நன்றி தாமெனச் சாதனம் வாங்கியே நம்பி சுந்தரர் நாடியகாலையின் [வால்
ஒன்றுமுண்மையுமுத்தரமின்மையுமொழிவில்சான்றுமெழுத்துமுரிய
என்று மீன மிலாவகை யெண்ணியே யேதுபோயினு மேதுவந்தெய்தினும்
வென்றி வேன்முனை வேந்துள னென்றெதிர் விழித்த சாதனங் கிழித்
[தெறிந் தாரயல்.

(இ-ள்) நம்பியாரூராகிய சுந்தரமூர்த்தி இவர் சொல்வது நல்லதாமென்று சாதனத்தைவாங்கிப்பார்த்தபோது, உண்மையைக் கண்டு நீங்காத சாட்சியும் ஒத்திருத்தலாலே பதில் சொல்வதற்கில்லாமையினால் எப்பொழுதும் நமக்குக் குறைவில்லாமல் எதுபோனாலும் எது வந்தாலும் நமக்கு வெற்றியுள்ள வேலாயுதத்தையுடைய அரசர் இருக்கிறாரென்று அவர் காட்டிய சாதனத்தைப் பக்கத்தில் கிழித்தெறிந்துவிட்டார் (எ-று) 64

746

வேறு

இந்த வாறுகண் டந்தண முதியோ
 ரினிவி டோமென் றெழுந்தடி பாய்வார்
சந்த மாயிசை பாடுவர் நகுவார்
 சடைய டக்கிய தனிச்சிர மசைப்பார்
மூந்த வுன்செயல் யாமறிந் திலமோ
 மூலசாதன மன்றியோர் முறையாற்
றந்த வோலையை நீகிழித் தனையே
 தகா தெனச்சொலிச் சாதனஞ் சமைத்தார்.

(இ-ள்) இதைப்பார்த்த கிழப்பிராமணர் இனி உன்னைவிடமாட்டோம் என்று கூறி வேகமாகச் செல்வார் அழகான இசை பாடுவார் சிரிப்பார் சடையை மறைத்த சிரசை அசைப்பர் உன்னுடைய செய்கை எனக்குத் தெரியாதா மூலசாதனமல்லாமல் நகல் ஓலையை நீ கிழித்தெறிந்தனையே இது சிறிதும் தகாது என்று சொல்லி மற்றொரு மூலசாதனத்தை உண்டுபண்ணினார் (எ-று) 65

747

ஆல சுந்தர ரவ்வுரை கேளா
வாண்மை யுஞ்சிறி தச்சமு முளராய்
மூல சாதன முண்டென வறைவீர்
முத்த ரேயுமை யெத்திற மொழிவேன்
சால வோலையை யொன்றிய பரிசே
தருவ னென்கையிற் றருமி னென்னக்
கோல நீகொளல் குத்திர மலவோ
குறைமு டித்திடக் குறித்தனை யென்றார்.

(இ-ள்) ஆலால சுந்தரர் அந்தவார்த்தையைக்கேட்டு ஆண்மையோடு சிறிது அச்சம்கொண்டவராய் முத்தரே மூலசாதனம் உண்டென்று சொல்கின்றீரே உமை நான் எவ்வாறு கூறுவேன். மூலசாதனத்தை என்னிடத்திற் கொடுங்கள் நான் அதைப்பார்த்துப்பின் உம்மிடத்திலே திருப்பிக் கொடுத்துவிடுகிறேன் என்று சொல்ல அதற்கு ஐயர் நீ கேட்பது வஞ்சனையல்லவோ உன் காரியத்தை முடிக்க எண்ணியிருக்கிறாய் என்று கூறினார் (எ-று) 66

748

வேறு

என்னும் வேதிய ரேபிற வூர்களி
லெஞ்ஞு பாரகர் பாலணை வோமவர்
சொன்ன வாய்மை யிருவருங் கேட்பது
தூய தென்றனர் சுந்தர ராதலா
லன்ன மேன மறிகிலர் முன்செல
வாதிசைவ ரடர்ந்துடன் பின்செல
மன்னு நீதி மரபினர் சேண்வர
வண்ண மார்வெண்ணெ நல்லூர் மருவினார்.

(இ-ள்) அதற்கு ஐயரே, மற்றவூர்களிலுள்ள சைவ வேதியர்களிடத்திற்குப் போவோம் அவர்கள் சொன்ன உண்மைப்படி இருவரும் கேட்பது மேலானதென்று சுந்தரர் சொன்னார் அதை ஒத்துக்கொண்டு அன்னமும் பன்றியுமாகிய பிரமாவும் விஷ்ணுவும் அறியாதவராகிய சிவபெருமான் முன்னே செல்லவும் ஆதி சைவர்கள் நெருங்கிப் பின் தொடர்ந்துவர நிலைபெற்ற நீதிசாஸ்திரங்களை உணர்ந்தவர்கள் தூரத்தில் வரவும் அழகு பொருந்திய திருவெண்ணெய் நல்லூரை அடைந்தார்கள் (எ-று) 67

## 749

வேத விஞ்சையர் மேவுஞ் சபைதனின்
மிக்கு ளோர்சென்று நின்று விளம்பலு
மாத வம்பெரி தீர்சிறி தாயினு
மணம் விலக்க வழக்குள தோவெனப்
பூத மைந்தையுந் தோற்றமொர் நான்கையும்
புரங்கண் மூன்றையும் பொய்மெய் யிரண்டையு
மேத குந்தந் திருவரு ளொன்றினால்
வெல்ல வல்லவர் மாற்றம் விளம்புவார்.

(இ-ள்) வேதத்தில் வல்லவர்கள் வீற்றிருக்கின்ற சபையில் மேன்மையுள்ளவராகிய கிழப் பிராமணர் போய்த் தன்னுடைய கட்சியைச் சொன்னவுடன் மிகுந்த தவத்தையுடைய பெரியோரே எந்தக்காரணத்திலாயினும் கொஞ்சமாவது திருமணம் நடத்தலை விலக்கலாமா என்று சபையிலுள்ளவர்கள் கேட்க மண், நீர், கனல் காற்று ஆகாயம் என்ற ஐந்துபூதங்களையும், அண்டசம், சுவேதசம், உற்பிச்சம் சராயுசம் என்கின்ற நால்வகைத் தோற்றங்களையும், பொன் வெள்ளி, செம்பு என்கின்ற மூன்றினையும் பொய், மெய் என்கின்ற இரண்டையும் மேன்மையான திருவருள் ஒன்றினாலே வெல்லுதற்கு வல்லவராகிய சிவபெருமான் பதில் சொல்லத் தொடங்கினார் (எ-று) 68

## 750

ஆல சுந்தர னுமிவ னந்தமக்
காதி காலத் தடிமைய தன்றியுஞ்
சால வேதிசழ் சாதன முண்டெனச்
சாற்றி னேமெமைத் தள்ளிப் பறித்தகன்
றோல மோல மெனக்கிழித் தானஃ
தொழிந்து போயினு முண்மைப் பழையதோர்
மூல சாதனங் கொண்டணைந் தேமவை
முற்று மோர்ந்து மொழிகுவி ரென்றனர்.

(இ-ள்) ஆலால சுந்தரனாகிய இவன் நமக்கு ஆதிகாலத்தி லிருந்தே அடிமையானவன் அதல்லாமலும் மிக நன்றாக விளங்கு கின்ற சாசனம் உண்டு எனச் சொன்னோம் எம்மைக் கீழே தள்ளி ஓலையைப்பிடுங்கிக்கொண்டு நான் ஓலம் ஓலம் என்று கூறியும் அவ் வோலையைக் கிழித்தான் அது தொலைந்து போனாலும் உண்மை யான மூல சாசனத்தைக் கொண்டு வந்திருக்கின்றோம் அதை முழுதும் ஆராய்ந்து சொல்லுங்கள் என்று கூறினார் (எ-று) 69

751

மன்றல் வேதிய வைதிய ரேயிங்ஙன்
வாரு மோலையெங் கேயென மற்றிவ
னின்று செய்பிழை போல்வரி லென்செய்வே
மென்ன முன்னுள வோலை யியற்கையி
னின்று நீர்சொலு மேவற் குரியனாய்
நிலைநிறுத்தங் கடவே மெனத் துணிந்
தொன்று மார்புத்த ரீயப் புரையிடை
யொளித் திருந்தது போலெடுத் தீந்தனர்.

[இ—ள்] மங்களகரமான வைதீக வேதியரே நீர் கொண்டுவந்த ஓலை எங்கே என்று அங்குள்ள பிராமணர்கள் கேட்க இவன் இன்றைக்குச் செய்த குற்றம் போல் வந்தால் என்னசெய்வோம் என்று கூற அவர்கள் முன் உள்ள ஓலையின் தன்மைப்படி இன்று நீர் சொல்லும் ஏவலைச் செய்தற்குரியவனாய் நிலைபெறச் செய்வோம் என்று சொல்லத் துணிவுகொண்டு உத்தரீயத்தில் ஒளித்து வைத்திருந்ததுபோல எடுத்துக் கொடுத்தார் (எ—று) 70

752

வாங்கு மோலை யெழுதிய வாசக
மன்னு கற்பங் கடந்தமுற் காலத்தி
லாங்கு வெண்ணைநல் லூர்மேவு பித்தனுக்
கடிமைச் சாதன மீந்தன னாதலாற்
றெங்க வேகயி லாய பணிவிடை
செய்ய நான்கட வேனிப் படிக்கெதி
ரீங்கு நின்றுள வாலால சுந்தர
னிட்ட னெட்டெழுத் தென்றே யிருந்ததால்.

(இ—ள்) கொடுத்த சாசனத்திலெழுதிய வாசகமாவது முற்காலத்திலே திருவெண்ணெய் நல்லூரில் இருக்கின்ற பித்தனுக்கு நிலையாயிருந்து கயிலாயபணிவிடையை நான் செய்யக்கடவேன் இப்படிக்கு ஆலால சுந்தரன் இட்ட னெட்டெழுத்து என்று இருந்தது (எ—று) 71

753

மெய்யெ ழுத்தை யுணர்ந்தவ ரோலையை
மீட்டு மீட்டும் விழித்து வினவினார்
கையெ ழுத்துந் தமதென் றுரைசெய்தார்
காட்சி யானவர் சாட்சியு மொன்றினார்
ஐய மற்றதென் றூரவண் வேதியர்
ஆக மப்பெரி யோர்வெற்றி யென்றுமித்
துய்ய வித்தக ராலால சுந்தரர்
தோல்வி யென்றுந் தொகுத்து விளம்பினார்.

(இ-ள்) உண்மையான எழுத்தை வாசித்து அறிந்தவர்கள் ஓலையைப் பல தாமும்படித்து விழித்து விழித்து ஒருவர் மற்றொரு வரை வினவினர். சாட்சி கையெழுத்திட்டவர்கள் தங்களுடைய கையெழுத்துத்தான் என்று ஒப்புக்கொண்டார்கள். இது உண்மை யென்பதற்குச் சிறிதும் சந்தேகம் இல்லை யென்று சொன்னார்கள் ஆகமத்தையுணர்ந்த இவர் வென்று விட்டார் மேலான அறிவை யுடைய ஆலால சுந்தரர் தோற்றாரென்று கூறினார்கள் (எ-று) 72

754

சொன்ன வாய்மை தவறுகி லாவகை
தோன்ற லார்தமைச் சுந்தரர் பார்த்துநின்
றென்னை யாளு முமக்கிட மெங்ஙனே
யேது கோத்திர மெத்தெரு வெவ்வக
முன்ன ரேகுமின் பின்வரு வேனென
முத்தமிழ் வெண்ணை மாநகர்க் கோயிலா
மின்ன தெம்மக மெல்லா மெமதிட
மென்று போந்திட பத்தில்வந் தெய்தினர்,

[இ-ள்] சொன்ன சத்தியம் தவறாத வேதியரைச் சுந்தரர் பார்த்து என்னையாளாகவுமக்கு எது இடம் கோத்திரம் என்ன, எந்தத்தெரு, எந்தவீடு முன்னரே போங்கள் யான் பின் வருவேன் என்று சொல்ல முத்தமிழும் வழங்குகின்ற திருவெண்ணெய் நல் லூர்க் கோயில் ஆகும் ஆனால் எல்லாம் எம்முடைய இடமாகும் என்று சொல்லி இடபத்தின் மேல் வந்து தோன்றினார் [எ-று] 73

755

நின்ற பேரொளி யானவர் வானவர்
நேடொ ணாவடி வின்னெழில் கண்டுளங்
கன்று மாவுங் கனிவன போலவே
கலுழி கண்வழிக் காலுமக் காலையிற்
றுன்று தோழமைச் சுந்தர கேளெனத்
தோற்ற மாதியாந் தொன்மை யுணர்த்திநம்
முன்றி லாலய மெங்குள வங்கெலாம்
முத்த மிழ்த்தொடை பாடென் றருள்செய்தார்.

[இ-ள்] தேவர்களும் தேடமுடியாத நிலை பெற்ற பெரிய ஒளிப்பிழம்பாய் விளங்குகின்ற சிவபெருமானது வடிவத்தின் அழ கைக்கண்டு மனமானது தாய்ப்பசுவைக் கண்ட கன்றுபோலக் கனிந்து கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் அருவிபோலச்சொரி கின்ற காலத்தில் தோழமை யொருத்திய சுந்தரனே கேட்பாயாக

என்று ஆதியோடு அந்தமாக உள்ள வரலாற்றை யெல்லாமறிவித்து நமது பழமையான ஆலயங்கள் எங்கெங்குள்ளனவோ அங்கெல்லாம் சென்று முத்தமிழோடு பொருந்திய திருப்பாடல்களைப் பாடுவாய் என்று கூறினர் [எ—று] 74

756

கேட்ட சுந்தரர் பாட்டறி யேனியான்
கேட னேனினித் தேடவுங் கிட்டுமோ
வேட்ட பாதக மித்துணை வேண்டினேன்
வென்றி நின்சொல் பகர்வதெவ் வாறென
வீட்ட மாமண முன்றிலி னீநமக்
கிட்ட பேரொன் றுளதே சபைதனி
லாட்ட மாடுபித் தாவென்று பாடுகென்
றடியெ டுத்துக் கொடுத்தன ரண்ணலார்.

[இ—ள்] அதைக்கேட்ட சுந்தரமூர்த்தி கேடனாகிய யான் என்ன பாட்டுப்பாடவல்லேன் இவ்வளவு பாவத்தை விரும்பினேன் வெற்றியையுடைய நினது புகழைச் சொல்வதெவ்வாறு யாவரும் கூடியிருந்த உன் மாமனார் வீட்டில் நீ நமக்கு இட்ட பெயர் ஒன்று உள்ளது கனகசபையினில் ஆட்டத்தை ஆடுகின்ற பித்தா என்று பாடுக என்று சிவபிரான் அடியெடுத்துக் கொடுத்தார் [எ—று] 75

757

அந்த வாறுபித் தாபிறை சூடியே
யாதி யேவெண்ணெ நல்லூ ரருட்டுறை
யெந்தை யேயுனக் காளா யினியலேன்
என்ன லாகுமோ வெத்தான் மறக்குகேன்
சிந்தை யாய்நினைக் கின்றேன் மனத்தெனுஞ்
செந்த மிழ்ப்பதி கங்கொண் டருளியே
சுந்த ராநம் பதிதொறும் போகெனத்
தோகை பாகர் விடைகொடுத் தேகினர்.

[இ—ள்] அந்த விதமே பித்தா பிறைசூடி. ஆதியே. வெண்ணெய் நல்லூரருட்டுறை எந்தையே நான் உனக்கு ஆள் ஆனபின் இனி ஆள் அல்லேன் என்று சொல்லல் ஆகுமோஎன்றும்வைத்தான் மறக்குகேன் என்றும் சிந்தையாய் நினைக்கின்றேன் மனத்து என்றும் செந்தமிழினால் பதிகம் பாடிக்கொண்டு சுந்தரா பதிதோறும் போவாய் என உமாதேவியை ஒரு பாகத்தில் உடைய சிவபெருமான் உத்தரவு கொடுத்தார் [எ—று] 76

758

சீல மிக்க சிவமறை யோரெலாந்
தெரிச னற்புத செல்வமுற் றிம்மையே
ஞால முத்தி யடைந்தன மென்று சீர்
நாவ லூரரை யேத்தி நவிலுவார்
மால யற்கரி தாகிய சோதியை
மன்றி லேற்றி வழக்குரை கண்ட நீர்
கால முற்றினு முற்றுறு தோங்கிடுங்
கைலை யாளக் கடவதென் றேகினர்.

[இ-ள்] மேன்மையான ஆசாரம் மிகுந்த சிவாச்சாரியார் எல்லாம் அற்புத தரிசனமாகிய செல்வத்தையடைந்து இப்பிறப்பிலே இவ்வுலகத்திலே முத்தியடைந்தோமென்று சிறப்பையுடைய நாவலூரரைப் புகழ்ந்து சொல்லுவார் திருமாலுக்கும் பிரமனுக்கும் காணுதற்கரிய சோதி வடிவாயுள்ள சிவபெருமானைச் சபையில் வந்து வழக்குச் சொல்லக் கண்டவராகிய நீங்கள் ஒரு காலத்திலும் அழியாத கயிலையை யாளக்கடவீர் என்று கூறிச் சென்றார்கள் [எ-று] 77

759

தான வேதச் சடங்கவி பெற்றமின்
சைவ நம்பி கடைவிழி சாத்தலான்
ஞான யோகு கிடைத்துக் கடைத்தின
நாக மார்சிவ லோகமு நண்ணினள்
பானல் சேர்விழி மேவுபத் தூருமிப்
பான்மை யான்மணம் வந்தபுத் தூரென
வான நாடர் புகழ்ந்தன ராதலான்
மண்ணின் மேன்மை வழுத்தவும் வேண்டுமோ.

[இ-ள்] வேதாகமங்களையுணர்ந்தசடங்கவி சிவாச்சாரியாரின் புத்திரியான மின்னற்கொடிபோன்றபெண் சுந்தரருடைய கிருபாகடாட்சத்தால் ஞானயோகம் கைகூடிக் கடைசிக்காலத்தில் மேலான சிவலோகத்தையடைந்தாள். நீலோற்பலம்போன்ற கண்களையுடைய பெண்ணினுடைய புத்தூரும் மணம் வந்த புத்தூர் என்று பேர் அடைந்து தேவர்களும் புகழும் மேன்மையையடைந்தது. ஆகையால் பூவுலகில் அதன் மேன்மையைச் சொல்லவும் வேண்டுமோ [எ-று] 78

760

பெற்ற சுந்தரர் சுற்றந் தணந்து சீர்
பிறங்கு செம்பொற் றிறங்கொள் சிவிகைமே
லுற்ற பாவலர் பின்செல முன்செலு
மூது சங்குமும் பல்லிய வோதையுங்
கொற்ற மார்திருச் சின்னமு மாகவே
கொன்றை யார்தம் பதிதொறு மேகுவார்
பற்று செந்தமிழ்ப் பாடற் பதிகமாம்
பன்மணித்திரள் பாரிற் பரப்பவே.

[இ—ள்] சுந்தரர் சுற்றத்தார்களை நீங்கி மேலான செம்பொன்னாற் செய்யப்பட்ட சிவிகையில் வீற்றிருந்துபொருந்தி வித்துவான்கள் பின்னேவரவும் ஊதுகின்ற சங்குமும், பல வாத்தியங்களின் ஓசையும் வெற்றியுள்ள திருச்சின்ன ஓசையுமாக கொன்றை மாலையையணிந்த சிவபெருமான் எழுந்தருளிய திருப்பதிகள்தோறும் சென்று அன்போடு செந்தமிழ்ப் பாடற் பதிகங்களைப்பாடி உலகத்திற் பரப்பினார் [எ—று] 79

761.

பூதலத்திற் கயிலையெனப்பகர்
புண்டரீக புரமெனுந் தில்லையைத்
தீத றப்பர வித்தகை சாரவே
செல்லும் வேலை திருவதி கைப்புறங்
காத லித்த திருமட மொன்றினிற்
கங்குல் கண்டுயில் சுந்தரர் சென்னிமேற்
பாதம் வைத்தொரு காலிரு காலருட்
பள்ளி கொண்ட பரமனைப் பாடினார்.

[இ—ள்] பூலோககைலாயம் என்று சொல்லப்படுகிற புண்டரீகபுரம் என்ற சிதம்பரத்தை வணங்கித் துதித்துப் போகும்போது திருவதிகைப்புறத்திலுள்ள சித்தவட மடத்தில் இரவில் உறங்கும்போது சுந்தரருடைய சிரசின்மேல் பாதம் வைத்தார். என்னை ஏன் உதைத்தீர் என்று கேட்க மூப்பினால் தெரியாமல் கால் பட்டுவிட்டதென்று சொல்ல மறுபடி வேறோரிடத்தில் தலை வைத்துப் படுத்துக்கொள்ள அங்கும் போய்க் காலை நீட்ட என்னைப் பல தரம் உதைத்த நீர் யாரென்று கேட்கச் சிவபெருமான் என்னையறிந்திலையோ என்று மறைந்தார். உடனே தம்மானை யறியாத சாதியார் உளரே என்று பதிகம்பாடினார் [எ—று] 80

762

போந்த ணைந்தனர் பொற்புலி யூர்தனிற்
பூதி சாதன வெள்ளம் புறங்கொள
வேந்து சீர்மணி வீதி வலம்புரிந்
தெண்ணில் வானவ ருண்ணிறை வாயில் போய்க்
காந்து செஞ்சுட ராடக மன்றின்முன்
களிறு சேர்படி யேறிக் கடும்புலி
பாந்தள் கண்ட திருநட மேத்தினுர்
பதிக மோதிப் பரவச மாயினுர்.

[இ-ள்] அங்கிருந்தும் போய் அழகிய புலியூராகிய சிதம்பரத்தை அடைந்து விபூதியை மேனி முழுவதுந் தரித்து சிறப்புப் பொருந்திய அழகிய வீதியை வலமாக வந்து எண்ணில்லாததேவர்கள் நிறைந்திருக்கின்ற திருவாயிலிற் சென்று சிவந்த ஒளிவீசுகின்ற பொன்னம்பலத்தின் முன் திருக்களிற்றுப் படியில் ஏறி வியாக்கிரபாதரும் பதஞ்சலியும் தெரிசித்த திருநடனத்தைத் துதித்துப் பதிகம் பாடிப் பரவசம் ஆயினுர் [எ-று] 81

763

கண்ட கண்மலர் காணிலே வாயில்பூங்
கமல வுள்ளங் கனகசிற் றம்பல
மெண்ட ராவிடை நின்றபொற் சேவடி
யேறு பிங்கலே மாறி யெடுத்ததாள்
விண்ட ஞானம் விளங்குவெண் ணீற்றெளி
மேவு மன்பு திருவரு ளாகமூ
தண்ட கோளக மாடநின் ருடிய
வாதி தாண்டவா நந்தத் தழுந்தினுர்.

[இ-ள்] தெரிசித்த கண்கள் நிலைத்த கால்களையுடைய வாயிலாகவும் செந்தாமரைபோன்ற மனமானது பொன்மயமாகியசிற்றம்பலமாகவும் கணக்கிடலாகாத பெருமையையுடைய நின்ற அழகிய சிவந்த பாதங்கள் பிங்கலையாகவும் தூக்கிய திருவடி வெளிப்பட்ட ஞானமாகவும் பிரகாசிக்கின்ற வெண்மையான திருநீற்று ஒளியானது பொருந்திய அன்பாகவும் திருவருளே திருமேனியாகவும் கொண்டு பழமையான அண்டகோளகங்கள் ஆடும்படியாக நின்று ஆடிய சிவபெருமானது ஆனந்தத் தாண்டவ தெரிசனத்தில் அழுந்திவிட்டார் [எ-று] 82

## 764

கொண்ட நேயங் கனிந்திரு கண்கணீர்
கூர்ந்து பாயக் குழைந்தெதிர் நிற்றலிற்
பண்டை வேதப் பொருளெனும் வாய்மையாற்
பரம ராசியத் தோர்தொனி பண்புறத்
தொண்டு கொண்டுனை நாந்தடுத் தாண்டமை
தொல்பு விக்குள் விளக்குவ மாதலாற்
றெண்டி ரைப்புன லாரூர் வளம்பதி
செல்க வென்று திருவாக் கெழுந்ததால்.

[இ—ள்] அடைந்த அன்பானது முதிர்ந்து இரண்டு கண்களி லிருந்தும் நீர் அதிகரித்துப் பாயும்படியாக மனம் குழைந்து திரு முன்பு நின்றபோது முதன்மையான வேதத்தின் பொருள் என்று சொல்லக்கூடிய வாய்மொழியினாலே, பரம ரகசியமாக ஒரு சப்தம் உன்னை நாம் தடுத்தாண்டு தொண்டனாகக் கொண்ட பண்பை இப் பழமையான பூமியில் உள்ளவர்களுக்கு வெளிப்படச் செய்வோம் ஆகையினாலே தெளிந்த அலைகளையுடைய நீரால் வளம்மிகுந்த திரு வாரூருக்குப் போவாய் என்று ஒரு திருவாக்குஎழுந்தது [எ-று] 83

## 765

எழுதி வேய்ந்த பொன் னம்பலத் தெம்பிரா
னிணை யடிபிரி யாவிடை யைப்பெரு
வழுத ரற்றி யகன்றுசை வாகம
ராறைஞ் ஞூறந் தணரவை கண்டுநேர்
தொழுது மிக்க கடற்களி யேறிமெய்த்
தோணி சேர்திரு ஞானத் துறைபுகுந்
தெழுதி றத்துட னேபல தானமு
மேத்தி னார்புக ழாரூரை யெய்தினார்.

[இ—ள்] எழுதிமூடிய பொன்னாலாகிய சபையில் உள்ள எம்பி ரானுடைய இரண்டு பாதங்களையும் வணங்கிப் பிரியா விடையைப் பெற்று அழுது சுத்தி நீங்கி, தில்லை மூவாயிரவர்களைக் கண்டு வணங்கி பிரளய வெள்ளத்தில் தோணியாக மிதந்த சீர்காழியை வணங்கித்துதித்து எழுந்து பல திருத்தலங்களையும் கண்டு தெரி சித்துப் பதிகம் பாடி மிகுந்த புகழையுடைய திருவாரூரை அடைந் தார் [எ—று] 84

766

தலவ ரோதயர் தான பரம்பரர்
சங்க பல்லியந் தற்புடை சூழ்தரக்
குலவு வீதி வலம்வரு சுந்தரர்
கோபு ரத்திரு வாயில் வணங்கிநின்
றலகி லாநெடுந் தேவா சிரியனை
யாத ரித்திட பக்கொடி யாதியி
லலக வீழ்ந்து பணிந்துவன் மீகரா
மேக நாதற் கிசைத்தமி ழோத்துவார்.

[இ—ள்] அவ்வாரூரில் உள்ள அடியார்களும் பெரியோர்களும் கூட்டமாய்ச் சங்கம் முதலாகச் சொல்லப்பட்ட வாத்தியங்கள் சப்தித்துத் தன்னைச் சூழ விளங்குகின்ற திருவீதியில் பிரதக்ஷிணமாக வருகின்ற சுந்தரர் கோபுரத்தை வணங்கி வாயிலிற் புகுந்து அளவில்லாத பெருமையையுடைய தேவாசிரியமண்டபத்தைத் தெரிசித்து வணங்கி முன்னே இருக்கின்ற ரிஷபதேவருக்கு முன் இருக்கின்ற கொடி மரத்துக்கு முன்விழுந்து வணங்கி வன்மீகநாதராகிய ஒப்பற்ற சிவபெருமானுக்கு இசைத்தமிழாகிய தேவாரப் பதிகத்தை ஓதினார் [எ—று] 85

767

சீல முற்றசிங் காதன மீதினிற்
சிறி யாடர வக்கிண் கிணிதிகழ்
கால னைச்செங் கழுநீர்த் தொடையனைக்
கால சந்தி கரமலர் காட்டியே
கோல முற்ற கணிகையர் சூழ்தரக்
குங்கு மச்செழுங் கொம்பின் கொழுந்தெனப்
பால மைத்த கனியெனத் தேனெனப்
பரவை யார்நற் பதவிசை பாடினார்.

[இ—ள்] மேன்மையுள்ள இரத்தின சிம்மாசனத்தில் வீற்றிருக்கின்ற சிறுகின்ற ஆடரவக் கிண்கிணி விளங்குகின்ற திருவடிகளையுடையவரை செங்கழுநீர்மாலையைத் தரித்தவரை சந்தியா காலங்களில் கையாகிய மலரை நீட்டி அபிநயம் செய்து, அழகான தாசிப் பெண்கள் சூழ, குங்குமக் குழம்பைப் பூசிய செழிப்பான பூங் கொம்பின் கொழுந்து என்று சொல்லும்படி பாலோடு சேர்ந்த கனி என்னும்படியும் உள்ள பரவைநாச்சியார் நல்ல பதத்தை இசையோடு பாடினாள் [எ—று] 86

768

அண்டர் துய்த்த வமுதத் தெளிவினை
யாடகப் பெரு வள்ளத் தமைத்துமேற்
கொண்டெடுத்து வடித்த குரற்றொனி
கூர்ந்த செந்தமிழ் வேந்தர் செவிப்புகப்
பண்டிருத்திய தேனென்று தென்றிசை
பார்த்த கண்ணிணை மீளப் பறிபடாக்
கொண்ட விற்பிறழ் மின்னனை யார்செயல்
கோதிலாத்திரு வுள்ளத் துணருவார்.

[இ—ள்] தேவர்கள் உண்ட அமிர்தத்தினது தெளிவை பெரிய பொற்கிண்ணத்தில் ஊற்றி அதை வடித்தெடுத்தது போன்ற பாவையாரது குரலோசையை நுணுக்கமான செந்தமிழை உணர்ந்த வேந்தராகிய சுந்தரர் செவியிற்கேட்டவுடனே இசையானது உயர்ந்த தேனே யென்று தெற்குத் திக்கைப் பார்த்தவுடனே இவருடைய இரண்டு கண்களும் திரும்பப்பெறாமல் மேகத்தில் தோன்றுகின்ற மின்னலை யொத்த பாவையாரது செயலைக் குற்றமில்லாத தன்னுடைய திருவுள்ளத்தில் ஆராய்வாராயினர் [எ—று] 87

769

வென்றி வானவ ரானவர் செல்வமோ
மின்னனார் நுதன் மேவுந் திலதமோ
மன்றன் மாமத னாகம சாரமோ
வல்லி சாதக மெல்லிதழ் மாலையோ
வின்று நேரெதி ரேவிழி வாளியா
லென் மனந்திறை கொண்டவர் யாவரோ
வென்று சாதன வாளுடை யானரு
ளன்றி வேறிலை யென்றறி வாயினர்

[இ—ள்] வெற்றியையுடைய தேவர்களது பாக்கியமோ மின்னலை யொத்த பெண்களுக்குத் திலகமோ மங்களகரமான மன்மதனது ஆகமத்தினது தெளிவோ சாதகமான வல்லிக் கொடியினது மிருதுவான பூக்களால் தொடுக்கப்பட்ட மாலையோ இன்று எனக்கு நேரே கண்களாகிய பாணங்களினால் என் மனத்தைக் கொள்ளைகொண்ட இவர் யாவரோ முற்காலத்தில் சாசனத்தால் என்னை அடிமையாகவுடைய சிவபெருமானது கிருபையன்றி வேறில்லை யென்று அறிவார் ஆயினர் [எ—று] 88

770

அங்க ணேயும் பரவையா ராய்குவார்
அழகெ லாந்திரண் டோருரு வாயதோ
கங்குன் மேவிய தாரகை கேள்வனோ
காம னோகதிர் வேலுடைக் காளையோ
செங்க ணேறுடை யாரூரி லெம்பிரான்
றிருவு ளச்செய லோவறி யேனியான்
பொங்கு காதல் பொறுப்பரி தென்றுதன்
பொற்பு நீண்மணி மாளிகை போயினர்.

[இ—ள்] அந்த இடத்திலேயே பரவையார் ஆராய்குவார் உலகத்தில் உள்ள அழகெல்லாந்திரண்டு ஒரு வடிவமாக வந்ததோ, இரவிலே பிரகாசிக்கின்ற நட்சத்திரங்களுக்கு நாயகனாகிய சந்திரனோ அல்லது மன்மதன்தானோ பிரகாசிக்கின்ற வேலைத்தரித்த சுப்பிரமணியரோ சிவந்த கண்களையுடைய ரிஷபவாகனராகிய திருவாரூரிலுள்ள எம்பெருமானது திருவுளத்தின் செய்கையோ நான் அறியேன் அதிகரிக்கின்றகாதல் பொறுக்கமுடியாததாயிருக்கிறது என்று எண்ணி அழகுமிகுந்த உயர்ந்த தன்னுடைய மாளிகைக்குப் போனாள் [எ—று] 89

771

போந்த வேலை புளக மெழச் செழும்
பூவை மாரவர் பொற்கரந் தங்கையால்
ஏந்தி யேகொணர்ந் தேழ்நிலைச் சாளரத்
திணை கபாடந் திறந்தொரு தெற்றிமேல்
வாய்ந்த நீ ளெழிற் பஞ்சணை யேற்றலும்
வாச நீர்தெளித் தாற்றலு மங்கனே
நேர்ந்த காதலர் யாரென்று கேட்பத்தா
னீன்ற தாய்முன் செவிலி நிகழ்த்துவாள்.

[இ—ள்] மாளிகைக்குப்போனவுடன் சரீரத்தில் புளகம் உண்டாகவும் பெண்கள் எல்லாம், பரவையாருடைய அழகிய கையைத் தங்களுடைய அழகிய கைகளினாலே தாங்கிக் கொண்டுவந்து ஏழு மாடிகளையுடைய வீட்டில் சன்னல்களைத்திறந்து, ஒரு மேடைமேல் நீண்ட அழகான பஞ்சணை மெத்தையை விரித்து அதன்மேற் படுக்கவைத்துப் பனிநீரைத் தெளித்து உபசரித்தவுடனே பரவையார் கோயிலில் என் கண்முன் நேர்ப்பட்ட அன்பிற்குரியவர் யாரென்று கேட்கத் தாய்முன் இருக்கின்ற செவிலித் தாயார் சொல்லத் தொடங்குவார் [எ—று] 90

## 772

நாவ லூர்நம்பி யாலால சுந்தரர்
நாத னூர்தடுத் தாட்கொண்ட நண்பினற்
பாவ லோரென முத்தமிழ் நாற்கவி
பாடு தற்கணைந் தாரென் றறைதலு
மேவ லாமவர் நாமஞ் செவிப்புக
மீட்டுங் கேள்வி யிரவும் பரவையா
ராவல் வெள்ளந் திருவவி நாசியில்
ஆதி காலப் பிரளயம் போன்றதே.

[இ—ள்] திருநாவலூர் நம்பியாகிய ஆலால சுந்தரர் சிவபெருமானால் தடுத்தாட்கொள்ளப்பட்டவர் அவருடைய நண்பராகுந்தன்மையினால் இயல், இசை. நாடகம் என்னும்முத்தமிழால் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்கிற நால்வகைக் கவிகளையும் பாடுதற்கு இங்கு வந்திருக்கின்றார் என்று கூறினவுடன் அவருடைய திருநாமம் செவியிற்பட்டவுடன் பரவையாருக்கு உள்ள ஆசைப் பெருக்கு திருஅவிநாசியில் ஆதிகாலத்தில் உண்டான பிரளய வெள்ளப்பெருக்கை ஒத்திருந்தது [எ—று] 91

## 773

பாசி ளந்தளிர் மேனியின் மீதிலே
பருதி தாரணை பாருமென் றோதுவார்
தேசு றுங்கதிர் நித்தில மாலையுஞ்
செய்ய சாந்தும் பொறாதெனத் தேற்றுவார்
தூசு கொண்டிரு தாரைகொள் கண்கணீர்த்
துளி விலக்குகை சோர்வ தெனச்சொல்வார்
வீசு தென்றலு மாலையு மெய்துமால்
விதி வசந்தெரி யாதென லாயினர்.

[இ—ள்] பசுமையான இளந்தளிர் போன்ற சரீரத்தில் சூரியனுடைய வெப்பம்போலச் சூடாயிருத்தலைப் பாருங்கள் என்று சொல்வார்கள் ஒளிபொருந்திய முத்துமாலைகளும் சிவந்த சந்தனக் குழம்பும் உடம்பு பொறுக்காதென்று சொல்லுவார்கள் இரண்டு கண்களிலும் வருகின்ற நீர்த்துளிகளையும் வஸ்திரத்தினால் விலக்குதலினால் கைசோர்ந்து விடுகின்றதென்று சொல்வார்கள் வீசுகின்ற தென்றற் காற்றும் மாலைக்காலமும் வந்துவிட்டது இனிமேல் என்ன ஆகுமோ தெரியாதென்று சொல்லுவார்கள் [எ—று] 92

774

ஈது நிற்கநந் தேவர் பிரானெதி
ரேத்து செந்தமிழ்ப் பாடுமொ ரேந்தலார்
பாதி வெண்மதி வாணுதன் மாதுசெம்
பஞ்ச டிச்சுவ டெங்கெனப் பார்த்துநேர்
வாத மூர்திருச் சாளர நேடியே
மன்னு பேரரு ளெந்நெறிச் சென்றதோ
நீத றும்பரி சென்கொலென் றேத்தினர்
சென்று வைகினர் தேவா சிரியனில்.

(இ-ள்) இது இவ்வாறிருக்க சிவபெருமானை எப்பொழுதும் துதித்துப் பதிகம் பாடுகின்ற சுந்தரர், வெண்மையான பாதிச் சந்திரனை யொத்த நெற்றியையுடையபரவை நாச்சியார் எங்குச் சென்றார் என்று மாடியின் சன்னல் வழியாகப்பார்த்து குற்றம் இல்லாமல் நான் பரவையை அடைவது எவ்வாறென்று கடவுளைத் துதித்துக் கொண்டு தேவாசிரியமண்டபத்தில் தங்கியிருந்தார் [எ-று] 93

775

சுற்று நாவலர் தோழமை யேவலோர்
சோப னம்பெறு சொற்பல பேசினும்
பற்றி லார்திரு வுள்ளமு ஞானமும்
பரவை காதற் பரவையின் மூழ்கவே
யுற்ற காலையி லாரு ரமர்ந்தரு
ளும்பர் நாயகர் செம்பொ னுதற்கணாற்
செற்ற மாரனை வீரமுண் டாக்கவே
செக்கர் மாலையுந் திங்களும் வந்தவே.

[இ-ள்] சுந்தரரைச் சுற்றிலுமுள்ள அடியார்கள் பல உபசாரத்தைகளைச் சொன்னபோதிலும் அதிற் பிரியமில்லாதவராய் அவருடைய மனமும் அறிவும் பரவையின் காதலாகிய சமுத்திரத்தில் மூழ்கியிருந்தகாலத்தில் திருவாரூரின்கண் அமர்ந்தருளுகின்ற தேவர்களுக்குத் தலைவராகிய சிவபெருமான் தனதுநெற்றிக் கண்ணால் எரித்த மன்மதனுக்கு வீரத்தன்மையை உண்டாக்க அந்திப்பொழுதும் அதன் பின் சந்திரனும் உதித்தது [எ-று] 94

776

தருண மாமலர்ச் சாயக வாளியுஞ்
சாகரம் படர் தண்ணுமை யோலமுந்
தெருவு லாவரு தென்றிசை வாதமுந்
தேங்கு யிற்குர லோங்கிய செவ்வியும்
பருவ மாதர்கள் பூசலு மேசலும்
பளித சேர்வையும் பார்துயில் கங்குலு
மிருவர் பாலு மொருவழிச் சாரவே
யிடர்செ யும்பரி சென்னென் றியம்புகேன்.

[இ—ள்] புதிதாக மலர்ந்த புஷ்பபாணமும் சமுத்திரமாகிய பெரிய பேரிகையின் சப்தமும் தெருவில் வீசுகின்றதென்றல் காற்றாகிய வாயுவும் தேமாமரத்தில் வசிக்கின்ற குயிலின் இனிய ஓசையும் பக்குவமான பெண்களின் சச்சரவும் வசையும் சந்தனக் குழம்பின் கலவையும் மனிதர்கள் தூங்குகின்ற இரவும் பரவை சுந்தரர் ஆகிய இருவரிடத்தும் சேர்ந்ததும் இவ்விருவரையும் துன்பம் செய்யும் விதத்தை என்னவென்று சொல்வேன் [எ—று] 95

777

ஆன காலை யமரர்க ளுயக
　　ளாலயத் தொழின் மேலோர் கனவிடை
ஞான வேதியர் போல்வந் தருளியே
　　நமையு ளாரர்சுந் தரனும் பரவையும்
மீன மால்கொண் டிளைக்குந ரஃதொழிந்
　　தின்ப மேபெற நன்பக லினையே
வான துந்துபி யார்ப்ப வியற்கையா
　　மணமி யற்றென வாய்மை வழங்கினார்.

[இ—ள்] இந்தச்சமயத்தில் தேவர்களுக்குத் தலைவராகிய சிவபெருமான் ஆலயத்தில் திருத்தொண்டு செய்கின்ற பெரியோர்களாகிய அடியார்களது கனவில் ஞானத்தையுடைய வேதியரைப் போலவந்து நம்மையே தியானம் செய்கின்ற சுந்தரனும் பரவையும் ஈனமாகிய மயக்கத்தை யடைந்து வருந்துகின்றார்கள். ஆகையால் அவர்கள் கவலை யொழிந்து இன்பத்தையடைய நல்லநாளாகிய நாளைக்கே எல்லா விதமான வாத்தியங்களும் முழங்க தகுதியாக திருமணத்தைச் சிறப்பாக நடத்துவீர்கள் என்று திருவாய்மலர்ந்தருளினார் [எ—று] 96

778

செய்ய வேணியர் சீரடி யாரெலாந்
　　திருந்து முன்றிற் சிறப்பித் ததன்கணே
துய்ய மஞ்சன மாடுவித் தாரமுந்
　　தொங்க லுங்கல னுந்துகிர் மாலையும்
மெய்யி லங்கப் புனைந்துவெண் ணீற்றணி
　　மிளிர வேதரித் தாகம வேந்தரும்
பெய்யு மாமுகின் மின்னனை யாருமோர்
　　பீட மேறப் பெருமண மேற்றினார்.

[எ—று] சிவந்த சடையையுடைய சிவபெருமானுடைய சிறந்த அடியார்கள் எல்லாரும் திருத்தமான பரவையாரது திருமாளிகை

யின் முற்றத்தில் பந்தல் அலங்கரித்து சுந்தரமூர்த்தியைப்பரிசுத்த மான திருமஞ்சனம் ஆடச் செய்து வஸ்திரங்களையும் பொன்னுடையையும் அணிந்து முத்துமாலையும் மலர்மாலையும் நவரத்தின மாலைகளையும் அணிந்து திருவெண்ணீற்றையுந் தரித்து ஆகமத்துக்குத் தலைவராகிய சுந்தரமூர்த்தியையும் கறுத்த மேகத்தோடு பொருந்திய மின்னற்கொடிபோன்ற பரவையாரையும் அழகிய பீடத்தில் எழுந்தருளச்செய்து திருமணம்செய்யத்தொடங்கினார்கள் [எ-று] 97

779

பங்க யக்கை பிடித்திரு வோர்களும்
 படிக நீள்படிப் பள்ளி யரங்கு போந்
தங்க ணோர்மணி மஞ்சத் திருந்தியா
 ழமர வீக்கி யிசைத்தம் பரவையார்
செங்க யற்கணுஞ் சுந்தர நாயகர்
 திருவு ளக்கணுஞ் சேர்ந்து கரந்ததாற்
சங்க மச்சிவ யோகிய ராயினார்
 தம்பி ரானையுந் தோழமை சாரவே.

(இ—ள்) வேதாகமப்படி திருமணம் புரிந்து கொண்டு பரவையாருடைய தாமரை மலர்போன்ற கையைப் பிடித்துக் கொண்டு பளிங்குக் கற்களால் ஆகிய பள்ளியறையை அடைந்து அங்கு ஒரு அழகிய மஞ்சத்தில் அமர்ந்து வீணையின் தந்தியை முறுக்கி சுதி சேர்த்து பரவையார் பாடத் தொடங்கினார் அப்போது பரவையாருடைய சிவந்த கயல்மீனைப்போன்ற கண்களும் சுந்தரமூர்த்தியினுடைய மனமும் ஒன்று சேர்ந்தன, சிவபிரானைத் தோழராக மனதில் நினைத்துக் கொண்டு சேர்ந்து சிவயோகியராய்விளங்கினார்கள் (எ—று) 98

780

நீண்ட கொண்டலை நேர்குழல் வாணுதல்
 நித்தி லப்புன் முறுவற் பரவையார்
மூண்டு கொண்ட கலவியி னின்பமு
 முன்னை நல்வினை மன்னு முயற்சியும்
பூண்டு கொண்டமெய்ஞ் ஞானக் கருத்துநம்
 புண்ணி யத்தமிழ் வேந்தர் புதுவையில்
ஆண்டு கொண்ட சிவனடித் தாமரைக்
 காடகச் சிலம் பாக வழுத்தினார்.

(இ—ள்) மேகத்தையொத்த நீண்ட கூந்தலையும், ஒளிபொருந்திய நெற்றியையும், முத்தைப்போன்ற பற்களையும் உடைய பரவை

யார் அதிகரித்த சேர்க்கையினாலுண்டாகிய இன்பமும் முன்செய்த நல்வினையினால் நிலைபெற்ற நற் செயல்களில் முயற்சியும் உண்மையான ஞானத்தையடைந்த மனமும் உடையவராய்த் தமிழுக்குத் தலைவராகிய புண்ணியவடிவாயுள்ள சுந்தரர் மணம் வந்த புத்தூரில் ஆண்டு கொண்ட சிவபெருமானுடைய திருவடிகட்குச் சிலம்பாகத் தன் மனத்தையும் தேவாரப் பாடல்களையும் சேர்த்து வைத்தார் (எ—று) 99

781

கஞ்சன் மாலறி யாருன் றன் கோலநாங்
காணவேவரு கென்றருள் செய்ததாற்
றுஞ்சல் தீர்ந்தெழு காலையங் காலையிற்
றூர்த்த வேடம் பொருந்திய சுந்தரர்
மஞ்ச டோய்கலை மான்மதச் சேதகம்
வாய் ததும்பு பிளவிலை வான்குறி
செஞ்ச ரோருக மன்னகை பொன்னெழிற்
செண்டு கொண்டு மெய்ஞ் ஞானச் செருக்கினால்.

[இ—ள்] பிரமாவும் திருமாலும் அறியாத சிவபெருமான் நீ பள்ளியறையில் படுத்திருந்த கோலத்தோடு வரக்கடவாய் என்று திருவருள்செய்த காரணத்தால் நித்திரைவிட்டு எழுந்திருந்த அந்தவேடத்தோடே சுந்தரமூர்த்தி மஞ்சள்நிறம் பொருந்திய வஸ்திரமும், கலவைச்சந்தனம் அணிந்தமார்பும் தாம்பூலம் பொருந்திய வாயும், சிவந்ததாமரை மலர்போன்ற முகமும் அழகான கையில் பூச்செண்டும் பிடித்துக்கொண்டு ஞானச்செருக்கோடு (எ—று) 100

782

கான வாரண மஞ்ஞை கபோதமே
காக ளக்குயில் காத்து வளர்ப்பவர்
தானவீணையர் பின்வர முன்பெருஞ்
சைவ வேதிய ரெய்திய தன்மைகண்
டான காவணத் தேவா சிரியனில்
ஆறு பத்தொரு மூவரி லன்றுள
மோனமாதவர் தம்மிற் சிவபணி
முதல்வ ராம்விறன் மிண்டர் முனிந்தனர்.

(இ—ள்) காட்டுக்கோழியையும், மயிலையும், புறாவையும் கூவுகின்ற குயிலையும் வைத்து வளர்க்கின்றவர்களும், வீணைவாசிக்கின்றவர்களும் பின்னே வரவும், வருகின்ற சைவவேதியராகிய சுந்தர

மூர்த்தி வருகின்ற தன்மையைக்கண்டு பழமையான தேவாசிரிய மண்டபத்தில் அறுபத்து மூவரில் அக்காலத்தில் உள்ளவர்களில் தலைவராகிய விறன்மிண்டநாயனர் கோபம் கொண்டார் (எ—று)
101

783

தேவ தேவன் றிருமுன் கொடுந்தொழிற்
றீமை யோர்கள் வரவொழி யாவிடிற்
பாவ மென்பர் பதைப்பர் மலங்குவார்
பரமர் தாந்தடுத் தாண்ட பரிசுடை
நாவ லூர ரென்றாலும் புகப்பெறார்
நண்பு கொண்டு நயந்து நணுகியுட்
போவ தாயினு நாயனு மூரனும்
புறம்பெ னுஞ்சொல் புகன்றனர் புண்ணியர்.

(இ-ள்) தேவர்களுக்குத் தேவராகிய சிவபெருமான் சந்நிதி முன்பு கொடிய தொழிலையுடைய தீயவர்கள் வருதலைத் தடுக்காவிட்டால் பாவம் ஆகும் என்று சொல்வார்கள் மனம் வருந்துவார்கள் கலங்குவார்கள் பரமேசுவரனால் தடுத்தாட்கொள்ளப்பட்ட தன்மையையுடைய திருநாவலூராராயிருந்தாலும் உள்ளேசெல்லுதலுக்குத் தகுதியற்றவராவர் சிநேகத் தன்மையைக்கொண்டு விரும்பி நெருங்கி அவர் உள்ளே போவதாயிருந்தால் அவரை ஆட்கொண்ட சிவபிரானும் நாவலூராரும்வேதாகமங்களுக்குப்புறம்பானவர்கள் என்று விறன்மிண்ட நாயனர் கூறினர் (எ—று) 102

784

ஆல சுந்தர ரன்புகொண் டெய்தலு
மாக மாதிவன் மீகத் தமர்ந்தருண்
மூல நாயகர் கோலமுங் கண்டிலார்
முத்த மிழ்க்கண் முறையிட் டரற்றிஞர்
ரேல வாட்கொண்ட திப்பரி சோவெனு
மெல்லை தோன்றி நந் தொல்லடியாரெனுஞ்
சால மேன்மை யவர்க்கடி மைத்திறஞ்
சாற்று கென்றனர் போற்றருந் தன்மையார்

(இ—ள்) சுந்தரமூர்த்தி நாயனர் வேதாகமங்களுக்குத் தலைவராகிய புற்றிடங்கொண்ட திருமூலட்டானேசுரரைத் தெரிசிக்கப் பெறாதவராய் என்னைத்தகுதியாக ஆட்கொண்டது இத்தன்மையானது தானே என்று முத்தமிழோடு கூடிய பாடல்களினால் முறையிட்டுப்பாடிய காலத்தில் யாவரும் போற்றுகின்ற அரிய தன்மை

யையுடைய சிவபெருமான் அவருக்கு முன் தோன்றி நம்முடைய பழமை மிகுந்த மேன்மையையுடைய அடியார்களுக்கு அடிமைத் தன்மையைச் சொல்லித் துதிப்பாய் என்று கூறினார் (எ—று) 103

785

ஒல்லை கேட்ட திருமுனைப் பாடிநாட்
டொருவ ருள்ளம் பருவரன் மாறிய
வெல்லை நாயினே னென்னென்று பாடுகே
னென்று வீழ்ந்து மெழுந்தும் வணங்கலிற்
றில்லை வாழந்த ணர்க்கடி யேனெனச்
செப்பு கென்னுந் திருவாக் கருள்செயத்
தொல்லை வாய்மை முதலெடுத் தோதினார்
தோற்ற மாந்திருத் தொண்டத் தொகையினை.

(இ—ள்) அந்த வார்த்தையைக்கேட்டவுடனே திருமுனைப் பாடிநாட்டில் அவதரித்த சுந்தரமூர்த்தி நாயனார் மனத்துன்பம் நீங்கினபிறகு, திருத்தொண்டர்களைப்பற்றி எப்படிப்பாடுவேன் நாயேனென்று கீழே விழுந்து நமஸ்கரித்தெழுந்தவுடன் தில்லை வாழ்ந்தணர்தம் என்கின்ற திருவாக்கை இறைவர் அருளிச்செய்ய பழமையாக அதை முதலாக வைத்துக்கொண்டு திருத்தொண்டத் தொகை பாடிமுடித்தார் (எ—று) 104

786

தூய நாவலூர்ச் சுந்தர வேதியர்
தோற்ற மாதியாத் தொல் வெண்ணை மாநகர்
நாய னார்தடுத் தாண்டது நாப்பணு
ஞானமே திகழ் தானமென் றும்பர்கோன்
றேய மேபுக ழாரூர்ப் பரவையார்
திரு மணத் தளவுந்துதித் தேனினி
யேயுர் கோன்கலிக் காமர்தம் மன்பினா
றிடை மிடைந்தமை யென்முறை யேத்துகேன்.

(இ—ள்) திருநாவலூரில் பரிசுத்தரான சுந்தரமூர்த்தி நாயனாரது அவதாரம் முதலாக பழமையான திருவெண்ணெய் நல்லூரில் சிவபெருமான் அவரைத் தடுத்தாண்டதும் தேவலோகமும்ஞானம் விளங்குகின்ற தானம் என்று புகழக்கூடிய திருவாரூரில், பரவை யாரது திருமணத்தளவும் சொல்லித் துதித்தேன் இனிமேல் ஏயர் கோன் கலிக்காமரது அன்போடு கலந்த சரித்திரத்தைச்சொல்லித் துதிப்பேன் (எ—று) 105

787

வேறு

வண்டையூர் குழலா ரானமணவணிப் பரவை யார்க்குந்
தொண்டையூர் செல்வம் பெற்ற சுந்தரப் பெருமானார்க்குங்
குண்டையூர்க் கிழவரென்னுங் கொற்றவர் மகிழ்ந்தெந்நாளுங்
கண்டையூ ரமுத போனகப்பணி நடத்தி வந்தார்.

*(இ—ள்) வண்டுகள் மொய்க்கின்ற மலர்மாலையணிந்த கூந்தலையும் பல உயர்ந்த ஆபரணங்களையணிந்த பரவையாருக்கும், சிவபெருமானுக்குத் தொண்டுசெய்யும் பாக்கியம் பெற்ற சுந்தர மூர்த்திக்கும் குண்டையூர்க்கிழவரென்ற மிகுந்த செல்வர் மகிழ்ச்சியடைந்து எக்காலத்தும் கற்கண்டுபோன்றும் இனிய அமிர்தம் போன்றுமுள்ள உணவுப் பொருள்களைக் கொடுத்தலாகிய திருத்தொண்டைச் செய்து வந்தார் (எ—று)* 106

788

நற்பணி நடக்கு நாளி லொண்முறை வருடங் குன்றிப்
பொற்புறு விளைவு மாறிப் பொலி செந்நெற் கிடையாவாகித்
தற்பர விரத யங்கஞ் சார்தலான் மனைவி யாரு
முற்பவ மகவுந் தாமு முண்டிவிட் டுறங்கு நாளில்

*(இ—ள்) இந்தவிதமாக நல்ல திருத்தொண்டைச்செய்து வருகின்றகாலத்தில் பருவமழை தவறி அழகாகப் பயிர்விளைதல் குறைந்துபோய் நல்லதானியங்கள் கிடையாதபடியினாலே, தான் கொண்ட மேலான விரதத்துக்குக் குறைவு நேரிட்டதால் தானும் தன்மனைவியும் பிறந்த குழந்தையும் உண்ணுதலை விட்டுத் தூங்குகிற காலத்தில் (எ—று)* 107

789

வடதிசை யளகை வேந்தை மதிமுடிப் பரமர் தூண்டிப்
படர்தரு குண்டை யூரிற் பார்த்திவன் மருங்கு செந்நெல்
அடரவே யுதவு வாயென் றருளவாங் கதிகா ரத்தாற்
றடவரை யென்ன வந்து குவிந்தது விளைசெஞ்சாலி.

*(இ—ள்) சந்திரனைத்தரித்த சடையையுடைய சிவபெருமான் வடதிசைக்கும் அளகாபுரிக்கும் தலைவராகிய குபேரனைத் தூண்டுதல்செய்து விசாலமான குண்டையூரில் உள்ள செல்வரிடத்தில் மிகுதியாகச் செந்நெல்லைக் கொடுப்பாயென்று உத்தரவிட அந்தக் குபேரனுடைய கட்டளையினால் விளைந்த செந்நெல் பெரியமலையென்று சொல்லும்படி வந்து குவிந்தது (எ—று)* 108

## 790

வருகதி ருதயந் தன்னை மறைத்தசெஞ் சாலிவெற்பைப்
பொருவருங் கிழவர் கண்டு புண்ணியக் கவிஞர்க்கென்ன
வொருவரை யூரர் பாடக் கணங்களோ ரிரவி லோங்கி
முருகு சேர் பரவை யார் தம் முன்றின்மாட் டமைத்த வன்றே.

(இ—ள்) உதயமாகின்ற சூரியனை மறைத்த செந்நெல் மலையைத் தனக்குச் சமானமில்லாத குண்டையூர்க் கிழவர் கண்டு இந்நென்மலை புண்ணிய மூர்த்தியும் நாவலர் பெருமானுமாகிய சுந்தரமூர்த்திக்கே என்று அவரை அழைத்துவந்து காட்ட சுந்தரமூர்த்தி அந்நெல்லைத் திருவாரூருக்கு எடுத்துச்செல்லும்படி பதிகம்பாடப் பூதகணங்கள் அன்றிரவே திருவாரூரில் வாசனையுள்ள மலரையணிந்த பரவையாருடைய மாளிகையின் முன்னே கொண்டுபோய் நிரப்பிற்று (எ—று) 109

## 791

படியவ ரதுகேட் டார்வம் பன்முறை பயக்கு நாளிற்
கொடியணி மதில்சூழ் தானக் குடியமர் குறுகார் சிங்கம்
வடிமுனை வயிர வேற்கை மன்னுகோட் புலியா மன்பர்
கடிகமழ் நாவ லூரர் பணிவிடை கருத்தில் வைத்தார்.

(இ—ள்) பூமியிலுள்ளவர்கள் இதைக்கண்டும் கேட்டும் மிகுந்த அன்பும் ஆசையும் உடையவர்களாயிருக்கின்ற காலத்தில் கொடியினால் அலங்கரிக்கப்பட்ட மதில்கள் சூழ்ந்த திருநாட்டியத்தான் குடியிலுள்ள பகைவர்களுக்குச் சிங்கம்போன்ற கூர்மையான முனையையுடைய வயிரவேலைக் கையில்தரித்த கோட்புலி நாயனர் என்னும் அன்பரானவர் வாசனைவீசுகின்ற பூக்கள்நிறைந்த சோலைகளையுடைய திருநாவலூரருக்குத் தொண்டு செய்யும் கருத்து உடையவர் ஆயினர் (எ—று) 110

## 792

தம்பதி யலங்க ரித்துச் சாமரை கவிகை துன்றக்
கொம்பனார் தீப மேந்தக் குலவுபொற் சிவிகைத் தானத்
தும்பரின் வரவு செய்தங் கொளிமணி யரங்கி லேயோர்
பைம்பொனா தனத்தி லேற்றிப் பதமலர் விளக்கிப் பின்னும்

(இ—ள்) தம்முடைய ஊரை அலங்கரித்து, வெண்சாமரைகளும், குடைகளும் நெருங்கவும் பூங்கொம்பையொத்த பெண்கள் விளக்குகளை யெடுத்துவரவும் பிரகாசிக்கின்ற அழகிய பல்லக்கின் மேல் சுந்திரமூர்த்தியை எழுந்தருளச்செய்து பிரகாசிக்கின்ற தன்

சபாமண்டபத்துக்கு அழைத்துச்சென்று அங்குள்ள பசுமையான பொன்னாசனத்தில் இருக்கச்செய்து பாதங்களாகிய மலர்களைக் கழுவி அதன்பின் (எ—று) 111

793

வண்பனி நீராற் றெருட்டு வருடிமஞ் சனநீ ராட்டி
யொண்பல கலன்கள் சாத்தி யொளிமணி வடங்கள் சூட்டித்
தெண்புது மணங்க ளேற்றித் திகழும்பொற் படாமும் போர்த்துச்
சண்பக முதலாம் பள்ளித் தாமத்தா லலங்க ரித்து.

(இ—ள்) வளப்பமான பனிநீரைத்தெளித்து பாதத்தைத்தடவி அபிஷேகநீரால் அபிஷேகித்து பிரகாசிக்கின்ற பல ஆபரணங்களை அணிவித்து இரத்தின மாலைகளைச் சூட்டி தெளிந்த சந்தனம் முதலிய புதுவாசனைகளை ஏற்றி பிரகாசிக்கின்ற பொன்னுடையைப் போர்த்து சண்பகம் முதலிய மலர்களாலாகிய மாலைகளால் அலங்கரித்து (எ—று) 112

794

புஞ்சமா நாளிகேரப் புனல்கனி யமுத மேற்றி
யஞ்சிநின் றடைப்பை யேந்திச் சுருளிலை பிளவார் வித்தே
யஞ்சுபொற் றூபதீப மாடிசா மரைகால் வட்டஞ்
செஞ்சுட ரழகா லத்தி மாற்றிநேர் தெண்ட னிட்டு.

[இ—ள்] குடுமியையுடைய தெங்கின் இளநீரும் பலவகையான கனிகளும் பாலும் உண்ணும்படியாகச்செய்து பயந்து நின்று தாம்பூலம் தரிக்கச் செய்து பஞ்சாலத்தி கண்ணாடி முதலாகவுள்ள சோடசோபசாரங்களையும் செய்து நேராக சாஷ்டாங்கநமஸ்காரம் செய்து [எ—று] 113

795

சினப்பகை யொழிந்தார் போற்றச் சிங்கடி யுடனே பின்சேர்
வனப்பகை தனையும் பூணால் வனைந்துமுன் கொண்டு வீழ்த்தங்
கினப்பகை வருவ தோரா தெம்பிரா னீரே யிந்தத்
தனப்பகை நுசுப்பி னார்தம் பணிவிடை சார்க வென்றார்,

[இ—ள்] கோபமாகிய பகையை நீங்கின கோட்புலியார் துதிக்க சிங்கடியோடு தங்கையாகிய வனப்பகையையும் ஆபரணங்களால் அலங்கரித்து முன்னே கொண்டுவந்து நமஸ்காரம் பண்ணச் சொல்லி முன்னமே கல்யாணம் செய்த பரவைக்குக் கோபம் வருமேயென்று எண்ணாமல் நீங்களே தனங்களுக்குப் பகையாகிய இடுப்பையுடைய இந்தப் பெண்களை [த்தாங்கள்] ஏற்றுக்கொள்ளுவீராக என்று கூறினார் [எ—று] 114

796

காம்பணி தோளி னாரைக் கருணையா லெடுத் தணைத்து
நாம்பெறும் புதல்வி மாரென் றுவந்துடை கலன்க ணல்கிப்
பாம்பணி பரமர் தானம் பலதொழ வகன்று போந்து
பூம்புக லூரை நண்ணிப் புறத்திரு மடத்தில் வைகி.

[இ-ள்] அதற்குச் சுந்தரமூர்த்தி மூங்கிலையொத்த தோள்களையுடைய பெண்களை அன்பினால் எடுத்தணைத்து நாம் பெற்ற பெண்களென்று சொல்லி மகிழ்ந்து வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் அவர்களுக்குக் கொடுத்து விட்டு சர்ப்பங்களையணிந்த சிவபெருமானுடைய பல தலங்களையுந் தரிசிக்க அங்கிருந்து நீங்கி அழகிய திருப்புகலூரை அடைந்து அங்குள்ள திருமடத்தில் தங்கினார் [எ-று] 115

797

நாதனார்க் கினிய பூசை நண்பக லுச்சிக் காலந்
தீதற முடியுங் காறுஞ் செயலின்றி யிருந்த காலை
மேதகு மாரூ ரர்க்கு விழித்துணை துயில்வந் தெய்தப்
போதவங் கொன்றுங் காணார் புறத்தடை செங்கல் கண்டார்.

[இ-ள்] சிவபெருமானுக்கு இனிமையான நடுப்பகலாகிய உச்சிக்காலபூசையானது தீங்கில்லாமல் முடியும் வரையிலும் கடவுள் சுந்தரமூர்த்திக்கு ஒன்றும் பொருளுதவி செய்யாமலிருந்த பொழுது மேன்மையையுடைய நம்பியாரூரருக்கு இரு கண்களும் நித்திரைவந்து அடைய தலைக்கு வைத்துக்கொள்வதற்கு அங்கு ஒன்றையும் காணாதவராய் வெளியில் கிடந்த செங்கற்களைக் கண்டார் [எ-று] 116

798

ஆங்கது கொணர்வித் தொன்ற வடுக்கிமேல் வயிர வாசப்
பூங்கலை விரித்துச் சாய்ந்து திருவிழி துயிலப் புக்கார்
ஈங்கிவர் செயல்கண் டெம்மா னடைந்தவிட் டிகைக ளெல்லாம்
பாங்குறு கனக மாக்கிக் கொடுத்துப்பின் பாடல் கொண்டார்.

[இ-ள்] அச்செங்கற்களைக்கொண்டு வரச்செய்து பொருந்தும் படி அடுக்கி அதன்மேல் வாசனையுள்ள அழகிய வஸ்திரத்தை, விரித்து நித்திரை செய்தார் இவருடைய தன்மையைக்கண்ட சிவபெருமான் இவர் தலைக்குக் கீழ் வைத்திருந்த செங்கற்களை யெல்லாம் தகுதியுள்ள தங்கமாக்கிக் கொடுக்க இவ்வதிசயத்தை கண்ட சுந்தரர் தம்மையே புகழ்ந்து என்னும் தேவாரத்திருப்பதிகத்தைப் பாடியருளினார் [எ-று] 117

## 799

போதக வளத்தைச் சார்ந்தார் பொன்னியா றிழிந்த பொற்பூண்
மாதவ வளவன் காண மஞ்சனக் குடத்திற் காட்டி
நாதனுர்க் கணிவித் தேந்திப் புனிதமெய்ஞ் ஞான வாக்கால்
வேதமுத் தமிழும் பாடி மெய்யருள் பொழியு மேகம்.

[இ-ள்] அதன்பின், பலதலங்களையும் தெரிசித்து வணங்கித் துதித்து திருவானைக்காவை யடைந்தார் காவிரியில் அரசன் கழுத்தில் அணிந்த பொன்மாலை கழுவிவிழ அதைஅந்தபெரிய தவத்தை யுடைய சோழன் சிவபெருமானை ஏற்றுக்கொள்ளும்படி வேண்ட அப்படியே அம்மாலை திருமஞ்சனக்குடத்துட் புகுந்து சுவாமியினு டைய கழுத்தில் அணியாகியதைப் பரிசுத்தமாகிய ஞான வாக்கி ஞல் சுந்தரமூர்த்தி தேவாரத்திற்பாடி உண்மையான அருளைப் பொழியும் மேகமாக விளங்கினுர் (எ-று) 118

## 800

கொற்றவிற் கொடியான் கோன்மைக் குடகொங்க மணைந்து மீண்டு
மற்றுமவ் வளவர் பூமித் தலங்களை வணங்கிப் போந்து
வெற்றிரு கைகொண் டாரூர் புகவெள்கி மிகுசீர் நம்பி
செற்றவழ் மாடவீதித் திருமுது குன்றஞ் சேர்ந்தார்.

(இ-ள்) வெற்றிபொருந்திய விற்கொடியையுடைய சேரனது மேற்கேயுள்ள கொங்கு நாட்டையடைந்து திரும்பி மற்றுமுள்ள சோழநாட்டுத் தலங்களை வணங்கிவந்து வெறுங்கையோடு திருவா ரூர் அடைவதற்கு வெட்கப்பட்டு மிகுந்த சிறப்பையுடைய சுந்தர மூர்த்தியானவர் மேகங்கள் தவழ்கின்ற மேல் மாடங்கள் பொருந் திய வீதிகளையுடைய திருமுதுகுன்றம் என்ற விருத்தாசலத்தை அடைந்தார் (எ-று) 119

## 801

ஆறிரண் டாயி ரம்பொன் னணிமுது குன்றர் நல்கத்
தேறிய மச்சம் வெட்டித் திருமணி முத்தாற் றிட்டுக்
கூறிய புகழா ரூரிற் குளப்படித் துறையி லேற்றி
மாறிலைங் கரனுர் முன்னர் மாற்றுரைத் தறியும் வேலை.

(இ-ள்) அழகிய திருமுதுகுன்றத்தில் அமர்ந்திருக்கின்ற சிவ பெருமான் பன்னீராயிரம் பொன்னைத் தந்தருள திருத்தமாக மச்சம் வெட்டித் திருமணிமுத்தாநதியில் இட்டு சொல்லப்பட்ட புகழையுடைய திருவாரூரிற் கமலாலயம் என்னும் குளத்தின் படித்துறையில் கரை ஏற்றி வேறுபாடில்லாமல் ஐந்துகரங்களை

யுடைய விநாயகக்கடவுள் சந்நிதிமுன்னே மாற்றை யுரைத்து ஒப்பிட்டுப்பார்க்கும் காலத்தில் (எ—று) 120

802

புண்டரீ கப்பூந் தெண்ணீர்ப் பொய்கையங் கரையில் வந்து
பண்டரு மினிய சொல்லார் பரவையார் நின்றித் தோற்றங்
கண்டன ரென்னு மோகைக் கடல்கொளா வகை நிரம்பத்
திண்டிறற் கனகப் பேழை கொண்டுமா ளிகையுட் சேர்ந்தார்.

(இ—ள்) தாமரைப்பூக்கள் பொருந்திய தெளிந்த நீரையுடைய அழகிய பொய்கைக் கரையிலே வந்து இசையை ஒத்த இனிய சொல்லையுடைய பரவையார் நின்று கொண்டு இதைப்பார்த்தார் என்கிறகளிப்பானது கடலைப்பார்க்கிலும் அதிகமாகநிரம்ப வன்மையான பொற்பெட்டியில் திரவியத்தை எடுத்துக்கொண்டு தனது மாளிகையுட் புகுந்தார்கள் (எ—று) 121

803

சிலதினம் பரவை யாருஞ் செந்தமிழ்ப் பரவை யாரு
நலமலிந் தின்ப மூறு நாளிலோர் நாளி லன்னூர்
செலவது தனுசிற் செய்யத் திரவியம் போதா தென்றங்
குலகிய லுரைத்தா ரந்த வோதிமப் பெடையை யொப்பார்,

(இ—ள்) சிலநாட்கள் பரவையாரும் செம்மையான தமிழில் கடலையொத்தவராகிய சுந்தரமூர்த்தியும் நன்மைமிகுந்து இன்ப முற்றிருக்கும் காலத்தில் ஓர் நாள் மார்கழி மாதம் திருவாதிரை நட்சத்திரத்தில் அடியார்களுக்குச் செலவு செய்தற்குப் பொருள் போதாது என்று பெண் அன்னத்தை ஒத்தவராகிய பரவையார் உலகின் தன்மையைக் கூறினர் (எ—று) 22

804

கெண்டையங் கருங்கட் செவ்வாய்க் கிளிமொழிப் பரவை யார்க்குக்
கொண்டபே ராவறீரத் தமனியங் கொணர்வ தாகத்
தண்டையுஞ் சிலம்பு மார்ப்பத் தனியசைந் தாடு வார்முன்
றொண்டைநாட் டதிக தானந் தொழவிடை கொண்டு போந்தார்.

(இ—ள்) கெண்டைமீனையொத்த கரியகண்களையும் சிவந்த வாயையும் கிளிபோன்ற சொல்லையுமுடைய பரவையார் அடைந்த ஆசைதீரமிகுதியான பொன்னைக்கொண்டுவருவேனென்றுசொல்லி சிலம்புகளும் தண்டைகளும் சப்திக்க அசைந்தாடும் தியாகேசப் பெருமானிடத்தில் விடைபெற்றுக் கொண்டு தொண்டை நாட்டி லுள்ள பல தலங்களையும் வணங்குவதற்குப்புறப்பட்டார்(எ-று) 123

## 805

ஆர்வமுந் துயரு மோங்க வாலசுந் தரனார் செல்லும்
பார்வழி மெலிவி னாலே பசித்திளைத் தணைதல் கண்டு
தார்வரு தண்ணீர்ப் பந்தர் பொதிசோறு தருவித் தாங்கள்
நேர்வழி பார்த் திருந்தார் நிமலர்நங் குருகா வூரர்.

(இ—ள்) ஆசை மிகுதியாக சுந்தரமூர்த்தி செல்லும்படி வழி நடத்தலால் இளைப்பும் துயருமேம்படப் பசித்து இளைத்து வருதலைக்கண்டு திருக்குருகாவூரில் உள்ள சிவபெருமான் மேலான தண்ணீர்ப்பந்தலையும் கட்டுச்சோற்றையும் கொண்டுவந்து சுந்தரமூர்த்தி வருவதை எதிர்நோக்கி வழிபார்த்துக்கொண்டு இருந்தார் (எ—று) 124

## 806

பசிதணிந் திளைப்பு மாறிப் பள்ளிகொண் டேகு மென்று
சசிமுடி மறையோர் கூறத் தகுமென வமுது செய்து
நிசியெனத் துயின் றெழுந்தார் நின்றன ரொன்றுங் காணார்
கசிவுடன் பாடி நின்றார் கஞ்சமஞ் சரிநூன் மார்பர்,

(இ—ள்) தாமரை மலர்மாலையையும் பூணூலையும் அணிந்த சுந்தரமூர்த்தியானவர் சந்திரனைத்தரித்த சடையையுடைய சிவபெருமானாகிய பிராமணர் பசிஆறி இளைப்பு நீங்கி நித்திரை செய்து போகலாமென்றுகூற அதுவே தக்கதென்று திருஅமுதுசெய்து இரவினில் தூங்குவதுபோல் தூங்கியெழுந்தார் நின்றார் ஒன்றையும் காணாதவராய் மனம் கசிந்து தேவாரப்பாக்களைப் பாடினார் (எ—று) 125

## 807

புறமுறப் பொதிசோ றென்று கிடந்தபூ சுரர் மயேசர்
திறமுள பரிச னங்கள் சேரவே தெவிட்ட வுண்டு
முறவரு வார்க ளுண்டு முலகெலா முணினுங் குன்றா
தறம்வளர்த் தருளுங் கையா ளாக்கிய வமுத மன்றோ.

(இ—ள்) வெளியே கட்டுச்சாதமாகிய மூட்டையைப் பிராமணர்களும் மகேசுவரர்களும் சுற்றிலுமுள்ள யாவரும் நிரம்ப உண்டுவருகின்றவர்களெல்லாம் உண்டும் உலகத்திலுள்ள யாவரும் உண்டாலும் குறையாது முப்பத்திரண்டறங்களையும் வளர்க்கின்ற கையையுடைய பார்வதிதேவியார் ஆக்கிய அமுதமல்லவா அது (எ—று) 126

808

சேணிலர் வுலக மெல்லாஞ் சேரவே படைத்துஞ் சீர்சால்
காணியே கயிலை யாயுங் கவிகடம் பிணையை மேவும்
பேணிய வொற்றி யூரே பெரிதுகந் தருளும் பெம்மான்
ருணிலை கொண்ட கோயிற் பணியுமா தரவு சார்ந்தார்.

(இ—ள்) தூரமாயுள்ள உலகங்கள் எல்லாம் ஒருசேர உண்டாக்கியும் சிறப்புமிகுந்த கயிலையே காணியாகக்கொண்டும் குரங்குகள் பெண்குரங்குகளோடு பொருந்தி விழும்படியான திருவொற்றியூரையே மிகவும் விரும்பியமர்கின்ற கோயிலை வணங்கவேண்டுமென்கிற விருப்பத்தைச் சுந்தரமூர்த்திஅடைந்தார் (எ—று) 127

809

போந்ததோ ரொற்றி யூரிற் புரத்தின ரெதிர்கொண் டேத்த
மாந்தளிர் நிறைகுடம்பா லிகையுமா லிகையு மல்க
வேந்திளங் குளமின் ளூர்க ளிருபுடை கவரி சாய்ப்ப
வேந்தர்சுந் தரரா மண்ணல் வீதிசூழ் வலமா வந்தார்.

[இ—ள்] இவர்சென்ற திருவொற்றியூரில் உள்ள அன்பர்கள் எதிர்கொண்டு துதிக்க மாவிலை பூரணகும்பம் முளைப்பாலிகை மலர்மாலைகள் அதிகமாக அழகிய பின்னலையொத்த இளம் பெண்கள் இருபக்கமும் வெண்சாமரை வீசவும் அரசராய் விளங்குகின்ற சுந்தரர் திருவீதியை வலம்வந்தார் (எ—று) 128

810

மன்னுகோ புரம் பணிந்து வாயிலுட் புகுந்து சூழ்ந்த
தென்னமர் பரிவா ரத்துத் தேவர்க டம்மைப் போற்றி
யங்கிலை வடகீழ் பாலி லழகிதோர் கன்னி மாடந்
தன்னிக ரில்லா தோங்கச் சார்ந்தனர் தமிழ்நர் கோமான்.

(எ—று) நிலைபெற்ற தூலலிங்கமாகிய கோபுரத்தைப் பணிந்து உள்ளேபோய் பிரகாரத்திலுள்ள அழகான பரிவாரதேவர்களை வணங்கி வடகிழக்குப் பக்கத்திலுள்ள தனக்குச் சமானமில்லாத அழகிய ஒரு கன்னிமாடத்தைத் தமிழாகிய சுந்தரமூர்த்தி அடைந்தார் (எ—று) 129

811

அத்தகு மாளிகைக்கு ளணங்குசங் கிலியார் வேளான்
சுத்தநீண் மரபை நீத்துத் துகிற்றிரை யூடு வைகி
மத்தக விழியார் கங்கை வளர்திரு முடிமேற் சாத்தும்
புத்தல ரலங்கற் கோவை புரிகுவ தறியார் போந்து.

(இ-ள்) அந்தமென்மைபொருந்திய கன்னிமாடத்தில் தெய்வப்பெண்ணை யொத்த சங்கிலியார் சுத்தமான வேளாளர் மரபைவிட்டு நீங்கி திரையாகிய வஸ்திரத்துக்குள் தங்கியிருந்து நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானுக்குக் கங்கைதங்கியமுடிமேற்சாத்துதற்குப் புதுமையான மலர்மாலையைத் தொடுத்துக் கொண்டிருப்பதை அறியாதவராய் உள்ளே புகுந்து (எ-று) 130

## 812

விரித்தவெண் டிரையை நீக்கி வேதியர் விழித்த காலை
வரித்தடங் கருங்கட் செவ்வாய் மானென மயின்மென் சாய
லுரித்தென வொதுங்கி யொல்கி யொளிவிடு கலனு நீறுந்
தரித்தபொற் கொடிபோ னின்ற சங்கிலி யாரைக் கண்டார்.

(இ-ள்) தொங்கவிட்டிருந்த வெண்மையான திரைச்சீலையை நீக்கி சுந்தரமூர்த்தி பார்த்தபோது ரேகையுள்ள விசாலமான கரிய கண்களையும் சிவந்த வாயினையும் மயில் போன்ற சாயலினையுமுடைய பொற்கொடிபோல் பிரகாசிக்கின்ற ஆபரணங்களையும் விபூதியையுந் தரித்து துவண்டு ஒதுங்கி நின்ற சங்கிலியாரைப் பார்த்தார் (எ-று) 131

## 813

கண்ணொடு கண்க லொன்றக் கருத்தொடு கருத்து மேவ
வுண்ணிறை காதல் வெள்ள முவட்டெடுத் தெறிய நின்றார்
விண்ணவ ரெதிர்வந் தாலும் விழிகொடா விரதப்பாவை
புண்ணிய வடியார் முன்னை வினைப்பயன் புணர்த்தப் புக்கார்.

(இ-ள்) கண்களோடு கண்கள் ஒன்றுசேரவும் இருவர் கருத்துக்களும் ஒன்றுபடவும் மனதுக்குள் நிறைந்தகாதலாகியவெள்ளம் பெருக்கெடுத்து வெளிவரவும் தேவர்கள் எதிரேவந்தாலும் கண்ணெடுத்துப்பார்க்காத விரதத்தையுடைய அந்தப்பாவை போன்ற சங்கிலியார் நின்றார் புண்ணிய அடியாராகிய திருவாரூரர் முன்னை வினையின் இப்பொழுது கூடுதலினாலே சங்கிலியார்மேல் மனம் வைத்து திருக்கோயிலுக்குள் சென்றார் (எ-று) 132

## 814

நின்றவர் மயல் பொருமே நெற்றியார் தமர்க ணார்முன்
சென்றனர் மனமும் வாக்குங் காயமுந் தெருளப் போற்றி
யின்றெனை மயக்குங் கோதை யின்பமிங் கருள்வீ ரென்று
தென்றமிழ் பதிக மாலை சாத்தினார் திருவா ரூரர்.

(இ—ள்) சென்றவராகிய திருவாரூரர் மயக்கத்தைப்பொறுக்க முடியாமல் நெற்றியில் அக்கினிக்கண்ணையுடைய சிவபெருமான் முன்சென்று மனம், வாக்கு, காயங்களினால் கடவுளை வழிபட்டு என்னை இன்றுமயக்கும் பூமாலையை யணிந்த பெண்ணினது இன்பத்தை நான் அடையும்படி அருள்செய்ய வேண்டுமென்று அழகிய தமிழ்ப்பதிகத்தைப்பாடினார் (எ—று) 133

815

கண்ணுதற் பெருமான் போந்துன் கவலையை முடித்து மென்னுப்
பண்ணிசை மொழியார் தஞ்சொப் பனத்திடைத் தோன்றிப் பாவாய்
நண்ணுசுந் தரனை யன்பி னன்மணம் புணர்தி யென்ன
வண்ணலே திருவா ரூரி லன்புளா ரறிக வென்றார்.

[இ—ள்] நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் வெளிப்பட்டு வந்து உன்கவலையைப் போக்குவோம் என்று கூறி பண்ணினது இசையைப்போலும் பேசுகின்ற சொல்லையுடைய சங்கிலியாரது சொப்பனத்தில் தோன்றி பெண்ணே இங்கு வந்திருக்கிற சுந்தரமூர்த்தியை நன்மையாகக் கல்யாணம் செய்துகொள்வாய் என்று சொல்ல அண்ணலே அவர் திருவாரூரில்உள்ள பரவையாரிடத்தில் அன்புள்ளவர் என்பதைத் தாங்கள் அறிந்தது தானேஎன்று சங்கிலியார் கூறினார் [எ—று] 134

816

அவனிவண் பிரியாமைக்கோ ரரும்பெருஞ் சூளு ரைக்கு
நவமுறக் கோடி யென்ன நவின்றுதந் தோழர் பால்வந்
துவண்முனஞ் சூளு ரைத்தா லுடன்படு மென்ன நீபா
தவமகி ழிருத்தி யென்றார் தாணுவு மருள் புரிந்து.

[இ—ள்] சுந்தரன் உன்னை விட்டுப், பிரியாமலிருப்பதற்கு அவன் உனக்குச் சபதம் செய்து தருவான் அதை ஏற்றுக்கொண்டு திருமணம் புணர்தி என்று சொல்லித் தன் தோழராகிய சுந்தரரிடம் வந்து சங்கிலிக்கு உன்னைவிட்டுப் பிரியேன் என்று நீ சபதம் செய்து கொடுத்தால் அவள் உடன்படுவாள் என்று கூற சுந்தரர் நான் இங்கே சபதம் செய்ய வரும்போது நீர் மகிழமரத்தடியில் வீற்றிருப்பீரென்று பிரார்த்திக்கச் சிவபெருமானும் அவ்வாறே செய்வோம் என்று கிருபைசெய்தார் [எ—று] 135

817

பின்னருங்கருணை யாலே பெய்வளை யவர்பாற் சென்று
கன்னிநீ மகிழின் முன்னர்ச் சூளுரை காணென் றோதி
தன்னடித் தொழும்பு செய்யுந் தகையினர் கனவி னின்றோர்
நன்மணம் புரிதி ரென்று நவின்று சூள் கண்டா னுதன்.

[இ—ள்] மறுபடியும் வளையலையணிந்த சங்கிலியாரிடத்திற் போய் பெண்ணே நீ நம்முடைய சந்நிதியின்முன் சுந்தரன் சபதம் செய்தலை ஏற்றுக்கொள்ளாமல் மகிழமரத்தடியில் சபதம் செய்யச் சொல்லி இவ்வாறு இருவர்கனவிலும் தோன்றி நீங்கள் இருவரும் திருமணம் புரிந்து கொள்ளுங்கள் என்றுகூறியருளினார் [எ-று] 136

818

மறுதினந் திருமுன் பார மணமலி கோலஞ் செய்து
நறுமல ரலங்கல் சூடி நால்வகை முழவ மார்ப்ப
வுறுதவத் தந்தை தாய ருடையவர் செயலே யென்னச்
செறியுமங் கலநாண் சாத்தித் திருக்கலி யாணஞ் செய்தார்.

[இ—ள்] மறுநாள் சுவாமி சந்நிதியின் முன் இருவரும் மணக்கோலம் பூண்டு நல்ல வாசனையுள்ள மலர் மாலைகளை அணிந்து கொண்டு, பலவித வாத்தியங்கள் முழங்க தவத்தாற் பெற்ற தாய் தந்தையர் இது கடவுள் செயலேஎன்று சொல்லும்படி, திருமங்கல நாணைத்தரித்துத் திருக்கல்யாணத்தைச் செய்து கொண்டார்கள். [எ—று] 137

819

வாய்ந்தசங் கிலியார் செம்பொன் மணிமுலைக் குவட்டின் மீது
தோய்ந்தசங் கிலியே போலத் துவண்டிடை விடாது பன்னாள்
தோய்ந்த சங் கிலியுந் தெருச் சுந்தரப் பெருமா னோர்நாள்
ஆய்ந்தசங் கிலகும் வாவி யணிதிரு வாரு ரெண்ணி,

[இ—ள்] பொருந்திய சங்கிலியாரது செம்பொன்மயமாக விளங்குகின்ற அழகிய தனங்களாகிய மலையின்மேலிருந்து சங்கிலியைப்போல் இறுக அணைந்து தழுவி இடைவிடாது இப்படிச் சில நாட்கள் செல்ல தன்னோடு சேர்ந்த சங்கிலியாருக்குந் தெரியாத படி, மேன்மையான சங்குகள் விளங்குகின்ற அழகிய தடாகத்தை யுடைய திருவாரூரை அடைய எண்ணி [எ—று] 138

820

தெங்கினிற் சிதறும் பாளை தென்றலங் கன்றார் வீதிப்
பங்குனித் திருவி ழாவிற் பாவையார் பண்பு நண்புங்
கங்குனித் திரையை நீக்கிக் கருத்தினி லடைய விவ்வா
றிங்கினிக் கிடைப்ப தென்னென் றிரங்கினார் வரங்க ளுள்ளார்.

[இ—ள்] தென்றல் காற்று வீசுகிறதனால் தென்னைமரத்தின் பாளைகளிலிருந்து பூக்கள் சிந்துகின்ற வீதிகளையுடைய திருவாரூர் பங்குனியுத்திர விழாவில் பாவையார் செய்கின்ற ஆடல் பாடல்

களிலும் அடியார்களுக்குச் செய்கின்ற உபசாரத்திலும், சிநேகத்திலும் மனதைச் செலுத்தினவராய், இரவு முழுவதும் நித்திரை வாராமல் இங்கிருப்பதில் என்ன பயனென்று மனம் வருந்தினர் மேன்மையான வரங்களையுடைய சுந்தரமூர்த்தி [எ—று] 139

821

சுந்தரர்க் கந்த நாளிற் சூட்பிழை பலித்துக் கண்கள்
அந்தர வொளியை மாறி யந்தக ராய காலை
யுந்திய வூனக் கண்ணுக் கொருமருந் துரையீ ரென்னத்
தந்தன ரூன்று கோலொன் றிகழ்ந்திடத் தரணி யோர்கள்.

[இ—ள்] பின் சுந்தரமூர்த்தி திருவொற்றியூரைவிட்டு நீங்க வெண்ணி சிறிதுதூரம் சென்றவுடனே தன்னுடைய சபதம் தவறிய காரணத்தாலே, கண்களுடைய மேலான ஒளி மாறி, குருட்டுத்தன்மையை அடைந்தபோது, பொருந்திய இந்த ஊனக்கண்ணுக்கு ஒருமருந்து சொல்லவேண்டுமென்று சுவாமியைக் கேட்கப் பூமியிலுள்ளவர்கள் இகழும்படியாக ஒரு ஊன்றுகோலை மாத்திரம் கடவுள் தந்தருளினர் [எ—று] 140

822

தமியனே னியற்கைக் கிந்தத் தன்மையோ பெறுவ தென்ன
நிமிர்வழி செல்வாய் சூத நீழலே கம்பத் தென்று
ருமிழ்புன லூனக் கண்ணு ரூன்றுதண் டுடனங் கெய்தித்
தமிழிசைப் பதிகம் பாடித் தனிவிழி பெற்று வந்தார்.

[இ—ள்] அடியேனுக்கு இந்தத்தன்மையோ நேருவது என்று வருந்தும் பொழுது கடவுள் மாமரநிழலில் நாம் எழுந்தருளியிருக்கின்ற கச்சியேகம்பத்துக்குச் செல்வாய் என்று சொல்லக்கண்ணீரைச்சிந்தி வருத்தத்தோடு செல்கின்ற சுந்தரர் காஞ்சீபுரத்திற்குச் சென்று இசையோடுகூடிய தமிழ்ப்பதிகத்தைப்பாடி ஒருகண்ணைப் பெற்று சந்தோஷித்தார் [எ—று] 141

823

ஆவல்கொண் டேத்த மற்றைப் பதியிற்கண் ணருளக் காணுர்
மேவொற்றி யூரர் தொட்ட விலங்கலாம் வில்லார் வேடை
தாவுற்ற விரக வேட்கைச் சங்கிலி சிணுக்காய் நெஞ்சைக்
காவற்கொண் டிருந்த தெல்லாங் கண்ணிடைக் கண்டே னென்று.

[இ—ள்] மிகுந்த அன்போடு துதித்தும் அவ்வூரில் மற்றொரு கண்ணையும் கொடுக்காததனாலே, மலையாகிய வில்லையுடைய திருவொற்றியூரர், காம விரதத்தை யுடைய சங்கிலியின் கோபத்துக்

இலக்காய் மனதில் நினைத்து நான்செய்ததின் பயனைக்கண்ணிழந்த தனுல் தெரிந்துகொண்டேனென்று கூறினார் [எ—று] 142

824

பற்றிய சிவிகை யூர்ந்து பலதிருப் பதியிற் புக்கு
மற்றைக்கண் ணது பெருமே மனமிகு விரங்கி நொந்து
முற்றுமிந் திரற்கு நண்பா முசுகுந்தன் பரவுந் தொன்மைப்
பொற்றிரு வாரு ரெல்லை புகுந்தனர் புளக மிக்கு.

[இ—ள்] சிவிகையிலேறிச்சென்று பற்பல திருப்பதிகளுக்கும் போய் சுவாமி தரிசனஞ் செய்தும், பதிகம்பாடியும் மற்றொரு கண்ணையும் பெருமல் மிக வருந்தி தேவேந்திரனுக்கு மிகவும் நண்பனுகிய முசுகுந்தன் வழிபட்ட அழகிய திருவாரூர் எல்லையையடைந்தார் புளகாங்கிதம் அடைந்தார் [எ—று] 143

825

முகிற்குல முறங்கு மாரூ முதுமகப் புகையோ வென்னத்
துகிற்கொடி நெருங்கும் பொற்கோ புரமணித் துவார வாயிற்
புகுத்தருந் தவர்க்குஞ் சைவ பூசுரர் தமக்குங் கும்ப
நகிற்கணி கையர்க்கு மொல்கி நம்பரா லயத்துட் புக்கார்.

[இ—ள்] மேகக்கூட்டங்கள் தூங்குகின்றனவோ அல்லது மிகுதியான யாகத்தின் புகையோ என்று சொல்லும்படி வெண்மையான துகிற்கொடிகள் நெருங்கியசைகின்ற அழகியகோபுர வாயிலில் புகுந்து சிவாச்சாரியாருக்கும் கும்பம் போன்ற தனங்களையுடைய கணிகையர்க்கும் விலகிச்சென்று சிவபெருமான் ஆலயத்துட்புகுந்தார் [எ—று] 144

826

சிங்கவா தனத்தின் மேவுந் தேவர்க ளுட வொண்ணு
வெங்கடு மிடற்றூர் வீதி விடங்கரைத் தடங்கை கூப்பிப்
பங்கய வுளத்தா னுள்கிப் பாமாலை பயிலச் சாத்திச்
செங்கதி ரெதிரே நின்ற மதிபெறுந் திறத்தை யொத்து.

[இ—ள்] தேவர்களாலும் அறியக்கூடாத சிம்மாசனத்தில் வீற்றிருக்கின்றவிடம் பொருந்திய கண்டத்தையுடைய வீதிவிடங்கரை விசாலமான கைகளைக்குவித்து நமஸ்கரித்து, இதயமாகிய தாமரையில் இருத்தி, பாமாலைகளை அழகாக அணிந்து, சிவந்த கிரணங்களையுடைய சூரியன்முன் சந்திரன் ஒளியையடையுந் தன்மையை ஒத்து [எ—று] 145

827

மேதகு விழிநீர் மல்கி மெய்வெயர்த் தவச மேவி
யாதர வொழிந்து நின்ற வானந்த மயக்க நீங்கித்
தீதர விழியும் பெற்றுத் திகழ்தேவா சிரியஞ் சார்ந்து
மாதவர் திருக்கூட்டத்தைப் பணிந்திறை வைகும் வேலை.

[இ—ள்] *மேன்மையான கண்களில் நீர் நிறைந்து, சரீரம் வெயர்த்து, பாவசம் அடைந்து, அன்பினாலுண்டாகிய ஆனந்த மயக்கத்திலிருந்துநீங்கிகுற்றமில்லாமல்மற்றொருகண்ணையும்பெற்று விளங்குகின்ற தேவாசிரிய மண்டபத்தையடைந்து மிகுந்த தவத்தைச்செய்துஅடியார்களது திருக்கூட்டத்தைநமஸ்கரித்து அங்கே தங்கியிருக்கின்ற காலத்தில்* [எ—று] 146.

828

நீதிசே ரொற்றி யூரி னிகழ்ந்துள செய்தி யெல்லாந்
தூதினர் தம்மைப் போக்கிப் பரவையா ரறிந்து தோன்று
வேதனை யுடற்றும் போது வெண்புரி நூலார் பாலார்
மூதுமைப் புலமை யோர்கண் முந்தவே முன்றில் சென்றார்.

[இ—ள்] *நீதிபொருந்திய திருவொற்றியூரில் நடந்த சங்கதிகளெல்லாம், தூதுவரால் அறிந்த பாவையார் பொறுக்க முடியாத வேதனையுடனேயிருக்கின்றகாலத்தில் சுந்தரர் தன் பக்கத்திலுள்ள வெண்புரி நூலையணிந்த, கற்றறிந்த பெரிய புலவர்களைப் பரவை யாரிடத்தில் அனுப்ப அவர்களும் வந்தடைந்தார்கள்* [எ—று] 147

829

பூமல ரலங்கற் கோதைப் பரவையார் பொருது பொங்கிப்
பாமதிப் புலமை யோரைப் பணிசெயுங் கணிகை யோரா
லாமன மிகவ ருந்த வவமதித் தகற்றி வாய்தன்
மாமணி செறி கபாட பந்தனம் வலித்து வைத்தார்.

[இ—ள்] *அழகிய மலர்மாலையை யணிந்த பரவையார் வந்து சேர்ந்த மதிமிகுந்த புலவர்களைத் தன்னிடத்தில் வேலைசெய்யும் கணிகைமார்களால் வந்த வழியே செல்லுங்களென்று போகச் சொல்லி, தன்வீட்டிலுள்ள விசாலமான அழகிய வாயிற் கதவைத் தாளிட்டுக்கொண்டார்* [எ—று] 148

830

நண்புறு கவிஞர் நாணி நடலைமிக் கொளித்துப் போந்து
பண்புடை யவர்பாற் பட்ட பாடுரைத் தகல நின்றார்
தெண்புன லுவ லூரர் திருவுளக் கிடையு மெய்யும்
புண்பட வருந்துங் காலை புகுந்தது செக்கர் மாலை.

(இ-ள்) சிநேகத் தன்மையுள்ள புலவர்கள் வெட்கத்தை யடைந்து அங்கிருந்து வந்து நல்ல குணத்தையுடைய பரவையாரிடத்தில் தாங்கள் அடைந்த அவமானத்தைக்கூறி, எட்ட நின்றார்கள். தெளிந்த நீர் சூழ்ந்த திருநாவலூரராகிய சுந்தரரது மனமும் சரீரமும் புண்படும்படி வருந்துகின்ற காலத்தில் சிவந்த அந்தி நேரமானது வந்தது (எ-று) 149

## 831

கைச்சிலை மார வேளைக் கருங்குயில் வரவு கூவ
மைச்செறி முரச வாரி மதித்தழற் றோற்றங் காட்ட
விச்செயல் பொறுது வேறிங் குறுதுணை யில்லை யென்று
நிச்சயப் பதிகம் பாட நிமலர்கேட் டருளி வந்தார்.

(இ-ள்) கையிலே கரும்புவில்லையுடைய மாரனாகிய மன்மதனை வரும்படி கரியகுயிலானது கூவவும். கரியநிறமுள்ள கடலாகிய பேரிகையின் ஓசை சந்திரனாகிய நெருப்பின் தோற்றத்தைக் காட்டவும் இக்காரியங்களைப் பொறுக்கமாட்டேன் எனக்கு வேறு துணை இங்கே யில்லை யென்று பதிகம்பாட அதைக் கேட்டுச் சிவபெருமான் சுந்தரமூர்த்தியிடம் வந்தார் (எ-று) 150

## 832

ஆண்ட நீ ரிரங்க லீரே லாற்றுதற் கொருவ ருண்டோ
பூண்ட தோர் பரவை யூடல் பொறுக்கலே னெனப் புலம்ப
நீண்டநள் ளிரவிற் பூசை நியமவே தியனார் போன்று
சேண்டரு தென்பால் வீதி சென்றனர் தியாக ராசர்.

(இ-ள்) சுந்தர மூர்த்தி நாயனார் கடவுளைப் பார்த்து என்னை ஆட்கொண்ட கடவுளாகிய நீரே இரங்காவிட்டால் என்னைத்தேற்றுதற்கு யாரிருக்கிறார்கள். எனக்குப் பிரியமான பரவையாருடைய ஊடலைப் பொறுக்கமாட்டேனென்று முறையிட மிகுந்த நேரமான நடுராத்திரியில் பூஜை செய்யும் நியமத்தையுடைய சிவாச்சாரியாரைப் போலத் தூரமான தெற்குவீதியிலே செல்லலானார் தியாகராஜப்பெருமான் [எ-று] 151

## 833

மங்கையார் பரவையார்தம் மாளிகை முன்றில் வாய்தற்
பொங்கொளிக் கபாடந்தட்டிப் பெயர்மொழி புகன்று கூவ
வங்கணர்ச் சனைசெய்தக்கோ ராமென வணைந்துண் ணின்றே
யிங்கொரு கால மில்லாதென் னெழுந் தருளிற் றென்ன.

[இ-ள்] மங்கைப்பருவம் வாய்ந்த பரவையாருடைய மாளிகையின் வாயிலுக்குச் சென்று மிகுந்தபிரகாசத்தோடுகூடிய கதவைத் தட்டித் தன் பெயரைச் சொல்லி அழைக்க உடனே சுவாமிக்குப் பூசைசெய்கின்ற சிவாச்சாரியார் என்று உள்ளிருந்துவந்து, ஒரு நாளுமில்லாமல் இன்றைக்கு இங்கே இந்நேரத்தில் எழுந்தருளியது என்ன காரணம் என்று கேட்டார் [எ-று] 152

834

தாட்டிறந் தனையேற் சொல்லத் தகுவதொன் றுளதா மென்று
நாட்டமூன் றுடைய சோதி நவிற்றலும் பரவை யார்தாம்
வேட்டசங் கிலியின் கேள்வ ருரையலால் விளம்பிற் றெல்லாங்
கேட்டது செய்வே னென்று கிளிமொழி மறுத்துச் சொன்னார்.

[இ-ள்] அவ்வாறு கேட்ட பரவையாருக்கு மூன்று கண்களையுடைய சோதிஉருவாகிய கடவுள் நீ கதவைத் திறந்தால்உனக்குச் சொல்லக்கூடியது ஒன்று உண்டுஎன்று கூறவும் அதைக்கேட்ட பரவையார் சங்கிலியைவிரும்பிச் சென்று அடைந்தவருடைய வார்த்தைதவிர வேறு எது சொன்னாலும் கேட்கிறேனென்று கிளிபோலும் மொழியைச் சொல்லுகின்ற பரவையார் மறுத்துக்கூறினார் (எ-று) 153

835

எந்தையார் பின்னும் போகா திரங்கிய வாய்மை கேட்டுப்
பந்தன கபாட நீக்கிப் பரவையார் பணிந்து நிற்பச்
சுந்தரற் குனைச்சேர் விக்குந் தோழமைக் கணைந்தே மென்றூ
ரிந்தவா றுடையீர் மாற்ற மிசைக்கினென் றிறுதி யென்றார்.

(இ-ள்) எம் சிவபெருமான் மறுபடியும் போகாமல் கதவைத் திறக்கச் சொன்ன வார்த்தையைக் கேட்டுக் கதவைத் திறந்து பரவையார் வணங்கிநிற்க வந்த சிவாச்சாரியார் சுந்தரமூர்த்திக்கு உன்னைச் சேர்த்து சிநேகம் செய்துவைக்கும்படியான தோழமைத் தன்மைக்காக நாம் இங்கு வந்தோம் என்று கூறினார் சுவாமியே நீர் இவ்விதம் சொன்னால் என் உயிர்க்கு முடிவுதான்என்று பரவையார் சொன்னார் (எ-று) 154

836

தேவர்தம் பிரானார் கேட்டுத் திருச்செவி பொதுளி யீதோர்
பாவமோ வென்று மீண்டும் பதமலர் வருந்தச் செல்ல
நாவலூ ராவலோரு நள்ளிருட் குறிப்புக் காட்டிப்
பூவணி மாது வீதிப் புறவழி பார்த்து நின்றார்.

(இ-ள்) தேவர்களுக்குத் தலைவராகிய சிவபெருமான் கேட்டு இரண்டு காதுகளையும் பொத்திக்கொண்டு இது ஒரு பாவமாகும் என்று மறுபடியும் பாததாமரை வருந்தும்படிசெல்ல நாவலூரராகிய ஆசையையுடைய சுந்தரரும் நடுராத்திரியில் மலர் மாலையை யணிந்த பரவையார் இருக்கின்ற வீதியின் வெளியில் வழிபார்த்துக் கொண்டிருந்தார் [எ—று] 155

837

அடுத்தெழுந் தருளி யண்ணல் ஆலசுந் தரனே வாராய்
கடுத்தசொற் பரவை கேளா ளென்றுரை கழறு முன்னந்
தடுத்தெனை யாண்ட தாசைக் கடலிற்றள் ளுதற்கோ வென்று
தொடுத்தகிண் கிணிப்பொற் பாதத் துணைமிசை யரற்றி வீழ்ந்தார்.

[இ—ள்] சிவபெருமான் சுந்தரரைச் சமீபித்து ஆலால சுந்தரனே கேட்பாய் கோபித்த சொல்லையுடைய பரவை என் சொல்லைக் கேட்கவில்லை என்று சொல்லுதற்குமுன்பே சுந்தரர் என்னைத் தடுத்தாட் கொண்டது ஆசைக்கடலில் தள்ளுதற்கோ என்று சொல்லி கிண்கிணியைத் தரித்த அழகிய இரண்டுபாதங்களின்மீது வீழ்ந்துகதறினர் (எ—று) 156

838

தானவே தியர்போற் சென்றுற் றலமுறை கணிகை மார்கண்
மானமுங் குலமு மெண்ணி மதிப்பரோ வடிமை வேண்டி
லூனமி லும்பர் சூழும் விழாவென வொருகாற் சென்று
லீனமோ தலையோட் டுண்ட பெருமையீர்க் கிதுகொ லென்றார்.

(இ—ள்) தானத்தை வாங்குகின்ற பிராமணர்கள் போல் போனால் அங்குள்ள ருத்திர கணிகைகள் பெருமையையும் குலத்தையும் உத்தேசித்து மதிப்பு வைப்பார்களா என்னுடைய அடிமையைத் தாங்கள் வேண்டினால் குறைவில்லாத தேவர்கள் சூழ்ந்திருக்கின்ற திருவிழாவைப் போலத் தேவரீர்சென்றால் குறைவாகுமோ தலையோட்டில் உண்டபெருமையையுடைய தங்களுக்கு இது தகாதோ என்று கூறினர் (எ—ள்) 157

839

ஆவதென் றமலர் கோலங் கொண்டன ரளவி லாத
தேவர்கண் முனிவர் சூழத் திமிலைபல் லியங்க ளார்ப்பப்
பாவலர் வணங்கி னார்கள் பாடலோ டாடன் மல்கச்
சேவடர் கொடிவின் றேர்ப்பக் கவிகைசா மரைக ளோங்க.

(இ—ள்) இதைக்கேட்ட சிவபெருமான் அப்படியே யாகட்டும் என்று அளவில்லாத தேவர்களும் முனிவர்களும் சூழவும் திமிலை முதலான பல வாத்தியங்கள் முழங்கவும் பாடுகின்றவர்களுடைய பாடலும் ஆடலும் மிகுதியாகவும் இடபக்கொடிகள் ஆகாயத்தை மறைக்கவும் குடைகளும் சாமரைகளும் ஓங்கவும் (எ—று) 158

840

மாகமு நிலனுந் தீபக் காட்சியே மலிந்து தோன்றப்
பாகவெண் மதிய வேணிப் பகீரதி ததும்பப் பொற்றேர்
வாகன விமான மின்றி மணிச்சிலம் பரற்றப் பாத
கோகன கங்கள் வீதித் துகளிடைக் குளிப்பச் சென்றார்.

(இ—ள்) ஆகாயமும் பூமியும் விளக்கின் பிரகாசம் அதிகரித்துத் தோன்றவும் வெண்மையான பிறைச்சந்திரனும் கங்கையும் சடையில் விளங்கவும் இவ்விததிருக்கோலத்தோடு வாகனமாகிய விமானம் இல்லாமல் நவரத்தினச் சிலம்புகள் சப்திக்க தாமரை மலர்போன்ற பாதங்கள் புழுதிபடியும்படி திருவீதியிற் சென்றார் (எ-று) 159

841

எழுந்தருள் வதற்குக் காலம் யாதெனப் பரவை யார்நெஞ்
சழுந்திய வுணர்வால் வீதி யழகுசெய் தகிலின் றூமஞ்
செழுந்தினத் திருக்கண் சாத்துக் கியைந்தன திருந்த வேற்றித்
தொழுந்திறத் துடனே நின்றார் சோதியு மருகு சார்ந்தார்.

(இ—ள்) அங்கிருந்த பரவையார் சுவாமி இங்கெழுந்தருள் வாரோ என்று கருதி அதற்குரியகாலம் இதுவாயிருக்குமென்று தன் மனதில் உண்டான அழுத்தமான உணர்வினால் திருவீதியை அலங்கரித்து அகிலின் தூபத்தையுண்டாக்கி சிவபெருமான் திருக் கண்ணால் பார்க்கும்படி அலங்காரங்களைச் செய்து தீபங்களை ஏற்றி வணங்கவேண்டுமென்ற எண்ணத்துடன் நின்று கொண்டிருந்தார் சோதியுருவாகிய கடவுள் பக்கத்தில் வந்துசேர்ந்தார் (எ—று) 160

842

இரவையார் குழன்மின்னார்க ளெண்ணில தீபமேந்தப்
பரவையார் முத்தா லாத்தி யெதிர்பணி மாறு மெல்லை
யரவையார் சடையு ளார்நம் மாலசுந் தரனிங் குன்பால்
வரவை யாதரி யென் றேத வடியனேன் வாழ்ந்தே னென்றார்.

(இ—ள்) இராத்திரியின் இருட்டையொத்த கூந்தலையுடைய மின்னற்கொடிபோன்ற பல பெண்கள் பல தீபங்களை யெடுத்தேர்

திவும் பரவையார் முத்து ஆலாத்தியையெடுத்தகாலத்தில் பாம்பை யணிந்த சடையையுடைய சிவபெருமான் நம்முடைய ஆலாலசுந்த ரன் உன்னிடத்துக்கு வருதலை நீ ஆதரிக்க வேண்டுமென்று சொல் லப் பரவையார் அடியேனுகிய யான் வாழ்வையடைந்தேன் என்று கூறியருளினர் (எ—று) 161

843

வேண்டிய பரிசே வீதி விடங்கரு மணைந்து வேட்கை
காண்டசுந் தரனே யஞ்சல் கன்னிகை பரவை யுன்பான்
மூண்டெழு விருப்ப முற்று ளென்று வெண் முறுவல் காட்டத்
தாண்டினர் குதிகொண்டார்த்தார் தலைவர்தா டலைமேற் கொண்டார்.

(இ—று) சுந்தரமூர்த்தி வேண்டிக்கொண்டபடியே தியாக ராஜப்பெருமானும் அவரிடத்திற்சேர்ந்து விருப்பத்தையுடைய சுந் தரனே பயப்படாதே பரவையாகிய கன்னிகை உன்னிடத்தில் அதிகமான விருப்பத்தையடைந்திருக்கிருள் என்று புன்சிரிப்போடு சொல்ல தாண்டினர், குதித்தார் சிவபெருமான் பாதங்களைத் தலை மேற் கொண்டார் (எ—று) 162

844

புனிதநீ யடியே னுய்யப் போந்தனை யருளா லென்னப்
பனிதவழ் மதியார் வேணிப் பரம்பரர் விடைபாலித்து
மனிதரா லறியொ ணுத விழாவணி விளக்கம் போல
வினிதுபோந் தருண சோதி யெழின்மணிக் கோயில் புக்கார்,

(எ—று) தூயரே அடியேனுகிய யான் அனுப்பக் கிருபையால் போனீர் என்று சுந்தரர் சொல்ல குளிர்ந்த சந்திரன் தவழுகின்ற சடையையுடைய சிவபெருமான் விடைகொடுத்து மனிதரால் அறி யமுடியாத அழகிய திருவிழாக் கொண்டருளுதல்போல இனிமை யாகச்சென்று சிவந்தசோதியையுடைய அழகிய கோயிலுக்குள் பிர வேசித்தார் (எ—று) 163

845

விதிபடு சிரங்க ளுன்கும் விண்டுவின் சிரங்கள் பத்துங்
கதிபடு வேள்விக் கோமான் கவினுறு சிரமுங் கங்கா
நதிபடு சடில நாதர் நாண்முறை நடந்த தாளான்
மிதிபடு மாரூர் வீதித் துகள்படு மேன்மைக் கொவ்வா,

(இ—ள்) கங்காநதியைத்தரித்த சடையையுடைய சிவபெரு மான் தூதுசென்ற நாளில் காலின் அடிச்சுவடுபட்ட திருவாரூரின் வீதியிலுள்ள தூளின் மேன்மைக்கு பிரமாவின் நான்கு சிரங்களும்

பத்து அவதாரம் எடுத்த விஷ்ணுவின் பத்து சிரங்களும் ஒப்பாக மாட்டாவாம் (எ—று) 164

## 846

அத்திரு வீதி தன்னி லாலசுந் தரப்பெம் மானும்
பத்திசெய் பரிவி னோரும் பாக்கிலை பணிபட் டாடை
சுத்தநற் கந்தந் தாமஞ் சுவைக்கன்ன விளநீர் கொண்டே
யுத்தமர் நடந்த வீதிச் சுவடுவிட் டொதுங்கிச் சென்றார்.

(இ—ள்) அந்தத்திருவாரூரின் அழகிய வீதியில் ஆலாலசுந்தரரும் அவரிடத்தில் பக்தி செய்கின்ற அன்பர்களும் தாம்பூலம் ஆபரணங்கள் பட்டு வஸ்திரங்கள் நல்ல மணமுள்ள சந்தனம் பூமாலைகள் சுவையையுடைய கரும்புகள் இளநீர்முதலியவைகளைக்கொண்டு சிவபெருமான் நடந்தவீதியின் நடுவில் சுவடு பட்ட இடத்தை மிதிக்காமல் ஒதுங்கிச் சென்றார்கள் (எ—று) 165

## 847

எதிர்கொடு பரவை யார்சின் றிறைஞ்சிமற் றவர்பொற் றாளை
முதிர்குளிர் பனிநீராட்டி முறைமுறை விளக்கிப் பின்னர்
கதிர்பொரு விழிமீ தொற்றிக் கரதல மலரா லேந்தி
யதிர்சிலம் பரற்றக் கொண்டு துயிலணி யரங்கிற் புக்கார்.

[இ—ள்] பரவையார் எதிர்கொண்டு வந்து வணங்கி சுந்தரமூர்த்தியினது அழகிய பாதங்களை மிகக்குளிர்ந்த பனி நீரினால் அபிஷேகித்துக் கழுவி மறுபடி கண்களில் ஒற்றிக் கைகளாகிய மலர்களினால் ஏந்திக்கொண்டு சிலம்புகள் சப்திக்க அழைத்துக் கொண்டு நித்திரை செய்யும் அறையில் பிரவேசித்தார் [எ—று] 166

## 848

உலவிய பரியங் கத்தி லூரரை யினிதி ருத்திப்
பலகலைப் பரவை யாரும் பணிவிடை யிதங்க ளாற்றிக்
கலவியின் கிரியை யோகங் கைகலந் தருள்பே ரின்பஞ்
சொலவியான் றருவ னோமெய்ச் சோதியே தூது சென்றால்,

[இ—ள்] பல கலைகளையும் உணர்ந்த பரவையார் அசைகின்ற கட்டிலில் சுந்தரமூர்த்தியை இருக்கவைத்து இதமான பணிவிடைகளைச் செய்து உண்மையான சோதிவடிவாகிய சிவபெருமானே தூதுவந்தால், கலவியின் கிரியையைச் செய்து அடையும்படியான பேரின்பத்தை நான் சொல்ல முடியுமாஎன்றுகூறினார் [எ-று] 167

849

பந்தமும் வினையும் போந்த பரிதியு மொளியுங் கூர்ந்த
புந்தியு மறிவுஞ் சார்ந்த புலன்களும் பொறியும் போன்று
சந்ததந் திருவா ரூர்வாழ் தம்பிரான் றோழனும்
பைந்தொடிப் பரவை யாரும் பரசுகம் பயிலு நாளில்.

[இ-ள்] *ஆசையும் அதனால் உண்டாகியவினைகளைப் போலவும் உதயமாகின்ற சூரியனும் அவனது ஒளிகளைப்போலவும் ஐம்புலன்களும் ஐம்பொறிகளைப் போலவும் எப்பொழுதும் திருவாரூரில் வாழ்கின்ற தம்பிரான் தோழராகிய சுந்தரமூர்த்தியும், பரவையாரும் மேலான சுகத்தை அனுபவித்துக்கொண்டிருக்கிற காலத்தில்* [எ-று] 168

850

வேறு

தன்னின் மேன்மைத் தருமமு நீதியுந் தாழ்வு றாது தமனிய நீண்முடிச்
சென்னிதாங்கியசெம்பியர்நாட்டிடைத்திங்கள்சூடியசங்கரற்கன்பராய்ப்
பொன்னி மாநதி சேர்ந்த வடகரை பொற்பின் மேவு திருப்பெரு மங்கலத்
தெந்நி யாயமு மெய்துந் தகைமையா ரேயர் கோன்கலிக் காமரெம்
மேந்தலார்.

[இ-ள்] *தன்னைவிட மேன்மையாகிய தருமமும், நீதியுங் குறையாதபடி அரசாளுகின்ற சுவர்த்தினங்களால் இழைக்கப்பட்ட நீண்ட பொன்முடியைச் சிரசில் தாங்கிய சோழர்களது நாட்டில் சந்திரனைத்தரித்தருளிய சிவபெருமானுக்கு அன்பாகி பெருமை பொருந்திய காவேரிநதிக்கு வடகரையில் அழகாய் விளங்குகின்ற திருப்பெருமங்கலம் என்கின்ற திருப்பதியில் எந்த நியாயத்திலும் வல்லவராகிய எமது தலைவராகிய ஏயர்கோன் கலிக்காமர் என்று ஒருநாயனார் இருந்தார்* [எ-று] 169

851

அரும்பொ னாயிர மோரடிக் கேயரு ளருண வீரசிங்காதன வாணரைச்
சுரும்பு ணுண்மலர்த் தோகைய ராசையாற் றூண்டு பாடியசுந்தரராமவர்
விரும்பி யேயொரு தோழமைத் தூதென விட்டல் கேட்டு மெலிந்தனர்
திரும்ப வோர்முறை செல்லுவித் தாரெனச் செவிபுதைத்துச் [மீளவும்
[சிவசிவவென்றனர்.

[இ-ள்] *ஒரு செய்யுளின் ஒரு அடிக்கு உயர்ந்த ஆயிரம் பொன்னைக் கொடுக்கின்ற சிவந்த வீர சிங்காதனத்தில் வீற்றிருக்கின்ற தியாகராஜப்பெருமானை வண்டுகள் தேனை உண்கின்றபுதிய மலர்மாலைகளையணிந்த பெண்களது ஆசையினால் வன்றொண்டராய்*

கடவுளைப்பாடிய சுந்தரமூர்த்தி தோழமையினாலே விருப்பத்தோடு பரவையாரிடத்துத் தூதனுப்பிய செய்தியோடு இரு முறையும் தூது செல்லும்படி செய்தார் எனக்கேட்டுக் காதைப்பொத்திக் கொண்டு சிவ சிவ என்று கூறுவாராயினர் [எ—று] 170

852

கந்த மாமல ராலயன் முன்னுளோர் காணொணாத திருவடித் தாமரை
யிந்த வாறொரு பாதி யிராவினு மிருளி னுங்குல மில்லார் கடையினுஞ்
சந்தி தோறும் வருந்த நடத்திய தயவிலாத தறுகணர் நாமமென்
சிந்தை யாலு நினைக்ககி லேனெனச்செற்ற முற்றவிரதஞ் செலுத்துநாள்.

[இ—ள்] வாசனைபொருந்திய தாமரை மலரை ஆலயமாக வுடைய பிர்மா, விஷ்ணு முதலானவர்களாலும் பார்க்கமுடியாத திருவடித்தாமரைகளை இப்படி இருளான பாதி இரவில் இன்ன குல மென்று அறியப்படாத கணிகையினுடைய வீட்டில் சந்துகள் தோறும் வருந்தும்படி அனுப்பிய அஞ்சாத நெஞ்சையுடையவரை மனதினாலேயும் நினைக்கமாட்டேன் என்று கோபமுற்று அவரை விரோதி என்று மனவுறுதியோடிருக்கிற காலத்தில் [எ—று] 171

853

வண்மைசேரும் விரதர் வயிற்றிடை வாதசூலை வருத்தி மயக்குறப்
பெண்மைபாகன் கனவிடைத்தோன்றிநீபேதையோநம்பியூரன்பெரிதுவந்
துண்மை யாகத் தொடவிட் டகலுமென் றோசை வேதத் திருவாக்கருள்
கண்ம லர்ந்து விழித்துக் கனவு மெய் காட்டு மோவென [செயக்
[மிக்குளங் கன்றினர்.

[இ—ள்] மேன்மையான விரதத்தையுடைய அவர் வயிற்றில் வாதசூலையானது துன்பப்படுத்தி மயக்கத்தைச் செய்ய உமாதேவியாரை ஒருபாகத்திலுடைய சிவபெருமான் கனவில் தோன்றி "நம்பியாரூராகிய சுந்தரன் மிகவும் மகிழ்ந்து உன்னைத்தொட்டால் இந்நோய்கலும் நீபேதையோ என்று வேதத்திருவாக்கினால் ஓசையுடன் அருள்செய்யக் கண் விழித்துக் கனவு உண்மையை விளக்குமோ என்று மிகவும் மனம்வருந்தினர் [எ—று] 172

854

பாயன்மேற்சிவ யோகம்விளைத்திடும்பரவை நாயகர் தஞ்செரப் பனந்தனி
ஞய னர்திரு வாரு ரமர்ந்தரு ணம்பர் தோன்றி நவிற்றிய வாசக
மேயர்கோன்கலிக் காம னிடத்தியா மிட்ட வேதனை தீர்க்கவின் றெனக
மேய செங்கண் விழித்தக் கணத்திலே வேந்த னர்பதி போந்துசென்
[றெய்தினர்.

[இ—ள்] படுக்கையின்மேல் சிவயோகத்தைச் செய்யும் பாவையூாருக்கு நாயகராகிய சுந்தரமூர்த்தியினது கனவின்கண் திருவாரூரின்கண் வீற்றிருந்தருளுகின்ற தலைவராகிய சிவபெருமான் தோன்றி, ஏயர்கோன்கலிக்காமரிடத்தினில் யாம் உண்டாக்கி அனுப்பிய துன்பத்தைப் போக்குவதற்கு நீ இன்றைக்குப்போவாய், என்று கூற பொருந்திய தூக்கத்தினின்று சிவந்தகண்ணை விழித்த கோத்திலேயே சுந்தரர் ஏயர்கோன்கலிக்காமனாருடைய ஊரைச் சென்றடைந்தார் [எ—று] 173

855

வந்த வாறறிந் தேகலிக் காமனார் மாளி கைக்குள் வருந்தியிருந்துழி
எந்தையாரைப்பணிகொண்டவர்க்கெதிர்எய்தலிற்சென்றிறப்பதழகெனு
முந்துசீருடைவாள்கையில்வாங்கியேமுற்றும்வல்வினைபற்றுமகட்டினைச்
சிந்துசோரி சொரியக் கிழித்தனர் சிவவ்யோக மடைந்தனர்செம்மையார்.

[இ—ள்] சுந்தரமூர்த்தி தன்னிடத்துக்கு வந்ததை அறிந்த கலிக்காமனார் தனது மாளிகைக்குள் வருத்தத்தோடு எம்சிவபெருமானைப் பணிகொண்டவராகிய சுந்தரர்க்கு எதிரே சென்று அவரால் என் நோய் நீங்குதலைக் காட்டிலும் நான் இறப்பது மேலானது என்று முற்பட்ட உடைவாளைக் கையிலெடுத்து முதிர்ந்த கொடிய வினைபொருந்திய வயிற்றை இரத்தம் பீரிட்டு எழும்படியாகக் கிழித்துச் சிவயோகத்தை அடைந்தார் மேன்மை பொருந்திய கலிக்காமர் [எ—று] 174

856

மனைவியார்தந்துயரை மறைத்தெதிர்வாயில்போந்துரவோரைவணங்கவே
கனைகழற்கலிக்காமரெங்கேயெனக்கண்டுயில்குநரென்றலுங்காண்பதற்
கனையதானமெதுவென்றணுகினார்அந்தணாளர்நம்மாலாலசுந்தரர்
தனையிகழ்ந்துபிரேதங்கிடந்துளதன்மைகண்டுசந்தாபத்தழுந்தினார்.

[இ—ள்] இதையறிந்த மனைவியார் தன்னுடைய துன்பத்தை மறைத்து வாயிலுக்கு எதிராகவந்து ஞானமுதல்வராகிய சுந்தரமூர்த்தியை வணங்கினவுடன் சப்திக்கின்ற வீரக்கழலையணிந்த கலிக்காமர் எங்கே என்று கேட்க நித்திரை செய்கின்றார் என்று மனைவியார் சொன்னவுடன் அவர்இருக்குமிடத்தைக்காணவேண்டுமென்று ஆலால சுந்தரர் சமீபித்த அளவில் தன்னை இகழ்ந்து பிரேதமாகக் கிடந்த தன்மையைக்கண்டு சுந்தரர் துன்பத்தில் அழுந்தினார் [எ—று]. 175

## 857

வேறு கண்டிலர் வேத புரந்தரர் வேந்தர் மாய்ந்த சுரிகை விரைந்தெடுத்
தூறு செய்யக் களத்தி லணைக்கவே யும்பர் நாயகர் தம்பே ரருளினால்
வீறு சேர்கலிக் காம ரெழுந்துபூ மென்கை பற்றி விலக்கிய வேலையிற்
பீறு பண்டி பொருந்தியுள் வேதனை பிறவி வேதனையோடு பெயர்ந்ததால்

[இ—ள்] வேதத்தையுணர்ந்த சுந்தரர் வேறுவழிகாணுதவராய் கலிக்காமர் வயிற்றைக்கிழித்த உடைவாளை விரைவாக எடுத்து தன்னுடைய கழுத்தில் வைத்து ஊன்றத் தொடங்கியபொழுது சிவபெருமானுடைய மிகுந்த கிருபையினால் பெருமை பொருந்திய கலிக்காமர் உயிர் பெற்றெழுந்து அழகிய மிருதுவாகிய கையினால் பிடித்து விலக்கியவளவில் கிழிந்த வயிறும் பொருந்திய சூலைநோய் பிறவிநோயோடு தீர்ந்துவிட்டது. [எ—று] 176

## 858

சுந்த ரேசர் துணையடித் தாமரை சூடு மாறது நீடுந் தவத்தினால்
இந்த மேதினி யிற்பெரு மங்கலத் தேயர் கோன்பெருவாழ்வுற்றிலகுநாள்
அந்த வேந்தைப் பதிகத் தமைத்துவான் அமுத வாய்மைத்திருவாக்கருள்
சந்த வாலய மாகு வடைந்தனர் தற்ப ராபரர் பொற்பதநீழலே. [செயச்

[இ—ள்] சுந்தரமூர்த்தியினுடைய இரண்டு பாதங்களையும் தலையிற்சூடிக்கொள்ளும்படியான அதிகமான தவத்தினாலே பெருமங்கலத்தில் அமர்ந்த ஏயர்கோன் கலிக்காமர் இந்த உலகத்தில் மிகுந்த மேன்மையோடு விளங்குகின்ற காலத்தில் அந்தக்கலிக்காமரைப் பதிகத்தில் அமைத்து தேவாமிருதம் போன்ற பதிகத்தைச் சுந்தரர் அருளிச் செய்யச் சிவபெருமானுடைய அழகிய பாதநீழலை சிறப்பான ஆலயமாகக் கலிக்காம நாயனார் அடைந்தனர்[எ-று] 177

## 859

வேறு

சேரமா னெனுமேன்மை செறிகழறிற் றறிவாரை
மூரல்வா யழகெறிக்கு முனைப்பாடித் திருநாடர்
பேரவா வுடனணைந்து பிறங்குநிதி கொணர்போது
வீரமார் சிலைவேடர் பறிவரவு விளம்புவாம்.

[இ—ள்] சேரமான் பெருமாள் என்கின்ற மேன்மைபொருந்திய கழறிற்றறிவார் நாயனாரை புன்சிரிப்போடுகூடிய அழகாக விளங்குகின்ற திருமுனைப்பாடி நாட்டினராகிய சுந்தரர் மிகுந்த ஆசையோடு சிநேகித்து அவரிடமிருந்து பெற்ற மிகுந்தபொருள்களைக் கொண்டு வருகிற காலத்தில் வீரத்தன்மை பொருந்திய

வில்லையுடைய வேடர்கள் சுந்தரமூர்த்தியினது பொருளைப் பறித்துத் திரும்ப அடைந்த வரலாற்றைச் சொல்லுவோம் [எ—று] 178

860

கலைநாடு தமிழமுத முதவுபெருங் கடல்சூழ்ந்து
மலைநாடு புடைமருவி மருண்மாவின் வனமல்கிச்
சிலைநாடு கொடிமாட மதில்வாய்ந்த திறலினதாற்
கொலைநாடு கருவியினு லரண்படைத்த கொடுங்கோளூர்.

[இ—ள்] கொலையைச் செய்கின்ற ஆயுதங்களினுல் காவலையுடைய கொடுங்கோளூரானது பலகலைகளையும் ஆராய்கின்ற தமிழாகிய அமிர்தத்தைக் கொடுத்து பெரிய கடலால் சூழப்பட்டு மலைநாடுகளைப் பக்கங்களிலேயுடையதாயும் மயக்கத்தையுடையயானைக் கூட்டங்கள் நிறைந்தும் விற்கொடிகள் அசைகின்ற மெத்தைகளையுடைய மதில்களோடுகூடிய வீடுகளும் வெற்றியையுடையதாக விளங்கியிருந்தன [எ—று] 179

861

தாதையார் பனையிலங்கத் தடமணிமார் பகம்விளங்குந்
தாதையார் தவமுயல்விற் றரணியிடைப் பகைகளெனுங்
கோதையார் வினைகடிந்து குடிதாங்குந் தனிக்கவிகைக்
கோதையார் புகழ்க்கழறிற் றறிவார்நங் குரிசிலார்.

[இ—ள்) மகரந்தத்தோடு கூடிய பனம் பூமாலையானது பெரிய அழகிய மார்பில் விளங்குகின்ற தவத்தைச் செய்கின்ற பிதாவையொத்தவர் பூமியில் பகைவர்களாகிய குற்றங்களை நீக்கி குடிகளைக் காக்கின்ற ஒப்பற்ற வெண் கொற்றக் குடையையுடைய கோதையார் என்னும் பெயரையுடைய கழறிற்றறிவார் என்பவர் நம் அரசராகவிளங்கினுர் [எ—று] 180

862

திருவஞ்சைக் களத்தலைந்து தேவர்பிரான் பதம்போற்றிப்
பருவஞ்சேர் மேனுளிற் பார்புரக்க முடிசூடிப்
பெருவஞ்சக் கலிதுறந்து பெருந்தருமநெறிபேணித்
தருவஞ்சு கொடைச்சேர னெனவரசு தயங்குநாள்.

[இ—ள்] அவர் திருவஞ்சைக்களம் என்னும் தலத்தைச்சேர்ந்து தேவர்களுக்குத் தலைவராகிய சிவபெருமானது பாதங்களைவணங்கி தகுதியான மூற்காலத்தில் உலகத்தைக் காப்பாற்றுதற்கு முடியைச் சூட்டிக்கொண்டு பெரிய வஞ்சனையாகிய துன்பத்தை நீக்கி பெரிய தர்மமார்க்கத்தை விரும்பிக்காத்து கற்பகத்தருவும் இவரு

டைய கொடையைக் கண்டு பயப்படும்படியான சேரமான் என்று யாவரும் புகழ அரசாட்சி செய்துவருங் காலத்தில் [எ—று] 181

863

சோர்மழையி னுவர்சுமந்த துகிலொலிப்பா னுடல் புலர்ந்து
நேர்மருவச் சிவனடியார் நீறணிதூ ளிதரென்று
சீர்மதவா ரணமிழிந்து தெண்டனிட்ட திறல்வேந்தர்
பார்மனிதா புகழ்ந்தேத்தப் பதிவலம்வந் தணைவுற்றூர்.

[இ—ள்] ஒரு நாள் அரசர் யானையின்பேரில் பவனிவரும் போது வஸ்திரத்தை வெளுக்கிறவண்ணான் உவர்மண்ணைச்சுமந்து வர அது மிகுதியாக மழை பெய்ததனால் நனைந்து உடம்பில் முழுதும் படிந்து பின் காய்ந்து முழுவெளுப்பாகச் சிவனடியாருக்கு நிகராகத்தோன்றியதனால் அவனை மெய் முழுதும் விபூதியை யணிந்தவரென்று பெருமையையுடைய மதயானையைவிட்டுஇறங்கி வணங்கிய வெற்றியையுடைய அரசரைக்கண்டு ஊரிலுள்ள மனிதர்கள் புகழ்ந்து துதிக்க நகரை வலம் வந்து அரண்மனையை அடைந்தார் [எ—று] 182

864

செல்லுமனத் தொருமையினுற் சிவபூசைக் கடன்முடித்து
வெல்லரிய வைம்புலனின் வெகுளியறத் தனிமேவித்
தில்லைவனக் கனகசபைத் திருநடனத்தெரிசனத்திற்
றொல்லை முறை தூக்கிய தாண் மணிச்சிலம்பின் றொனிகேட்டார்.

[இ—ள்] அதன்பின் மன ஒருமையினால் சிவபூசையாகிய கிரியைகளை முடித்து வெல்லுதற்கரிய ஐம்புலன்களில் கோபமில்லாமல் தனியாக அமர்ந்திருக்கிறகாலத்தில் சிதம்பரம் கனகசபையில் திருநடனத்தைத் தெரிசித்ததோடு பழமையாகத் தூக்கிய பாதத்தில் அணிந்திருக்கும் சிலம்பின் ஓசையையும் கேட்டு மகிழ்ந்தார் [எ—று] 183

865

அம்முறையே தினசேவை யாதரித்து வருநாளிற்
செம்மலெனு மாலவா யண்ணலார் திருவெழுத்தாற்
கைம்மலியாழ்ப் பாணனுக்குக் கனகமளித் தருள்கவெனச்
செம்முகவா சகவோலை வரல்கண்டார் சேரலனார்.

[இ—ள்] இவ்வாறு தினந்தோறும் சிவபூசை முடிவில் திருநடனத்தைத் தெரிசித்தலும் சிலம்போசையைக் கேட்டலும் விருப்பத்தோடு நிகழ்ந்துவருகிற காலத்தில் திருவாலவாயாகிய மதுரை

யில் அமர்ந்திருக்கிற சிவபெருமான் கையில்வீணையை ஏந்தி வாசிக்கின்ற யாழ்ப்பாணருக்கு வேண்டிய பொருள்களைக் கொடுக்கும்படியாய் அனுப்பிய திருமுக வாசக ஓலையை. அவர்காட்டச் சேரமான் பெருமாள் கண்டார் [எ—று] 184

## 866

பாணனார் கொண்டுவந்த பரமவருட் டிருமுகத்தைக்
காணவெதி ரேபணிந்து கரந்தாங்கிச் சிரந்தாங்கிப்
பூணவார் விழியணைத்துப் புளகமுடல் கொளநின்று
மாணருது ட்பட்டார் மதிமலியென் றருள்வார்த்தை.

[இ—ள்] பாணபத்திரர் கொண்டுவந்த மேலான கிருபை நிறைந்த திருமுகத்தைக்கண்டு எதிரே பணிந்து அதைக் கைகளிலும் தலையிலும் தாங்கி நீண்ட கண்களில் பொருந்தும்படியாய் ஒற்றிக்கொண்டு சரீரம் புளகம் அடைய மதிமலியென்றருளிய வார்த்தையை மனதில் தியானித்தார் [எ—று] 185

## 867

பத்திரனார் தமக்கெதிர்பொற் பண்டார வறைதிறந்து
நித்திலநீ லம்பவள நிதிமுதலா யின வழங்கிச்.
சத்திரசா மரைசிவிகை தாங்குபவ ருடன் விடுத்துச்
சித்திரமா மணியரங்கிற் சிவபூசைக் கொருப்பட்டார்.

[இ—ள்] பாணபத்திரர்க்கு முன்னால் பொக்கிஷ அறையைத் திறந்து முத்து, நீலம், பவளம், முதலான இரத்தினங்களையும், பொன், வெள்ளி முதலான நாணயங்களையும் குடை, சாமரை, சிவிகை முதலியவைகளையும் அவைகளை எடுத்துச் செல்லவேண்டிய ஆள்களையும் கொடுத்து வழியனுப்பிவிட்டு அழகிய இரத்தினங்களிழைத்த சபையில் சிவபூசை செய்வதற்கு முற்பட்டார் [எ—று] 186

## 868

தந்திரபூ சைகண் முடித்துத் தவமிலகு தியானத்தி
லந்தரமே தினமுதவுஞ் சிலம்போசை யது தாழ்ப்ப
மந்திரவாள் கையில்வாங்கி மணிமார்பந் தனிலூன்ற
யிந்திரன்மா லயற் கரிய வியலோசை யெழுந்ததால்,

[இ—ள்] ஆகம விதிப்படி பூசைகள் முடித்து தவத்தோடு கூடிய தியானத்திலேயிருந்தபொழுது தினமும் கேட்கின்ற சிலம்பின் ஓசையானது கேளாமல் தாமதிக்க மந்திரவாளை எடுத்து அழ

கிய மார்பில் ஊன்றினவுடன் இந்திரன், பிரம விஷ்ணுக்களுக்கும் அரிய சிவபெருமானது சிலம்பின்தொலி, கேட்கலாயிற்று [எ-று] 187

869

தாழ்ந்தபரி சென்கோ லென்று தார்வேந்தர் தனிப்புலம்ப
வாழ்ந்தருளு மாகாய வாணியெனுந் திருவாக்காற்
சூழ்ந்தநம தாலால சுந்தரன்பாட் டிசைப்பயனி
லாழ்ந்தனமென் றார்செம்பொ னம்பலநா டகவாணர்.

[இ—ள்] இன்று தாமதிக்கக் காரணம் என்னவென்று மாலையையணிந்த அரசராகிய சேரமான் பெருமாள் மிக வருந்த, நல்வாழ்வையளிக்கின்ற ஆகாயவாணி என்கின்ற திருவாக்கினாலே நமக்குத் தோழனுயுள்ள ஆலால சுந்தரன் பாடுகின்ற பாட்டின் இசையாகிய ஆனந்தத்தில் ஆழ்ந்துவிட்டோம் என்று செம்பொன் அம்பலத்தில் நடனம் ஆடுகின்ற சபாபதி கூறினார் [எ—று] 188

870

கேட்டளவி லகமகிழ்ந்து கேரளபூ பதியானார்.
பாட்டமர்சுந் தரர்பதங்கள் பணிவதற்கே துணிவுளராய்
நாட்டரசு புரப்பதற்கு நல்லமைச்சர் தமையமைத்துக்
கோட்டமருந் தானையொடுங் குணதிசையாத் திரைசெல்வார்.

[இ—ள்] இவ்வுரையைக்கேட்ட உடனே கேரளதேசத்திற்கு அதிபதியாகிய சேரமான் பெருமாள் மகிழ்ந்து தமிழ்ப்பாடல்களைப் பாடுகின்ற சுந்தரமூர்த்தியின் பாதங்களை வணங்க வேண்டுமென்ற எண்ணம் உள்ளவராய் நாட்டைப் பரிபாலித்துவர நல்லமந்திரிமார்களை யமைத்து முழங்குகின்ற நால்வகைச் சேனையோடுங்கூட கிழக்குத்திக்கில் யாத்திரை செய்யப் புறப்பட்டார் [எ—று] 189

871

திங்களின்வெண் குடைநிழற்றச் சீர்மலிபல் லியமார்ப்ப
மங்கலமா மலைநாடு வளச்செறிவுங் கண்டுநெடுங்
கொங்கணைந்தாம் பிரவதியின் குளிர்கரையின் புடைசார்ந்த
மங்குறவழ் மதின்மூதூர் வஞ்சிவளம்பதிபுக்கார்.

[இ—ள்] சந்திரவட்டக் குடைகள் நிழலைச் செய்யவும், சிறப்பு மிகுந்த பல வாத்தியங்கள் முழங்கவும், மங்கலமாகிய மலைநாடுகளையும் அதனோடு பொருந்திய வளமுள்ள பலஇடங்களையும் பார்த்துப் பின் கொங்குநாட்டை அடைந்து குளிர்ந்த ஆம்பிராநதிக்கரையின் பக்கத்தை அடைந்து மேகங்கள் தவழ்கின்ற மதில்களையுடைய பழமையான வஞ்சிமாநகரை வந்தடைந்தார் [எ—று] 190

872

வாசிகைதோ ரணநெருங்கு மாலிகைபூ ரணகுடங்க
ளாசிகைவாக் கருகுநின்ற வந்தணர்கள் பலகூற
மாசிகையின் முடிவேந்தர் மாழைமணி திறையளப்ப
நாசிகையா மதவரைமே னகரிவலம் வந்தணைந்தார்.

[இ-ள்] தொடுத்த மாலைகளும் தோரணங்களும் நெருங்கு கின்ற சாமாலைகளும், நிறை குடங்களும், இருமருங்கிலும் பிராமணர்கள் ஆசீர்வாதம் கூறவும் மேலான சிரசில் முடியை அணிந்த அரசர்கள் திறைகளாக பொன்னையும் இரத்தினங்களையும் அளக்கவும் மூக்கைக் கையாகவுடைய மதத்தையுடைய மலைபோன்ற யானையின் மேல் ஏறி நகரத்தை வலமாக வந்து சேர்ந்தார் [எ-று] 191

873

செம்பொன்மணித் தவிசிருந்து தேவர்மறை யவர்புலமு
நம்பதியுந் திருநாடு நலமேவென் றிதங்கேட்டுத்
தம்பமெனுஞ் செங்கோன்மை தளராமை நிலைநிறுவி
யும்பரிறை யெனவிருந்தா ருதியர்குல தீபகனார்.

[இ-ள்] செம்பொன்னாலாகிய இரத்தின சிங்காதனத்தி லிருந்து தேவாலயமும் பிராமணர்கள் இருக்கும் இடங்களும் நம்முடைய அழகிய நகரமும் நாடும் நன்றாக பரிபாலிக்கப்படுகின்றனவா என்று அதன் தன்மையைக்கேட்டு ஸ்தம்பம்போன்று நிலையாகவுள்ள செங்கோல் தளராதபடி நிலை நிறுத்தி தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரன் போல் சேரர்குலத்துக்குத் தீபம்போன்ற சேரமான் பெருமாள் வீற்றிருந்தார் [எ-று] 192

874

வஞ்சிநக ரகன்றுதிரு மாபுரவஞ் சியைமேவிச்
செஞ்சிலைவேட் கருள்பொன்னிச் செம்பியனாட் டிடைபோகிப்
பிஞ்சிளவெண் மதிசூடும் பெரும்பற்றப் புலியூரர்
மஞ்சிலகு கோபுரஞ் சேர் மணிமாடம் வணங்கினார்.

[இ-ள்] வஞ்சிமாநகரை விட்டு நீங்கி ஆதிமாபுரமாகிய கருவூரை வந்தடைந்து செம்மையான வில்லையுடைய மன்மதனுக்கு அருள் செய்த காவிரியையுடைய சோழநாட்டை அடைந்து இளமையான வெண்மதியை யணிந்த சிவபெருமான் அமரும் பெரும்பற்றப்புலியூரின் மேகங்கள் தவழுகின்ற அழகிய மாடங்களையுடைய கோபுரங்களை வணங்கினார் [எ-று] 193

## 875

சிந்துரவா ணுதல்பாகத் திருச்சிற்றம் பலத்தரசை
யந்தரியா கத்தடிய ராதரித்துப் புறத்தேயுஞ்
சுந்தரர்பா டும்பதிகத் தொகுதமிழோ வேதாந்த
மந்திரமாப் பூசனைகூர் மடப்புறங்கள் பரவினார்.

[இ-ள்] சிந்தூரப் பொட்டையணிந்த ஒளிபொருந்திய நெற்றியையுடைய உமாதேவியாரை ஒரு பாகத்திலுள்ள திருச்சிற்றம் பலத்துக்குத் தலைவராகிய சிவபெருமானை அடியார்கள் மனத்திலே விரும்பிப் பூசிக்கின்ற இடங்களையும், சுந்தரமூர்த்தி பாடியருளிய தேவாரப் பதிகங்களைப்பாடி அடியார்கள் மந்திரபூர்வமாகப் பூசை செய்கின்ற வெளியிடங்களையும் சேரர்பெருமான் வணங்கித் துதித்தார் [எ-று] 194

## 876

தென்றிசைவா யிலைவணங்கிச் சேவுயர்த்த கொடிபோற்றித்
துன்றனுக்கந் திருவாயி லொருழுதுபுகுந் தருணந்தி
வென்றியருட் கொண்டரவு புலிமுனிதாள் விரைந்தேத்திச்
சென்றடைந்து கனகசபைச் சுடரொளியைத் தெரிசித்தார்

[இ-ள்] தெற்குக் கோபுரவாயிலை வணங்கி ரிஷபக்கொடியை நமஸ்கரித்து பொருந்திய திருவணுக்கன் திருவாயிலையுந் தொழுது உள்ளே புகுந்து கிருபையுள்ள வெற்றி பொருந்திய திருநந்திதேவருடைய அருள் பெற்று பதஞ்சலி வியாக்கிரபாத முனிவருடைய பாதங்களை வணங்கித் துதித்து பொன்னம்பலத்தில் விளங்குகின்ற சுடர் ஒளியாயுள்ள சிவபெருமானைத் தெரிசித்தார் [எ-று] 195

## 877

ஒளியில்வரு மருவுருவை யுபநிடதப் பெரும்பொருளைத்
தெளியவுறு மாநந்தச் சிவமயமாந் தனிக் கூத்தை
வெளியில்வெளிக் காட்சி பெறும் வேலையிலே முன்னுளிற்
களியிலக வொலியளித்த திருச்சிலம்பைக் கண்ணுற்றார்.

[இ-ள்] ஒளியிலிருந்து உண்டாகின்ற அருவுருவமானவரை உபநிஷதங்களின் பொருளாயுள்ளவரை தெளிவு அடையும்படியான சிவானந்த மயமாகிய ஒப்பற்ற திரு நிருத்தத்தை ஆகாயத்தில் புறமாகக் காணுகின்ற சமயத்தில் முற்காலத்தில் மகிழ்ச்சியுண்டாகச் சப்தத்தைக் கொடுத்த அழகிய சிலம்பையும் பார்த்தார் [எ-று] 196

878

நெஞ்சுருக வுடலமெலா நெக்குருக நிகழ்புலன்க
ளஞ்சுருக வறிவுருக வன்புருக மலைநாடர்
மஞ்சுருக மலையுருக மரனுருக வடியர்குழாந்
துஞ்சுருகப் பொன்வண்ணத் தந்தாதித் துதிசெய்தார்.

[இ—ள்] மனம் உருகவும் சரீரமெல்லாம் நெகிழ்ந்து உருகவும் உண்டாகிய ஐம்புலன்களும் உருகவும், அறிவு உருகவும் அன்பு உருகவும் மேகங்கள் உருகவும் மலை யுருகவும் மரம் உருகவும் அடியர் குழாங்கள் சேர்ந்து உருகவும் பொன்வண்ணத்தந்தாதி யென்னும் நூலைப் பாடித் துதிசெய்தார் [எ—று] 197

879

நாவலன்மா வரசுமகிழ் நண்புபெறக் கிடையாமே
யாவல்வா ரிதி பெருகி யம்பலத்தை விடைகொண்டு
காவல்சூழ் பழனவினைக் கடைசியர்போற் பெடையெகினஞ்
சேவல்கா ணுற நடக்குந் திருவாரூர் சென்றடைந்தார்.

[இ—ள்] திருநாவலூர் அரசராகிய சுந்தரமூர்த்தியினது மகிழ்ச்சிக்குரிய சிநேகம் கிடையாமல் ஆசையாகிய கடல் பெருகிச் சிதம்பரத்தினின்று நீங்கி வயல்களைக் காத்து வேலைசெய்கின்ற பள்ள ஸ்திரீகள் போல நடக்கின்ற பெண் அன்னங்களை ஆண் அன்னங்கள் பார்த்து மகிழ்கின்ற திருவாரூரைப்போய் அடைந்தார் [எ—று] 198

880

மலையரசர் வருவதற்கு மணிமாட மலங்கரித்து
நிலையரச ரெதிர்கொண்டு வேண்டுவன நிகழ்விப்பக்
கலையரசர் சுந்தரனார் காவலர்க்குக் காட்சி தரப்
புலையரசர் முரசோச்சுந் திருவீதிப் புறநின்றார்.

[இ—ள்] மலைநாட்டு அரசராகிய சேரமான் பெருமாள் வருகிறார் என்று அழகிய மாளிகைகளையெல்லாம் அலங்கரித்து அத்திருவாரூரில் நிலையாய் அரசுபுரிகின்ற சோழர் எதிர்கொண்டுபோய் வேண்டிய மரியாதைகளைச் செய்ய கலைகளுக்கு அரசராகிய சுந்தரமூர்த்தி சேரருக்குக் காட்சிதரும்படியாகப் பறையர்களுக்கு அரசராகிய புலையரசர் முரசறையும்படியான திருவீதியில் வெளியே வந்து நின்றுகொண்டிருந்தார் [எ—று] 199

881

வேளுடனே வேதியரை வேந்தர்பிரான் விரைந்தணைந்து
தாளுடனே சிரம்பொருந்தச் சரியைமுறை தாழ்ந்தெழுந்து
தோளுடனே புயமழுந்தப் புணர்ந்தருள்வா ரியிற்றோய்ந்தா
ராளுடையார் பழவடியா ரன்புடைமை யென்படுமோ.

[இ—ள்] மிகுந்த ஆசையுடனே சுந்தரமூர்த்தியை அரசர் தலைவராகிய சேரமான் பெருமாள் விரைவாகச் சென்று கால்களுடன் சிரசும் பூமியிற் பொருந்தும்படி கிரமமாக நமஸ்கரித்து எழுந்து தோள்களும் புஜங்களும் பொருந்தச் சேர்ந்து கிருபையாகிய வெள்ளத்தில் முழுகினார்கள் எல்லாரையும் அடிமையாகவுடைய சிவபெருமானது பழைய அடியார்களுடைய அன்பு எத்தன்மையுடையதோ என்று யாவர் சொல்லவல்லவர்கள் [எ—று] 200

882

மத்தகவெங் களியானை மன்னர்மறை யவர்பின்போ
யத்தர்மணிப் புற்றுறைவா ராலயஞ்சூழ்ந் தருகெய்திப்
பத்தியொளி மிளிர்திருவா பரணவகை சாத்தியபின்
வைத்திறையுங் கழற்றரும் மணிக்கோவை சாத்தினார்.

[இ—ள்] மத்தகங்களையும் கொடிய களிப்பையுமுடைய யானை முதலிய சேனைகளையுடைய சேரமான் பெருமான் சுந்தரமூர்த்தியின்பின் போய் பிதாவாகிய அழகிய புற்றிடங்கொண்ட பெருமானது ஆலயத்தை வலம் வந்து சமீபித்து வரிசையாய்ப் பிரகாசிக்கின்ற பல திரு ஆபரணங்களை வன்மீகநாதனுக்கு அணிவித்தபின் சிறிது நேரமும் கழற்ற முடியாத மும்மணிக்கோவை என்னும் பிரபந்தத்தையும் பாடியருளினார் [எ—று] 201

883

ஒண்ணுதலார் பரவையார் உயர்திரு மாளிகைசார்ந்த
வண்ணலிரு வர்க்குமவ ராலாத்தி பணிமாறி
விண்ணவர்க்கு முதவாத விருந்தருத்தி வெளியரங்கில்
வண்ணமணித் தெற்றிமிசை மலர்த்தளிமத் தினிதிருத்தி.

[இ—ள்] பிரகாசமான நெற்றியையுடைய பரவையார் உயர்ந்த திருமாளிகையில் வந்து சேர்ந்த பெருமையிற் சிறந்த இருவர்களுக்கும் ஆலத்தியெடுத்து தேவர்களுக்கும் கிடைத்தற்கரிய அமிர்தம் போன்ற விருந்து உணவையுண்பித்து வெளிமுற்றத்தில் அழகிய திண்ணைமேல் மலர்மெத்தையில் இனிமையாக இருக்க வைத்து [எ—று] 202

884

பான்மைதரு பொன்மடலிற் பாளிதகுங் குமமிழைத்து
மான்மதமிட் டிருவரையும் வரன்முறையால் வனைவித்து
மேன்மைதரு பணியெனவே வெள்ளிலைகாய் பகுந்தளித்து
வான்மலிந்த மலராலவட்டமசைத் தெதிர் நின்றார்.

[இ-ள்] உயர்ந்த பொன்னாலாகிய தட்டில் குங்குமப்பூபச்சைக் கற்பூரம் சேர்ந்த இழைத்த சந்தனத்தைவைத்து அதில் கஸ்தூரியையும் கலந்து அந்த இரண்டு பேர்களும் கிரமமாகப்பூசிக்கொள்ளும்படி செய்து மேன்மையான பணிவிடையிது என்று நினைத்து வெற்றிலைபாக்கு முதலியவைகளையும் பகிர்ந்து கொடுத்து மேன்மைமிகுந்து விளங்குகின்ற ஆலவட்டத்தை வீசிக்கொண்டு முன்னே நின்றார் [எ-று] 203

885

நீருமாம் பான்மதியு நிறைபிரச மலர்க்கொன்றைத்
தாருமார்ந் திடும்வேணித் தம்பிரான் றோழ ரெனப்
பேருமார்ந் ததுமன்றிப் பெருநம்பி சுந்தரர்க்குச்
சேரமான் றோழரெனத் திருநாமஞ் சிறந்ததால்.

(இ-ள்) கங்காநதியும் வெண்மையான பிறைச்சந்திரனும் தேன் பொருந்திய கொன்றைமலர்மாலையும் பொருந்துகின்ற சடையையுடைய தம்பிரான் தோழரெனப்பேர்பெற்றதோடல்லாமல் நம்பியாகிய சுந்தரமூர்த்திக்குச் சேரமான் பெருமாள் தோழர் என்ற ஒரு பேரும் சிறந்து விளங்கியது (எ-று) 204

886

பரவையார் பணிபுரியப் பாவலருங் காவலரும்
வரவையார் களிபெருகிச் சிலநாள்வை கியபின்னர்
இரவையார் மதிவேணி யெந்தைதிரு வாலவாய்
விரவையா ரதிசயங்கள் போந்தறிய விருப்புற்றார்.

(இ-ள்) பரவையார் பணிவிடைகளைச் செய்யப் பாவலராகிய சுந்தரமூர்த்தியும் காவலராகிய சேரமான் பெருமாளும் மேன்மேலும் (சந்தோஷம்) மகிழ்ச்சி அதிகரித்து சிலகாலம் திருவாரூரிலேயே தங்கியிருந்து இரவில் சஞ்சரிக்கின்ற பிறைச் சந்திரனையணிந்த சடையையுடைய சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற திருவாலவாயாகிய மதுரையில் நடந்த அதிசயங்களைப்போய் அறிய வேண்டுமென்ற விருப்பம் உடையவரானார்கள் [எ-று] 205

887

இன்னவர்கள் கூட்டிற்போந் தியலிசையாழ்ப் பாணருக்கு
மன்னுதிரு முகமளித்த வான் பொருளை வழிபட்டுத்
தென்னவருஞ் சேரலருஞ் செம்பியரு முடன் வணங்க
மின்னுபல பெருமைகளுங் கண்டருளி மீண்டணைவார்.

(இ-ள்) இவ்விருவரும் மதுரைக்குப்போய் சங்கீதத்தில் வல்லவராகிய பாணபத்திரருக்கு நிலைபெற்ற திருமுகம் கொடுத்தருளிய சோமசுந்தரக்கடவுளை வழிபட்டு பாண்டியரும் சேரரும் சோழரும் தன்னை வணங்கும்படி அங்கேயுள்ள பல சிறப்புக்களையும் பார்த்துக்கொண்டு திரும்பித் தம் ஊருக்கு வருவாராயினர் (எ-று) 206

888

வில்லவர்பா ணரை நிறுத்தி வேதியனா ருடனொரு
ரெல்லைபுகுந் தையாறு தொழவெண்ணி யெய்துதலுங்
கல்லவரு காவேரி கரைபுரண்டு பெருகுதலான்
வல்லவரா நீர்பஞ்ச நதியவரே யெனப்பாட.

(இ-ள்) சேரமான் பெருமாள் யாழ்ப்பாணரை மதுரையிலேயே இருக்கச்செய்து சுந்தரமூர்த்தியோடு திருவாரூர் எல்லையை அடைந்து திருவையாற்றை வணங்க வேண்டுமென்று நினைத்துப் போகிறகாலத்தில் கரையைக்கெல்லிவருகின்ற காவேரியாறு கரைபுரண்டு பெருகிவருகிறதினாலே பஞ்சநதீசரே நீரே வல்லவரென்று பதிகம்பாட (எ-று) 207

889

உரை நிறையும் பதிகங்கேட் டுமைபாக ரருள்கூர
வரைநின்ற தெனப்பொன்னி வழிவிடுத்து மணற்றரி
தரை நின்ற படிகிடந்த நெறிபோந்து தலமணைந்து
விரை நின்ற கொன்றையணி வேணியா ரடிபோற்றி.

(இ-ள்) பொருள்நிறைந்த தேவாரப் பதிகத்தைக்கேட்டு உமாதேவியாரை ஒரு பாகத்தில் உள்ள சிவபெருமான் கருணை செய்ய காவேரியின் நீர் இரண்டு பக்கத்திலும் மலையைப்போல் நிற்க நடுவில் மணலாய் கிடக்கும்படியிருந்தவழியாகச்சென்று திருவையாற்றை யடைந்து வாசனை பொருந்திய கொன்றைமாலையை யணிந்த சடையையுடைய சிவபெருமானது திருவடிகளைவணங்கி (எ-று) 208

890

பாங்குபெற நெஞ்சுருகிப் பாடினர் விடைகொண்டார்
நீங்கரிய தென்கரைபோய் நேர்தொழுதார் நிமலேசர்
தேங்கருணைத் திருவருளுஞ் சீரடியார் பேரன்பு
மோங்கிநின்ற காவிரியு மொன்றுபடப் பெருகியவால்.

[இ—ள்] தகுதியாக மனம் உருகிப் பதிகம்பாடி உத்தரவு பெற்றுக்கொண்டு தென்கரையாய் மிக அருமையாக நீங்கி நேரே கடவுளைத் தொழுதார், சிவபெருமானது இனிமையான திருவருளும் சிறப்புப்பொருந்திய அடியார்களது மிகுந்த அன்பும் உயர்ந்து பெருகிய காவிரியும் ஒன்றாகப் பெருகி ஓடியது [எ—று] 209

891

இருவர்மணிச் சிவிகையுமங் கிணைபிரியா துடனேகப்
பொருவருஞ்சே னைகள்சூழப் பொன்னிவள நாடகன்று
தருவுயர்கொங் கங்கடந்து தண்சாரன் மலைநாட்டிற்
குருவளர்சா ளரவீதிக் கொடுங்கோளூர் சென்றடைந்தார்.

[இ—ள்] இவ்விருவருடைய இரத்தினங்கள் இழைத்த சிவிகைகளும் ஒன்றை விட்டு ஒன்று நீங்காமல் சேர்ந்துபோக சமானமில்லாத நால்வகைச் சேனைகளும் பக்கத்தில் சூழவும் வளம்பொருந்திய பொன்னிநாட்டை விட்டு நீங்கி மரங்கள் உயர்ந்துள்ளகொங்கு நாட்டைக் கடந்து குளிர்ந்தசாரலையுடைய மலை நாட்டில் சென்று அழகு மிகுந்த சன்னல்களோடுகூடிய உப்பரிகைகள் நிறைந்த வீதிகளையுடைய கொடுங்கோளூரைச் சேர்ந்தார்கள் [எ—று] 210

892

மிகுதிபெறு முதியர்பிரான் வேதியர்சிந் தாமணியைப்
புகுதிருநன் னகரிதனிற் புறவீதி வலங்கொண்டு
தகுதியசிங் காதனத்திற் றனியிருத்தி யகமலர்ந்து
தொகுதிபெறு மவர்புகழைப் பலவாறு துதிசெய்து.

[இ—ள்] மேன்மையையுடைய சேரமான் பெருமாள் மறையவர்களுக்குச் சிந்தாமணிபோல் விளங்குகின்ற சுந்தரமூர்த்தியைத் தன்னுடைய அழகிய நகரத்திற் புகுந்தவுடனே வெளிவீதியில் வலமாக அழைத்துக்கொண்டு உள்ளே சென்று தகுதியையுடைய சிங்காதனத்தில் மேன்மையாக இருக்கச்செய்து மனம் மகிழ்ந்து மிகுதியாயுள்ள அவருடைய புகழைச் சொல்லிப் பலவாறுதுதித்து [எ—று] 211

893

பைம்புணரி யெனக்களித்துப் பரிவுடன்வாழ் சிலநாளிற்
செம்பொன்மதி லாரூரர் திருவுள்ளஞ் சலியாமல்
வெம்பகடு தகர்சேவல் விறன்மற்போர் பரதநடம்
பம்புபொலி யாழிசையின் பாராட்டி மகிழ்வித்தார்.

[இ—ள்] பசுமையான சமுத்திரம்போன்ற மகிழ்ச்சியை யடைந்து அன்போடு அங்கேயே தங்கியிருக்கின்ற காலத்தில் செம்பொன் மயமாகிய மதில்களையுடைய திருவாரூராகிய சுந்தரமூர்த்தியினது மனமானது சலிப்படையாமல் கொடிய யானைச் சண்டை ஆட்டுச்சண்டை கோழிச்சண்டை முதலியனவும் மல்யுத்தம் பரதநாட்டியம் இனிமைமிகுந்த யாழின் இசைமுதலிய சங்கீதத்தினாலும் அவர்மனம் மகிழும்படியாகச்செய்தருளினார் [எ—று] 212

894

சீர்மலிந்த வின்பமெலாஞ் சிவபோக மெனத்துய்த்துத்
தார்மலிந்த புயவேந்தர் சற்சங்கந் தவிராமே
பேர்மலிந்து சிலநாளங் கிருந்தருளும் பெருந்தமிழார்
சீர்மலிந்த மணிவீதித் திருவாரூர் நினைவுற்று.

[இ—ள்] சிறப்புமிகுந்த இன்பங்களையெல்லாம் சிவபோகமாக அநுபவித்து மாலைகளையணிந்த புயங்களையுடைய சேரமான் பெருமாள் சற் சங்கத்தில் நீங்காமே அழகோடு சிலகாலம் அங்கு தங்கியிருக்கின்ற சுந்தரமூர்த்தி சிறப்புமிகுந்த அழகிய வீதிகளையுடைய திருவாரூரை நினைந்து [எ—று] 213

895

மின்செய்த சிறுமருங்குன் மென்கொடிநம் பரவைதான்
பொன்செய்த முதலிலதாற் பொலிமணிமா ளிகைச்செலவுக்
கென்செய்து வாடினளோ வென்றருளுந் திருவாக்கு
முன்செய்த தவவேந்தர் கேட்டஞ்சி மூதுயிர்த்தார்.

[இ—ள்] மின்னலையொத்த சிறிய இடையினையுடைய மிருதுவாகிய கொடிபோன்ற நம் பரவைக்கு முதற் பொருளில்லாததனால் விளங்குகின்ற அழகிய வீட்டுச் செலவுக்கு என்னசெய்து வாடுகின்றாளோ என்று சுந்தரமூர்த்தி சொல்லக்கேட்டு முன்செய்ததவத்தையுடைய சேரமான் பெருமாள் அஞ்சிப் பெருமூச்செறிந்தார் [எ—று] 214

896

ஆரணங்கு பரவையார்க் காவனபொற் பலகலன்கள்
தாரணங்கு நூன்மார்பர் சாத்துதிரு வாபரணம்
வாரணங்கு மணிவடங்கள் மாடைகள்பட் டாடைகண்மேற்
பேரணங்கு பெறவெவையும் பேழைதனிற் பெய்தமைத்து.

[இ-ள்] தெய்வப்பெண்ணையொத்த பரவையார்க்கு ஆக வேண்டிய பொன்ஆபரணங்கள் மாலைகளையும் அசைகின்ற பூணூலையும் அணிகின்ற சுந்தரமூர்த்திக்கு அணியக்கூடிய ஆபரணங்களும் இரத்தினாபரணங்களும் பீதாம்பரங்கள் பட்டாடைகள் முதலானவைகளையும் மிகுந்த அழகுபெற எல்லாவற்றையும் பெட்டியில் அடுக்கிவைத்து [எ-று] 215

897

வீக்கியமுத் திரைகோலி வேயுறுதண் டினைச்சேர்த்து
நீக்கரிய பலசிவந்த வினைஞரா னெறிப் போக்கித்
தேக்குதமிழ்ச் சுந்தரர்பின் சேணடந்து வீழ்ந்திறைஞ்சிப்
பூக்கழல்கண் ணீராட்டிப் புலம்புவார் சிலம்பரையர்.

[இ-ள்] கட்டியபின் முத்திரைவைத்து மூங்கிற்கழியிற் சேர்த்து நீக்கமுடியாத பல உயர்ந்த வேலையாட்களால் கொண்டு போகும்படிசெய்து தமிழ்ப்புலமை நிறைந்த சுந்தரமூர்த்திக்குப் பின் வெகுதூரம் நடந்துவந்து பின் கீழே விழுந்து நமஸ்கரித்து அவருடைய அழகிய பாதங்களில் கண்ணீராலாட்டி வருந்துவார் மலைநாட்டரசராகிய சேரமான் பெருமாள் [எ-று] 216

898

விரைந்தேகிக் கடிதுவர வேண்டுமென வதுகேட்டுக்
கரைந்தேமுன் னெதிர்கிடந்த காதலெனுங் கடலாய
வரைந்தேய மன்னர்தமை வாரியெடுத் துறவணைத்து
நிரைந்தேபொற் புயமழுந்தத் தழுவியபின் னேர்நின்று.

[இ-ள்] சீக்கிரம் போய்த் திரும்பிவா வேண்டுமென்று சேரமான்பெருமாள் சொல்ல அதைக்கேட்டு மனம் இளகி எதிரே வீழ்ந்துகிடந்த அரசரை வாரி யெடுத்து அணைத்து அழகிய தோளழுந்தும்படியாகத் தழுவி எதிரே நின்று [எ-று] 217

899

நீர்பொழிகண் டுளிமாற்றி நிருபனுர் தமைநிறுத்தச்
சீர்பொலிகண் ணிமையாது தெரிவளவுந் தெரிசித்துப்
பார்பொலிய மீண்டணைந்தார் பரவைநா யகரும் விரைந்
தேர்பொலியு முல்லைவனத் தெல்லையுழை யெய்துதலும்.

[இ—ள்] சேரமான்பெருமாளது கண்களிலிருந்து வரும் நீர்த் துளிகளை மாற்றி அவரை நிற்கும்படிசொல்ல மேன்மையான கண்கள் இமையாமல் கண்ணுக்குத் தெரிகிற வரையில் தெரிசித்து மீண்டு திரும்பிவந்தார். பரவையாருக்குத்தலைவராகிய சுந்தரமூர்த்தியும் விரைவாக அழகு பெற விளங்குகின்ற முல்லைவன மென்கின்ற திருமுருகன் பூண்டியின் எல்லையை அடைந்தவுடன் [எ—று] 218

900

முன்னாளிற் றமிழ்ப்பதிக மொழியாத குறைபாட்டாற்
பொன்னாரு மெயின்முருகன் பூண்டியுறை புண்ணியனார்
பன்னாக மிலங்குகுழைப் பலகணநா தரிற்சிலரை
விண்ணாணிற் றொடுபகழி வேடரெனச் செலவிடுத்தார்.

[இ—ள்] முன் நாளையில் திருமுருகன் பூண்டியிலுள்ள சிவபெருமான் மீது பதிகம் பாடாத குறையினாலே பொன்னைப்போல் பிரகாசிக்கின்ற மதில்களையுடைய திருமுருகன் பூண்டியிலமர்ந்தருளும் சிவபெருமான் பல நாகங்களைக் குண்டலங்களாக அணிந்த கணநாதர்களிற் சிலரை நாணோடுகூடிய வில்லிலிருந்து தொடுக்கின்ற பாணங்களையுடைய வேடர்களாக்கிச் செல்லும்படி அனுப்பினார் [எ—று] 219

901

சிகைமுடிந்து பின்போக்கிச் சேர்கருங்கச் சரைவீக்கிப்
புகைமுடிந்த மேனிமிசைப் போந்தபுலான் முடைநாற
மிகைமுடிந்த சிலைவாங்கி வெட்டெறிகுத் தெனவெகுண்டு
பகைமுடிந்த தெனச்சூழ்ந்து பரந்தெங்கும் வளைந்தனரால்.

[இ—ள்] மயிரை முடிந்து பின்னே தொங்கவிட்டு கரியவாராலாகிய கச்சை இடுப்பிற்கட்டி புகையைப்போல் மாசுபடிந்த சரீரத்தின் மேற்புலால் நாற்றமானது வீசும்படி மேலே நாணிற்பூட்டிய வில்லை வளைத்து வெட்டு, எறி, குத்து என்ற வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு கோபித்து நம்பகை முடிந்ததென்று வளைந்து கொண்டு எவ்விடத்திலும் நெருங்கினார்கள் [எ—று] 220

902

காலயர்ந்து மெய்சோர்ந்து கருவிகர ணங்குலைந்து
பாலமர்ந்த சுந்தரர்தம் பரிசனங்கள் பரிதவிப்பக்
கோலமொன்ற வுள்ளவெலாங் கொள்ளைகொண்டு விசைபோந்தா
ரோலமென வவர்யாரு மொலிகிளர முறையிட்டார்.

[இ-ள்] கால்கள் தடுமாறி சரீரம் சோர்வடைந்து கருவி காரணங்களெல்லாம் வேறுபட்டு சுந்தரமூர்த்தியின் பக்கத்திலிருந்த பரிசனங்களெல்லாரும் பரிதவிக்கும்படியாய் அவர்களிடத்துள்ள பொருள்கள் எல்லாவற்றையும் கொள்ளையடித்துக்கொண்டு சீக்கிரமாகப்போய்விட்டார்கள். உடனே பரிசனங்களெல்லாரும் மிகுந்த கதறலோடு ஓலம் ஓலம் என்று முறையிட்டார்கள் [எ-று] 221

903

விரித்தசிர முங்கரமு மெலிவுதரு தளர்நடையுந்
தரித்தகோ வணவுடையுந் தாமுமாய் வருமெல்லை
பரிதவித்த பரிசனரைப் பார்த்திரங்கி யஞ்சலெனச்
சிரித்தரண மெரித்தபிரான் றிருமுருகேச் சுரமணைந்தார்.

[இ-ள்] மூன்று மதில்களையும் சிரித்து எரித்தபிரானாகிய சிவபெருமான் தலைமயிரையும் கைகளையும் விரித்துக்கொண்டும், தளர்ந்த நடையும் கோவண உடையுமாய் வருகின்ற காலத்தில் பரிதாபப்படத்தக்க பரிசனங்களைப்பார்த்து இரக்கமுற்றுப் பயப்படாதீர்கள் என்று சொல்லித் திருமுருகன் பூண்டியிலுள்ள கோயிலை அடைந்தார் (எ-று) 222

904

நீடாரும் புகழ்நிறைந்து நீணிலத்தி லுயர்ந்தோங்குங்
காடாரு முல்லைவனக் கடவுளார் தமைநினைந்து
பாடாத குறைதமியேன் பட்டதுபோ தாதோவென்
றேடார வெழுதுதமிழ் இசைப்பதிக மோதுவார்.

(இ-ள்) மிகுதியான புகழ் நிறைந்து விசாலமான இந்த உலகத்தில் மிகஓங்குகின்ற காடுகள் நிறைந்த முல்லை வனம் என்கின்ற திரு முருகன்பூண்டியிலுள்ள சிவபெருமானை நான் நினைந்து பாடாத குறையினால் நான் அடைந்த துன்பம் போதாதோ என்று ஏட்டில் எழுதும்படியான ஏழ் இசையோடுகூடிய தமிழ்ப்பதிகத்தை ஓதுவாராயினார் [எ-று] 223

905

விடுகொடுகு சிலைவேடர் விரகலா தனகூறி
யுடலிடைமொட் டெனக்குத்தி யுடுகூறை பறிகாணிவ்
விடமெனவெத் துக்கிருந்தீ ரெம்பிரா னீரேயென்
றடர்பதிகம் பாடினார் ஆலால சுந்தரனார்.

[இ-ள்] கொடுகுவெஞ்சிலைவடுகவேடுவர் என்கின்ற முதலோடுகூடிய திருப்பதிகத்தை தகுதியில்லாதவார்த்தைகளைக்கூறி

சரீரத்தில் மொட்டுருத்து உடுக்கின்ற வஸ்திரத்தைப் பறி என்று சொல்லி வழிபறிக்கு மிடமாகிய இவ்விடத்தில் ஏன் இருந்தீர் எம்பிரானீரே என்று திருப்பதிகத்தை ஆலால சுந்தரனார் பாடினார் [எ—று] 224

906

மூடியசெஞ் சடைமுடியீர் முருகவளம் பதியுடையீர்
கூடிவெகு மூர்க்கருடன் கொள்ளைகொண்ட பொருளல்ல
தேடுமலை வளநாடு புரந்தருளுஞ் சேரலர்கோன்
பாடுபெற வளித்தபொருள் பறிகொண்டீ ரெனப்பகர்ந்தார்.

[இ—ள்] தலையை மறைக்கின்ற சிவந்த சடைமுடியையுடைய திருமுருகன்பூண்டியாகிய வளம் பொருந்திய தலத்தையுடையவரே பலமூர்க்கருடன் கூடி கொள்ளைகொண்ட பொருளல்லவே யிப்பொருள் மலைநாட்டை இரட்சிக்கின்ற சேரமான்பெருமாள் தேடி எனக்குப் பெருமையாக கொடுத்த பொருளைப்பறித்துக் கொண்டீரே ஏன் என்று கூறினார் [எ—று] 225

907

இந்தவகை யிசைப்பதிக மிருமுறையுந் திருச்செவிக்கு
முந்தவுறச் சாத்தியபின் முறைகேட்போர் வடிவாகி
வந்தருளிப் பறிமுதலின் வருக்கமென்கொ லெனக்கேட்க
வுந்தியபொற் பண்டாரக் கணக்கறிவா னுரைசெய்வான்.

(இ—ள்) இந்தவகையாய் இரண்டுதடவையாகச் சிவபெருமானுடைய அழகிய காதுகளில் இசையோடுகூடியதிருப்பதிகத்தைச் சொல்லியபிறகு நியாயம் விசாரிக்கின்ற வடிவத்தையுடையோராய்ச் சிவபெருமான் வந்து பறிபோனபொருள் எவ்வளவென்று கேட்க பொக்கிஷப் பொருளின் கணக்கை அறிந்து அவரிடம் அமர்ந்திருப்பவர் சொல்வாராயினார் (எ—று) 226

908

மாடைபதி னாயிரம்பூண் மணிவடமா யிரமாகத்
தோடறுப துரைதாரந் தொண்ணூறு சுடர்கிரணம்
பாடகமெட் டேழ்பதக்கம் பத்திரட்டி விரலாழி
தேடரிய கேயூரச் செறிகடகச் சிறப்பொன்பான்.

(இ—ள்) பதினாயிரம் பொன்னு நவமணிமாலைகள் ஆயிரம் தோடுகள் அறுபது சொல்லப்பட்ட முத்துமாலைகள் தொண்ணூறு பிரகாசிக்கிற பாடகம் எட்டு பதக்கங்கள் ஏழு விரலுக்குப்போடு

கின்ற மோதிரங்கள் இருபது சேடமுடியாத கேயூரத்தோடு பொருந்திய சிறப்பையுடைய கடகங்கள் ஒன்பது (எ—று) 227

909

தோமறுமிந் திரகோபஞ் சூழுமுகிற் றுகினூறு
காமறுசந் தகில்பனிநீர் கருப்பூர மிவையென்று
ஞமளவிற் சிரமசைத்தே யறியார்போன் றதிசயித்துச்
சேமமுற வரவழைப்பார் சேரியுடனே கரவழைப்பார்.

(இ—ள்) குற்றம் இல்லாத இந்திரகோபப்பூச்சியின் நிறமுள்ள பட்டுக்களும் வெண்மையான மேகம்போன்ற வெண்மையான வஸ்திரங்கள் நூறு அழகிய சந்தனம் அகில் பனிநீர் கருப்பூரம் ஆகிய இவைகள் என்று கூறினார் இவ்வாறு சொன்னவுடன் தலையை யசைத்துத் தெரியாதவர்போல அதிசயப்பட்டு புத்திரனுடனே முதலையையும் வரவழைக்கும்படியான தன்மையையுடைய சுந்தரமூர்த்தியின்மேற் சொன்ன ஆடை ஆபரணங்களை வரவழைப்பார் ஆயினர் (எ—று) 228

910

கணங்க ளாகிய கானக வேடரைக் கசைகொடு கரம் வீக்கி
வணங்கு லாவிய சிரமிசை குழைமிசை வண்மலர் பலசூடிக்
குணங்கொ ளாவகை குரவையி னொலிசெய்து குமுறிடு துடியார்த்து
மணங்கொ டாதகி மாலிகை யார்திரு வாயிலின் வருவித்தார்.

(இ—ள்) வாசனை பொருந்திய ஆத்திமலர் மாலையை அணிந்த சிவபெருமான் தனது கணங்களைக் காட்டிலுள்ள வேடரைப்போல சரீரத்திற் கவசமணிந்து அழகுவிளங்குகின்ற தலையின் மேலுள்ள தழையின் மேல் வளப்பம் பொருந்திய பலமலர்மாலைகளைத் தரித்து அமைதியுண்டாகாதபடி பெருஞ்சத்தம்செய்து சப்திக்கின்ற உடுக்கையை அடித்துக்கொண்டு கோபுரவாயிலுக்கு முன்னே வரும்படி செய்தார் (எ—று) 229

911

வெள்வ ராகவல் லெயிறணி சேவகர் மெய்யருட் டிருவாக்குக்
கள்வ ரேதமிழ் வேதியர் கொணர்வுறு கலைகல னிதியெல்லாங்
கொள்வ தேனவை யாவையு நொடியினிற் கொடுவரு வீரென்னத்
தெள்வ ரோதுயச் சிவகண வேடுவர் செய்குது மென்றார்கள்.

(இ—ள்) திருமாலாகிய வெள்ளைப்பன்றியினது தந்தத்தை அணிந்த சிவபெருமானது உண்மைபொருந்திய கிருபையுள்ள திரு

வாக்கானது கள்வர்களே தமிழ்வேதியராகிய சுந்தரமூர்த்தி கொண்டுவந்த ஆடைகள் ஆபரணங்கள் செல்வங்கள் எல்லாவற்றையும் அபகரித்தது எதற்கு அவைகளையெல்லாம் ஒருநொடிப்பொழுதில் கொண்டுவருவீர்கள் என்று சொல்ல தெளிவையடைந்த மேன்மைபொருந்திய சிவ கணங்களாகிய வேடுவர்கள் அவ்வாறே செய்வோமென்றுசொன்னார்கள். [எ—று] 230

912

சிகர வண்குடு மித்தனிச் சினகரத் திருப்புறக் கடை சென்று
புகர் விளங்கிய பிறையெயிற் றடற்குறட் பூதங்கள் சுமைகோலி
நிகரில் செம்பொனின் கலனிறை பேழைக ணிரைகொடு வந்தெய்தப்
பகர் செழுந்தமிழ்ப் பாவல ராடினார் பாடினார் பயனுற்றார்.

[இ—ள்] வளப்பமான உச்சிச் சிகரத்தையுடைய கோயிலுக்கு வெளியேபோய் புள்ளிகள் பொருந்திய பிறைச்சந்திரன் போன்ற பற்களையுடைய குட்டையான வலிய பூதங்கள் சுமையாக ஒப்பில்லாத பொன்னாபரணங்கள் நிறைந்த பெட்டிகளை வரிசையாகக் கொண்டுவந்து சேர்ந்தவுடனே சொல்லக்கூடிய செழித்த தமிழ்ப் பாவலராகிய சுந்தர மூர்த்தி ஆடினார் பாடினார் செல்வமாகிய பயனை யடைந்தார் [எ—று] 231

913

ஆட ராவின ராறணி வேணியு மம்புலிச் சிறுபார்ப்புந்
தேடொ ணாவிரு சேவடி நீழலுஞ் செக்கர்மே னியுமார்புஞ்
சூட காபர ணுவதி பாகமுந் துலங்குற வெதிர் தோன்றி
வேட மாறிய சிவகண நாதர்கண் மிகுபணி விடைசெய்ய.

[இ—ள்] ஆடுகின்ற பாம்புகளை யணிந்தவராகியும் கங்காநதியைத் தரித்த சடையையுடையவராகியும் சிறு குழந்தையாகிய பிறைச்சந்திரனை யணிந்தவராகியும் பிரமவிஷ்ணுக்களால் தேடமுடியாத இரண்டு சிவந்தபாத நீழலையுடையவராகியும் சிவந்த திருமேனியையும் மார்பையுடையவராகியும் ஆபரணங்களையணிந்த உமாதேவியை ஒரு பாகத்திலுடையவராகியும் விளங்க அவருக்கு முன்னே வேடர்களாகி யிருந்து மாறிய சிவகணநாதர்கள் பணி விடைசெய்யக் காட்சி கொடுத்தார் [எ—று] 232

914

கண்ட சுந்தரர் கண்பொழி மாரியுங் காதலுங் கரைகாணார்
புண்ட ரீகமென் கரமலர் சிரமிசைப் புதுமுகை யெனநின்றார்
பண்டு நீர்தடுத் தாண்டுகொண் டருளிய பரிசினிற் பழுதுண்டோ
தொண்ட னேன்பெறும் பேறென மகிழ்ந்தனர் சோதியு மறைவுற்றார்.

[இ—ள்] தெரிசித்த சுந்தரமூர்த்தி கண்களிலிருந்து மழை போலச் சொரிகின்ற கண்ணீரும் அன்பின்கரையைக் காணுதவராய் தாமரைமலர்போன்ற மிருதுவான கைகள் சிரசின்மேல் கூம்பியிருக்கும்படி நின்றுர். முன்னமே தாங்கள் என்னைத் தடுத்தாட்கொண்டு அருள்செய்த தன்மையில் ஏதாவது பழுது ஏற்படுமா தொண்டனேனுகியயான் அடையும் பயன் பாக்கியமே என்று மகிழ்ச்சியடைந்தார் சிவபெருமானும்மறைந்துவிட்டார்(எ—று) 233

915

பத்தி சேர்முனைப் பாடிநன் ஞடுடைப் பங்கய மணிமார்பர்
சித்தி யாற்பெறு குறைவில்பண் டாரமுஞ் சிவிகையைப் பொறுப்பாரும்
வித்தி யாதரர் வீணைவல் லவர்சதுர் வேதிய ரனைவோரு
மொத்தி யார்த்தெழு சங்கமுந் தாளமு முடன்குண திசைபோந்தார்.

[இ—ள்] அன்பு பொருந்திய திருமுனைப்பாடி நாடராகி தாமரைமலர் மாலையை அணிந்த அழகிய மார்பையுடைய சுந்தரர் தன்னுடைய சித்தியினுல் அடைந்த குறைவில்லாத பொக்கிஷமும் சிவிகையைத் தாங்குகிறவர்களும் வித்தியாதரர்களும் வீணைவாசித்தலில் வல்லவர்களும் நான்கு வேதத்தில் வல்லவர்கள் யாவரும் எல்லோரும் சேர்ந்து சப்தித்து எழுகின்ற சங்கங்களும் தாளங்களும் முழங்க கீழ்த்திசையை அடைந்தார் [எ—று] 234

916

செய்தி யானருந் தேவரு முனிவருந் திகழ்திரு வாரூரை
யெய்தி யாதர வாகவன் மீகரை யேத்திமுத் தமிழ்பாடிப்
பொய்த காதபே ரின்பசு கோதயப் புணரியைக் கரைகண்ட
பெய்த பூண்முலைப் பிறைநுதற் பரவையார் பிறங்குமா ளிகைசார்ந்தார்.

[இ—ள்] தியானம் செய்கிறவர்களும் தேவர்களும் முனிவர்களும் விளங்குகின்ற திருவாரூரை யடைந்து அன்புடன் வன்மீகநாதரைத் துதித்து முத்தமிழும் பொருந்திய தேவாரத் திருப்பதிகத்தைப் பாடி பொய்பொருந்தாத பேரின்பமாகிய சுக சமுத்திரத்தின் எல்லையைக்கண்ட ஆபரணங்களை யணிந்த தனங்களையும் பிறைபோன்ற நெற்றியையும் உடைய பரவையாரது திருமாளிகையை அடைந்தார் [எ—று] 235

917

மதி விளங்கிய வதனபங் கேருக மலர்தர மடமாது
புதிய மஞ்சன மதுமல ரெதிர்கொடு பொற்பதார்ச் சனைபேணி
யதிர் சிலம்பொலி யிலகமுன் சென்றுபட் டாதனம் விரித்தேற்றி
யுதியர் பூபதி நன்மையோ வென்றுகேட் டுத்தர மொழிகேட்பார்.

[இ—ள்] சந்திரனைப்போல விளங்குகின்ற முகமாகிய தாமரை மலரும்படி மடமைக்குணம் பொருந்திய பரவையார் புதிய அபிஷேக தீர்த்தத்தையும் தேன்பொருந்திய மலர்களையும் எதிரே கொண்டுவந்து அழகிய பாதங்களை அர்ச்சித்து சப்திக்கின்ற சிலம்பின் ஒலியுண்டாகும்படி முன்னே சென்று பட்டு ஆசனத்தை விரித்து அதில் சுந்தரமூர்த்தியை அமரும்படி செய்து சேரமான் பெருமாள் சுகமாயிருக்கின்றாரா என்று வினவினர் [எ—று] 236

## 918

தேச ளாவிய சிந்தைய ரெந்தையார் சேரமான் றிருத்தோழர்
பேச வேறிலை யென்றுற வீக்கிய பெட்டகச் சிறைநீக்கி
யாசி லாதவ ரவர்க்களித் தருளிய வாடைபொற் கலனீந்து
நேச மாமவர் தன்மையு நன்மையு நீயுணர்ந் துகொளென்றார்.

(இ—ள்) ஞானஒளிசிறந்த மனத்தையுடையவரும் எம்முடைய பிதாவும் சேரமான் பெருமாளது அழகிய தோழராகவும் உள்ள சுந்தரர் சொல்வதற்கு வேறு ஒன்றுமில்லை யென்று பூட்டப்பெற்ற பெட்டியைத் திறந்து குற்றம் இல்லாத சேரமான் பெருமாள் தனக்குக் கொடுத்தருளிய வஸ்திரங்களையும் பொன் ஆபரணங்களையும் கொடுத்து அன்புபொருந்திய அவரது தன்மைகளையும் நன்மையையும் நீ அறிந்து கொள்வாய் என்று கூறினர் (எ—று) 237

## 919

பருவ மங்கையர் செங்கையில் வாங்கிய பலகல னணியுற்றார்
பொருவில் சுந்தரர் தந்திரு மேனியிற் பொற்பணி பலபூண்டா
ரிருவ ருந்தமி லொருவரை யொருவர்கண் டின்புறு சிலநாளிற்
செருவ ருஞ்சிலை வேந்தரை யெந்தலரார் திருவுளப் பிரிவாற்றார்.

(இ—ள்) தகுதியான வயதையுடையவராகிய பரவையார் தமது சிவந்த கைகளினால் வாங்கிய பல ஆபரணங்களையும் அணிந்துகொண்டார் அழகில் தனக்குச் சமானம் இல்லாத சுந்தரரும் தமது திருமேனியில் பொன்னாபரணங்களை அணிந்தார் இரண்டு பேரும் ஒருவரை ஒருவர்பார்த்து இன்பமாயிருந்தார்கள் சிலகாலத்துக்குப்பின் ஒப்பில்லாத விற்கொடியையுடைய சேரமான் பெருமானைச் சுந்தரமூர்த்தி பிரிந்திருத்தலைப் பொறுக்காதவராய் இருந்தார் (எ—று) 238

## 920

பணிகை யார்சை பாடிய வாயினர் பரவையார் திருவாரூர்க்
கணிகை யாருட னேவிளையாடிய காதலின் கடன் றீர்ந்தே
யணிகை யாநவ மாமணிவீர சிங் காசனத் தமர் தேவைத்
துணிகை யால்விடை கொண்டனர் தண்டமிழ்ச் சுந்தரப் பெருமானார்.

[இ-ள்] தமிழுக்குத் தலைவரும் சிவபெருமானை வணங்குகின்றவரும் பண்ணைப்பாடுகின்ற வாயையுடையவருமாகிய சுந்தரமூர்த்தி திருவாரூரில் உருத்திரகணிகையாகிய பரவையாருடனே ஆசையினது கடனுனது நீங்கி அழகிய நவரத்தினங்களால் இழைக்கப்பட்ட வீரசிங்காதனத்தில் அமர்கின்ற தியாகராஜப் பெருமானிடத்தில் துணிவாக விடைபெற்றுக்கொண்டார் [எ-று] 239

## 921

வேறு

தரவுடன் றுதிக்கை யோங்கித் தமிழ்மதம் பொழிந்து போதப்
பரவைதோய்ந் தெழுந்த பின்னர்ச் சங்கிலிப் பயில்வு நீங்கி
விரவிய மலைநா டுற்று வெள்ளானை யுடன்சென் றேறி
யுரவுசுந் தரமால் யானை யுய்ந்தவா றுரைக்க லுற்றும்.

[இ-ள்] உத்திரவுபெற்றுக்கொண்டு தோத்திரம் செய்தலில் உயர்ந்த பொருளோடு துதிக்கையைமேலே உயர்த்தி தமிழாகிய மதசலத்தைப்பொழிந்து சமுத்திரத்தில் முழுகியெழுந்தபிறகு பரவையாரை அனுபவித்தபிறகு சங்கிலியால் கட்டுப்படுதலினின்றும் நீங்கி மலைகளோடு பொருந்திய மலைநாட்டை அடைந்து வெள்ளானையோடு கயிலையங்கிரிக்குப் போய்ச் சேர்ந்த பலம் பொருந்திய சுந்தரமூர்த்தியாகிய பெரிய யானையானது மோட்சத்தை யடைந்த வாலாற்றைச் சொல்லுவோம் [எ-று] 240

## 922

போரவி யாகசாலை பிறங்குசோ ணாடு நீங்கி
யாரவி சாலமாக வகன்றகே ரளத்தை யெய்திச்
சேரவிண் ணுடர்போற் றுந் திருமுரு கேச மென்னுஞ்
சோர்விலா வேடர் சூழ்ந்த தொகுமுல்லை வனத்தில் வந்தார்.

[இ-ள்] தேவர்களுக்கு அவிர்பாகத்தை கொடுக்கின்ற யாகசாலைகளையுடைய விளங்குகின்ற சோழநாட்டை விட்டுநீங்கி மிக விசாலமாக இருக்கின்ற கேரளநாட்டை அடைந்து தேவர்கள் யாவரும் வந்து துதிக்கின்றதாயும் வீரத்தில்குறைவில்லாத வேடர்கள் சூழ்ந்து வசிக்கின்ற திருமுருகேசம் என்று சொல்லுகின்ற மிக அடர்ந்துள்ள முல்லை வனத்தை வந்தடைந்தார் [எ-று] 241

## 923

ஆறலை செய்யவல்லோ ரன்னமிட்டன் புகூர்ந்தங்
காறலை நிகழ்வதுண்டோ வாதலாற் பசிமேற் கொண்டு
தேறலை யொழிந்த வூரர் செயலறிந் தவர்சொன் மாலைத்
தேறலை நுகருங் காசித் திருவவி நாசி யெம்மான்.

[இ—ள்] வழிப்பறி செய்யவல்ல வேடர்கள் அன்புமிகுந்து அன்னமிட்டு உபசரித்தலைச் செய்வார்களோ செய்ய மாட்டார்கள் ஆகையினாலே சுந்தரமூர்த்தி மிகுந்த பசியாயிருத்தலை அறிந்த அவரதுபாடலாகிய தேனை உண்ணுகின்ற காசியின் கொழுந்தாயுள்ள அவிநாசித் தலத்தில் அமர்ந்திருக்கின்ற சிவபெருமான் [எ—று] 242

## 924

பூகவெண் படத்திற் போதப் பொதுளிய சம்பாவன்னம்
பாகமொன் றியசம் பாரப் பலகறிப் பொரியல் வாச
மாகவே நரந்த மென்கா யையவி கலந்த வூறல்
வாகமார் துவையல் வீக்கி வயங்குதோட் சேமஞ் செய்து.

[இ—ள்] பாக்குப்பாளையில் உள்ள பூவைப்போல நெருங்கிய சம்பாச்சாதமும் நல்ல பாகமாகச் சமைக்கப்பெற்ற சம்பாரங்களோடு பொருந்திய பல கறிகளும் பொரியல்களும் வாசனையையுடைய நாரத்தங்காய் ஊறுகாய் முதலிய ஊறுகாய்களும் நல்ல துவையல்களும் ஆகிய உணவுகளை யெல்லாம் விளங்குகின்ற தோளிலே பத்திரமாகக்கட்டி [எ—று] 243

## 825

கரதல கமண்ட லத்திற் கங்கைநீர் கவினத் தூக்கி
விரதவே தியர்போ னேரே விரைந்தெழுந் தருளி யந்தோ
பரதவித் திளைத்து வந்தீர் பாதேய முளது சற்றிங்
கிரதமின் றெனினு முண்பீர் பசிக்கின்ப மெய்து மென்றார்

[இ—ள்] கையிலுள்ள கமண்டலத்திலே கங்கா சலத்தை அழகுபெற நிறைத்துத் தூக்கிக்கொண்டு விரதங்களை அனுஷ்டிக்கின்ற பிராமணரைப்போல நேரே வேகமாகவந்து அய்யோ பரிதாபத்துடன் இளைத்து வந்திருக்கின்றீர் என்னிடத்திற் கட்டுச்சாதம் இருக்கின்றது கொஞ்சம் உருசி குறைந்திருந்தாலும் உண்ணுங்கள் பசிக்கு எல்லாம் இனிமையாகத்தான் இருக்குமென்று கூறினார் [எ—று] 244

## 926

ஆவதென் றங்ஙன் வைகி யாடையாற் றிரையுங் கோலி
மேவமு தளிக்க நம்பி விருப்பமுற் றமுது செய்தார்
பாவலர் மறையோர் மற்றைப் பலருக்கும் பகுத்த பின்னர்த்
தேவர்தம் பிரானார் கல்லிற் றிருக்கரந் தனைத் துடைத்தார்.

[இ—ள்] அப்படியே யாகட்டும் என்று அங்கு தங்கி சுற்றிலும் வஸ்திரத்தால் மறைத்து பொருந்திய உணவை வேதியர்கொடுக்க விருப்பத்துடன் திரு அமுது செய்தார் பாவலர்களுக்கும் பிராமணர்களுக்கும் மற்றுமுள்ள பலருக்கும் பங்கிட்டுக் கொடுத்தபிறகு தேவர்களுக்கெல்லாம் தலைவராகிய சிவபெருமான் அழகிய கைகளைக் கல்லில் தேய்த்துச் சுத்தம் செய்தார் [எ—று] 245

927

கறியமு திற்பல்காயங் கல்லிடைக் கரந்து காட்டுங்
குறியுல கறிவித் தாரைக் கொங்கில்வா ரணவா சிக்கு
நெறியெது வென்று கேட்ப நேர்குட திசைபோ வென்று
பிறிதிணை யில்லா வாய்மை பேசிநின் றொளித்தா ரன்றே.

[இ—ள்] கறிஅமுதில் பலகாயங்களும் கல்லில் மறைந்து தோற்றுகின்ற அடையாளத்தை உலகுக்குத் தெரிவித்த சிவபெருமானை நோக்கி கொங்கு நாட்டில் உள்ள காசியாகிய அவிநாசிக்கு வழியாதென்று சுந்தரர் கேட்க மேற்குத்திசையாகச் செல்லுங்கள் என்று சமானம் இல்லாத உண்மையைச் சொல்லி மறைந்துவிட்டார் [எ—று] 246

928

குறைந்த புன்மதியி னேற்குக் கொணர்ந்தமு தளித்தாய் போற்றி
யுறைந்தபுக் கொளிசென் றேற வுயர்நெறி யுரைத்தாய் போற்றி
மறைந்தவான் பொருளேபோற்றி வல்வினை மருந்தே போற்றி
நிறைந்தபே ரொளியே போற்றி போற்றியென் றுருகி நின்றார்.

[இ—ள்] குறைந்த அற்பபுத்தியையுடைய எனக்குக் கொண்டு வந்து திரு அமுதைக் கொடுத்தாய் போற்றி நீர் அமர்ந்திருக்கின்ற திருப்புக் கொளியூரையடைய உயர்ந்த வழியைச் சொன்னவரே போற்றி எனக்கு அமுது தந்துமறைந்த உயர்ந்தபொருளேபோற்றி கொடியதீவினைக்கு மருந்தாயுள்ளவரே நமஸ்காரம் எங்கும்நிறைந்த பெரிய பிரகாசமே போற்றி போற்றி யென்று உருகினார் உம்மை நமஸ்கரிக்கிறேன் என்று மனம் பரவசமடைந்து நின்றார் [எ—று] 247

929

வேறு

தேவர் வணங்கவி நாசியரன்பர சிவலோக
னேவல் செயுங்கண மாகிய சுந்தர ரிடமாய்நின்
றேவறு வெங்கர வார விழுங்கிய வொருபாலன்
மூவரு டஞ்செலு நாள்வர வுய்ந்தமை மொழிவாமால்

[இ—ள்] தேவர்கள் யாவரும் வணங்குகின்ற அவிநாசியில் உள்ள சிவபெருமான் மேலான சிவலோகத்தில் தொண்டு செய்தவராகிய சுந்தரமூர்த்தியிடத்திலிருந்து ஒழிவில்லாமல் கொடிய முதலை நிறையஉண்ட ஒரு பாலனை மூன்று வருடஞ் சென்றபிறகு வரவழைத்ததாகிய சரித்திரத்தைக் கூறுவோம் [எ—று] 248

930

தாரகை கொண்கன் சீதளவின்பந் தருநாடு
காரகில் சந்தந் தூய சுகந்தங் கமழ்நாடு
சேர னெடுஞ்செங் கோன்முறை யென்றுந் திகழ்நாடு
கேரள கொங்கப் பேர்பிர சங்கங் கிளர்நாடு.

[இ—ள்] நட்சத்திரங்களுக்கு நாயகனாகிய சந்திரனுடைய குளிர்ச்சியாகிய இன்பத்தையுடைய நாடு கரிய அகிற்கட்டைகளும் சந்தனக்கட்டைகளும் நல்ல வாசனைகமழும்படியான நாடு சேரனுடைய நீண்டசெங்கோல் முறையானது எப்பொழுதும் விளங்குகின்றநாடு கேரளநாடென்றும் கொங்குநாடென்றும் பெரிய சொற்பொழிவுகள் விளங்குகின்ற நாடாகும் [எ—று] 249

931

தடமுனி வன்று லுரையக லாமுத் தமிழ்நாடு
கடகரி யுங்கா னகமுமகலாத கவினாடு
குடகில் வருங்கா விரிபுகு வாரிக் கொழுநாடு
திடநிலை குன்று வடபரி சாரத் திருநாடு.

[இ—ள்] பெரிய தவத்தையுடைய அகத்தியமுனிவரது நாவிலிருந்து உண்டாகிய முத்தமிழ் முழக்கமும்நீங்காதநாடு மதத்தையுடைய யானைகளும் அவைகள் சஞ்சரிக்கின்ற அழகானகாடுகளும் நீங்காதநாடு குடகிலிருந்து உற்பத்தியாகி வருகின்ற காவிரியின் வெள்ளத்தால் செழிப்படைகின்ற மேன்மையுள்ளநாடு உறுதியான உண்மைநிலையினின்றுந் தவறாதவர்கள் வாழ்கின்ற வடபரிசாரம் என்கிற பெயரையுடைய அழகிய நாடாகும் [எ—று] 250

932

தூவி யனத்தன் சாபமனைத்துந் தொலைவாமூர்
தாவி யடர்க்குந் தாடகை முற்றுந் தவமேவூர்
காவி யலர்க்கண் பேரு நகப்பெண் கதிசேரூர்
பூவுலகிற்குந் தேவுலகிற்கும் பொதுவாமூர்.

[இ—ள்] அழகான சிறகுகளையுடைய அன்னவாகனன் ஆகிய பிரமனது சாபங்களையெல்லாம் போக்குகின்ற ஊர் எவ்விடங்களி லும் சென்று உயிர்களைக் கொல்லுகின்ற குணமுடைய தாடகை யின் தவம் முடிவடைதற்கேதுவாகிய ஊர் நீலோற்பல மலர் போன்ற கண்களையுடைய நாககன்னிகை முக்தியையடைந்தவூர் பூவுலகத்தாரும் தேவலோகத்தாரும் வந்து வணங்குதற்குப் பொதுவாக விளங்குகின்ற ஊர் [எ—று] 251

## 933

ஆகம முன்னங் கழறிய வாறே யமர்வாரூர்
பாகவ ரெண்ணம் பரவிய பூசா பலமாரூர்
சாகர மென்னும் பகிரதி கூபோ தயமாரூர்
காகமொ ரன்னம் பகருகை யாலே கணமாரூர்.

[இ—ள்] ஆகமங்களில் முதன்மையாகச் சொல்லப்பட்டபடியே நடப்பவர்கள் இருக்கின்றவூர் கடவுளைத் தோத்திரம் செய்பவர் களுடைய பூசையின் பலனைக் கொடுக்கின்றவூர் சமுத்திரம் என்று சொல்லத்தக்க கங்காகூபமானது உதித்து இருக்கின்றவூர் காகமா னது ஒரு சாதத்தைச் சிந்தினதாலே சிவகணத்தில் ஒருவராகச் செய்தவூர் [எ—று] 252

## 934

திக்குல கேழுஞ் சிதையினும் வாழ்விற் சிதையாவூர்
தக்கவு மாமின் றவமுயன் ஞானத் தனியோரு
ரெக்கதி யானுஞ் சிவகயி லாயத் தியல்பாரூர்
புக்கொளி யென்னுந் திருவவி நாசிப் புகழ்மூதூர்.

[இ—ள்] எட்டுத்திக்குகளோடுகூடிய எழுலகங்களும் அழிந்தா லும் வாழ்விற்குறையாதவூர் மேன்மைபொருந்திய மின்னற்கொடி போன்ற உமாதேவியார் தவத்தைச்செய்த ஒப்பற்ற ஞானஸ்தல மாகும் எவ்விதத்தினாலும் சிவபிரான் அமர்கின்ற கயிலாயத்தை ஒத்திருக்கின்றவூர் புக்கொளியூர் என்கின்ற திரு அவிநாசி யென் னும் புகழையுடைய பழமையான வூராகும் [எ—று] 253

## 935

நீவிய தண்புளி மாவொடு கூவிள நிரைநேராய்த்
தாவி நறுங்கனி காய்தொடை பாவிசை தரலாகிக்
காவிய மைந்திணை சேர வினம்பெறு கவியேற
நாவியல் விஞ்சையர் பாடனிகர்த்தது நள்ளாறு.

[இ—ள்] மேலான குளிர்ந்த புளிமாமரங்களோடு வில்வமரங் களையும் நேராக நீண்டு தளர்ந்து நல்ல கனிகளையும் காய்களையும் சேர்த்துக்கொண்டு வேகமாகச்சென்று சோலைகளிலும் முல்லை குறிஞ்சி மருதம்பாலை முதலிய ஐந்து நிலங்களிலும் பொருந்தவும் கூட்டமாகிய குரங்குகள் மரங்களில் மேலேறவும் நாவினில் வல் லமை பெற்ற புலவர்களின் பாடலை ஒத்திருப்பது நள்ளாறு என் னும் நதி இது ஆற்றிற்கும் புலவர்களதுபாடலுக்கும் உவமை தேமாபுளிமாகருவிளம் கூவிளங்காய்ச்சீரும் கனிச்சீருங்கலந்து தொடைபா இனங்களோடு பொருந்தி ஐந்திணை வளங்களையும் கூறுகின்ற கவிகளையொத்துள்ளது [எ—று] 254

## 936

நேரிய கொம்ப ரொசிந்தன சிற்றிடை நிமிர்தோள்வேய்
தோரிய கொங்கை குரும்பை மிதப்பன சுழிநாபி
வாரிய கண் கயல் கொண்டுயர் புக்கொளி மணிவீதி
நாரியர் பந்தி நடப்பன வொத்தது நள்ளாறு.

(இ—ள்) நேர்மையான கிளைகள் அசையும்படியும் கொடிகளை யும் உயர்ந்த தோள்களாகிய மூங்கிலையும் அசைகின்ற கொங்கை களாகிய குரும்பைகள் மிதக்கவும் நாபியாகிய நீர்ச்சுழிகளையும் நீண்டகண்களாகிய கயல்மீன்களையும் உந்திக்கொண்டு வருவது திருப்புக்கொளியூரில் உள்ள அழகிய வீதிகளில் பெண்கள் வரிசை யாக நடப்பதை ஒத்துள்ளது நள்ளாறு என்னும் நதி செல்லுதல் [எ-று] 255

## 937

துன்றக் கமுகஞ் சுரிசங் கமுகந் தொகுமேதி
கன்றிற் கனிபால் கதலிக் கனிபால் கழுநீரை
யொன்றித் துகளே யுறுபோ துகளே யொழியாத
மன்றற் பலவே வளமும் பலவே வயலெல்லாம்.

(இ—ள்) அங்குள்ள எல்லாவயல்களிலும் பக்கத்திலும் பாக்கு மரங்கள் அடர்ந்தும் சுருங்கிய முகத்தையுடைய சங்குகள் அதி கரித்தும் கூட்டமாகிய எருமைகள் கன்றை நினைத்துச் சொரி கின்ற பாலும் வாழைப்பழங்களும் மகரந்தப்பொடிகள் பொருந்திய செங்கழுநீர் மலர்களும் வாசனை நீங்காமல் உள்ளன பலாமரங்களே எங்கும் உள்ளன இவ்வாறான வளங்கள் பலவும் அந்நகரில் அமைந் துள்ளன (எ—று) 256

938

பூங்கா வனமே புல்கா வனமே புணர்பேடை
நீங்கா வடையே நிழல்கா வடையே நிறைபுன்னைப்
பாங்கே தகையே படர்கே தகையே பயில்பொய்கை
யாங்கா மறுகா வணிபோ மறுகா லடர்நெய்தல்.

(இ—ள்) அந்நகரில் பூஞ்சோலைகள் எங்கும் நிறைந்துள்ளன ஆண் அன்னங்கள் பெண் அன்னங்களுடன்சேர்ந்து முட்டையிட்டு அடை காத்து நீங்காமல் உள்ளன. இலைகள் நிறைந்த புன்னைமரச் சோலைநீழலில் பக்கத்தில் அழகான பூக்களையுடைய தாழை மரங்கள் அடர்ந்த பொய்கையில் அச்சோலையே வழியாகச் சென்று வண்டுகள் நெருங்கிய அல்லிமலர்களை அடையும் (எ—று) 257

939

செந்தா மரையே செறிதா மரையே திகழ்வேத
நந்தா வணமே நவிலா வணமே நலமாதர்
பந்தா டலையே படர்தா டலையே பணிவார்மென்
மந்தா நிலமே வலிதா நிலமே மறுகெல்லாம்.

(இ—ள்) சிவந்த தாமரை மலரில் அமர்ந்திருக்கிற ஒளிபொருந்திய பிரமதேவரால் விளக்குகின்ற நான்கு வேதங்களையும் குறையாமல் சொல்லுகின்ற இடமே எங்கும் உள்ளனவாயும் வீதிகளிலெல்லாம் அழகிய பெண்கள் பந்து ஆடுதலுக்குச் செல்லுதலும் மிருதுவான தென்றற் காற்று மிகுதியாக வீசுகின்ற இடமாகவும் இருக்கின்றன (எ—று) 258

940

வேதக் கொடியார் விரதக் கொடியார் மெயுநாடார்
சீதத் துளவே திடர்மீ துளவே சிறுபால
ரோதற் கிடையா யொலிதங் கிடையா யுணர்ஞானப்
போதக் கலையும் புலர்வெண் கலையும் பொலிமுன்றில்.

[இ—ள்] வேதத்தைக் கொடியாகவுடைய பிராமணர்கள் செய்தற்கரிய விரதத்தைச் செய்தலால் சரீரத்தையும் பொருளாக நினையார், குளிர்ச்சியுள்ள துளசி வனங்கள் மேட்டு நிலங்களில் உள்ளனவாயும் சிறிய பிள்ளைகள் வேதம் ஓதுதற்குரிய இடம் எல்லாம் சப்தம் நிறைந்துள்ளன. அறியும்படியான ஞான போதத்தை உண்டு பண்ணும் சாஸ்திரங்களும் புலரும்படியான வெள்ளை வஸ்திரங்களும் முற்றத்தின் கண்ணே விளங்குவனவாயும் [எ—று] 259

941

நீசம்புரியார் நிகழன் புரியார் நிறைசாலை
பூசுங்கனகம் பொருவுங் கனகம் மதுமாடம்
பாசம்பதியும் பசுவும் பதியும் பரிசொன்றாய்த்
தேசம் பரவும் சிவநூல்பரவுந் திருவாயில்.

[இ—ள்] கீழான காரியங்களைச்செய்யாதவர்களும் (உண்டாகக் கூடிய) அன்புடையவர்களும் நிறைந்த சாலைகளும் பூசப்படுகின்ற பொன்னையொத்து விளங்குகின்ற பிரகாசமான புதிய உப்பரிகைகளும் நிறைந்தனவாயும் அன்புபதிந்த பதியாகிய கடவுளும் பசுவாகிய ஆன்மாவும் ஒன்றாகுந் தன்மையைச் செய்யவல்ல உலகம் துதிக்கின்ற சைவ நூல்கள் அழகிய இடங்கள்தோறும் பரவியுள்ளனவாயும் [எ—று] 260

942

வேறு.

அருமுனி வோருறை குகைமட மாளிகை யணியோர்பா
லிருமையி னொலொரு தமிழறி வார்கட மிடனோர்பா
லொருமுத லாகிய பொருளவி நாசியு ளுரவோன்முன்
றிருமுறை யோதிய பெருமறை வேதியர் தெருவோர்பால்.

[இ—ள்] சிறந்தமுனிவர்கள் வசிக்கின்ற குகைகளும் மடங்களும் மாளிகைகளின் வரிசைகளும் ஒருபால் அமைந்துள்ளன. பெருமையினால் ஒப்பற்ற தமிழை அறிந்த புலவர்கள் வசிக்கின்ற இடம் ஒரு பக்கத்தில் அமைந்துள்ளனவாயும் அவிநாசியின் கண் அமர்ந்துள்ள ஒப்பற்ற முதற்கடவுளாகிய சிவபெருமான் சந்நிதிமுன் அழகாக முறைவைத்து ஓதப்படுகின்ற பெரிய வேதங்களையுணர்ந்த பிராமணர்கள் வீற்றிருக்கின்ற தெரு ஒரு பக்கத்தில் அமைந்துள்ளதாயும் இருந்தன [எ—று] 261

943

அந்நீர் மையினால் வாழுமநேகரு ளமர்வேதந்
தன்னீர் மையினோ லோதிய கங்கா தரனென்பான்
முந்நீர் விடமுண் டருளவி நாசியின் முதல்வோனைப்
பன்னீ ரயனஞ் சந்ததி வேண்டிப் பரிவுற்றான்.

[இ—ள்] அத்தன்மையாக வாழுகின்ற பல பிராமணர்களுக்குள் வேதத்தை நன்றாக ஓதிய கங்காதரன் என்கின்ற பிராமணன் முன் சமுத்திரத்திலிருந்துண்டான விஷத்தையுண்டு தேவர்களைக் காத்த அவிநாசியில் அமர்ந்த கடவுளைப் பன்னிரண்டு அயனமாகிய

ஆறுவருடகாலம் புத்திரனை அடையவேண்டி அன்போடு தவம் செய்யலானான் [எ—று] 262

944

எந்தை வலத்தே யிலகு மிடத்தே யினிதாருஞ்
சுந்தர ஞானக் கருணை யெனுந்தாய் துணைசெய்தே
யுந்திப் வேதப் பதுமை வயிற்றா டுயிரொன்றை
யந்தமு மாதியு மொன்று மிலாதவ ளமைவித்தாள்.

[இ—ள்] எமது பிதாவாகிய சிவபெருமானது வலத்திலும் இடத்திலும் அமர்கின்றவரும் ஆதியும் அந்தமும் இல்லாதவருமாகிய அழகிய ஞானமயமாகிய கருணையச்செல்வி அப்பிராமணனது பத்தினியாகிய பதுமையை ஒத்த பெண்ணினது வயிற்றில் கருவுண்டாகும்படி செய்தாள் [எ—று] 263

945

பன்மினி யங்கம் பசலை யரும்பிப் பணியொல்கிப்
பொன்முலை யின்கட் கருமை பொருந்திப் புடைவீறி
நன்மதி பத்துஞ் சென்றுள காலையி னமன்வாழ்வைப்
பின்மு னியற்றுங் குழவியை நேரே பெறுற்றாள்.

[இ—ள்] பத்மினியாகிய அந்தப் பிராமண ஸ்திரீ சரீரத்தில் வெளுப்பு நிறம் அடைந்து வேலை செய்வதற்கு வருந்தி பொன் போன்ற ஸ்தனங்களின் கண் கருநிறம் வரப்பெற்று பக்கமெல்லாம் கனத்தை யடைந்து நன்மையாக பத்து மாதமும் சென்றபின் எமன் உயிர்வாழ்ந்திருத்தலை முன்னும் பின்னும் செய்தற்குக் காரணமாகிய குழந்தையைப் பெற்றாள் [எ—று] 264

946

சாதக மைந்தன் றாய்மடிமீதே தவழ்போது
பேதமி லாநம் புக்கொளி வாழ்வின் பெயர்கூறி
மேதக வன்னஞ் சௌள மெனுஞ்சீர் விதிபேணிப்
போத வளர்ந்தே வயதொரு நாலும் புகலானான்.

[இ—ள்] குழந்தையானவன் உதவியாயுள்ள தாயின் மடியில் தவழ்ந்து கொண்டிருக்குங் காலத்தில் வித்தியாச மில்லாத நம்முடைய புக்கொளியூரில் உள்ள சிவபெருமான் பெயராகிய அவிநாசி லிங்கம் என்னும் பெயரை வைத்து மேன்மைபொருந்திய அன்னப் பிராசனம் சௌளம் முதலியவைகளை விதிப்படி செய்து கிரமமாக வளர்ந்து நான்கு வயதையடைந்தான் [எ—று] 265

947

அன்றை யிராவுண் டன்னை பிதாவுங் களிகூர
வென்று மிலாதோர் சோபன மாமின் னிசைபாடித்
தென்றமிழ் பாடிச் சீர்பொழி வேதச் சிறுகன்று
மென்றளி மத்தே கண்டுயில் கின்றான் விதியோரான்.

[இ-ள்] ஐந்தாம் வயதின் தொடக்கத்தன்று இரவில் சாப்பிட்ட பின் தாயும் தகப்பனும் மகிழும்படி என்றுமில்லாத நன்மையாகிய இனிய இசையைப்பாடி, தென்தமிழ்ப் பாடல்களைப் பாடிக்கொண்டு சிறப்புமிகுந்த பிராமணப்பையன் மெதுவான மெத்தையிலே தன் விதியை நினைந்துகொள்ளாமல் தூங்கினான் [எ-று] 266

948

கங்கு லெனுந்திண் காரிருள் வெல்லக் கடனுமே
யிங்கிரு வோர்நெஞ் சுறுதுய ராகிய விருளூற
னங்கட னன்றே யென்று நெடுந்தேர் நடுவேறி
வெங்கதிர் நாதன் வேலையின் மீதே வெளிநின்றான்.

[இ-ள்] இரவு என்கின்ற வலிய கரிய இருளை வெல்லுதல் நம்முடைய கடமை. இவ்விடத்தில் இப்பையனுக்குப் பெற்றோர்களாகிய இருவருடைய மனதில் உண்டாகிய துன்பமாகிய இருட்டைப் போக்குதல் நம்முடைய கடமையல்லவா என்று நீண்ட பெரிய தேரின் நடுவில் ஏறி கொடிய உஷ்ணகிரணத்துக்குத் தலைவனாகிய சூரியன் சமுத்திரத்தின்மேல் (வெளியாகத்தோன்றினான்) வந்து உதயமானான் [எ-று] 267

949

முதுமறை யோதுந் தலைமைய னவான் முதன்முன்றி
லெதிரக மாமந் தணனொரு வன்பே றிளமைந்தன்
கதிருத யஞ்செய் காலையின் வந்தச் சிறுகன்றைக்
குதிகொடு தாவித் துணைவிளை யாடக் கொடுசென்றான்.

[இ-ள்] இவர்கள் வீட்டுக்கு எதிர் வீட்டில் பழமையான வேதங்களை யோதும் ஒரு பிராமணன் பெற்ற பிள்ளை சூரியன் உதிக்கின்ற காலையிலே வந்து இந்தச்சிறு பையனைத் தன்னுடனே தாவிக் குதித்து விளையாடக் கூட்டிக்கொண்டு போனான் [எ-று] 268

950

ஆவலு டன்றாய் பாயலுயின்றே யமர்போது
கோவெதிர் கன்றின் சோர்வு கனாவிற் குறிகண்டாள்
ஏவல் மிகுந்தே யில்லெழல் கண்டா ளெழுகாலை
தீவரல் கண்டாள் வாகுவலத்தே தெறிகண்டாள்.

[இ-ள்] இப்பையனுடைய தாய்பாயில் ஆசையுடன் தூங்கும் போது பசுவின் முன்னால் கன்று சோர்ந்து நிற்கும்படி கனவு கண் டாள், வேலை மிகுதியாயிருத்தலினால் காலையில் எழுந்திருக்கும் போது செருப்பு எடுத்துக்கொண்டு ஒருத்தி வருதலைப் பார்த்தாள் வலது தோள் துடிப்பதையும் அறிந்தாள் [எ-று] 269

951

ஆதலி னாலே முன்றில் விளக்கா ளயலேகாள்
போதலர் தாவுந் தண்கரை போகாள் புனலாடாள்
காதர மேகொண் டாதர வூமன் கனவாகிப்
பாதக மேதோ வென்று பெருந்தாய் பயமுற்றாள்.

[இ-ள்] குழந்தையைப் பெற்ற தாயானவள் ஊமன் கண்ட கனவைப்போல பயத்தையடைந்து அச்சத்தினாலே முற்றத்தைக் கூட்டவில்லை. பக்கங்களிற் போகாமலும் புஷ்பங்கள் இருக்கின்ற சோலைகள் குளக்கரைக்குப் போகாமலும் தீர்த்தம் ஆடாமலும் இருந்தாள் [எ-று] 270

952

ஏதுகொ லன்னே யென்னுயி ரென்று மிளமைந்தன்
போதுத யம்போ யின்னமும் வந்தே புகல்காணேன்
றீதுவிளைந்தா லென்செய்து மென்பாள் சிலநேரங்
காதலர் பின்போய் மீளுவ மென்றே கண்ணுற்றாள்.

[இ-ள்] என்னுயிருக்குச் சமமான சிறுபையன் காலையிலே போனவன் இன்னமும் வந்து சேரக்காணேன் கெடுதல் விளைந் தால் என்ன செய்வோம் என்று சொல்லுவாள் துணைவரோடு சென்று பல விடங்களிலும் தேடி வருவோம் என்று நினைத்தாள் [எ-று] 271

953

பேரி முழங்குங் கோயிலின் முன்பும் பிறவீதிச்
சேரி மருங்குந் தோரண மல்குந் தெருவெங்குஞ்
சாரி நடந்துந் தேடிய நெஞ்சந் தரியாளா
யேரி குளந்தண் கூபதடஞ்சா ரிடை சென்றாள்.

[இ-ள்] பேரிகைகள் சப்திக்கின்ற கோயிலுக்கு முன்னும் மற்ற வீதிகளிலும் பக்கத்திலுள்ள சேரிகளிலும் தோரணங்கள் கட்டிய தெருக்களிலும் வழி நடந்து தேடியும் மனம் தரியாதவ ளாய் ஏரி, குளம், குளிர் கிணறுகள் முதலிய இடங்களிலும்சென்று தேடினாள் [எ-று] 272

954

வண்டலர் தாமப் புதுமலர் கொய்தே வருவீர்காள்
கொண்டலை தாவும் பொய்கை யுளேநீர் குடைவீர்காள்
புண்டர நீறிட் டரிய தியானம் புரிவீர்காள்
கண்டிலி ரோவென் புதல்வனை யென்றே கவல்கின்றாள்.

[இ—ள்] மாலைகள் கட்டுவதற்கு வண்டுகள் மொய்க்கும்படியான புதிய மலர்களைப் பறித்து வருகின்றவர்களே, அலைகள் மோதுகின்ற குளங்களில் நீரில் முழுகுகின்றவர்களே நெற்றியில் மூன்றுகீறாக விபூதி தரித்து அரிய கடவுளைத் தியானம் செய்கின்றவர்களே என் புதல்வனைக் கண்டீர்களா (இல்லையா) என்று மனம் வருந்துகின்றாள் [எ—று] 273

955

தேடி யுழன்றே செங்கை விரித்தே செழுமேனி
வாடி யலைந்தே வண்மை குலைந்தே மருள்வாண்முன்
கூடி யிணைந்தே போயின பாலன் குறுகுற்றா
னாடிய மைந்தா வென்மக னெங்கே யுரையென்றாள்.

[இ—ள்] தேடி அலைந்து சிவந்த கைகளை விரித்துக்கொண்டு செழிப்பான சரீரம் வாடி வளப்பம் கெட்டு வருகிறவள்முன் இப்பையனைக் கூட்டிக்கொண்டு போனவனாகிய பையன் எதிரே வந்தான் வருந்திய மைந்தனே என்னுடைய பிள்ளை யெங்கே சொல் வாயென்று கூறினாள் [எ—று] 274

956

அவ்விள மைந்தன் குளமத கின்பா லறனூடே
செவ்விரு ந்தோ மப்பொழு தேதோ தெரியாது
வெவ்வுகல் வாயால் வெண்ப லுறைத்தே விசைதாவிக்
கவ்வி விரைந்தே போயினதென்றே கனிவுற்றான்.

[இ—ள்] அச்சிறுபையன் குளத்தின் மதகில் வருகின்ற தண்ணீரைப் பார்த்துக் கொண்டிருந்தோம் அப்பொழுது ஏதோ ஒரு பிராணி கொடிய பெரிய வாயினால் வெண்மையான பற்கள் அழுந்தக் கடித்து வேகமாகத் தாவிக் கவ்விக்கொண்டு விரைந்துபோயிற்று அது என்ன பிராணி என்று தெரியாது என்று கூறினான் [எ—று] 275

957

பாதிசொன் முன்னே தீது படுந்தாய் படர்மார்பின்
மோதி யறைந்தாண் முச்சி பறித்தாண் முரணேமி
மீதில் விழுந்தாண் மேனி யுலைந்தாள் விழிநீரால்
யாது நனைந்தா ளிவ்வகை நைந்தா ளென்செய்வாள்.

[இ—ள்] அதைப்பாதி கேட்பதற்கு முன்னே வருந்திய தாய் விசாலமான மார்பில் மோதியறைந்து கொண்டாள் உச்சிமயிரைப் பறித்தாள் பலமுள்ள பூமியில் விழுந்தாள் சரீரம் நடுங்கினாள், கண்களினின்று வருகின்ற நீரால் உடம்பு முழுதும் நனைந்தாள் இவ்வகையாய் மனம்நைந்து போனாள் வேறு என் செய்வாள் [எ—று] 276

958

பருவரல் கொண்டோர் பாவியிருந்தே பழியானேன்
றெருவழி யெங்கே தேடுவ தெங்கே திசையெங்கே
கருவுல மேயென் கண்மணி யேசெங் கழுநீரே
வருவது காணே னெவ்வுழி சென்றாய் மகனேயோ.

[இ—ள்] ஒரு பாவியாகிய நான் துன்பங்கொண்டு பழியை யடைந்தேன் எந்தத்தெருவில் எந்தத்திசையில் தேடுவேன் என்னுடைய பொக்கிஷமே என்கண்மணியே செங்கழுநீரே நீ வருவதைக்காணேன் என் மகனே நீ எவ்விடம் சென்றாயோ என்றாள் [எ—று] 277

959

கன்னலி னீரே கற்பக மேமென் கனிதேனே
பொன்மலர் மேவும் புதுமண மேயென் பொருளேயோ
மின்னொளி போலே நின்று மறைந்தாய் வினையேனிங்
குன்னை யலாதே யின்னு மிருந்தே யுய்வேனோ.

[இ—ள்] கருப்பஞ்சாறே என் கற்பகமே மிருதுவான பழமே தேனே புதுமையான வாசனையோடு கூடிய பொன்மலரே என் பொருளே மின்னலின் பிரகாசம்போல் சீக்கிரத்தில் தோன்றி மறைந்தாய் தீவினையையுடைய யான் உன்னையல்லாமல் இனிமேலும் இருந்து உயிர்வாழ்வேனோ என்றாள் [எ—று] 278

960

தாய்படு பாடுந் தந்தை வருத்தந் தகுபாடு
நீயடர் கண்ணா லெதிரெதிர் காணா நெறிபோந்தாய்
காய்படர் காலன் கைபட வேவெங் கரவின்பேழ்
வாய்படு போதங் கெவ்வகை பட்டாய் மணியேயோ.

(இ—ள்) உன் தாயாகிய நான் படுகின்ற துன்பமும் தகப்பனார் படுகின்ற துன்பமும் நீ உன் நெருங்கிய கண்ணால் காணாதவழியில் போய்விட்டாய் கோபிக்கின்ற இயமன்கையில் அகப்படுவதற்கு

கொடிய முதலையின் பெரியவாயில் நீ அகப்படும்போது எவ்வகைப் பட்டதுன்பத்தை அடைந்தாயோ என் கண்மணியே (எ—று) 279

## 961

இற்கடை போகாய் பிறர்மனை செல்லாய் எனைநீங்காய்
பொற்கல னூடே பேரழகாகிய பூமேனி
கற்குவை போலுங் கொடிய கராவின் கடினக்கூன்
பற்கு ணெருங்கும் போதெவ் வாறு பதைத்தாயோ.

(இ—ள்) வீட்டுக்குப்பின் பக்கத்திலும்போகமாட்டாய் அன்னியர்கள் வீட்டுக்கும் செல்லாய் என்னை விட்டும் நீங்காய் பொன்னுபரணங்களுடனே மிக அழகாக விளங்குகின்ற மிருதுவாகிய உன் சரீரம் கற்குன்றுபோலக் கொடிய முதலையின் வலிமையான வளைந்த பற்களுக்குள் நெருங்கி அகப்படும்போது எப்படித் துடிதுடித்தாயோ (எ—று) 280

## 962

பாலமு துண்டே வீசுகை யெங்கே பணியெங்கே
ஓலமி டுஞ்சீர் வாய்மல ரெங்கே யுர மெங்கே
மேலை மருங்கே தூளி யணைந்தே விளையாடுங்
காலழ கெங்கே பாலனை யெங்கே காண்பேனே.

(இ—ள்) பாலாகிய அமிர்தத்தை உண்டு கைவீசி நடத்தல் எங்கே உன் ஆபரணங்கள் எங்கே சப்திக்கின்ற மலர்போன்ற உன் வாய் எங்கே வீதிகளில் போய் புழுதியோடு விளையாடுகின்ற உன் கால் அழகெங்கே என் பாலனை எவ்விடத்தில் காண்பேன் [எ—று] 281

## 963

சுந்தர மெங்கே தோளிணை யெங்கே துவர்வாயான்
முந்துசொ லெங்கே செங்கமலம் போன் முகமெங்கே
வந்திசை யெங்கே தண்டர ளஞ்சேர் வடமெங்கே
கந்தர மெங்கே மைந்தனை யெங்கே காண்பேனே.

(இ—ள்) உன் அழகு எங்கே இரண்டுதோள்கள் எங்கே சிவந்த வாயினால் சொல்கின்ற வார்த்தை எங்கே செந்தாமரை போன்ற முகம் எங்கே என்னிடம் வந்து பாடுதல் எங்கே குளிர்ந்த முத்து மாலை எங்கே கழுத்து எங்கே இவ்விதம் என் பிள்ளையை எங்கே காண்பேன் (எ—று) 282

964

என்று பெறுந்தாய் நின்று தளர்ந்தா ளிளைதாய
கன்றை யிழந்தா வொன்று படுஞ்சோ கமதானு
ளன்றியும் வந்தோர் சென்றவர் கண்டோ ரனைவோருந்
தூன்றிய சந்தா பங்கொடு நைந்தார் துயரானார்.

[இ-ள்] பெற்றதாய் இவ்வாறு புலம்பி நின்று தளர்ச்சியை அடைந்தாள். இளைய கன்றுக்குட்டியை இழந்த தாய்ப்பசு அடைகின்ற சோகத்தை அடைந்தாள் அல்லாமலும் அங்குவந்தவர்களும் போனவர்களும் கண்டவர்களும் கேட்டவர்களும் மனம் நைந்து துன்பப்பட்டார்கள் [எ-று] 283

965

வழுவா மறையோன் வந்து புகுந்தான் மதிகுன்றிக்
கொழுவாழ் வரசே கோகோ வென்றான் குலைவுற்றான்
தழுவா நின்றார் உடனிரு வோருந் தனிமூலத்
தெழுவான் மேவுங் கோபுர வாயிற் கெதிர்சென்றார்.

[இ-ள்] வேதவிதி தவறாத பிராமணர் வந்து சேர்ந்தார் தன் புத்திகெட்டு செழிப்பாய் வாழ்ந்த என்னுடைய அரசே கோ கோ என்று கதறினான் மனம் கடுங்கினான் மனைவியும் தானும் சேர்ந்து கொண்டு ஒப்பற்ற முதற்பொருளாகிய சிவபெருமான் வீற்றிருக்கின்ற ஆகாயத்தையளாவிய கோபுரவாயிலுக்கு எதிரே போனார்கள் [எ-று] 284

966

இறைவா சிவதா வெந்தாய் சிவதா விளவேணிப்
பிறையாய் சிவதா பித்தா சிவதா பெறுகண்டக்
கறையாய் சிவதா காசியி லொன்று கமவேத
முறையாய் சிவதா சிவதா வெனவே முறையிட்டார்.

[இ-ள்] இறைவனே சிவதா எம்முடைய பிதாவே சடையில் இளம் சந்திரனைத் தரித்தவரே பித்தரே கண்டம் கறுத்தவரே காசியோடு பொருந்திய வேதாகமங்களால் புகழப்பட்டவரே சிவனே சிவனே என்று முறையிட்டார்கள் ]எ-று] 285

967

முக்கணுளானே முழுமுதல் வாழ்வே முறையோநேர்
தெக்கண காசித் திருவவி நாசிச் சிவனேயோ
புக்கொளி யானே நின்றிரு நாமம் புனைபாலன்
இக்கொலை சாரத் திருவுள மோவென் றிடருற்றார்.

[இ—ள்] மூன்று கண்களையுடையவனே முழுமுதலாகிய பொருளே முறையோ தெக்ஷிணகாசிஎன்னும் திரு அவிநாசியில் உள்ள சிவனே திருப்புக்கொளியூரில் உள்ளவனே உன்னுடைய அழகிய பெயரைத் தரித்த சிறுபையன் இந்தக்கொலையைப் பொருந்தத் திருவுளச் சம்மதமோ என்று சொல்லித் துன்பத்தை அடைந்தார்கள் [எ—று] 286

968

வருண முடைத்தாய் மதலை யளித்தாய் வளர்வித்தாய்
இருணம னொப்பா முதலை விருந்தா மிரையீந்தாய்
தருண பதத்தாய் மதிவத னத்தாய் தரைவாழக்
கருணை படைத்தாய் தாய்நீ யாயுங் கனியாதாய்.

[இ—ள்] மேலாம் வருணத்தில் குழந்தையைக் கொடுத்தாய் வளரும்படியும் செய்தாய் கரிய எமனை யொத்த முதலைக்கு விருந்தாகிய உணவைக் கொடுத்தாய் முத்தியை அளிக்கவல்ல திருவடியை உடையவனே சந்திரன்போன்ற முகத்தையுடையாய் இவ்வுலகில் உள்ளவர்கள் வாழும்படி கருணையைச் செய்கின்றவனே நீதாயாயிருந்தும் சிறிதும் எண்ணவில்லையே [எ—று] 287

969

நின்றனை யென்றே நெஞ்சல மந்தோர் நெறிநாடி
யொன்று கருத்தால் யோக சமாதியி லுறைவோர்கள்
கன்று மனத்தாய் பின்பெறு செல்வங் காண்பாரார்
நன்றிது நாமே காணுது மென்றார் நகைசெய்தார்.

[இ—ள்] மனம் மயங்கியவர்கள் உன்னை ஒரே தன்மையாக நாடி, பொருந்திய கருத்தினால் யோகநிஷ்டையிலிருப்பவர்கள் வருந்துகின்ற மனத்தையுடையவராயிருந்து பின் அடைகின்ற பாக்கியத்தைப் பார்க்கிறவர்கள் யாரிருக்கிறார்கள் நன்மையாக நாமேதான் இத் துன்பத்தைக் காண்போமென்று சிரித்தார்கள் [எ—று] 288

970

கதிரவன் மேலைக் கடல்புகு நேரங் கண்ணாறு
ளெதிர்மறை யோதுந் தலைவ னுடன்போ யில்புக்கா
ளதிர வெமலிந்தா ளன்ன மருந்தா ணந்நாண்முன்
முதிரலை தாவுந் துயரி லுழந்தாண் மூவாண்டு.

[இ—ள்] சூரியன் மேலைக்கடலில் விழுகின்ற மாலைப்பொழுது வரையில் கண்ணீர் ஆறுபோல் வடிக்கின்றவள் எதிரே வேதத்தை

யோதுகின்ற கணவனோடு சென்று வீட்டை அடைந்தாள் மிகவும் மெலிந்தாள் சாதத்தைச் சாப்பிடமாட்டாள் அந்நாள் முதலாக மிகுந்த அலைகள் தாவுகின்ற கடல்போன்ற துன்பத்தில் மூன்று வருடகாலம் வருந்தினாள் [எ—று] 289

## 971

துணைவிளை யாடுஞ் சுதன்வய தேழாய்த் தொகுவோர்கள்
பிணையுரி முந்நூல பெய்துற வென்றே பெருநாளிட்
டணைவன வெல்லா மழகுபுரிந்தாகுதி பேணிப்
பணைமுழ வார்வம் பந்தர்வி தானம் பயில்வித்தார்.

[இ—ள்] இறந்த பையனோடு துணையாக விளையாடின பையன் எழு வயதை யடைந்து அப்பையனுடையசுற்றத்தார் மான்தோலை கட்டின முப்புரிநூலை அணியும் நன்னாளில் உபகரணங்களை யெல்லாம் சேகரித்து ஆகுதியை விரும்பிச்செய்து மிகுந்த வாத்திய கோஷத்தோடு பந்தரும் மேற்கட்டியும் அழகாகச் செய்தார்கள் [எ—று] 290

## 972

மன்னு மணச்சீர் மரண மகன்றாய் வந்தெய்தித்
தன்னிரு கண்ணாற் கண்டுத ரத்தே தழல்பொங்கி
யன்னவர் காணா தகல்வுறு சார்போ ரருநீழற்
புன்னை மருங்கே பொதுள விருந்து புலம்புற்றாள்.

[இ—ள்] இந்த வைபவத்தைக் கண்ட இறந்த மகனைப் பெற்ற தாய் தன்னிரு கண்களாலும் கண்டு வயிற்றிலே நெருப்பு அதிகரித்து மற்றவர்கள் காணாதபடி பக்கத்திலே ஒரு புன்னைமர நிழலிலேயிருந்து புலம்புவாள் ஆயினாள் [எ—று] 291

## 973

வேறு.

நின்றசுந் தரனா ரெய்தி நிலவுபுக் கொளியூர் வீதித்
தென்றிசைப் புறமே செம்பொற் சிவிகைவிட் டிழிந்து போந்து
முன்றொழு வேலை தன்னின் முதன்மனைப் புறக்கொல் லைக்குட்
பொன்றிரட் புன்னை யின்கீழ்ப் புலம்பொலி நேரே கேட்டார்.

[இ—ள்] சுந்தரமூர்த்தி கொங்குநாட்டிலுள்ள திருப்புக்கொளியூரில் மறையவர் வீதியில் தெற்குப் பக்கத்தில் செம்பொன் மயமான சிவிகையை விட்டு இறங்கிச்சென்று கடவுளை முன்னே தொழும்படி போகும்போது முதல்வீட்டில் பின்னுள்ளகொல்லைக்குள் பொன்னைப்போல் மலர்ந்திருக்கின்ற புன்னை மரத்தின் கீழே புலம்புகிற சப்தத்தை முன்னே கேட்டார் [எ—று] 292

## 974

மாதவ மறையோன் றேவி மதலைசீ ரழகின் வாய்ப்புஞ்
சீதளக் குளத்தீர்த் தத்திற் றேம்புன லாடற் சேர்வும்
பாதகக் கராவு பற்றிப் பிடித்தலும் பதைத்தவா றுந்
தீதடர் கவலை பொங்கி யழுகுரல் செவியி லுற்றார்.

[இ—ள்] மிகுந்த தவத்தைச்செய்த பிராமணனது பத்தினி தன் குழந்தையின் மிகுந்த அழகையும் குளிர்ந்த தீர்த்தம் நிறைந்த குளத்தில் நீராடச் சென்றதும் பாதகத்தொழிலையுடைய முதலை பற்றிப்பிடித்துத் தின்றதும் பையன் பதைபதைத்த விதத்தையும் பற்றி தீது மிகுந்த கவலையினால் பிரலாபித்து அழுகின்ற குரலைச் செவியில் கேட்டறிந்தார் [எ—று] 293

## 975

எதிர்மனை முன்றி லூடே யியங்குசோ பனமுங் கேட்டார்
சதுர்பெ றுந் திருவீதிக்குட் டக்கதுந் தகாதுங் கண்டார்
முதிர்மணி வீதி நாப்பண் முன்னின்றார் வதனம் பார்த்தே
அதிர நீ ருரையு மென்றார் அந்தணர் குலத்தின் மிக்கார்.

[இ—ள்] இந்த வீட்டுக்கு எதிர் வீட்டில் முற்றத்தில் முழங்குகின்ற மங்கல ஓசையும் கேட்டார் சான்றோர்கள் நிறைந்த அவ் வீதியில் நல்லதும் கெட்டதும் ஆகிய இரண்டையும்கேட்ட சுந்தரர் அந்த அழகிய வீதியின்முன்னே நின்றவர்களது முகத்தைப் பார்த்து விளங்கும்படி நீங்கள் சொல்லுங்களென்று பிராமணகுலத்தில் மேம்பட்டவரான சுந்தரமூர்த்தி கேட்டார் [எ—று] 294

## 976

அங்கவ ரிந்த முன்றி லருமறைச் சிறுவன் றன்னை
வெங்கரா விழுங்க வன்னை துயர்படு விதன வோதை
பங்கமர் முன்றில் வேறோர் பாலகன் முந்நூல் வேள்விச்
சங்கையில் சடங்கி யற்றுஞ் சதுர்மறை யோதை யென்றார்.

[இ—ள்] இதைக்கேட்டவர்கள் இந்த வீட்டினது பிராமணச் சிறுவனைக் கொடிய முதலை விழுங்க அதனால் விசனப்பட்டு அழுகின்ற தாயினது புலம்பல்ஓசையாகும். எதிர்ப்பக்கத்துமுற்றத்தில் மற்றப் பிராமணப்பையன் முப்புரிநூலையணியும் உபநயனச்சடங்கைச் செய்கின்ற நான்கு வேதங்களின் ஓசையென்று கூறினார்கள் [எ—று] 295

## 977

சுந்தர முனிவ ரந்தத் துயரியை வரவ ழைத்து
மைந்தனை யிழந்தாய் நீயோ மறுகுவ தொழிகவின்று
சந்தி யதனை நாமே தடங்கரா வுமிழ வாங்கி
யிந்தநன் முகூர்த்தந் தன்னி லெதிர்மணம் புரிவோ மென்றார்.

[இ-ள்] சுந்தரமூர்த்தி அந்தத் துன்பத்தையடைந்த பார்ப்பனியைப்பார்த்து புத்திரனையிழந்த பாவை நீயோ? கவலைப்படுதலையொழிக என்று சொல்லி உன்புத்திரனை பெரிய முதலை உமிழும்படி செய்து இந்த நல்லவேளையிலேயே அந்த உபநயனமுகூர்த்தத்தோடு இந்தப் பூணூல் கல்யாணத்தைச் செய்து முடிக்கலாம் என்று கூறினார் [எ-று] 296

## 978

வேதியன் கடிதில் வந்து விரைமலர்த் தாளில் வீழ்ந்து
நீதியென் றுணர்வு கொள்ளா னீங்கலா னவன்றன் போதஞ்
சோதிநா வலர்கண் டுன்றன் சுதனையிங் கழைத்தல் லாமல்
ஆதியார் திருமுன் செல்லே மென்றுநின் றுறுதி யிட்டார்.

[இ-ள்] பிள்ளையை இழந்த பிராமணன் வந்து வாசனையுள்ள மலர் போன்ற பாதங்களில் விழுந்து அவர் சொன்னதைச் சரியென்று ஒப்புக்கொள்ளாதவனாகியும் தன்னைவிட்டு நீங்காதவனாகியுமுள்ள அவனுடைய அறிவைக்கண்டு சுந்தரமூர்த்தி உன் பிள்ளையை முதலைவாயினின்று அழைத்துக் கொடுத்தால் அல்லாமல் ஆதியாகிய எம்பெருமானது திருமுன்பு செல்லமாட்டோமென்று நிச்சயித்துக்கூறினார் [எ-று] 297

## 979

கொந்தவிழ் மலர்சூ ழந்தக் குளக்கரை யெங்கே யென்ன
அந்தணன் முன்னே சென்றா னலசுந் தரனார் சூழ்ந்த
தந்திரக் குழாம்பின் செல்லத் தடாகவண் கரையைச் சார்ந்து
மந்தரத் துதயஞ் செய்த பரிதியை மான நின்றார்.

[இ-ள்] கொத்தாக மலர்ந்த மலர்களையுடைய அந்தக் குளத்தின் கரை எங்கே என்றுகேட்க அந்தப்பிராமணர் முன்னேசெல்ல சுந்தரமூர்த்தியும் அவரைச் சூழ்ந்துள்ளவர்களும் பின்செல்ல வளப்பமான கரையையுடைய குளத்தை அடைந்து மந்தரமலையில் உதயமாகின்ற சூரியனைப்போல் விளங்கும்படி நின்றார் [எ-று] 298

## 980

கார்பொழி வொழிந்து வெய்ய காலவற் கடம்வந் தெய்தி
நீர்ப்பசை வறந்து பொங்கி நெடுங்கமர் வெடித்து நேரே
சீர்பயில் காசிமூலத் திருவவி நாசி போற்றார்
வேர்படு தவமே போலக் கிடந்தது விரித டாகம்.

[இ—ள்] சிறப்புப் பொருந்திய காசியாகிய அடியிலிருந்து எழுந்த திரு அவிநாசித்தலத்தைத் துதிக்காதவருடைய தவம் எப்படிப் பயனற்றதாய்விடுமோ அதுபோல மழை பெய்தல் நீங்கி கொடிய பஞ்சகாலம் வந்தடைந்து நீரின் ஈரம் வறண்டு நெடிய பிளப்பாகப் பூமி வெடித்து பயனற்றதாக அக்குளம் இருந்தது [எ—று] 299

## 981

செஞ்சரோ ருகநூன் மார்ப ரிவையெலாந் திருக்கண் சாத்திக்
கஞ்சமார் செம்பொற் றாளங் கரதலாம் புயத்தில் வாங்கி
நெஞ்சமா ரறிவை யங்கே நிறுத்தியோ கிருந்து வற்றும்
பைஞ்சுனைக் கரையிற் பாடத் தொடங்கினார் பவள வாயால்.

[இ—ள்] செந்தாமரை மலரையும் பூணூலையும் அணிந்த மார்பினையுடைய சுந்தரமூர்த்தி இவற்றைப்பார்த்து அழகிய வெண்கலத்தாலாகிய தாளத்தைக் கையாகிய தாமரைமலரில் வைத்து மனதோடுகூடிய அறிவைச் சிவபெருமானிடத்தில் நிறுத்தி யோகத்திலிருந்து பசுமையான குளக்கரையின் மேலேயிருந்து பவளம்போன்ற திருவாயினால் பதிகம் பாடத் தொடங்கினார் [எ—று] 300

## 982

வேறு

உரைப்பாருரையென் றுள்குறவல்லார் உச்சியின்மீதேயொளிவிடுசுடரே
அரைக்காடரவா வாதியுநடுவு மந்தமு மளவு மல்லவு மானாய்
புரைக்காடலைசூழ் புக்கொளியூரா புகழவி நாசிப் புண்ணிய முதலே
கரைக்கான் முதலையைப் பிள்ளை தரச்சொல் காலனை யென்றேகட்டுரை
[செய்தார்.

[இ—ள்] உரைப்பாருரையுகந்து என்கின்ற முதலோடு கூடிய திருப்பதிகத்தில் உன்னை நினைக்கவல்லவர்களது சிரசின்மேலே பிரகாசிக்கின்ற சுடரே அழகிய இடுப்பில் ஆடுகின்ற பாம்பைக் கச்சாக உடையவரே ஆதியும் அந்தமுமானவரே அல்லவுமாய் விளங்குகின்றவரே பெரிய சோலைகள் சூழ்ந்த திருப்புக்கொளியூர் அவி

காசியில் உள்ள புண்ணியப்பொருளே கரையின் பக்கமாகவந்து முதலையைப் பிள்ளை தரும்படி காலனுக்குக்கட்டளையிடுவாய் என்று கூறினர் [எ-று] 301

983

அக்கண மேனீ ராரநிரம்பி அம்புய மலர்மே லளியிசை பாடப்
புக்க கரைக்கே புள்ளொலி துள்ளப் போது வராலைப் பொருகயல் பாயு
மிக்கசுழிக்கே நெட்டமூ வத்தே வீசலை தாவும் பாசடை யூடே
தொக்க கராவின் றாலு சொரூபந்தோன் னெடுநீர்மேற்றோன் றியதன்றே.

[இ-ள்] அந்த நிமிஷத்திலே மழைபெய்து நீர் மிகவும் நிரம்பி தாமரை மலர்களின் மேல் வண்டுகள் இசைபாட குளத்தின் கரையிலேயே பறவைகளின் ஒலி அதிகரிக்க வரால் மீன்களும் கயல் மீன்களும் பாயும்படி நீர்ச்சுழியையுடைய ஆழத்திலே வீசுகின்ற அலையினுல் மோதப்படும் பசுமையான இலையின் மத்தியில் அங்கே வந்த முதலையினுடைய பெருத்தசரீரம் காணப்பட்டது [எ-று] 302

984

படர்தலை யெங்கும் பாசிபொதிந்து பற்பிறழ் பேழ்வாய்வெற்பிடைஒன்றி
உடலை நிமிர்த்தே வாலதி வீசி யுந்து தடங்கா லுலவி யுதைந்தே
கடகரிபோலுங் களனின்முழக்கிக் கால்விசைகொண்டே கதுமெனநாடி
யடர்கரை யின்பா லறிவுட னன்பா யாதிகராவந் தணுகிய தாமால்.

(இ-ள்) பெரிய தலை முழுதும் பாசிமூடி மாறுபட்ட பற்களை யுடைய பெரிய வாயையுடைய மலைபோன்றமுதலையானது உடலை உயர்த்தி வாலைவீசி காலாலே நடந்து உதைந்து மதயானைபோலச் சப்தித்து மிகுந்த வேகமாக நெருங்கிய கரையின் பக்கத்தில் அறிவும் அன்பும் உடையதாய் முதலில் பையனை விழுங்கிய முதலை வந்து சேர்ந்தது (எ-று) 303

958

முந்திய கரைசேர் முதலை வயிற்றின் மூதெரி நாதன் றூது வளித்தான்
மந்திர வேதா வடிவு புரிந்தான் மறலி கொணர்ந்தே மன்னுயிர் தந்தா
னந்து தரித்தோ னிந்த நிலத்தே நடலை வழக்கா முடலை வளர்த்தா
னிந்திரன் முதலா விரணிய வுலகோ ரென்பட்டனரோ யிவையுறுகாலம்.

(இ-ள்) முன்னதாகக் கரையைவந்தடைந்த முதலையினுடைய வயிற்றில் பழமையான உருத்திரன் தாதுவை யுண்டுபண்ணினன் மந்திரங்களை யுணர்ந்த பிரமன் உருவத்தையுண்டாக்கினன் எமன் உயிரைக் கொண்டுவந்து கொடுத்தான் சங்கைத்தரித்த திருமால் இந்த உலகத்தில் பொய்யாகிய உடலை வளரும்படிச் செய்தான்

இந்திரன் முதலாகச் சொல்லப்பட்ட பொன்னுலகத்திலுள்ளவர்கள் இவ்வளவுகாலமும் என்ன செய்தார்களோ அறியோம் (எ—று)
304

986

பெரிய பகுவாய் முதலை திறக்கப் பேதை மறைச்சேய் தாதை களிக்கச்
சீரிய சிகையுந் திருநுத லழகுந் தேடரு மணிசூழ் சூடிகை யசைவுங்
கூரிய விழியின் பார்வையு முகமுங் குழையெனு மிழையாங் குண்டல
தூரிய மெழுதுந் தோள்களு முரமுந் துன்றிய களனும் [வொளியுந்
[பொன்திகழ் கலனும்.

(இ—ள்) பெரியவாயை முதலையானது திறக்க சிறிய பிராமணப்பிள்ளை தகப்பனார் மகிழ சிறந்த தலைமயிரும் நெற்றியின் அழகும் தேடுதற்கரிய இரத்தினங்களிழைத்த நெற்றிச்சுட்டியசைய கூர்மையான விழியின் பார்வையும் திருமுகமும் குழையென்கிற குண்டலத்தின் பிரகாசமும் சித்திரம் எழுதப்பட்ட தோள்களும் மார்பும் கழுத்தில் பொன்னாபரணமும் (எ—று) 305

987

புலியுகிர்புரையும் பூண்மணிவடமும் பொங்கொளிதரளந் தங்கிய சரமுங்
கலினமர் சிறுகிண் கிணிமணி யணியுங் கடியரை ஞாணுங் கவின வணப்பும்
பொலிவுற மருவும் பரிபுர நிரையும் பொருசீ றடியுந் தகுசீர் மலிவு
மலிவுறு கரவஞ் சலியுடன் வரவே வானவர் பூமலர் மாரி பொழிந்தார்.

(இ—ள்) புலிநகமும் இரத்தினமாலைகளும் மிகுந்த ஒளி வீசுகின்ற முத்துமாலையும் சப்திக்கின்ற கிண்கிணியும் கட்டிய அரைஞாணும் அழகாக விளங்கும் சிலம்புகளும் தனக்குத்தான் ஒப்பான சிறிய பாதங்களும் பொருந்த அழகாகக் குவித்த கையுடன் பிள்ளையானவன் முதலை வாயிலிருந்து வருதலைக் கண்டதேவர்கள் அழகிய புஷ்பமாரி பொழிந்தார்கள் (எ—று) 306

988

தற்பர வொளியார் சந்நிதி சென்றே தனையனை யுங்கொண் டனையவன்
முதலோர்,
பொற்பமர்வாயிற் புறமகல் காலை பொலிவுறும்யோகர் தமிலொருமித்தே
முற்பகர்செல்வங்கண்டனமென்றூர்முத்தமிழிசையார்மொழிதருமுறை
யிற்படு மறையோன் மூன்றிலிடத்தே யெதிர்மண முஞ்சென் [யே
[றேறியதன்றே.

(இ—ள்) மேலான ஒளியாயுள்ள சிவபெருமான் சந்நிதிக்குப் போய் பிள்ளையையும் அழைத்துக்கொண்டு தாய்முதலியவர்கள்

அழகிய கோயில் வாயிலுக்கு வெளியே போகும்பொழுது மேன்மையாகிய யோகிகள் எல்லாரும் சேர்ந்து மூன்று தமிழையும் உணர்ந்த சுந்தரமூர்த்தி சொன்னபடி முன்னேயே ஒழிந்த புத்திர செல்வத்தைக் கண்டோம் என்று கூறினார்கள் அவ்வீட்டுபிராமணர் முற்றத்திலும் எதிர் வீட்டில் நடந்த திருமணம்போல நடந்தேறியது [எ—று] 307

989

நாவல் வளம்பதி நான்மறை வள்ளன் ஞான மகன்றனை நண்பு புரிந்தே
யாவ லடங்க வெடுத்து மணிப்பூ ணம்புய மார்ப மழுந்த வணைத்தே
மேவல ருங்கல னுதியு நல்கி விபுதர் விருந்தா மமுத மருந்திச்
சேவலர் திண்டேர் வீதி மருங்கோர் திருமட மேவிச் செவ்வி திருந்தார்.

[இ—ள்] வளம் பொருந்திய திருநாவலூராகிய நான்கு வேதங்களையுமுணர்ந்த சுந்தரமூர்த்தி அறிவில்மிக்க பிராமணப் புதல்வனை மிகுந்த ஆவலோடு எடுத்து இரத்தினாபரணங்கள் அணிந்த மார்போடு பொருந்த அணைத்து உயர்ந்த ஆபரணங்களையும் அளித்து தேவாமிர்தத்துக்கு ஒப்பான உணவை அருந்தி அழகான உறுதியுள்ள தேரோடும் வீதியின் பக்கத்தில் ஒரு அழகியமடத்தில் இனிமையாகத் தங்கிஇருந்தார் [எ—று] 308

990

பதியென வாழுந் திருவவி நாசிப் பரனுயர் கோயிற் பணியமர் காலந்
துதிமறை பாடுஞ் சுந்தர பரனார் தூய்மல ரணைமேற் றுயிலுணர் கின்றார்
முதிரலை போலுந் துயரிடை மூழ்கி மூவரு டஞ்சென் றுவி வருந்துங்
கதிமறையோனுங் கற்புடையாளுங்கவலையொழிந்தே கண்டுயில்வுற்றார்.

[இ—ள்] திரு அவிநாசிப்பதியில் வாழுகின்ற சிவபெருமானுடைய கோயிலில் தோத்திரமாகத் தமிழ்வேதம் பாடுகின்றசுந்தரர் பாடும் பணியைச் செய்துகொண்டு புஷ்பமெத்தையினின்றும் நித்திரைசெய்கின்ற காலத்தில் பழமையான கடல் போன்ற துன்பத்தில் மூன்று வருடமாக மூழ்கி உயிர் வருந்தின கற்பதவியை யடையக்கூடிய பிராமணனும் அவன் மனைவியும் கவலையொழிந்து நித்திரை செய்தார்கள் [எ—று] 309

991

வேறு

மறவானைக் கருதானை மறைமுதலா கமங்கடந்த வடிவினானை
யிறவானைப் பிறவானை யிரவுபக லிசியொழிய வியங்குவானைப்
புறவானைக் கரியவுரிப் போர்வையா னைக்கருணை பூத்த ஞானத்
திறவானை யவிநாசிப் பதியானை விடை கொள்வார் திருவா ரூரர்.

[இ—ள்] பாவிகளால் நினைக்கப்படாதவனை வேதாகமங்களைக் கடந்த வடிவத்தையுடையவனை இறத்தல் பிறத்தல் இல்லாதவனை இரவு பகல் எப்பொழுதும் சஞ்சரிக்கின்றவனை யானையின்தோலை மேலே போர்வையாகப் போர்த்தவனை கருணையைச்செல்வியோடு விளங்குகின்ற ஞானவல்லவனை அவிநாசிப்பதியிலுள்ள கடவுளைத் திருவாரூரர் விடைபெற்றுச் செல்வாராயினர் [எ—று] 310

992

மட்டிலகு மலரவிழ்ந்த வைகறையி லெழுந்துதிரு வாயில் சார்ந்து
விட்டசுட ரொளியிலகு புக்கொளியா னடிபரவி விடைபெற்றேகி
நெட்டிசையின் றமிழ்முனிபூ சனையுகந்ததுடிசையில்வாழ்நிமலற்போற்றி
யட்டில்வினைப் புனமுருங்கை யடகவிநல் லமுதுவிருந் தளிக்க வுண்டார்.

[இ—ள்] வாசனைபொருந்திய மலர்கள் மலர்கின்ற விடியற் காலத்தில் எழுந்து நித்திய கர்மங்களை முடித்துக்கொண்டு கோபுர வாயிலையடைந்து பிரகாசமயமாயிருக்கின்ற திருப்புக்கொளியூர் ஈசனுடைய திருவடிகளைத் துதித்துத் தொழுது மிகுதியான இசைத்தமிழியற்றமிழில் வல்ல அகத்திய முனிவர் பூசித்த துடிய லூரில் வீற்றிருக்கின்ற கடவுளை வணங்கி அங்குள்ள அன்பர்களால் சமையலில் தேர்ந்தவர்களைக்கொண்டு புனமுருங்கைக் கீரை சமைத்த நல்ல அமிர்தமாகிய விருந்தை அளிக்க உண்டுமகிழ்ந்தார் [எ—று] 311

993

பாடுமறை யோதுதிருப் பட்டியுளா ரிவர்வரவு பார்த்து முன்னம்
வேடுபறி யாளரென்று வயலுழவ ருழத்தியர்போல் வேடங்கூர்ந்து
நீடுசெந்நெல் முடிவகுத்து நடுவேலை கண்டுதொழ நிதியீ யாமே
நாடுமர சம்பலத்து ளாடல்செயப் பாடல் செய்தார் நாவலூரர்.

[இ—ள்] வேதங்களால் துதிக்கப்படுகிற திருப்பேரூரிலுள்ள சிவபெருமான் சுந்தரமூர்த்தி வருதலைப் பார்த்து முன்னமே வேடர்களால் பொருள்பறிக்கப்பட்டவரென்று கருதி வயலில் உழவர் போலவும் நடவுநடுகின்ற பெண்கள்போலவும் வேடம் கொண்டு செந்நெல் நாற்றைப் பிடுங்கி நட்டுக்கொண்டிருக்கிற சமயத்தில் கண்டுவணங்க திரவியம் கொடுக்காமல் ஆராய்கின்ற அரச அம் பலத்தில் நிருத்தம்செய்தலைக்கண்டு நாவலூரர் பதிகம் பாடினர் [எ—று] 312

994

விடைகொண்டு புரமகன்று மலைநாடு சார்ந்தணைந்து விரிதண் சாரல்
புடைகொண்ட கொடுங்கோளூர்மருங்கு நிற்கச் சிவவேடம் புனைந்தோர்
முன்போய்
மடைகொண்ட முதலையுண்ட மகவழைத்த சுந்தரர்தாம் வந்தாரென்று
தொடைகொண்ட பணைமார்பர்க் குரைசெய்தா ரவர்கேட்டுத்
துண்ணென் றூர்த்தார்.

[இ-ள்] பதிகம்பாடி உத்தரவு பெற்றுக்கொண்டு அவ்வூரினின்று நீங்கி மலைநாட்டைச் சேர்ந்து தங்கி விசாலமான குளிர்ந்த மலைப்பக்கங்களையுடைய கொடுங்கோளூரையடையக்கண்ட அன்பர்கள் விரைந்து சென்று குளத்தில் முதலையுண்ட பாலனை அழைத்த சுந்தரமூர்த்தி வந்தாரென்று மலர்மாலையணிந்த மார்பையுடைய சேரமான் பெருமாளுக்குச் சொன்னார்கள் அதைக்கேட்டு சேரமான்பெருமாள் மகிழ்ந்து ஆரவாரித்தார் [எ-று] 313

995

வந்துரைத்த பரிசனர்க்கு மணிமாடை கலைவழங்கி மறுகு தோறுஞ்
சந்தனத் தெண் புனறெளித்துத்தாறுடன்பூ கங்கதலிதழுவநாட்டிக்
கந்தமுறு தொடைநிரைத்த காவணமிட் டிருமருங்குங் கவரிதூக்கி
விந்தை யொக்க வீற்றிருக்கத் திருநகரி யலங்கரித்து விரைந்துபோந்தார்.

[இ-ள்] வந்து சொன்னவர்களுக்குப் பொன்னையும் ஆடைகளையும் கொடுத்து வீதிகள்தோறும் குளிர்ந்த சந்தனம்பனி நீரைத் தெளித்து வாழைத்தாறுகளையும் பாக்குக் குலைகளையும் கட்டி வாசனைபொருந்திய மலர்மாலைகளைத் தொங்கவிட்டுப் பந்தல் போட்டு இரண்டு பக்கங்களிலும் வெண்சாமரைகளைக்கட்டி, விஜயலக்ஷ்மி வீற்றிருக்கும்படி அலங்கரித்து வைத்தார்கள் [எ-று] 314

996

ஏதமின்றி முரசறைவித் திவுளிகரி தானையுட னெதிர்போந் தெய்தி
வேதமுந்து மாரூரர் விரை மலர்த்தாண் மிசைவீழ்ந்து விழிநீர் தேக்கக்
காதல் கொண்ட மற்றவரு முடிதாங்கி யெடுத்திறுகக் கலந்த பின்னர்ப்
போதகம்பொன் னழகுசெய்து பதங்குனிவித் தெருத்தமிசைப் பொலிவி
னேற்றி.

[இ-ள்] குற்றமில்லாமல் முரசம் அறையும்படிசெய்து யானை, குதிரை, தேர், காலாள் இந்நால்வகைச் சேனைகளோடு சென்று எதிர்கொண்டழைத்து வேதங்களையுணர்ந்த சுந்தரமூர்த்தியுடைய திருவடிகளில் வீழ்ந்தெழுந்து கண்களில் நின்று நீர் பெருகி நிறக

அவரிடத்து அன்புள்ள சுந்தரமூர்த்தி அவருடையமுடியைத்தாங்கி எடுத்து இறுகத்தழுவிக்கொண்டபின்னர் யானையை அலங்காரம் செய்து அதன்பிடரிமேல் அழகாகவீற்றிருக்கச்செய்து [எ-று] 315

997

வளவர்புக ழுங்கழறிற் றறிவாராம் பெருஞ்சேர மான்பின் னேபிதிப்
புளகுடல் புணரவிரு புடைகவரி பணிமாறிப் போதும் வேலை
யிளவரச ருயர்கவிகை யெடுத்தோங்கி வரமுழவ மியங்குந் தோறும்
வளமருவு நெடுமாட மதிரமுதி ரறிவுடைய மதியோர் வாழ்த்த.

[இ-ள்] சோழ அரசர்கள் புகழும்படியான கழறிற்றறிவாரா கிய சேரமான் பெருமாள் பின்னே உடல்மயிர் பொடிப்பவெண்சா மரையை இருப்க்கங்களிலும் வீசிக்கொண்டு வரப்போகின்ற காலத் தில் இளவரசர் உயர்ந்த குடையையெடுத்து பிடித்து வரவும் பேரி கைசப்திக்கும்போதெல்லாம் வளப்பம் பொருந்திய உயர்ந்த உப்பரி கைகள் நடுங்கவும் மிகுந்த அறிவையுடையவர்கள் வாழ்த்தவும் [எ-று] 316

998

பரவைநா யகர்வந்தார் சங்கிலியைப் பின்புணர்ந்த பாகர் வந்தார்
அரவையார் வேணியனை நள்ளிரவு தூதுவிடுத் தருள்வோர் வந்தார்
கரவையே வரவழைத்துப் பிள்ளைவிளை யாட்டருமை கண்டோர் வந்தார்
பரவைசூ ழுலகருந்தப் பதிகமெனுந் தமிழமுதம் பகுந்தோர் வந்தார்

[இ-ள்] பரவையாருக்குத் தலைவர் வந்தார் சங்கிலியாரைச் சேர்ந்த நாயகர் வந்தார் பாம்பைச் சடையில் தரித்த சிவபெரு மானை நடுராத்திரியில் தூதாக அனுப்பினவர் வந்தார் முதலைவாயி லிருந்து பிள்ளையை வரவழைத்து அதன் விளையாட்டின் அருமை யைக்கண்டவர் வந்தார் சமுத்திரத்தினல் சூழப்பட்ட உலகிலுள்ள வர்கள் உண்ணும்படி தமிழ்ப்பதிகமாகிய தேவாமிர்தத்தைப் பகிர் ந்து கொடுத்தவர் வந்தார் [எ-று] 317

999

துங்கமிகு மலைநாடு புரந்தளிக்குஞ் சேரமான் றோழர் வந்தார்
மங்கலமா மாலால சுந்தரர்வந் தார்வந்தார் வந்தா ரென்று
செங்கனகத் தாலமைத்த திருச்சின்னம் பணிமாறச் சிவன்பேர்பாடி
மங்கையர்க ணிரைபுகுந்து மணிவயிரக்கோல்புடைத்துவசந்தமாட.

(இ-ள்) உயர்வு மிகுந்த மலைநாட்டைக்காத்து இரட்சிக்கின்ற சேரமான் பெருமாளின் தோழர் வந்தார் உலகத்துக்கு நன்மை

யாக விளங்குகின்ற ஆலாலசுந்தரர் வந்தார் என்று பொன்னினாற் செய்த திருச்சின்னங்கள் அடிக்கடி ஊதவும் சிவபெருமானுடைய ஆயிரம் திருப்பெயர்களையும் பாடி பெண்கள் கூட்டங்கள் அழகிய வயிரத்தினால் இழைக்கப்பட்ட கோலை அடித்து வசந்தம் என்கிற ஆட்டத்தை ஆடவும் (எ—று) 318

## 1000

சோராவிற் கொடியுடன்மீனக்கொடியும் புலிக்கொடியுந்துதைந்து சூழப்
பேரார வாரமுறு புலவோரும் பலவோரும் பெரிது போற்றத்
தேராரு மணிவீதி வலம்வந்து தனிமுகப்பிற் செறிந்து வைகி
யாராய்ந்த காதலெனு மன்பினுளின் பம்பெருகி யமரு நாளில்.

[இ—ள்] சோர்வு அடையாத விற்கொடியுடன் மீனக்கொடியும் புலிக்கொடியும் நெருங்கிச் சூழவும் பெரிய சப்தத்தைச் செய்கின்ற புலவர்களும் மற்றுமுள்ள பலரும் துதிக்கவும் தேர் ஓடும் படியான அழகிய வீதியை வலம்வந்து முகப்பையுடைய அரண் மனையில் தங்கியிருந்து ஆராய்ச்சியோடு காதல் என்கிற அன்பினாலே இன்பம் மிகுந்து தங்கியிருக்கின்ற காலத்தில் [எ—று] 319

## 1001

காலையா மொருபொழுதி லிருவர்களுஞ் சேனைகளுங் கதுமென்றேகி
வேலைவாய் மணிகொழிக்குந்திருவஞ்சைக்களத்தணைந்து விமலற்போற்றி
நூலையா ரணம் விளக்குந் திருமார்பர் தமிழ்ப்பதிக நுவலப் புக்கார்
பாலைமே வியவேந்தர் வேண்டுவ்வன செயப்படுத்தப் பதியுட் போந்தார்.

[இ—ள்] ஒரு நாள் காலையில் சுந்தரமூர்த்தியும் கழறிற்றறிவாரும் சேனைகளும் விரைவாகச் சென்று சமுத்திரத்தில் அலைகள் முத்துக்களைக் கொழிக்கும் திருவஞ்சைக்களத்தையடைந்து சிவபெருமானைத் துதித்து நிற்க வேதங்களைத் தெளிவாக விளக்கியருளுகின்ற பூணூலை யணிந்த அழகிய மார்பையுடைய சுந்தரமூர்த்தி தமிழ்ப்பதிகம் பாடினார் பக்கத்தில் உள்ள கழறிற்றறிவார் வேண்டியவைகளைச் செய்தற்பொருட்டுத் தம் ஊருக்குச் சென்றார் [எ-று] 320

## 1002

கானவிசைத் தமிழ்வாணர் புகல்பதிகந் திருவஞ்சைக் களத்தில் வாழ்வா
ரானவர்தஞ் செவிநிரம்பி யருணவொளி சேர்கயிலை யளவு மோங்க
ஞானவருட் டிருவாக்கு நம்பணிக்குச் சுந்தரனைக் கொணர்க வென்று
வானவரை யுந்தவள மால்யானை யும்விடுப்ப வந்தா ரன்றே

[இ—ள்] இனிய இசைத் தமிழில்வல்லவராகிய சுந்தரர் சொன்னபதிகம் திருவஞ்சைக் களத்தில் வாழுகின்ற சிவபெருமானுடைய செவியில் நிரம்பி பொன் ஒளி வீசுகின்ற கயிலையளவும் உயர்ந்து செல்ல சிவபெருமானது ஆகாயவாணியினால் நம்முடைய ஏவலுக்குச் சுந்தரனைக் கொணர்க என்று சொல்லி உடனே தேவர்களையும் வெள்ளையானையையும் அனுப்ப [எ—று] 321

1003

விண்ணவரும்விஞ்சையரும்வெண்களிறும் திருவஞ்சைக்களத்தைமேவத்
துண்ணெனவே திருச்செவியி லந்தரதுந் துபிவைக்குந் துழனி கேட்டே
யெண்ணமிகு மூரர்வந்து வானவரே நீவிர்வந்த வாறேற தென்னக்
கண்ணுதலா ருமை யழைக்க வருளிப்பா டெனவுரைத்தார் கடவு
ளோர்கள்.

[இ—ள்] தேவர்களும் வித்தியாதரர்களும் வெள்ளை யானையும் திருவஞ்சைக் களத்தையடைய இங்குள்ளவர்களது திருச்செவிகளில் திடீரென்று தேவவாத்தியங்கள் சப்திக்கும் ஓசையைக் கேட்டு சிவபெருமானை மனத்திலே தியானிக்கின்ற சுந்தரமூர்த்தி நெருங்கிவந்து நீங்கள் வந்தகாரியம் யாதென்றுகேட்கத் தேவர்கள் நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் தங்களை அழைத்துவர அருளிப் பாடு என்று சொன்னார்கள் [எ—று] 322

1004

எல்லையில்சீ ராருர ரிமையவரை வணங்கவவ ரெதிர் நின்றேத்த
வொல்லையினி லிபமேறி யுதியர்பிராற் குரைபோக்கி யொல்கிச்செல்வார்
வில்லவரு மதுகேட்டுத் திலதயிலப் புனலாடும் விருப்ப நீங்கிக்
கல்லதரிற் பதம் வருந்தப் படர்போது கடும்புரவி கலந்த தன்றே.

[இ—ள்] அளவில்லாத சிறப்பினையுடைய திருவாரூரர் தேவர்களைவணங்க அவர்கள் நேரே நின்றுதுதிக்கச் சீக்கிரமாக வெள்ளை யானையின்மேல் ஏறி சேரமான் பெருமானுக்கு அறிவிக்கச்சொல்லி மனத் தளர்வோடு செல்வாராயினர் கழறிற்றறிவாரும் அவ்வுரையைக்கேட்டு எண்ணெய் ஸ்நானம் செய்கின்ற விருப்பம் நீங்கி கல் வழியில் கால்கள் வருந்த நடந்தபோது வேகமாகச் செல்கின்ற குதிரை அங்கு வந்து சேர்ந்தது [எ—று] 323

1005

காற்றிவுளி மேற்கொண்டு கருவிதரர் புடை சூழக் கடிதி னேசித்
தோற்றமுற முன்விரைந்து தூசிபோ யணிவகுத்துச் சூழ்ந்து நின்று
ரேற்றசெய லென்கொலென்று தமிழ்வேந்த ருரைத்தருள விறைவர்
மாற்றமெதிர் வேறுளதோ சேவகத்தை யாதரித்த மாந்தர்க் [கேட்டு
[கென்றார்.

[இ—ள்] வாயுவேகமாகச் செல்கின்ற குதிரைமேல் ஏறிக் கொண்டு கருவியைக்கொண்டு சேனைகள் விரைந்து சென்று நல்ல காட்சியாக அணிவகுத்துக்கொண்டு முன்னே சூழ்ந்து நின்றார்கள் நீங்கள் வந்த காரியம் யாதென்று சுந்தரர்கேட்க சேரமான் பெருமாள் கேட்டு ஏவல் தொழிலை யாதரித்த மனிதர்களுக்கு என்னவிருக்கின்றது சொல்வதற்கு என்று கூறினார் [எ—று] 324

1006

ஒன்றுபடு சேனையெலா முடனின்று கடன்றீர்ந்தா ருதியர் வேந்தர்
வென்றிபுனை கொய்யுளைக்கு மெய்யெழுத்தைச் செவிப்புகட்டி விசும்பி
துன்றுதமிழ் முதுபுலத்திற் றொடர்ந்து செலக் ககனவழி [னேற்றத்
தென்றிசையோர் சோதியெனத் திருக்கயிலைப் [தொலையப்போந்து
[பொருப்பருகு சேர்ந்தாரன்றே

[இ—ள்] கூடியிருந்த சைனியங்கள் எல்லாரும் அவரவர்கடமையைச் செய்து முடித்தார்கள் சேரமான்பெருமாள் வெற்றியுள்ள புறமயிர் பொருந்திய குதிரைக்கு பஞ்சாக்கரத்தைச் செவியில் உபதேசித்து ஆகாயத்திற் செலுத்த பழமையான தமிழ்நாட்டைத் தொடர்ந்து கடந்து தென்திசையிலுள்ளவர்கள் காண ஆகாயமார்க்கமாகச் சோதி சொரூபமாய்த் திருக்கயிலாயத்துக்குச் சமீபத்தையடைந்தார்கள் [எ—று] 325

1007

உலகுதனை நிறுவியவா றெத்தநிலைக் கோபுரமு முடுத்த சூழற்
றிலகுமிட பக்கொடியு மேழ்நிலைமா டத்திரளு மெழுதொ ணாத
வலகின்மணி மண்டபமு மாடகநற் றூணிரையு மருணச் சோதிப்
பலகைசெறி காணிலையும் பளிக்குமே டையும்விளங்கப் பணித்தகோயில்

[இ—ள்] உலகங்களை நிலைநிறுத்துவதற்கு எடுத்ததுபோல பல நிலைகளையுடைய கோபுரங்களும் மதிலால் சூழப்பட்டுவிளங்குகின்ற இடபக்கொடியோடுகூடிய ஏழு அடுக்குகளையுடைய உப்பரிகைகளும் செய்யமுடியாத அளவில்லாத அழகியமண்டபங்களும் பொன்னலாகிய தூண்களின் வரிசையும் சிவந்தபிரகாசத்தையுடைய பலகைகள் பொருந்திய கால்களின் வரிசையும் பளிங்கு மேடைகளும் விளங்குகின்ற கோயிலின்கண். [எ—று] 326

1008

வாயில்தொறும் பூதங்கள் கணநாதர் வயிரவர்கா வலையெண்ணமற்
றுயில்புகுங் குழவியெனத் தடையொழிந்து சுந்தரர்தாந் தளியுட்போந்து
வேயில்வருந் தரளமணிப் படிகடந்து சோபான விதான மேறி .
ஆயிரவெண் சங்கமுரல் பானுகம்பர் சேவையரங் கணிகியப்பால்,

[இ—ள்] உள்ள திருவாயில்கள்தோறும் பூதங்களும் கணநாதர்களும் வயிரவர் காவல்களையும் எண்ணுமல் தாயினிடத்திற் செல்லுகின்ற குழவியைப்போலத் தடையில்லாமல் சுந்தரமூர்த்தி கோயிலுக்குட்போய் முத்துக்களினுலும் இரத்தினங்களாலும் ஆகிய படிகளை யெல்லாங்கடந்து ஆயிரம் வெண்சங்குகளை ஊதுகின்ற பாணுகம்பன் சேவை செய்து கொண்டிருக்கிற சபையை அணுகினபிறகு [எ—று] 327

1009

வேயார்ந்த விசைமுகனுந் திசைமுகனுஞ் சுரர்பதியும் விண்ணுளோரும்
வாயார்ந்த துதிகூறி வேண்டுவன வரநினைந்து மருங்கி னிற்கச்
சேயார்ந்த கவுணியருந் தமிழரசும் பெருந்துறையிற் றிருந்தினோரும்
பேயார்ந்த வுடலணங்கும் புகல்பாடன் மதுரவிசை பிறங்கியோங்க.

(இ—ள்) மூங்கிலினற்செய்த புள்ளாங்குழலால் இசையைச் செய்கின்ற திருமாலும் நான்கு முகங்களையுடைய பிர்மாவும் தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரனும் மற்ற தேவலோகத்திலுள்ள தேவர்களும் வாயினல் நிரம்பிய தோத்திரங்களைச்சொல்லி தாம்வேண்டிய வரங்களைக் கூறிப் பக்கத்திலே நிற்கவும் கவுணியர் தலைவராகிய திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் திருப்பெருந்துறையில் உபதேசம் பெற்ற மாணிக்கவாசகரும் பேய்வடிவம் பெற்ற காரைக்காலம்மையாரும் துதிக்கின்ற இனிய இசைப்பாடல்கள் எங்கும் முழங்கவும் (எ—று) 328

1010

சந்திரா தித்தரொளி தழுவியிரு பால்விளங்கச் சயிலே யோர்பால்
மந்திரா கமவிதிகேட் டருகிருப்பத் தனயர்புடை மருவிவாழு
மந்தரா கியசபையி னிடைவீழ நந்திபிரா னறிவித் தேத்தச்
சுந்தரா வந்தனையோ வென்றுதிரு வாக்களித்தான் சோதிநாதன்.

(இ—ள்) சந்திர சூரியர்களின் பிரகாசம் இருபக்கத்திலும் சேர்ந்து விளங்கவும் மலைமகள் மந்திர ஆகமங்களின் விதிகளைக் கேட்டுக்கொண்டு பக்கத்தில் இருக்கவும் கணபதி சுப்பிரமணியராகிய இருவரும் இரண்டு பக்கங்களிலும் சேர்ந்து வீற்றிருக்கின்ற அந்தமென்மையையுடைய சபையில் சுந்தரர் வணங்குவதை நந்திகேசுவரர் தெரிவித்துத் துதிக்க சோதிசொரூபமாயுள்ள தலைவராகிய சிவபெருமான் சுந்தராவந்தனையோ என்று திருவாய் மலர்ந்தார் (எ—று) 329

## 1011

எதிர்பகர வசமழிந்து விழியிணைகள் புனல்பெருகி யாக்கையெங்கும்
விதிர்வுதரு புளகமுற்று விம்மியரு ளாநந்த வெள்ள மேற்கொண்
டதிரவெழுந் தஞ்சலிகூர்ந் தணிகயிலைச் சிறப்புவிரித் தமுதவாய்மை
மதுரமொழி பாடினார் மற்றுமொரு விண்ணப்பம் வணங்கிச் செய்தார்.

*[இ—ள்] தன்வசமிழந்து நாக்குழற இரண்டு விழிகளிலும் நீர் பெருகவும் சரீரமுழுதும் நடுக்கத்துடன் புளகாங்கிதம் கொள்ளவும் தேம்பி அருளாகிய ஆனந்த வெள்ளம் அதிகரித்து திடீரென்று எழுந்து கையைக் குவித்துக் கொண்டு அழகிய கைலாயத்தின் சிறப்பை விரித்துச் சொல்லி அமிர்தத்தையொத்த இனிமையான தேவாரம் பாடினார் மறுபடியும் ஒரு விண்ணப்பம் செய்தார் [எ—று]* 330

## 1012

வின்மலையச் சேரனுக்குத் திருவாயிற் றடைவிலக்கல் வேண்டுமென்று
புன்மொழிதாழ்ந் துரைசெய்யக் கணத்தொருவாக் கருள்புரியப் புகுந்த
தின்மலர்பே ரவைவீழ நீவரலே னென்றருளி னிகழ்த்தநாயேன்[ வேந்தர்
றன்மைபெறு சுந்தரர்க்குத் தொண்டுபடுஞ் சேவகத்தாற் றொடர்ந்தே
னென்றார்.

*[இ—ள்] விற்கொடியையுடைய மலை அரசராகிய சேரமான் பெருமாளுக்குத் திருவாயிலில் உண்டான தடையை விலக்கல் வேண்டுமென்று வணங்கிச் சொல்ல அக்கணமே அழைக்கஒருவாக் கருள உள்ளே வந்த சேரமான்பெருமாள் மலரகிதராகிய சிவ பெருமானது திருவடிகளில் வீழ நீ இங்கு வந்தது என்னகாரணம் என்று அருளோடு கேட்க நாயேனாகியயான் முதன்மையானசுந்தர மூர்த்திக்குத் தொண்டுசெய்கின்ற வேலையினால் தொடர்ந்துவந்தே னென்று கூறினார் [எ—று]* 331

## 1013

சுந்தரராங் கதுகேட்டுப் பொறாதுபதை பதைத்துடலந் துடிப்பவஞ்சி
யந்தமிலாய் நின்னடியார்க் கடிமைபுகு மடியனுக்கோ ரடிமையுண்டோ
வெந்தைபிரான் சேவடிக்குத்தமிழ்மாலைசாத்துதற்கிங்கிமைந்தானென்
கந்திருவரிசைக்களித்ததோடுடையசெவியளித்தான் கைலைநாதன். [னக்

*[இ—ள்]. இவ்வார்த்தையைக்கேட்டு சுந்தரர் பொறுக்காமல் பதைபதைத்துச் சரீரம் நடுங்கி பயந்து முடிவில்லாத கடவுளே உம்முடைய அடியார்களுக்கு அடிமை செய்கின்ற அடியேனுக்கு அடிமையுண்டோ என் தந்தையாகிய தலைவரோ உம்முடைய சிவந்த*

தாமரை மலர்போன்ற பாதங்களுக்குத் தமிழ் மாலைசாத்துவதற்கு இங்கு வந்திருக்கிறாரென்று சொல்ல கந்தர்வர்களுடைய இசைக்கு அளித்த தோடு அணிந்த காதுகளைக் கழறிற்றறிவாருடைய பாடல்களுக்குக் கைலைநாதனாகிய சிவபெருமான் அளித்தார் [எ—று] 332

## 1014

பெண்ணை நறுந் தொடைமார்பர் பேரவையி லேடிருகை யிறங்கவேந்திப்
பண்ணையெடுத் திசைகூர்ந்து ஞானவுலா வொருபனுவல் பயிலச் சாத்திக்
கண்ணருவி யுகநின்றார் கடவுளர்சே கரமசைத்தார் கருணைபாகத்
தண்ணலருள் புரிந்தருளி யருகிருக்குஞ் சிவகணப்பே றளித்தா ரன்றே.

[இ—ள்] நல்ல பனை மாலையை அணிந்த மார்பையுடைய சேரமான்பெருமாள் பெரிய சிவபெருமானுடைய சபையிலே இரண்டு கைகளிலும் ஏடுகளை ஏந்தி இசையோடு பொருந்தும்படி ஞான உலாவைப்பாடி அணிந்து கண்களிலிருந்து அருவிபோல் நீர்சொரியும்படி நின்றார் தேவர்கள் எல்லாம் தலையசைத்தார்கள் கருணையச்செல்வியை ஒரு பாகத்திலுள்ள சிவபெருமான் கேட்டருளி சமீபத்திலிருக்கும்படியான சிவகணத் தலைவராயிருக்கும்படியான பதவியைக் கொடுத்தருளினார் [எ—று] 333

## 1015

ஆலால சுந்தரரை யருகில்வர வொருமுதல்வ னருள்பா லித்து
மேலான வேலைதொறும் வெண்ணீறு நறுமலரு மிசைய வேற்றிப்
பாலார நின்றொழுகும் பண்டைநாட் பழவடிமைப் பணியை நல்க
மேலான சிவகணத்து ளழியாத பதத்திருந்து விளங்கா நின்றார்.

[இ—ள்] ஒப்பற்ற முதல்வனாகிய சிவபெருமான் ஆலால சுந்தரரைச் சமீபத்தில் வரும்படி கிருபைசெய்து உயர்வான வேளைகள் தோறும் வெண்மையான விபூதியையும் நல்லமலர்களையும் கொண்டு வந்து பூசித்துப் பக்கத்திலே நின்று வழிபடும்படியான பழைய நாளிலுள்ள பழையவடிமையாயிருக்கும் பணிவிடையைக்கொடுக்க மேலான சிவகணங்களிலே தலைமையான பதவியிலே அழியாத தன்மையோடு விளங்குவாராயினார் [எ—று] 334

## 1016

தையலரிற் பரவையார் சங்கிலியார் சுந்தரர்தந் தன்மை கேட்டுத்
துய்யமன வொருமையினாற் றூலசடந் துறந்தருண துறக்க மேறி
வையமெலா மீன்றெடுத்த வளர்கருணை நாயகிசெம் மணிப்பொற்கோயிற்
செய்யபணிக்கமலினியாயனிந்திதையாயமர்ந்துபெருஞ் செல்வம்பெற்றார்.

[இ-ள்] பெண்களில் உயர்ந்த பரவையார் சங்கிலியார் இருவரும் சுந்தரர் கயிலாயம் சென்றதைக் கேட்டு பரிசுத்தமான மன ஒருமையினாலே தூல சரீரத்தைத் துறந்து சிவந்த ஒளியையுடைய விண்ணுலம் அடைந்து உலகங்களையெல்லாம் பெற்றுவளர்த்த கருணையையுடைய தலைவியின் இரத்தினங்களிழைத்த பொன்னாலாகியகோயிலிலே சிறந்த பணிவிடையைச் செய்கின்ற கமலினியாயும் அநிந்திதையாகவும் விளங்கி மிகுந்த பாக்கியத்தை யடைந்தார்கள் [எ-று] 335

## 1017

நாதகீதச்சுருதி ஞானவுலா வானவர்க ணயந்து பின்னர்
வேதநா யகனுமரு ணந்திகண நாயகனும் வினவித் தேர்ந்து
வாதரா சனிற்கொடுத்து முறையேடு வரவிடுப்ப மகர வேலை
யோதநீர்த் திருவஞ்சைக் களத்தில்வந் திவ்வுலகமெலா முலாயதன்றே.

[இ-ள்] இனியநாதத்தையுடைய கீதத்தினாலே ஞானவுலாவைச் சேரமான் பெருமாள் பாடத் தேவர்கள் யாவரும் கேட்டு விரும்பிப்பிறகு வேதத்துக்குத் தலைவராகிய சிவபெருமானும் அருளையுடைய திருநந்திதேவரும் கேட்டுத் தெளிந்து வாயுபகவானிடம் கொடுத்து ஏட்டை அனுப்ப மகரங்களையுடைய சமுத்திரத்தினாற் சூழப்பட்ட திருவஞ்சைக் களத்துக்கு வந்து இவ்வுலகம் முழுவதும் பாவியது [எ-று] 336

## 1018

திருவளர்புக் கொளியாய சிவபூமி தனிற்றவங்கள் திருந்த நோற்று
மருவரிய கதியடைந்து வாழ்வோர்கள் பதவனச மலர்கள் போற்றி
கருவினைதீ ரறுபத்து மூவடியார் சேவடியாங் கமலம் போற்றி
பொருவரிய நாவலூ ராலால சுந்தரர்தாள் போற்றி போற்றி.

[இ-ள்] ஞானச்செல்வம் மிகுந்த திருப்புக்கொளியூராகிய சிவபூமியில் திருத்தமாகத் தவங்களைச் செய்து பெறுதற்கு அரிய முத்தியை அடைந்து வாழ்கின்றவர்களுடைய பாததாமரைகளுக்கு நமஸ்காரம் பிறப்பாகிய பிணியிலிருந்து நீங்கிய அறுபத்து மூன்று நாயன்மார்களுடைய சிவந்த திருவடித் தாமரைகளுக்கு நமஸ்காரம் ஒப்பில்லாத திருநாவலூரில் அவதரித்த ஆலால சுந்தரரது பாதத் தாமரைகளுக்கு நமஸ்காரம் [எ-று] 337

## 1019

அந்நாவ லூராளி திருவிளையாட் டவையாதி யந்தமாக
முன்னாளி லுலகறியப் பகருமுப மன்னியர்தாள் முளரி போற்றி
பொன்னாரும் வளர்கயிலை நந்திசனற் குமரர்பதாம் புயங்கள் போற்றி
தொன்னூமத் தவர்கேள்விச் சூதமுனி பாதமலர்த் துணைகள் போற்றி.

[இ—ள்] அந்தச் சுந்தர மூர்த்தியினது திருவிளையாடல்களை ஆதியோடு அந்தமாக முற்காலத்தில் உலகத்தார் அறியும்படி சொன்ன உபமன்னியருடைய பாததாமரைகளுக்கு நமஸ்காரம் பொன்னுக் காடோறும் வளர்கின்ற கயிலையில் நந்திதேவரும் சனற்குமாரரும் ஆகியவர்களின் பாததாமரைகளுக்கு நமஸ்காரம் பழமையான பெருமையையும் கேள்வியையும் உடைய சூதமுனிவருடைய இரண்டு பாதத்தாமரைகளுக்கு நமஸ்காரம் [எ—று] 338

## 1020

பிரசமலர்த் தடம்புடை சூழ் திருவவிநாசித்தலத்துப் பெருமைவாழி
பரசமய கோளரியே முதன்மூவர் பகர்ந்ததிருப் பதிகம் வாழி
யுரைசெய்திரு வாசகமு மைந்தெழுத்தும் வெண்டிருநீற் றொளியும்வாழி
யரசுரிமை நெறிவாழி யந்தணரா குதிவாழி யகிலம் வாழி.

[இ—ள்] தேன்பொருந்திய தாமரைத்தடாகங்கள்பக்கத்திலே சூழ்ந்திருக்கிற திரு அவிநாசித் தலத்தினது மேன்மைவாழக்கடவது பரசமயங்களுக்குச் சிங்கத்தையொத்த திருஞானசம்பந்தர் முதலான மூவர்களும் சொன்ன தேவாரத் திருப்பதிகங்கள் வாழக்கடவன மென்மையாகச் சொல்லப்படுகின்ற திருவாசகமும் திருஐந்தெழுத்தும் வெண்மையான திருநீற்றினது ஒளியும் வாழக்கடவன அரசினது உரிமையாகிய வழி வாழி பிராமணர்களது யாகத்தினது ஆகுதி வாழக்கடவது எல்லா உலகமும் வாழக்கடவது [எ—று] 339

## 1021

பருவமுகின் மழைவாழி பயிர்வாழி விளைபோக பலன்கள் வாழி
யிருவினையி னொருமருந்துக் கினியவைந்து வகைதருமா னினங்கள் வாழி
திருவளர்நல் லறம்வாழி தவவேடத் தன்புடையோர் செல்வம் வாழி
மருவுசெழுந் தமிழ்வாழி தரணியினிச் சிவபதுவல் வாழி வாழி.

[இ—ள்] காலம் தவறாமல் மழை பொழிகின்ற மேகம் வாழக்கடவது பயிர்கள் செழித்து வாழக்கடவன விளையும் போகமாகிய பலன்கள் வாழக்கடவன நல்வினை தீவினைகளுக்கு மருந்தாகிய சிவபெருமானுக்கு அபிஷேகமாக பஞ்சகவ்வியத்தைத் தருகின்ற பசுக்கூட்டங்கள் வாழக்கடவன செல்வத்தை வளர்க்கும் நல்ல தருமங்கள் வாழக்கடவன தவவேடமாகிய சிவவேடத்தில் அன்புள்ளவர்களுடைய செல்வம் வாழக்கடவது செழுமை பொருந்திய செந்

தமிழ் வாழக்கடவது உலகத்தில் இந்த அவிநாசிப்புராணமாகிய சிவபெருமானுடைய செய்யுள்கள் வாழக்கடவன [எ—று] 340

பதின்மூன்றாவது சுந்தரச் சருக்கம் முற்றிற்று,

ஆகத் திருவிருத்தம்–1021.

திருச்சிற்றம்பலம்,

அவிநாசிப்புராணம் முற்றுப்பெற்றது.

சிவமயம்

# அவிநாசிநாதர் பதிகம்

## அடிமடக்கு

அருமறைமுடியினிற் களிப்பவனே யானந்தமடியருக் களிப்பவனே
மருமலரிதழியந் தெரியலனே மாலயற் கடிமுடி தெரியலனே
தெருள்செயுமருண்மிகக் கொழிப்பவனே தெளிந்தவர் பவமொருங் கொழிப்பவனே, )இருளிரிபுக்கொளியாதவனே யின்னருளெமக்கொளியாதவனே.

கண்ணப்பனிடுமெச்சின்மிசைந்தவனே கமலையிற்றாதுக்குமிசைந்தவனே
தண்ணியசடையணி கங்கையனே சாரங்கம் பரசுதங் குங்கையனே
கண்ணினுக்கினியதோர் காட்சியனே கடவுளர்புகழுல காட்சியனே
மண்ணினிற்புக்கொளி சிறந்தவனேமயல்செயும்புலன்களஞ்சிறந்தவனே

அம்பலந்தனிற்செயுந் தாண்டவனே அடியவரன்புவந் தாண்டவனே
வம்பணிமுலையுமை பாதியனே வானவர்புகழ்ந்தியம் பாதியனே
யிம்பர்விண்ணுயப்பலி யேற்றவனே யெண்ணருமெறுழ்வலி யேற்றவனே
பம்பியபுக்கொளி மேவினனே பரியெனநரியையுமேவினனே.

தொழுதகைதுன்புதுடைப்பவனேதொல்லைவல்வினையைவந்துடைப்பவ
யுழுதுழுதஞ்சிறைவண்டினமேயொலிதொடைநிரல்வண்டினமே[னே
கழைமதனழல்படக் காய்ந்தவனே காரிகையார்கற்பங் காய்ந்தவனே
விழைதரு புக்கொளி யூரினனே விரைவனமணிவிடையூரினனே.

அலையெறிகடனிகர் கருணையனே யழல்வடிவாயிலங் கருணையனே
விலகில்லுமிழ்குழைக் காதினனே மெய்யடியார்பவங் காதினனே
கலைபுகவக்கர மஞ்சினனே கானவன் பழியையு மஞ்சினனே
யிலகியபுக்கொளி நாட்டினனே யெவ்வுலகும் புகழ்நாட்டினனே.

சதுமுகனுூர்தரு மோட்டினனே சலந்தரன்மேல்வட்ட மோட்டினனே
முதலைகொள்பிள்ளையைவிளித்தவனே முனூண்சிறுவிதிமகம்விளைத்தவனே
நதியினிலிடியது மருந்தினனே நங்கள் வல்வினைதெறு மருந்தினனே
அதிபுகழ்ப்புக்கொளி வீட்டினனே யன்பருக்கருண்மிக வீட்டினனே.

அருவரைத்தடம்புயம் பாம்பணியே யமுகசெய்யெனக்குமன்பாம்பணியே
கருமுகிலெனவொளிர் கந்தரனே கஞ்சனளித்தவொர் கந்தரனே
யிருள்விடம்பயில்பணிக் கங்கணனே யின்னருளதுதங் கங்கணனே
திருவளர்புக்கொளி யாசையனே சீருருப்புனைகலை யாசையனே.

அந்தணர்க்கரும்பொருள் காட்டினனே யம்புலியூராங் காட்டினனே
யுய்ந்திடச்செயும்புகழ் வெங்குருவே யுதித்தவற்கருளிய வெங்குருவே
கந்தனைமகிழ்தரு காரணனே கருதரும்புகழில காரணனே
யந்தமில் புக்கொளிமன்னவனே யருளினிற்சாகரமன்னவனே.

அன்புமை யூடலிற் பணிபவனே யரவமொடமரரென் பணிபவனே
தென்புலத்தோன்விழச் சாடினனே சிர்புனையாவினஞ் சாடினனே
மன்பதைக்குயிரென நிலவினனே வளர்சடையொளிர்தரு நிலவினனே
பொன்புனைபுக்கொளி யந்தணனே புகலருமறைசொலு மந்தணனே.

மீன்வலைவீசிய வேதியனே வெந்தழல்சொரிமழு வேதியனே
கான்மலிபொலன்செயு மதலையனே கரிமுகனெனுமொரு மதலையனே
தேன்பொழிகடம்பணி குருந்தினனே திருப்பெருந்துறைவலர் குருந்தி
வான்புகழ் புக்கொளிமருவினனே வானெனவிளங்கிடு மருவினனே.

ஒன்றெனவன்றென வானவனே யுளனிலனெனநிறை வானவனே
நன்றொடுதீமையு மில்லவனே ஞானியருளமெனு மில்லவனே
துன்றிய வொருபுற மங்கையனே துதிக்குமுத்தரகோச மங்கையனே
பொன்றலில்புக்கொளி வந்தனமே புரிந்தனமாயிரம் வந்தனமே.

முற்றுப்பெற்றது

இஃது

கொகமம் வித்துவான்

முத்துசாமப்ப முதலியாரவர்களால் துதிசெய்யப்பட்டது.

உ

சிவமயம்

# பெருங்கருணம்பிகை பதிகம்

## காப்பு

### வெண்பா

*மங்களஞ்சேர் புக்கொளியூர் வாழ்கருணை நாயகிமேற்*
*பொங்குதமி ழாழ்பதிகம் போற்றவே—யிங்கென்*
*னகத்திருந்து செஞ்சொ லருளுமைந்த கைக்கற்*
*பகத்தினிரு செம்பொற் பதம்.*

திங்கடங்குசெஞ் சடைமுடியமலர் தென்முகத்தரா யோகமர்தலினு மிங்
குவாழ்நா ருன்னையல்லான்மற் றியாவரைச்சர ணடைகுவரியம்பாய்
சங்கரன்னனென் றுரைசெயும்பாவி தன்னின்மிக்கனா னென்னினுமென்
மேற் கங்கைதங்குதென் காசியின்வாழ்வே கருணைசெய்பெருங் கருணை
நாயகியே,

தருணையாகுநீ வேறலைசிவத்தின் சத்தியாந்திரு வருளுருவென்று
பொருணையாயினர் புகலுவரிந்தப் புவியின்மானுடர் பொய்யிருடிமிக்கு
மருணையாதிபலீ றலங்தொறுமப்பே ரணிகலாதவி நாசியாந் தலத்திற்
கருணையாமியற்பெயர்புனைந்திருந்தாய்கருணைசெய்பெருங்கருணைநாய
கியே.

மாப்புல்சைவநேகத்திரத்துமோருருப்புவடிவுபண்பெறும் பெயர்கொடே
வியர்கை கூப்புவார்க்கவி நாசமென்றுயர்த்த கொடியுங்காரணப்பெயருங்
கொண்டுளரோ தீப்பெரும்பவ முடையருந்துயரந்தீரெனப்பணிந் தேத்து
வராயிற், காப்பதுன்கட னுதலாலெனமேற் கருணைசெய்பெருங் கருணை
நாயகியே.

வள்ளல்யாமெனப் பெயர்புனைந் திருந்தோர்வறிஞர்தங்கடைவாயில்வந்து
றள்ளனீதியோ வாங்கதேபோலச் சர்வசீவதயாபரியெனப்பே [ற்றுற்
ருள்ளநீயெனக் கேட்டுனையடைந்தேற்கொன்றும்பேசிடாதுறுவதுமழ
கள்ளலம்பவன டாற்றுபூங்கோதாய் கருணைசெய்பெருங் கருணை [கோ
நாயகியே.

நல்லதாகிய தவத்தினின்முயன்று நணுகுருவகை தடுத்தமர்வினைத்திங்
கல்லலாக்குறு மடவரலியர்கட் கழலிடைப்படு மிழுதெனவுருக
வல்லதாகுமென் மனமுனையேத்தி வாழமாத்திர மொருசிறிதுருகாக்
கல்லதாயினுங் கசிந்தினிதுருகக் கருணைசெய்பெருங் கருணைநாயகியே.

மண்ணும்விண்ணுமுள் பொருளெலாம் பொதிந்து வைப்பினும் மிடந்தரு மெனதுள்ளம், பண்ணுலாவுநின் புகழெனும்பனுவற் பரவைதன்னிடை யோரணுவளவு. மென்னுதற்கிடந் தந்திலதிதனுக் கேதுசெய்குவனே மையேன்கதோ கண்ணுதற்பிரா னுண்மகிழமுதே கருணைசெய்பெருங் கருணைநாயகியே.

படைத்தலாதிமுத் தொழிறருமபார்வை படைத்தநீபல கோடியண்டத்தி னிடைக்கணுள்ள விப்புவியினிலளவுக் கெல்லையில்லதாமுயிர்த் தொகை யதனுண், முடைத்தலைச்சிறு நாயினேனுய்ய முழுத்தநோக்கமும் வழங்க லெற்றிற்குக். கடைக்கணோக்கமோர்சிறிதளித்தென் மேற்கருணைசெய் பெருங்கருணை நாயகியே.

அந்தரத்தவராயனரி முதலோ ரரிவைமார்கள மமங்கலமுறு
முந்தடர்த்தெழுமாலகாலத்தை முதலையுண்டதோர் மதலையையழைத்த சுந்தரப்பெயர்த் தொண்டனா கொடுப்பத்துய்த்தநாயகர் கழுத்தின் மட்டடங்கக், கந்தரத்தினின் மங்கலம்புனைந்தோய் கருணைசெய்பெருங் கருணைநாயகியே.

மாசிலாச்சிவ புண்ணியமியற்ற வலியிலாததோர் வாயசந்தன்று
நாசியாலொரு சோற்றினைச்சிதற நல்லபுண்ணியந் தந்தருமறையும்
பேசிடாப்பெரும் பதவியுந்தந்த பேருமைகேட்டுநின்னிருசரணடைந்தே
காசியாமவிநாசியின்வாழ்வே கருணைசெய்பெருங் கருணைநாயகியே [ன்

செல்வமேவெஞ்ஞு குத்தனுழுத்தச் செட்டிபெற்றது நாககன்னிகை முன், வல்விரைந்துநோற் றடைந்தநல்வரமு மத்தமேவும்வெள் வாரண முதலாம், பல்விலங்குக ளருள்பெறும்பரிசும் பகரக்கேட்டுநின் பதமலர டைந்தேன், கல்விமேவுபுக் கொளிவளரரசே கருணைசெய்பெருங் கருணைநாயகியே.

*முற்றுப்பெற்றது.*

*திருச்சிற்றம்பலம்*

*இஃது*

*கோயமுத்தூர் வித்துவான்*

*கந்தசாமிமுதலியாரவர்களால் துதி செய்யப்பட்டது.*

திருச்சிற்றம்பலம்

திருப்புக்கொளியூர் அவிநாசிப்

# பெருங்கருணையம்மை பிள்ளைத்தமிழ்

கோயமுத்தூர்

சிவக்கவிமணி C. K. சுப்பிரமணிய முதலியார்

B. A., F. M. U. அவர்கள் இயற்றியது

## காப்பு

### விநாயகர் துதி

சீர்கொண்ட வானகத் திமையவர் குழாத்தினைச்
செயிர்கய முகத்தசுரனும்
செறுபகை தவிர்க்கநற் கோடொரா யுதமாய்ச்
செயங்கொண்டு வான்றழையவும்
பார்கொண்ட பல்லுலக மீதினில் நினைப்பவர்கள்
பான்மைபெற் றுயர்ந்துவரவும்
பண்பின்வரு பிரணவன் வரமுதவு கரிமுகன்
பாதபங் கயம்பணிகுவேன்
ஏர்கொண்ட பங்கயந் தங்குமிரு செல்விமார்
இருமருங் கும்பரவுநல்
இனியபுக் கொளிநகர மதிலென்னை யடிமைகொண்
டெந்நாளு மருளுமம்மை
தார்கொண்ட தண்புயக் கருணையம் பிகைதமிழ்
தமியனுங் கருவியாகத்
தான்படைத் திடர்காத் தளித்தருளி யென்றுந்
தழைத்திடச் செய்யுமென்றே.

## வித்யாகுரு மரபு—தீட்சாகுரு மரபு

சீராருந் துறைசைவளர்[1] சிவஞான குரவன்முதற்
றேசின் மன்னிச்
சிறந்ததனித் திருச்சிற்றம் பலவன்வரை வருவித்தை
செப்பு மேன்மை
ஏராருங் குரவன்மார் பதமலர்கள் போற்றிநல
மெய்த வாங்கே
எழிலாரும் பொழிலார்கச் சியின் [2]ஞானப் பிரகாச
னிணைத்தாள் போற்றிப்
பாராருந் திருத்தில்லை வாழ் [3]முத்துக் கற்பகனார்
பதங்கள் போற்றிப்
பன்னுபுக ழவிநாசி யப்பனொரு பங்குடையாள்
பகருஞ் சீர்த்தி
ஏராரும் வித்தைக்கு முத்திக்கு முதல்வியா
மிறைவி பாதத்
தியம்புமெளி யேனவினும் புன்சொல்லு மனிதுதழைத்
திடுக வென்றே.

---

1. திருவாவடுதுறை மாதவச் சிவஞானமுனிவர் முதல் கோவைத் திருச்சிற்றம்பலம் பிள்ளை வரை வித்யாகுரு பரம்பரை சிவஞானமுனிவர், கச்சியப்பமுனிவர், கந்தப்பையர், சரவணப் பெருமாளையர், சந்திரசேகரம் பிள்ளை, கந்தசாமி முதலியார், திருச்சிற்றம்பலம் பிள்ளை.

2. காஞ்சீபுரம் - தொண்டைமண்டலாதீனம் ஸ்ரீ ஞானப் பிரகாச தேசிகர், இதன் ஆசிரியர்க்குச்சமய விசேட தீக்கைகள் அருளியகுரு.

3. சிதம்பரம் உலகமூர்த்தி தேசிகர் மடம் ஸ்ரீ முத்தக்கற்ப கக் குருக்களையா; இதன் ஆசிரியர்க்கு நிர்வாண தீக்கை அருளியவர்.

## காப்புப்பருவம்

### திருமால்

கருங்கடல் முகந்தெழிலி கார்பெறவு நின்றுலகு
காப்பினைப் பெறுமென்பரால்
கண்ணகன் ஞாலமீ தன்றிவின் பாதலம
கண்டபிற வண்டமெல்லாம்
ஒருங்குகா வல்புரியு மழையொன்று கார்கோள்
[1]கவர்ந்துவெண் புனல்விட்டபோல்
ஒண்மைபெறு வெண்கடற் றுயில்கொண்ட கருமுகில்
உவந்தினிது நின்றுகாக்க
மருங்கெலாந் தொன்மையுடை யார்தொடர்பு நட்டென்ன
[2]வளர்பெண்ணை யொருபாலினும்
[3]வான்கங்கை நன்னதித் தீரமொரு பாலினும்
வைத்துநின் றிலகுமதனுற்
பருங்கைமத யானையின் னுரிபோர்த் தளித்தவெம்
பரமனைநிகர்த்த பதியாம்
பண்புபெறு மவிநாசி வாழ்கருணை வல்லிசிற்
பரவல்லியம் மைதனையே.

---

1. கருங்கடலிலே நீர்பருகிக் கார் எனவரும் மேகம் ஓவ்வோர் புடை ஓவ்வோர் உலகடி காக்கும்.

எல்லாவுலகிற்கும் காவல்புரிய வேண்டுதலின் திருமாலாகிய மேகம் கடலின் கருமை முழுதும் கவர்ந்து வெண்புனல் மட்டுமாய் எஞ்சவிட்டது போலும் பாற்கடலிற்கருமால் பள்ளிகொண்டிருத்தல்.

2. பெண்ணை - பனை - அவிநாசித்தலத்தின் ஒரு பக்கம் பனைகள் மிகுந்திருத்தல்

குறிப்பு - பெண்ணை என்பது சொற்சிலேடை.

3. கங்கை - ஆலயத்துள் இருக்கும் காசிக்கங்கைத்தீர்த்தம். தலபுராணம் பார்க்க.

செங்கீரைப்பருவம்

ஏராரு மண்டபகி ரண்டங்க ளெங்கணு
மிருப்பவன் றனொருருவம்
ஏற்கின்ற போதுநின் றிருவுருவ மன்றியே
யில்லையென் பதுதோன் றநின்
சீராரியற்பெயர் கருணையம் பிகையெனச்
செப்புகின் றதுமன்றியே
சிற்சபை பொலிந்தவன் பகுதிநீ என்னவும்
சிவனார்கொள் திருமேனிதான்
காராரு நற்கருணை யென்னவும் போற்றுவர்;
காசினியி லெளியமுய்யக்
காமலர்க ளுடன்றிநற் றண்மடித் துத்திரு
முடியவைசத் துவகைபூப்பத்
தேராரும் வீதிபொலி புக்கொளியி னம்பிகை
செங்கீரை யாடியருளே
சிற்பரன் [1]வலத்தமரு நற்கருணை யம்பிகை
செங்கீரை யாடியருளே,

வேறு

கலைகள் நிறைந்து விளங்கு மிளம்பிறை
கண்ணிய நன்கோலக்
கங்கையி னோடு பொருந்த மிலைச்சிய
கண்ணுத லெம்மானை
நிலைபெறு மாகம நன்னெறி யோடும்
நினைந்தெழு மன்போடும்

---

1. இத்தலத்தே அம்மையார் தவஞ்செய்து வலப்பாகம் பெற்றார் என்பது தலபுராண வரலாறு. திருக்கோவில் அமைப்பும் இவ்வாறே காணப்பெறும்.

நின்றுயர் பூசை நிலைத்து நிலைக்க
நிகழ்ந்திட இங்கேவந்
திலகிய தொல்லுயிர் யாவைவு மின்பம்
இயற்றிடு மம்மே! நின்
இசைபெறு பொன்முக மழுங்கி ளசைந்திட
எய்திய இன்பாலே
அலைநதி சூழவி நாசியி னம்பிகை
ஆடுக செங்கீரை
அற்புத மொன்றிடு புக்கொளி நின்றவள்
ஆடுக செங்கீரை.

## தாலப்பருவம்

கண்க ளொருநாட் பிரான்றனையுன்
கையின் மறைத்த ஞான்றுலகம்
கண்க்க இரண்டும் அவற்பிரிந்த
காலத் தெவையும் பிரிந்திருந்தும்
விண்பார் இவைநின் செயலளவாய்
விளம்பு முண்மை விளக்குதல்போல்
மெய்யார் தவத்தின் நீயமைய
விண்ணு மவ்வாறுற்ற தென
நண்பார் பகலு மிரவுமலர்
நளின மாம்பல் இருக்கையுமீன்
நண்ணும் கருநீர்த் தடம்பணைவா
னகத்தின் சுடருந் தெய்வதமாப்
பண்பும் பகரும் அவிநாசிப்
பரையே தாலோ தாலேலோ
பாவற் கினிய பெருங்கருணைப்
பண்பே தாலோ தாலேலோ.

---

1. முதலை-முதல்வனை

பொன்னுக் கொருசார் புடைவைக் கொருசார்
போற்று பசிக்கொருசார்
புதிய நறுஞ்சுவை யடிசில் பெறும்படி
போதர வென்றோர்சார்
பொன்னுக் கொருசார் மனைவிக் கொருசார்
மனைக்கென் றேரோர்சார்
வாழ்வின் பின்னாட் கொருசா ரென்றே
வாணாள் வீணாய்
என்னைப் பலவு மடிமை யிருத்திங்
கேவல் கொண்டனவால்
எளியே னுய்வகை யின்னருள் செய்தே
யொருசார் தனைநினையத்
தன்னடி மைக்கணு மென்னை யளித்தவள்
தாலோ தாலேலோ
தண்ணிய புக்கொளி மன்கருணைக் கொடி
தாலோ தாலேலோ.

வேறு

தழைந்த பொற்கமல மேலோன்
மேலே சார்நாளிற்
[1] றவிர்ந்த சொற்கழிவு சேர்வான்
நேர்வான் ஓர்மேடத்
திழைந்த நல்விழவி னானே
மேனாள் வாழ்வானவ்
விசைந்த நின்பவனி காணா
மாணா வாழ்வார்கள்
குழைந்த நன்றருள்செய் கோவே
பாவாய் காவாய்எம்

குலந்தழைந்துயரும் வாழ்வே
பாராய் தாராயென்
றெழுந்த அன்பர்பணி வாழ்வே
தாலோ தாலேலோ
இருந்த புக்கொளிசெய் தாளாய்
தாலோ தாலேலோ

## சப்பாணிப் பருவம்

பைவந்த துத்திப் பணாமுடியின் மீதுலவு
பாரெலாந் துயரினீங்கிப்
பரமனை யடைந்தவ ரடியிணையி னுற்றிடும்
பண்பினைக் காட்டவென்றே
கைவந்த வொருகையி லபயம்வைத் தொன்றுகீழ்க்
கான்மலர்கள் காட்டும்வரதம்
[1]காட்டுநின் னிருகைமலர் போலவிவ் வுலகெலாங்
கட்டினை யகன்றுசிவமாம்
மெய்வந்த செம்மைநெறி யடையும்வழி காட்டிடும்
மெய்கண்ட சந்தானமும்
மெய்மையச் சன்மார்க்க நெறிவாழ பேரன்பின்
மெய்யடிய ருந்தழையவே

1. சிவபெருமான் திருமுடியைக் காண்பேன் என்று பிரமதேவர் அன்னத்தின் உருவாய்ப் பறந்து சென்றும் காணவில்லை. கண்டேன் என்று பொய்யுரைத்தமைக்காகச் சிவபிரானாற் சபிக்கப் பெற்றார். அச்சாப விமோசனமாகும் பொருட்டு அவிநாசியை யடைந்து கபிலை தீர்த்தம் உண்டுபண்ணித் தவஞ்செய்யவே பெருமான் வெளிப்பட்டு அருள்செய்தனர். பிரமதேவர் மகிழ்ந்து திருவாலயம் வகுத்துத் திருப்பணிசெய்து சித்திரை மாதச் சத்தமி நாளிலே கொடியேற்றி அவிநாசி யப்பருக்கும் பெருங்கருணையம்மையாருக்கும் திருவிழாச் செய்தனர். அத்திருவிழாத் தரிசித்தவர்கள் எல்லா நன்மைகளையும் அடைவர் என்பது தலபுராணம் பிரமார்ச்சனைச் சருக்கம்.

சைவந் தழைக்கவிரு கைம்மலர்கொ டருளம்மை
சப்பாணி கொட்டியருளே
தண்பாவு தென்காசி நண்பான பெண்பாவை
சப்பாணி கொட்டியருளே.

## முத்தப்பருவம்

அழிந்து சமண விருளோட
வவனி யெல்லாம் சிவம்பெருக
வருண்மாத் தவஞ்செய் சிவபாத
விதயர் தவநன் கெய்திடவும்
சுழிந்த பிறவி தொறுமுயிர்கள்
தோன்று மழுகை தவிர்ந்திடவும்
தோன்றுகாழி மறைச்சிறுவர்
அழுகை தவிர நின்கலசம்
வழிந்த வமுதஞ் சிவஞானங்
குழைத்துப் பசும்பொன் வள்ளமுற
மகிழ்ந்து கொடுத்துச் சீரமுதே
வாங்கி யடிசி லுண்க வெண
மொழிந்த பவளச் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே.
முழுது மளிக்கும் பெருங்கருணை
முதலே முத்தந் தருகவே

---

1. நின் இரு கைமலர்போல - வழிகாட்டிடும் மெய்கண்ட சந்தானம். உயிர்களுக்குப் பயத்தினைப் போக்குவது அம்மையார அபயத்திருக்காம். அவ்வாறு பயம் நீங்கின உயிர்கள் அடையும் இடம் இது எனப் பரமசிவத்தின் திருவடிகளைக் காட்டுவது வாத மாகிய திருக்காம். இவைபோல, மெய்கண்ட சைவ சந்தான குரவர்களும், உயிர்களுக்குப் பாசநீக்கத்தையும் சிவப்பேற்றினையும் உணர்த்துவர்

கொடிய மனத்தாள் [1] தாடகையா
மரக்கி கனன்ற சினக்கொடியாள்
கன்மபலத்தால் மகப் பேறு
வேண்டி யயனைக் கைதொழவும்
படியில் சீர்த்தி யவிநாசி
பரவு கென்ன அவன் கூறப்
பரிசிற்பரவி வழிபட நின்
பரிந்த கருணைத் திருமொழியால்
அடியார்க் கெளிசேர் அப்பன் வரம்
அருளமுகப் பேறமைந் துற்ற
அருமை பிதனுற்கடை யோர்க்கும்
எளி வந்தளித்து நினைத்தவரம்
முடிக்கக் கொடுத்தல் மொழிந்திடுவாய்
முத்தந் தருக முத்தமே
முழுது மளிக்கும் பெருங்கருணை
முதலே முத்தந் தருகவே

## வருகைப் பருவம்

[1] எல்லையின் விலகி யொவ்வொன்றாக வோர்பகல்
இன்கலை நிரம்புமதியின்
இறைவனைக் குறுகுமள வொவ்வொன் றெனக்குறைந்
தெல்லையையடைந்து வாவின்
தொல்கதிர் முழுதுமவ் விரவியிற் கலந்தனன்
றோன்றிடா னுலகி [2] லதுபோற்

[1] தாடகை என்ற கொடிய அரக்கி மகப்பேறு குறித்துப் பிரமனைவேண்ட அவர்சொல்லியபடி அவிநாசியை யடைந்து பேறுபெற்றனள் என்பது வரலாறு தலபுராணம் தாடகைச் சருக்கம்

றெழும்பனே னிளைவிலகு மளவிலே யுலகினிற்
றோன்றிநின் ஞன்மிளிர்குவன்
பல்வகை யுழந்திடுவன் பார்வாழு நின்முனர்ப்
பரிவோடு மணுகு மளவிற்
பண்பிலே நானறவு ம்மறைகின்ற [3] இருளிலே
பரைநின்னை யடையவருளும்
கல்வினற் பாவையெம் மல்லகத்தே யொளிர்
கருணையம்பிகை வருகவே
கயற்கண் ணினிற்புவி யுயக்கொண்ட புக்கொளிக்
கருணைநாயகி வருகவே.

மறைகள் தொடர நீர் தொடரும்
சடையி லரவு தொடரவரு
மகிழ்நன் றொடர மாறுசெயுங்
கரவு தொடரா மனத்தொண்டர்
நிறைய நினைத்துப் பிரிவறியா
நேசந் தொடர வானவர்பின்
நின்று தொடர யாங்களுனை
நிமலை யணைந்தாள் எமையளிக்கும்

---

[1] சூரியனை விட்டு விலகுந் தோறும் ஒவ்வொரு கலையாக நிறைந்து அதன்பின் அவனை யடையுந்தோறும் ஒவ்வொரு கலையாகக் குறைந்து, அவனையடைந்த நாளில் சந்திரன் உலகிலே தோன்ருமல் மறைந்து விடுகிருன். இது பௌர்ணமை, அமாவாசைகளில் விபரமாகும்

2. அதுபோல ஆன்மாக்களும் இறையைவிட்டு விலகுந் தோறும் உலகிலே விளங்கி இறையை அடையுந்தோறும் உலகிலே மறைந்து அடைந்தபின்-உலகில் தோன்ருமல் மறையும்

3. "இருளிடத்துன்னைச் சிக்கெனப்பிடித்தேன்" என்ற திருவாசகத திருவாக்கின் கருத்தைத் தழுவியது

இறைவி யணைந்தாள் உயிர்த் துணையாந்
தலைவி யணைந்தாள் இம்பரினும்
இன்ப மனைய அணைந்தாளிங்
கணைந்தா ளெனப்போற் றிடவின்னே
மறைசேர் பொருளுக் கிறைமகிழு
மானே வருக வருகவே
வளர்புக் கொளியூர்ப் பெருங்கருணை
வாழ்வே வருக வருகவே

---

என்னன் பினிய அருட் கோலத்
தெழிலே வருக வியல்வருக
வெளியேங் குறைதீர்த் தருள்செய்யு
மிறைவே வருக; வுறையேறுப்
பொன்னே மணியே எனச் சிறியேம்
போற்ற வருக புகன்றிடுவோர்
புன்மை நினையா தளித்தருளும்
புயலே வருக புகலியிலே
அன்னே எனமுன் னழுமழவுக்
கமுத மளித்த அனைவருக
அம்மை வருக செம்மைவளர்
அளியே வருக நாவலூர்
மன்னன் பரவ வரங்கொடுத்த
வளமே வருக வருகவே
வளர்புக் கொளியூர்ப் பெருங்கருணை
வாழ்வே வருக வருகவே

---

அழலி னிறைவன் இருவர் அறிய
அரிய உருவின் அமைபவள்
அருளினிறைவி எழுத அரிய
அழகு மிகுநல் உருவினள்
பழையபுகலி நகரி னிறையுண்
பழகு மமுத முதவுவள்
பரவுகுளமுன் முதலை மதலை
பரிவி னுமிழ அருள்பவள்
மிழலை யதனின் வறுமைதவிர
மிகுமொர் பரிசு தருபவள்
விழையு மெளிய முகமுமகமு
மிளிரவொளிசெய் அளியினள்
மழலை மொழியு மறையின் முதல்வி
வருக வருக வருகவே
வளருமனைந டருளி னரசி
வருக வருக வருகவே.

## அம்புலிப் பருவம்

மீதான வானிலத் தகத்திருள் தவிர்த்துயிர்
விளக்கமுற மேவி நின்றே
வெண்மைபுனை தண்ணொளி கதிர்த்தருள் சிறக்கவளர்
மேன்மையினை; மேனுமம்பொற்
போதார்ந்த கொன்றையன் கங்கையொடு மொப்பவே
புகலிடந் தாங்கவளர்வை;
புண்ணியன் றிருவுரு விடத்தினின் கண்ணுறப்
பொலிகுவை; நின்னியல்புதான்
ஈதாக மதியமே சொல்வழியி னெப்பென்ன
எம்மன்னையுன்னி நின்னை

எழிலார் கரங்கொண்டு வரவழைத் தனளாக
இன்னேவிரைந்து வருவாய்
ஆதாரமாயுலகு கிறுவுமெம் மம்மையுட
னம்புலீ யாடவாவே
அற்புவளர் புக்கொளியி னற்கருணை வல்லியுட
னம்புலீ யாடவாவே

---

வானேறு மீனினத் தியலுணர் வோர்கள்நீ
[1]வாய்க்குமுயி ரற்றுமற்றோர்
வண்சுடரி [2]னொளி கொண்டு மிளிர்தருவை என்றென்
வைக்குமுல [3]கப்பற்றிலே [றும்
தானே சுழன்றுறுவை என்றும் பழிச்சொலைச்
சாற்றுமது நீங்க வேண்டில்
[4]தண்குளக்கரையினிற் பாலன் றனுயிரினைத்
தந்தவள் முழுது மொளியாய்க்
கானேர் சுடர்க்கெலா முள்ளூறு நற்சுடர்க்
கதிர்கொடுக் குங்கதிரினள்
காணுமெப்பற்றையும் பற்றறப்பற்றியே
கருணைபுரி தலைவியிவள்காண்

---

1. உயிரற்று - வானநூலோர் சந்திரமண்டலம் உயிரற்றதெனக்கூறுப.

2. சூரியகிரணங்களினுதவியாலே மதி ஒளிதருவதாம் தனக்கென்று ஒளியில்லாதது.

3. உலகப்பற்றிலே சுழன்று - இப்பூமி மண்டலத்தின் இழுப்பாகிய சத்தியாலே இழுக்கப்பெற்று சந்திர மண்டலம் உலகத்தைச் சுற்றிச் சுழன்று வருவதென்பது வானநூலார் கொள்கை.

4. மேலே சொன்ன மூன்று பழிகளும் நீங்கும்படி இந்த அம்மையார் செய்வர். பாலனுக்கு உயிர் கொடுத்தார், சோதியிற் சோதியாவள், பற்றறச் செய்வள் என்ற கருத்து.

ஆனேறு மண்ணல்பங் குண்ணிற்கு மம்மையுட
னம்புலீ யாடவாவே
அற்புவளர் புக்கொளியி னற்கருணை வல்லியுட
னம்புலீ யாடவாவே.

## அம்மானைப் பருவம்

மழையமருந்திரு மிடறுடை நாயகன்
வாழ்வுசெய் [1]யாருயிர்கள்
மன்னுறும் அன்னவன் ஆணையின்சூழல்
வழாதுற மேவியலும்
பழையதோர் உண்மையை உலகுற காட்டிய
பண்பினி லின்பமுறப்
பார்த்திடு மும்மணி முழுதொரு சூழல்
பதித்து விதித்தது போல்
விழவுயருந்திரு மணியொளி ரம்மனை
வேண்டு திருக்கையிணை
மேவவ மைத்துயர் விசும்பின் விடுத்து
வியந்திட வேந்திமிக
அழகு பொருந்தவி நாசி புரந்தவள்
ஆடுக அம்மனையே
அண்ணல் வலம்பெறு பெண்ணென நின்றவள்
ஆடுக அம்மனையே.

1. உயிர்கள் உலகத்திலே பரமசிவனது ஆணையின்படிஉலவு கின்ற உண்மையை அம்மையார் திருக்கரங்களின்ஆணையின்படியே உலவும் அம்மனைகள் காட்டுகின்றன.

2. ஐயன் ஆணைப்படி பிரளயாகலர், விஞ்ஞான கலர், சகலர் என்னும் மூவகை ஆன்மாக்கள் நிகழ்கின்றனபோல அம்மையார் ஆணையின்படி மூவகை அம்மனைகள் உலவுகின்றன என்ற கருத்து.

## நீராடற் பருவம்.

உண்ணின்ற விச்சையாற் றேவர்முத லானோர்
உவந்தாட்ட எண்ணமுற்றே
உறுதிசெய் தீர்த்தங்க ளவைசெய்து நிற்பவும்
[1]உண்மை கொள் நேய அன்பின்
கண்ணிற்கு மருவிதனின் மருவியே விரைவாய்க்
கருதிமஞ் சனமாடு நாஉம்
கண்ணுதல் பங்குற்ற நீயுமப் பான்மைநீர்
கவினோடு மாடலியல்பாம்
எண்ணின்ற எவ்விடத்துற்றநற் றீர்த்தங்க
ளெல்லாம் விரும்பியுறவே
[2]ஈசன்றன் முடியதி னேசங்கொ டுயர்வுமிக
எய்தியிவ் வுலகின்வந்த
விண்ணின்ற நல்லாறு முறவாடு நள்ளாற்று
வெள்ளநீ ராடியருளே
வெளியிலுயர் புக்கொளியி னளியிணையந் துறையில்வரு
வெள்ளநீ ராடியருளே

சந்தனமு மகிலோடு தக்ககற் பூரமுந்
தாளமு மணியுமேவித்
தண்ணறுகு மெல்லிதழ்த் தழைகளும் மலர்களுந்
தண்டுலத் தொடும்விரவியே.
வந்துநின் னடிபரவி யோமென்னு மோசையுடன்
வருபுகழ்ச் செம்மைநீத்தம்

---

1. நேசமாகிய மெய்யன்புடையவர்க்கு உண்டாகும் ஆனந்தக் கண்ணீராகும் அருவி.

2. பரமசிவன் திருமுடியிலே நின்ற கங்கையும் இங்கே வந்து இதனோடு நேசம் பாராட்டப் பெற்றதாகிய நள்ளாறு (தலநதி) நேசம் நிறைந்த அருவியாம்.

[1]வைகலும் நின்பூசை யடியவர் விதிப்படி
வைக்குமர்க் கியமாகவே
செந்துவர் வாயுமை யம்மைதிரு மஞ்சனம்
செய்திடத் தகுதியாமால்
தியாக மங்களருள் பெம்மான் றிருத்துணைவி!
தேசுதரு மிக்கதிருவே!
விந்தைபெறு விண்ணாறு நட்புறு நள்ளாற்று
வெள்ளநீ ராடியருளே
வெளியிலுயர் புக்கொளியி னளினையந் துறையில்
வெள்ளநீ ராடியருளே [வரு

[1]சங்க கன்ன மாபாவி
தனக்கு முப்பும் வகையளிக்கும்;
[2]தலத்தே யுறலா வெஞ்ஞகுத்த
உலுத்தன் றனையு முய்விக்கும்;
[3]மங்கை தேவ அரம்பைக்கும்
வலிய சாபநீக்கி யுய்க்கும்;
[4]வளமார் புதல்வர்ப் பேறளித்து
வியாதன் றனையு மகிழ்விக்கும்
[5]இங்கோரன்ன மிகவின்விடு
காகமதற்கும் கதியளிக்கும்
இன்னதலமாம் புக்கொளியின்
மூர்த்தி நின்ற னருட்டீர்த்தம்

---

1. அடியவர்கள் சிவபூசையிலே அர்க்கியம் அமைத்துச் சந்தனம், அகில், கற்பூரம், முத்து முதலிய மணிகள், அறுகு, தழைகள், பூக்கள் இவற்றை இடுவர். அது போலவே இப்புது நீரும் அப்பொருள்களைத் தாங்கி வருதலாலே அத்தகைய அர்க்கிய நீராகக் கொண்டு நீராடுக என்ற கருத்து.

பொங்கு வளஞ்சேர் நளினையிதின்
புதுநீராடி யருளுகவே
புவனம் விளங்க வருளம்மை
புதுநீராடி யருளுகவே.

---

| | | |
|---|---|---|
| 1. | தலபுராணம் | சங்ககன்னச் சருக்கம் |
| 2. | ,, | எஞ்ஞகுத்தச் சருக்கம் |
| 3. | ,, | தெய்வரம்பைச் சருக்கம் |
| 4. | ,, | வியாதச் சருக்கம் |
| 5. | ,, | காகச் சருக்கம் |

---

[1] களிவண் டறைபுது மலர்வந் துறையொடு
கரிதா னேர்மணலின்
கவினுர் வரிசையொ டொளிர்பல் வினமணி
கலனே நேர்வதொர்பால்
[2] குளிர்பொன் சொரிவன கொன்றைமலரொடு
கொலையானையின் கோடும்
கோணற் பிறையென வெண்பின் னிரையொடு
கோலப்பொலி வோர்பால்
தளிர்மா மரகத மயிலோர் பாலொடு
தழையும் மெம்பெருமான்
தன்றிருமேனி வனப்பு நிகர்த்தடி
யாரைத் தகவு செயும்
புளினக்கரைமகிழ் நளினைத் துறையவள்
புதுநீ ராடுகவே
பொருணற் கலைபுகழ் கருணைப் பெருமகள்
புதுநீ ராடுகவே.

---

1. இந்நதியிலே புதுமலர்களும் கருமணல் ஒழுங்கும் பல மணிகளும் அம்மையாரது திருமேனி வனப்புக்காட்டும்.

2. கொன்றைமலர், யானைக்கொம்பு, பிறைபோன்ற எலும்புகள் இவை சிவபெருமானது திருமேனிப் பொலிவைக் குறிக்கும்.

## பொன்னூசற் பருவம்

அல்லார்ந்த கண்டத்தி னையனவ னிறைகின்ற
வண்டபகி ரண்டம்யாவும்
அம்மைநீ நிறைதலா னீயாட வாங்கவைக
ளாடுமெனு முண்மை நிற்க
[1]எல்லாஞ் செயவல்ல விறைவிநீ யெனமறை
யிசைக்கின்ற துண்மையாயின்
ஏழையேம் பிறவிதொறும் வருவதும் போவதும்
எனுமூச லாடாமனீ
சொல்லார் தமிழ்ச் சுருதி பாடியே பூவினிற்
றோகைமார் பரவியாட்டத்
தோன்றுதன் மெய்யொளியெ மையனிற்
றொல்பவள வூசன் மீது [சேந்தநற்
பொல்லாதமணி வல்லி மலைவல்லி யருள்வல்லி
பொன்னூச லாடியருளே
பொற்புமிகு புக்கொளியி னற்கருணை வல்லிநீ
பொன்னூச லாடியருளே

இதழாயிரங் கொண்ட பதுமா சனத்தமர்ந்
தின்குரற் கிண்கிணிகளோ
டெழில்சேர் சிலம்பணிசெ யிருபாத மலர்களும்
எழுதரிய செம்பட்டுடை
யதுபுனையு மேகலையு மின்னிடைப் பொன்றொட்டி
யாணமு மங்கை களிலே

1. நீர் ஆட உலகமெல்லாம் ஆடுகின்றன என்பது உண்மை தான், ஆனால் நீர் எல்லாம் வல்லவர் என்பது உண்மையாயினல் யாங்கள் இவ்வுலகிலே வருதல் போதலாகிய ஊசல் ஆடாதபடி நீர் ஊசலாடுக என்ற கருத்து.

'மாசறு பிறவி போல வருவது போவதாகி' கம்பராமாயணம்

அபயவர தமுமுடன் பாசாங் குசங்களும்
அழகினமர் பைங் கிள்ளையும்
முதுதமிழ்க கன்றினுக் கமுதுதவு தனபார
மீதுவளர் முத்தணிகளும்
மூவாத மங்கலத் திருநாணு மதிமுகமு
முகத்திலகு புன்முறுவலும்
புதியவருள் புரிகண்ணி னிணையுமாய் மிளிர்பவள்
பொன்னூச லாடியருளே
பொற்றமிகு புக்கொளியி னற்கருணை வல்லிநீ
பொன்னூச லாடியருளே

செஞ்சடை நதிமதியு முக்கணொடு மைம்முகந்
திகழ் நீலகண்ட மதுவும்
செய்யகாற் றோளுமென் பரவணிக ளும்புலியி
னுரியுடையு மெங்கெஞ்சுசேர்
கஞ்சமென மிருபதமு மாகுமெம் மிறைவனார்
காட்டுமுரு வது பகிர்ந்தே
கருணைதரு விழிமலரு முகமதியு மழகிதாய்க்
கட்டியகுழற் சடையுதும்
தஞ்சமெனு மங்கலமு நவமணிய ணாரங்கொள்
தனபார மும்மினிடையும்
தழைசெய்ய பட்டொருந் தமியேமை யாட் [கொண்ட
தாளிணையு மாயமர்ந்தே
புஞ்சமா ருலகெலா மையனொடு மாடுமயில்
பொன்னூச லாடியருளே
பொற்புமிகு புக்கொளியி னற்கருணை வல்லிநீ
பொன்னூச லாடியருளே

[1]தொன்மைநாட் காழியின் மறைக்கன்றி னுக்கமுத
மூட்டியுல காற்றுமதனால்
தொல்குடியின் மழவனும் மயிலைவளர் நேசரு
மகப்பெறப் புதிதளித்தவள்
[2]மன்னுமப் பூதியின் மகவுயி ரளிக்கவெம்
வாகீசருக் கருள்பவள்
[3]வாய்ந்த வன்றொண்டர்திரு வாக்கினால் முதலையை
மதலையைத் தரச்செய்பவள்
[4]தன்னுசண் முகப்பெயர்த் தொண்ட னெஞ்ஞான்றுமே
துதிசெயத் தருபிராட்டி
[5]தொல்பட்டி யீசர்பணி செய்துவழி வழிவர
சுப்பிரமணி யன்னவற்கும்
பொன்மைவளர் நன்மைகள் யாவையுந் தருபவள்
பொன்னூச லாடி யருளே
பொற்புமிகு புக்கொளியி னற்கருணை வல்லிநீ
பொன்னூச லாடி யருளே.

---

1. திருஞானசம்பந்தசுவாமியாகிய குழந்தைக்கு அம்மையார் திருமுலைப்பாலூட்டியருளிய காரணத்தினால் திருப்பாச்சிலாச்சிராமத்திலே கொல்லிமழவனும் திருமயிலாப்பூரிலே சிவநேசரும் தங்கள் தங்கள் மக்களைப் புதிது பெற்றனர்.

2. அம்மையார் திருவருள் காரணமாக வாகீசப் பெருமானால் அப்பூதியடிகள் தமது மகனுயிர்பெற்றார்.

3. சுந்தரமூர்த்தி வாக்கிலே நின்றருளி முதலைவாய்ப் பிள்ளை கொடுத்தனர்.

4. அம்மையாரை எப்போதும் துதிக்கும் தன்மைவாய்ந்த சண்முக முதலியார் என்ற பேருடையவர் இந்நூலாசிரியனது உற்ற நண்பர்.

5. சுப்பிரமணிய முதலியார் இந்நூலாசிரியன்.

உலகெலா நின்றிட்ட உண்மையறி வானந்த
ஓர்பெருந் திரள்வாழவே
உற்றநால் வகையிலே சரியை முதலானசிவ
தருமங்க ளோங்கிவாழத்
தலம் வாழுமவிநாசி யப்பர்தாம் வாழநற்
கருணைநின் கருணைவாழத்
தாழ்வின்றி நல்லகுரு லிங்கசங் கமபத்தி
தாரணி தழைத்து வாழக்
குலமணியும் நீறுநற் றிருவைந் தெழுத்துமே
குவலயத் தினிது வாழக்
கோதற்ற சைவநெறி வாழநற் றொண்டரொடு
கூடிநின் றிருவடிகளைப்
புலமதின் மறவாதிவ் வேழையேம் வாழ்ந்திடப்
பொன்னூச லாடியருளே
பொற்புமிகு புக்கொளியி னற்கருணை வல்லிநீ
பொன்னூச லாடியருளே

---

திருச்சிற்றம்பலம்.

இந்நூல் கடவுள் வாழ்த்து மூன்றாவது பாடலில் முதலடியும் இரண்டாம்அடியும் ஈற்றில்பயிலாவீதி என்றும் உலவாமுன்றில் என்னும் பழைய பதிப்பு ஒன்றில் காணப் படுகிறது. அப்பாடத்திற்குப் பொருள் விளங்கவில்லை பயிலும் வீதி யென்றும் உலவு முன்றில் என்றும் பாடம் கொண்டு உரை எழுதப் பெற்றிருக்கிறது. அறிஞர்கள் பொருந்துமாறு பொருள் கொள்ளும்படி வேண்டுகிறோம்.

| பாட்டு ரெ. | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 27 | ⊢கவி | புகவி |
| 28 | வடையை | வடைய |
| 35 | புன்ன | புனன் |
| 172 | மிங்கிய | மிலங்கிய |
| 204 | பிறகுங் | பிறங்கு |
| 219 | யெழுத்தாலோதாலோ | தாலோதியே |
| 321 | சிங்கமது | லிங்கமது |
| 331 | நாசித்சிவன் | நாசிச்சிவன் |
| 358 | நித்ருத | திருத்த |
| 359 | ஒட்டியான | ஒட்டியாண |
| 362 | வேரு | வேறு |
| 402 | தங்ரு | தங்கு |
| 462 | கோடிய | கொடிய |
| 466 | முன்றி | மூன்றி |
| 476 | தோப்பி | தொப்பி |
| 507 | நீயினு | தீயினு |
| 540 | தந்தை | தந்தி |
| 542 | தூளியின் | தூளிகள் |
| 549 | யாய் | பாய் |
| 550 | தர்க்கு | தற்கு |
|  | குவரை | குபவரை |
| 551 | விழுங்க | விளங்க |
| 555 | வெனற | வென்ற |
| 557 | உளள | உள்ள |
| 649 | மருவிருன் | மருவினள் |
| 650 | பாவை | பறவை |
| 651 | ரியன | யென |
|  | மிதத்தரு | மிதந்தரு |

| பாட்டு நெ. | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 653 | பூமியிலோ | பூமியிலே |
| 663 | செல்வி | சொல்வி |
| 664 | கிரக்கி | கிரங்கி |
| 675 | மூன்றை | ஒன்றை |
| 693 | பருவத | பருவ |
| 699 | ஜன | ஜனன |
| 759 | பத்தூர் | புத்தூர் |
| 761 | உழரே | உளரே |
| 813 | கண்கலொ | கண்களொ |
| 814 | தழர் | தழற் |
| 825 | புகுத்து | புகுந்து |
| 850 | தருமரும் | தருமமும் |
| 859 | யிருந்தன | யிருந்தது |
| 861 | மனிதா | மனிதர் |
| 937 | களிபால் | கனிபால் |
| 1008 | கணிகி | கனுகி |

---

